ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:



# கத்யத்ரய விவரணம்



ஆசிரியர்:

ஸ்ரீ உ.வே. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.,BL.,

[ஸுதர்சனர்]

ஆசிரியர்: "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்"

5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி–620 017.

---

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்படுகிறது.

Released by Maaran's Dog ,Toronto , Canada



Released by Maaran's Dog ,Toronto , Canada

விலை ரூ. 80] 27—9—2001 [தபால் கூலி 5-00

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கத்யத்ரய விவரணம்—முகவுரை

எம்பெருமானார் அருளியவை ஒன்பது க்ரந்தங்கள். எல்லாமே வடமொழியில் அமைந்தவை. **ஸ்ரீபா₄ஷ்யம், வேதா₃ந்ததீ₃பம் வேதா₃ந்தஸாரம்** ஆகியவை ப்₃ரஹ்ம ஸூத்ரத்துக்கு விவரணமாய் அமைந்தவை. ஸ்ரீமத்₃ ப₄க₃வத்₃கீ₃தைக்கு விவரணமாய் அமைந்தது கீதாபா₄ஷ்யம். உபநிஷத்துக்களின் பொருளை அலசி ஆராய்வது **வேதார்த்த ஸங்க்ரஹம்.** திருவாராதன க்ரமத்தை விவரிப்பது **நித்ய க்ரந்தம்.** எம்பெருமானார் தம் திருவடி ஸம்பந்தம் பெற்றவர்கள் உய்வு பெறுவதற்காக ஒரு பங்குனி உத்தரத் திருநாளில் நம்பெருமாள் பெரிய பிராட்டியாரோடு சேர்த்தியில் எழுந்தருளியிருக்கையில் சரணம் புகுந்த முறையை விவரிப்பவை **ஶரணாக₃தி க₃த்₃யம், ஸ்ரீரங்க₃ க₃த்₃யம், ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யம்** என்னும் மூன்று க₃த்₃யங்கள். இவற்றுக்குப் பரம காருணிகரான பெரியவாச்சான்பிள்ளை மணிப்ரவாள நடையிலும், ஸ்ரீவேதாந்த தேசிகர் வடமொழியிலும் வ்யாக்₂யானம் அருளிச்செய்துள்ளனர். ஸ்ரீபா₄ஷ்யத்திற்கு ஶ்ருத ப்ரகாசிகை அருளிய ஸுதர்சனப₄ட்டர் முதல் க₃த்₃யமான ஶரணாக₃தி க₃த்₃யத்திற்கு மட்டும் ஶ்ருத ப்ரகாசிகை என்னும் திருநாமத்தோடேயே வடமொழியில் வ்யாக்யானம் அருளிச்செய்துள்ளார்.

இந்த மூன்று க₃த்₃யங்களும் பெரியவாச்சான்பிள்ளை, ஸுதர்சனப₄ட்டர் வ்யாக்யானங்களோடு, விரிவான முகவுரையுடன் விஜய-ஸ்ரீ சித்திரைத் திருவாதிரையில் *(1953-ம் ஆண்டில்)* எந்தையாரால் வெளியிடப்பட்டது. இதன் இரண்டாவது பதிப்பு ராக்ஷஸ-ஸ்ரீ பங்குனியில் *[12—4—1976]* அடியேனால் வெளியிடப்பட்டது. மூன்று வருடங்களுக்குமுன் இந்த வ்யாக்யானங்களை அடியேனுடைய எளியநடை விவரணத்துடன் வெளியிடவேண்டும் என்னும் உத்தேசத்துடன்

விவரணத்தோடு கூடிய இந்த வ்யாக்யானங்களை ஸுதர்சனத்தில் தொடர்ச்சியாக வெளியிடத் தொடங்கினேன். 132 பக்கங்கள் இந்த முறையில் மாமுனிகளின் முதல் ஸ்ரீவசன பூஷண வ்யாக்யானத்தில் ஒரு பகுதி வரையில் ஸுதர்சனத்தில் அச்சிடப்பட்டது. அந்த சமயத்தில் ஆப்செட் முறையில் கத்யத்ரய வ்யாக்யானங்களின் மூன்றாம் பதிப்பு ப்ரமாதி-ஆடி-மீ ரோகிணி (7—8—1999) அன்று ஸ்ரீரங்கம் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ ஸ்தாபனத்தோடு இணைந்து வெளியிடப்பட்டது. (இந்தப்பதிப்பு ரூ. 60 விலையில் இப்போதும் நம்மிடம் கிடைக்கும்) ஆகையால் இந்த நான்காவது பதிப்பின் 133-வது பக்கத்திலிருந்து தொடங்கி பெரியவாச்சான்பிள்ளையின் கத்ய வ்யாக்யானத்தின் மூலத்தை அளிக்காமல் நம்முடைய விவரணத்தை மட்டும் அச்சிட்டு அளித்திருக்கிறோம். பெரியவாச்சான் பிள்ளை அருளிய வ்யாக்யானத்தை முக்கியமாகக்கொண்டு, மற்ற இருவருடைய வ்யாக்யானங்களில் உள்ள விசேஷார்த்தங்களையும் சேர்த்து அடியேனால் இந்த கத்யத்ரய விவரணம் எழுதப்பட்டுள்ளது.

ஸ்ரீவைஷ்ணவர்கள் ப்ரபந்நஜன கூடஸ்தரான நம்மாழ்வார் வழியில் வந்தவர்கள். ஸதாசார்யனிடம் திருமந்த்ரம் த்வயம் சரம ஸ்லோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களையும் உபதேசிக்கப்பெற்றவர்கள். அந்த மூன்று ரஹஸ்யங்களுக்கும் வடமொழியில் விவரணமாக தர்சன ஸ்தாபகரான எம்பெருமானார் ஒரு பங்குனி உத்தர நன்னாளில் ஸ்ரீரங்கம் திவ்ய தம்பதிகள் திருமுன்பே அருளிச்செய்த திவ்யக்ரந்தம் கத்யத்ரயமாகும். அதன் பொருளை ப்ரபன்ன ஜனங்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் உணர்ந்து கொள்வதற்காக இந்த கத்யத்ரய விவரணம் எழுதப்பட்டுள்ளது. இதை அனைவரும் பெற்றுப் பயன்பெறவேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

(வ்ருஷ) விஷு-ஆண்டு
புரட்டாசி-11 வியாழன்
விஜயதசமி
27—9—2001

தாஸன்,
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்
ஆசிரியர் : ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# சரணாகதிகத்ய வ்யாக்யாநம்

* ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப: ஸ்ரீதரஸ்ஸதா ॥

**ப்ரவேசம்**

ஸ்ரீபாஷ்யத்தில்— 1, (தத்த்வமஸி) இத்யாதி வாக்ய ஜந்யஜ்ஞாநமே மோக்ஷஸாதநமென்றும், கர்மஜ்ஞாநஸமுச்

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீக்ருஷ்ணஸூரயே நம:

ஸ்ரீமத் வரவரமுநயே நம:

ஸுதர்சனர் இயற்றிய

# கத்யத்ரய விவரணம்

**ப்ரவேசம்**

எம்பெருமானார் தம் திருவடி ஸம்பந்தம் பெற்றவர்கள் உய்வு பெறுவதற்காக, ஒரு பங்குனி உத்தரத் திருநாளிலே திருவரங்கத்தில் நம்பெருமாள் பெரிய பிராட்டியாரோடு சேர்த்தியிலிருக்கையில் சரணம் புகுந்தவாற்றை விவரிப்பவை சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம் என்னும் இந்த மூன்று கத்யங்கள். இவற்றுக்குப் பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளை மணிப்ரவாள நடையிலும், ஸ்ரீவேதாந்த தேசிகர் வடமொழியிலும் வ்யாக்யானம் அருளிச்செய்துள்ளனர். ஸ்ரீபாஷ்யத்திற்கு

---

* இத்தனியனின் பொருள்:— எவருடைய கடாக்ஷத்திற்கு இலக்கானவர்களுக்கு ஸ்ரீதரன் எப்போதும் எளியவனாகிறானோ, யாமுநாசார்யரின் குமாரராய், கிருஷ்ணர் என்னும் திருநாமமுடைய அந்தப் பெரியவாச்சான் பிள்ளைக்கு வணக்கம்.

சயமே மோக்ஷஸாதநமென்றும் சொல்லுகிற குத்ருஷ்டிகளை நிரஸிக்கைக்காக, கர்மாங்ககமாய், வேதநத்யா, நோபாஸநாதிஶப்தவாச்யமாய், பக்திரூபாபந்நமான உபாஸநாத்மக ஜ்ஞாநமே வேதாந்த ப்ரதிபாத்யமான மோக்ஷஸாதநமென்று இவர் நிஶ்சயித்து அருளிச்செய்கையாலே. இவர் மோக்ஷஸாதநமாக அறுதியிட்ட அர்த்

---

ச்ருதப்ரகாசிகை அருளிய ஸுதர்சன பட்டர் முதல் கத்ய மான ஶரணாகதி கத்யத்திற்கு மட்டும் ஶ்ருத ப்ரகாசிகை என்னும் திருநாமத்தோடேயே வடமொழியில் வ்யாக்யானம் அருளியுள்ளார். பெரியவாச்சான் பிள்ளை அருளிய வ்யாக்யானத்தை முக்யமாகக் கொண்டு மற்ற இருவர் வ்யாக்யானங்களிலுள்ள விசேஷார்த்தங்களையும் சேர்த்து அடியேனால் இந்த கத்ய விவரணம் எழுதப்படுகிறது.

'தத்த்வமஸி' [சாந் 6-8-7] [ஶ்வேதகேதுவே!) நீ அந்த ப்ரஹ்மமாக (ப்ரஹ்மாத்மகனாக) இருக்கிறாய்] முதலான மஹாவாக்யங்களால் ப்ரஹ்மமும் ஜீவாத்மாவும் ஒன்றே என்று அறிவதே மோக்ஷஸாதனம் என்று மாயாவாதியான சங்கரரைச்சேர்ந்த அத்வைதிகள் கூறினார்கள். இப்பொழுது வழக்கிலில்லாத பாஸ்கர மதத்தவர்கள் முதலான சிலர் கர்ம ஜ்ஞான யோகங்களை சேர்த்தியே மோக்ஷ ஸாதனம் என்று கூறினார்கள். வேதத்திற்கு அவப்பொருள் கொள்கையாலே இந்த மதங்கள் குத்ருஷ்டி மதங்கள் என்று கூறப்படும். இந்த மதங்களை நிரஸிப்பதற்காக, வேதங்களை அனுஸரித்து. ஜ்ஞானத்தோடு கூடிய கர்மயோகத்தை அங்கமாகக் கொண்டதாய், வேதநம், த்யாநம், உபாஸநம் முதலான சொற்களாலே வேதாந்த வாக்யங்களில் சொல்லப்படுவதாய் கீதை முதலானவற்றில் பக்தி என்று வழங்கப்படும் அன்புடன் கூடிய ஜ்ஞானத்தின் ஒரு நிலையை அடைந்ததான உபாஸந ரூபமான ஜ்ஞானமே உபநிஷத்துக்களில் மோக்ஷஸாதநமாகச் சொல்லப்படுகிறது என்று ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்திலே நிஶ்சயித்து அருளிச்செய்தார். இவர் விரும்பி ஏற்றுக்கொண்ட அர்த்தத்தில் பரம

த2ம் இதுவேயென்றுகொண்டு தம்முடைய ருசிபரிக்3ருஹீதமான அர்த்த2த்தையே விஶ்வஸித்திருக்கும் ஸாத்விகர் இத்தையே விஶ்வஸித்திருக்கக்கூடுமென்று பார்த்தருளி, ஆசார்யருசிபரிக்3ருஹீதமுமாய், தமக்குத் தஞ்சமாகத் தாம் அறுதியிட்டிருக்கும் அர்த்த2ம் ப்ரபத்தியென்னுமிடத்தை இக்க3த்3யரூபேண வெளியிட்டருளுகிறார். ஆனால் இப்ரபத்திதன்னையேகொண்டு குத்3ருஷ்டி நிரஸனம்பண்ணுதொழிவானென்னென்னில்: ப்3ராஹ்மணன் சண்டா3ளனுக்கு வேத3த்தை உபதே3ஶித்தாற்போலே தூ3ரஸ்த2ரானவர்களுக்குப் பரமரஹஸ்யமான இவ்வர்த்த2த்தை வெளியிடவொண்ணாதென்று பார்த்து, அவர்களிழிந்த ஶாஸ்த்ரமுக2த்தாலேயே அவர்களை நிரஸித்து, ஶாஸ்த்ரதாத்பர்யமான ஸ்வஸித்3தா4ந்தத்தை இம்முக2த்தாலே வெளியிடுகிறார்.

---

விஶ்வாஸமுடைய ஸாத்விகர்களான இவருடைய சிஷ்ய ப்ரசிஷ்யர்கள் இந்த பக்தியையே மோக்ஷஸாத4நமாகக் கொண்டு தாமும் அதைக் கைக்கொள்ளக்கூடும் என்று உணர்ந்த ஸ்ரீ பாஷ்யகாரர் தம்முடைய ஆசார்ய பரமாசார்யர்கள் விரும்பி ஏற்றுக்கொண்டதாய் தமக்குத் தஞ்சமாகத் தாம் அறுதியிட்டிருக்கும் ஶாஸ்த்ரார்த்த2ம் ப்ரபத்தியே என்னும் விஷயத்தை இந்த மூன்று க3த்3யங்களிலும் வெளியிட்டருளுகிறார். "அப்படியானால், ஆசார்யர்கள் உகந்த இந்தப்ரபத்தியையே மோக்ஷஸாத4நமாகக்காட்டி குத்3ருஷ்டி மதங்களை இவர் தள்ளியிருக்கலாமே" எனில்: வேதம் வல்ல அந்தணனொருவன் வேதத்தை ஓதத் தகுதியில்லாத இழிகுலத்தவனுக்கு வேதத்தை உபதேசிப்பது போலே 'எம்பெருமானை நமக்கு எல்லாம்' என்னும் எண்ணமாய் இருக்கும். ப்ரபத்தி நிலைக்கு வெகுதூரத்திலுள்ள மாயாவாதிகள் முதலானோர்க்கு, பரம ரஹஸ்யமான இந்த அர்த்த2த்தை வெளியிடக் கூடாது என்று திருவுள்ளம் பற்றி, அவர்கள் ப்ரமாணமாகக் கொண்ட உபநிஷத்துக்களில் மிகுதியாகக் காணப்படும் பக்தியாகிற மோக்ஷஸாதனத்தைக் காட்டியே அவர்களை நிரஸித்து (மறுத்து), அந்த உபநிஷத்துக்களுக்கும் பரமதாத்பர்யமாய், அவற்றில் மறைமுகமாக ஓதப்படும் ஶரணாகதியாகிற தம்முடைய ஸித்தாந்தத்தைத் தமர்களுக்கு இந்த க3த்3யங்களில் வெளியிடுகிறார்.

வேதா3ந்தங்களிலே மஹாபத2மாகச் சொல்லுகிற பக்தியைக் காட்டில் இப்ரபத்திக்கு ஏற்றமென்னென்னில்: அது அதி4க்ருதாதி4காரமுமாய், து3ஷ்கரமுமாய், விளம்ப3ய ப2லப்ரத3முமாய், ப்ரமாத3ஸம்பா4வனையுள்ளதுமாய், ஸாத்4யமுமாய், ஸ்வரூபாநநுரூபமுமாய், ப்ராப்யத்துக்கு விஸத்3ருஶமுமாயிருக்கும். இதுவோவென்றால், அதற்கு எதிர்த்தட்டாம்படி ஸர்வாதி4காரமுமாய்

---

உபநிஷத்துக்களிலே ப்3ரஹ்மத்தை அடைவதற்கு வழியான பலபல ப்3ரஹ்மவித்3யைகளாக முழங்கப்படும் ப4க்தியோக3த்தைக் காட்டிலும் இந்த ப்ரபத்திக்கு ஏற்றமென்ன?எனில்: (1) அந்த உபாயப4க்தி வேதத்தைக் கற்கத் தகுதியுடைய ப்3ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர்களாகிய முதல் மூன்று வர்ணத்தவர்களே அநுஷ்டிக்கக் கூடியது. இந்த ப்ரபத்தி அதற்கு மாறாக எல்லாச்சாதியினரும், கஜேந்திரன் போன்ற விலங்குகளுங்கூட அநுஷ்டிக்கக் கூடியது. (2) உபாயப4க்தி செயற்கரிய கர்மயோகம், ஞானயோக3ம், வைராக்யம் முதலானவற்றை அவசியம் வேண்டிய அங்கங்களாகக்கொண்டதாகையாலும், தானும் செயற்கரியதாகையாலும் அற்பமான ஜ்ஞானசக்திகளை உடையவர்களால் அநுஷ்டிக்க அரியது. இந்த ப்ரபத்தி அத்தகைய அங்கங்களை எதிர்பாராததாகையாலும், 'எம்பெருமானே உபாயம்' என்னும் நினைவாயிருப்பதாகையாலும் அநுஷ்டிக்க எளிதாயிருப்பது. (3) உபாயப4க்தி ப்ராரப்3த4 (ப2லம் கொடுக்கத் தொடங்கிய) கர்மம் எந்த ஜந்மத்தில் முடிகிறதோ அந்த ஜந்மத்திலேதான் நிறைவடைந்து மோக்ஷத்தை அளிக்கும். இந்தப்ரபத்தி இப்பிறப்பின் இறுதியிலேயே மோக்ஷத்தை அளித்துவிடும். (4) உபாய ப4க்தியையும், அதன் அங்கங்களையும் அநுஷ்டிக்கும்போது தவறுகள் ஏற்பட்டு ப4க்தி நழுவிப்போவதற்கு இடமுண்டு. ப்ரபத்தி அப்படி நழுவுவதற்கு இடமில்லை (5) ப2லனளிக்கும் (ப2லகரணமான) ஸாத்யோபாயமாயுள்ள ப4க்தி மனிதனின் பெருமுயற்சியால் ஸாதி4க்கப்பட வேண்டியுள்ளது; ப்ரபத்தியில் ப2லனளிக்கும் ப2லகரணமான எம்பெருமான்

ஸுகரமுமாய், அவிளம்ப்₃ய ப₂லப்ரத₃முமாய், ப்ரமாத₃ஸம்ப₄ாவனையுமின்றிக்கே,ஸித்₃த₄முமாய்,ஸ்வரூபாநுரூபமுமாய், ப்ராப்யத்துக்கு ஸத்₃ருஶமுமாயிருக்கும்.

ஆனால் இவ்வுபாயம் வேதா₃ந்தஸித்₃த₄மோ அன்றோ? என்னில்: யாஜ்ஞிகீயமான உபநிஷத்திலே 2. (ஸத்யம்

---

எப்போதும் ஸித்தமாகவே இருப்பவன். (6) உபாயபக்தியில் தன் மோக்ஷானந்தத்திற்குத் தான் முயலவேண்டியிருப்பதால் எம்பெருமானுடைய ஆனந்தத்தையே உத்தேச்யமாகக்கொள்ளவேண்டும்படி அவனுக்குப்பரதந்த்ரமாயிருக்கும் ஆத்மஸ்வரூபத்திற்கு அது தகாததாயிருக்கும்; தன் ஆனந்தத்திற்குத்தான் முயலாமல் எம்பெருமானையே மோக்ஷோபாயமாகக் கொள்கையால் ப்ரபத்தி ஆத்மஸ்வரூபத்திற்குத் தக்கதாயிருக்கும். (7) பெறப்போகும் மோக்ஷானந்தத்திற்கு ஒப்பிடும்போது அற்பசக்தியுடைய நம் முயற்சியால் ஸாதிக்கப்படும் பக்தி ஒவ்வாத உபாயமாயிருக்கும். ப்ரபத்தியில் பேறும் உபாயமுமாகிற இரண்டும் எம்பெருமானேயாகையால் பேற்றுக்குத் தக்கதாயிருக்கும் உபாயம். ஆக, இவ்வண்ணமாக பக்தியைக்காட்டிலும் ப்ரபத்தி ஏழுவகையான ஏற்றங்களுடையது.

ஆனால், பக்தியைப்போலே ப்ரபத்தி வேதாந்தங்களிலே சொல்லப்படுகிறதோ? இல்லையோ? எனில் யாஜ்ஞிகீய— உபநிஷத் என்னும் பெயருடைய தைத்திரீய நாராயண வல்லியில்,

> ஸத்யம் தபோ த₃ம: ஶமோ தா₃நம் த₄ர்ம: ப்ரஜநநம் அக்₃நய: அக்₃நிஹோத்ரம் யஜ்ஞோ மாநஸம் ந்யாஸோ த்₃வாத₃ஶ [தை-நா 40, 50, 51.]

[உண்மையுரைத்தல், (காயக்லேஶரூபமான) தவம், (பா₃ஹ்யேந்த்₃ரிய நிக்₃ரஹமான) த₃மம் (அந்தரிந்த்ரியமான மநஸ்ஸை அடக்குவதாகிற) ஶமம், தா₃னம், த₄ர்மம், ப்ரஜோத

தபோ த₃ம: ஶமோ தா₃நம் த₄ர்ம꞉ ப்ரஜநநமக்₃நயோऽக்₃நி ஹோத்ரம் யஜ்ஞோ மாநஸம்) என்று ஒன்றுக்கொன்று உத்க்ருஷ்டமாகச் சொல்லிப்போந்து எல்லாவற்றுக்கும் மேலாக 3.(தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு꞉) என்று "தபஸ்ஸுக்களில் வைத்துக் கொண்டு அதிரிக்தமான தபஸ்ஸு ப்ரபத்தி" என்று இதினுடைய உத்கர்ஷம் சொல்லிற்று. அதுக்குமேலே 4 (த₄ர்மஜ்ஞஸமய꞉ ப்ரமாணம் வேதா₃ஶ்ச) என்று ப்ரப₃லப்ரமாணமான ஆசார்ய ருசிபரிக்₃ருஹீதத்வமாகிற ஏற்றமும் இதுக்

---

பத்தி, அக்₃நிகள், அக்₃நிஹோத்ரம், யஜ்ஞம், (மநத்தாலே ப₄க₃வானை தியாகம் செய்வதாலே) மாநஸம் எனப்படும் ப₄க்தி. ந்யாஸமெனப்படும் ப்ரபத்தி ஆகிய பன்னிரண்டும் கிரமமாக ஒன்றுக்கொன்று உயர்ந்த உபாயங்களாகும்] என்று ஒன்றைவிட ஒன்று உயர்ந்ததாக ஸத்யம் தொடங்கி, மாநஸம் எனப்படும் ப₄க்திவரையில் உபாயங்களைச் சொல்லிக்கொண்டு வந்து,

3. தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு꞉

[தை-நா 50]

[ஆகையால் ஶரணாகதியாகிற ந்யாஸத்தை இந்த உபாயங்களுள் உயர்ந்ததாக உரைக்கிறார்கள்] என்று ந்யாஸம் எனப்படும் ஶரணாகதியை முற்கூறிய உபாயங்கள் அனைத்திலும் உயர்ந்தது என்று கூறுவதன் மூலம் ப்ரபத்தியின் சிறப்பு சொல்லப்பட்டது, அதற்குமேலே

4. த₄ர்மஜ்ஞஸமய꞉ ப்ரமாணம் வேதா₃ஶ்ச

[ஆபஸ்தம்ப₃த₄ர்மம்]

[தர்மமறிந்தவர்களின் ஆசாரமே முக்கியப்ரமாணம். வேதங்களும் ப்ரமாணம்] என்கிறபடியே த₄ர்மமறிந்தவர்களில் தலைசிறந்தவர்களான நம் பூர்வாசார்யர்கள் விரும்பி ஏற்றுக் கொண்டதாயிருக்கையாகிற சிறப்பும் ப்ரபத்திக்கேயுண்டு. இந்த ஆபஸ்தம்பத₄ர்மஸூத்ரத்தில் 4 "வேதமும்ப்ரமாணம்" என்றவிடத்தில் சகாரம் (உம்மை) அப்ராதா₄ன்யத்தைக்

குண்டு. 4. ''வேத₃ாம்ஶ'' என்று வேத₃மும் அப்ரத₄ான ப்ர மாணமாம்படியிறே வைதி₃கபரிக்₃ருஹீதத்வத்தின் ப்ரா மாண்யாதிஶயம் இருப்பது. அளவுடையராயிருப்பார்க்கு இதுவே போதுமாயிற்று ப்ராமாண்யத்துக்கு. இதுதான் அளவில்லாதார்க்கு வேத₃ாந்த ஸித்₃த₄முமாயிருக்கும்.

ஆக, இப்படி வேத₃ாந்த ஸித்₃த₄முமாய், ஸ்வரூபப்ராப் தமுமாய், ஆசார்யருசி பரிக்₃ருஹீதமுமாய், ஶரண்ய ஹ்ருத₃ யாநுஸாரியுமாயிருக்கையாலே அதிலும் இதுவே அநுஷ் டே₂யமென்னுமிடத்தைத் தம்மை விஶ்வஸித்திருக்கும் ஸாத் விகர் இழக்கவொண்ணாதென்று பார்த்து, தாமும் பெரிய

---

காட்டுவதாகையாலே, அதற்குமுன் எடுக்கப்பட்ட வைதிகர் களின் ஆசாரம் வேதத்தைக்காட்டிலும் சிறந்த ப்ரமாண மாயன்றோ இருப்பது. ஆகையால் பேரறிவாளர்க்கு ஶிஷ் டாசாரமே ப்ரபத்தியைக் கைக்கொள்வதற்குப் போதும். சிஷ்டாசாரத்தில் அவ்வளவு நம்பிக்கையிலாதவர்களுக்கு முன்கூறியபடி தைத்திரீய நாராயணவல்லியில் பக்தியை விடச் சிறந்ததாக ஓதப்படுகையால், அதை ப்ரமாணமாகக் கொண்டு அநுஷ்டிக்கத் தக்கதாயிருக்கும ப்ரபத்தி.

ஆக, இவ்வண்ணமாக வேத₃ாந்தமான உபநிஷத்திலும் ஓதப்படுவதாய், பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்திற்குத் தக் கதாய், பூர்வாசார்யர்கள் விரும்பிக் கைக்கொண்டதாய், சரம ஶ்லோகங்களில் ஶரண்யனான எம்பெருமான் திருவுள்ளமுகந்த தாயிருக்கையாலே, ப₄க்தியைக் காட்டிலும் ப்ரபத்தியே அநுஷ் டிக்கத் தக்கதுஎன்னும் விஷயத்தைத் தம்மிடம் நம்பிக்கை கொண்ட ஸாத்விகர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் அறிந்து அநுஷ் டிக்காமற்போகக்கூடாது என்று திருவுள்ளம்பற்றி தமக்கும் பெரியபெருமாளுக்கும் இடையே நடந்த பரிமாற்றமான இந்த

பெருமாளும் அறிந்ததாக அநுஸந்தித்துவிட அமைந்திருக்க, தம்முடைய பரமக்ருபையாலே கத்யமுகேந வெளியிடுகிறார்.

இதுதான் அவதரித்தபடி எங்ஙனேயென்னில்: ஒரு திருவுத்தரத்திருநாளிலே, பெருமாளும் நாச்சியாருமாகப் புறப்பட்டு ஏறியருளாநிற்குமளவிலே, எம்பெருமானார் எழுந்தருளித் திருவடித் தொழாநின்றார்; அஸ்யாம் அவஸ்தாயாம், திருவுள்ளத்திலே ஸம்ஸாரபீதி நடையாட, திருவடிகளிலே விழுந்து சரணம் புக்கவதுக்குப் பாசுரமிட்டபடி.

---

சரணாகதியைப் பிறருக்கு வெளிப்படுத்தாமல் விட்டிருக்கலாமாகிலும் அனைவரும் உய்யவேண்டுமென்னும் பரமகருணையாலே "காரேய் கருணை இராமாநுச" (இராமானுச நூற்றந்தாதி 25) என்கிறபடியே கார்மேகம்போன்ற கைம்மாறுவேண்டாத கருணையுடைய இராமானுசர் இந்த மூன்று கத்யங்களின் மூலம் வெளியிடுகிறார்.

இந்த கத்யத்ரயம் எப்படி அவதரித்தது? எனில்: ஒரு பங்குனி உத்தரத்திருநாளிலே திருவரங்கத்தில் நம்பெருமாளும் ஸ்ரீரங்கநாச்சியாரும் புறப்பட்டு ஒரே ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளியிருக்கும்போது, எம்பெருமானார் அந்த திவ்யதம்பதியைத் திருவடித்தொழ எழுந்தருளினார். அந்த நிலையில், திருவுள்ளத்தில் இந்த ஸம்ஸார மண்டல வாழ்க்கையில் பயம் விளைந்து திருவடிகளில் விழுந்து சரணம் புகுந்தார். அதற்கு அவர் அருளிய பாசுரமே இந்த கத்யத்ரயம். முதலிலே ஸம்ஸாரபயத்தாலே பெரிய நம்பி ஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்தபோதே, நம்பி த்வயத்தை உச்சரிக்க, இவர் அநுச்சாரணம் செய்தவுடன் பெரிய பெருமாள் திருவடிகளிலே சரணம் புகுந்துவிட்டாரே;

முதலிலே ஸம்ஸாரப₄யபீ₄தராய்க் கொண்டு பெரியநம்பி ஸ்ரீ பாதத்தை ஆஶ்ரயித்தபோதே பெரியபெருமாள்திருவடி களிலே ஶரணம்புக்கிலரோ? 5, (ஸக்ருதே₃வ)என்றன்றே ஶரண்யஹ்ருத₃யமிருப்பது ஆனபின்பு, 6. (தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்) என்றும், ''உன்னாலல்லால் யாவராலும் ஒன் றும் குறைவேண்டேன்'' என்றும், ''களைவாய் துன்பம்

---

5. ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே /
அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ த₃தா₃ம்யேதத்₃ வ்ரதம் மம ||
[ரா-யு 18-33]

[ஒரு தடவை ஶரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கு அடியேனாகிறேன்' என்று பிரார்த்திப்பவன் பொருட்டும் எல்லா ப்ராணிகளிடத்தினின்றும் அப₄யமளிக்கிறேன். இது எனக்கு வ்ரதம்.] என்கிறபடியே ஸர்வலோகஶரண்ய ஞன ராமபிரான் ஶரணாகதியை ஒருமுறை செய்தாலே போதும் என்றல்லவோ திருவுள்ளம்பற்றியிருக்கி ருன். அப்படியிருக்கும்போது,

6. ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரப₃லார்த₃ந: |
மாம் நயேத் யதி₃ காகுத்ஸ்த₂ஸ் தத் தஸ்ய
ஸத்₃ருஶம் ப₄வேத் ||
[ரா-ஸு- 39-30]

[ஶத்ருக்களின் ப₃லத்தை ஒழிப்பவரான ஸ்ரீராமபிரான் லங் கையை பா₃ணங்களாலே கலங்கச்செய்து என்னை அழைத் துப்போவாராகில் அப்படிச்செய்வது அவருக்கேதகுந்ததாகும்.] என்று பிராட்டி அருளியிருந்தது போலும், ''உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்''[ திருவாய் 5-8-3] என்றும், ''களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்

களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்'' என்றும் சொல்லுகிறபடியே 'உடையவன் உடைமையைச் செய்தபடி செய்கிறான்' என்று ஆறியிருக்க ப்ராப்தமாயிருக்கத் திரியட்டும் இப்போது ஶரணம்புகவேண்டுவானென்னென்னில்: அவ்வளவு ஆறியிருக்கமாட்டாத தம் ப்ராப்யத்வரையாலே ஶரணம் புகுகிறார். இதிறே ஆழ்வார்களுக்கும் ரீதி. அவர்களை அடியொற்றுகிற ஆசார்யர்களுக்கும் அதுவே ரீதியாமத்தனையன்றோ. ஸம்ஸாரபயமும் ப்ராப்யருசியும் கனக்கக் கனக்க, ஒருகால் ஶரணம் புக்காப்போலே ஒன்பதின்கால் ஶரணம் புகுமித்தனையிறே அவர்கள். ஆக, ஸம்ஸார நிவ்ருத்திபூர்வமாகக் கைங்கர்யஸித்திக்குப் பெரியபெருமாள் திருவடிகளிலே ஶரணம்புகுகிறார்.

ப்ரவேஶம் முற்றிற்று.

---

மற்றிலேன்'' [திருவாய் 5-8-8] என்றும் ஆழ்வார் அருளியபடியும், "உடையவனான அவன் உடைமையான நம்மை எப்போது கைக்கொள்ளத் திருவுள்ளம் பற்றுகிறானோ அப்போது கைக்கொள்ளட்டும்' என்று பொறுத்திருப்பதன்றோ தக்கது. இப்போது மறுபடி எதற்காக ஶரணம் புகுகிறார்? எனில்: "எம்பெருமான் விரைவில் நம்மைக் கைக்கொள்ளவேண்டும்'' என்னும் த்வரை (வேகம்) இவரைப் பொறுமையுடன் இருக்கவிடாமையாலே மறுபடி சரணம் புகுகிறார். ஆழ்வார்களும் இப்படியே த்வரையாலே பலதிவ்ய தேசங்களில் பலமுறை சரணமடைந்தார்களன்றோ. அவர்களைப் பின்பற்றும் ஆசார்யர்களுக்கும் அதுவேவழியாயன்றோ இருப்பது. ஸம்ஸார பயமும், ப்ராப்யமான பரமபதத்தை அடையவேண்டும்' என்னும் விருப்பமும் மிகுதியாகும் போதெல்லாம், ஒருமுறை சரணமடைந்ததுபோலே பலமுறையும் எம்பெருமானிடம் சரணமடைந்தார்களன்றோ ஆழ்வார்கள். இவரும் அதுபோலே இந்த ஸம்ஸார வாழ்க்கை நீங்கி, பரமபதத்தில் நித்யகைங்கர்யம் கிடடவேண்டுமென்றுபெரிய பெருமாள் திருவடிகளிலே ஶரணமடைகிறார்.

ப்ரவேஶம் முற்றிற்று.

முதல் சூர்ணை அவதாரிகை:— இதுதான் த்₃வயத்துக்கு வ்யாக்₂யானமாயிருக்கிறது. இதில் முதல் சூர்ணையிலே— ஶரணம் புகுவார்க்கு ஶரணம்புக யோக்₃யதையுள்ளது கண்ணழிவற்ற உபேயருசியும் உபாயாத்₄யவஸாயமும் உண்டானலாகையாலே தத்ஸித்₃த்₄யர்த்த₂மாகப் பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுகிறார். அதுவென்? 7. (ஸகலப₂லப்ரதே₃ா ஹி விஷ்ணு:) என்று ஸர்வாபேக்ஷிகளுக்

---

முதல் சூர்ணை அவதாரிகை:— இந்த ஶரணாக₃திக₃த்₃யம் த்₃வய மந்திரத்திற்கு வ்யாக்₂யானமாக அமைந்துள்ளது. அதில் முதல் நாலு சூர்ணைகள் த்₃வயத்தின் தொடக்கத்திலுள்ள "ஸ்ரீமத்" என்னும் பதத்திற்கு விவரணமாய் அமைந்துள்ளன. எம்பெருமானை ஶரணமாக (உபாயமாக) அடைபவர்களுக்கு ப்ராப்யமான கைங்கர்யத்தில் குறைவற்ற விருப்பமும் 'எம்பெருமானே உபாயம்' என்னும் உறுதியும் அவசியம் வேண்டும். இவை இரண்டும் ஶரணம்புகுகின்றவனுக்குத் தகுதியை விளைக்கின்றன. இவை உண்டாவதற்காக முதல் சூர்ணையிலே பிராட்டி திருவடிகளிலே எம்பெருமானார் ஶரணமடைகிறார். இவ்விடத்தில் பின்வருமாறு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது:—

7. தே₃வேந்த்₃ரஸ் த்ரிபு₄வந மர்த்த₂மேகபிங்க₃:
ஸர்வர்த்₃தி₄ம் த்ரிபு₄வநக₃ாஞ்ச கார்த்தவீர்ய: ।
வைதே₃ஹ: பரமபத₃ம் ப்ரஸாத்₃ய விஷ்ணும்
ஸம்ப்ராப்தாஸ் ஸகலப₂லப்ரதே₃ா ஹி விஷ்ணு: ॥

[ஸ்ரீவிஷ்ணுத₄ர்மம்]

[விஷ்ணுவை ஆராதி₄த்து தே₃வேந்திரன் மூவுலகங்களையும், குபே₃ரன் செல்வத்தையும், கார்த்தவீர்யன் மூவுலகங்களிலும் பரவிய எல்லாப்பெருமைகளையும், ஜநகமஹாராஜன் பரமபத₃த்தையும் அடைந்தனர்; விஷ்ணுப₄க₃வான் வேண்டிற்றெல்லாம் தரும் வள்ளலன்றோ.] என்கிறபடியே எவர் எதை விரும்பினாலும் பலனை அளிக்கவல்லவன் எம்பெருமா

கும் ப₄லப்ரத₃ன் அவனன்றோ? ஆனபின்பு, அந்த யோக₃யதாஸித்₃தி₄க்குமாக அவன் திருவடிகளிலே ஶரணம்புகத் தட்டென்? என்னில்: 8. (ஸு₂ஹ்ருத₃ம் ஸர்வபூ₄தாநாம்) என்கிறபடியே ஸர்வபூ₄த ஸுஹ்ருத்தாயிருக்க, ஈஶ்வரனையும் நீரிலே நெருப்பு கிளருமாபோலே, 9. (க்ஷிபாமி).

என்றோ. அப்படியிருக்கும் போது தகுதியை விளக்கும் இவ்விரண்டின் பொருட்டும் இவர் எம்பெருமானையே ஶரணடைந்திருக்கலாமே என்பதே ஆக்ஷேபம். இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு:—

8\. போ₄க்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் |
ஸு₂ஹ்ருத₃ம் ஸர்வபூ₄தாநாம் ஜ்ஞாத்வா மாம்
ஶாந்திம் ருச்ச₂தி || [கீ₃தை 5-29]

[யஜ்ஞங்களையும், தவங்களையும் பு₄ஜிப்பவனும் எல்லா உலகங்களுக்கும் மஹேஶ்வரனும், எல்லா ஜீவராஶிகளுக்கும் நண்பனுமான என்னை அறிந்து ஶாந்தியை அடைகிறான்.] என்கிறபடியே எம்பெருமான் எல்லாச் சேதனருக்கும் நன்மையைச் செய்யும் நண்பனாயிருப்பவன். இருந்தபோதிலும்,

9\. தாநஹம் த்₃விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராத₄மாந் |
க்ஷிபாம் யஜஸ்ரமஶுபா₄நாஸுரீஷ்வேவ யோநிஷு ||
[கீ₃தை 16-19]

[(என்னை) த்₃வேஷிப்பவர்களும் கொடூரமானவர்களும், மனிதர்களுள் கீழ்மையானவர்களும், அஶுப₄மானவர்களுமான அவர்களை ஸம்ஸாரத்தில், அதிலும் அஸுரயோனிகளில் எப்போதும் தள்ளுகிறேன்.] என்கிறபடியே ப₄கவத₃பசாரங்களையும்.

10. (ந க்ஷமாமி) என்ன, அபராத₄ங்களைப் பண்ணிப்போந்த தாம் நேர்கொடு நேரே நின்று ஶரணம் புக்கால், பூர்வ வ்ருத்தத்துக்கு ஸ்மாரகமாவுதோமென்று தம்மையஞ்சி. தம் திறத்தில் ஈஶ்வரனுக்குண்டான சீற்றத்தை ஆற்று மவளுமாய், ஸ்த்ரீத்வப்ரயுக்தமான மார்த்₃வத்தை உடையளுமாய், மாத்ருத்வப்ரயுக்தமான ஊடல்துடக்கை உடையளுமாய், இவர்கள் சொல்லும் வார்த்தையைச் செவி

---

10. மத்₃ப₄க்தம் ஶ்வபசம் வாऽபி நிந்த₃ாம் குர்வந்தி யே நரா:
பத்₃மகோடிஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்த₄ரே ॥
[வராஹபுராணம்]

[பூ₄தே₃வி! சண்டா₃ளனுயிருந்தபோதிலும். என்னுடைய ப₄க்தனை எந்த ஜனங்கள் நிந்தை₃ செய்கிறார்களோ. அவர்களைக் கோடிக்கணக்கான பத்₃மகாலங்களானாலும் பொறுக்க மாட்டேன்.] என்கிறபடியே பா₄க₃வதாபசாரங்களையும் சேதனன் செய்யும்போது இயற்கையில் கருணைமிக்க எம்பெருமானுக்கும் நீரில் நெருப்புக் கிளர்வதுபோலே கடுமையான கோபம் உண்டாகிறது. ஆகையால் இத்தகைய குற்றங்களைச் செய்த சேதனன், அவனிடம் நேரே நின்று சரணம் புகுந்தால் அவன் செய்த குற்றங்கள் எம்பெருமான் திருவுள்ளத்தில் பட்டு அவனுக்குச் சீற்றமே உண்டாகுமாகையாலே, அந்தச் சீற்றத்தை ஆற்றி அவனை எம்பெருமானோடு சேர விடும் புருஷகார பூ₄தையான பெரிய பிராட்டியாரை முன்னிட்டுக்கொண்டே சரணமடையவேண்டும். இதனாலேயே எம்பெருமானும் தம்முடைய குற்றங்களைக் கண்டதால் எம்பெருமானுக்குண்டான சீற்றத்தைத் தணிப்பவளாய், பாரதந்த்ரியமே ஸ்வரூபமான பெண்களில் தலைசிறந்தவளாய் இருக்கையாலே உண்டான மென்மையை உடையவளாய், உலகனைத்துக்கும் தாயாய் இருக்கையால் உண்டான ஸம்பந்தத்தை உடையவளாய். "ஶ்ருணோதி இதி ஶ்ரீ:" [சேதனர் வார்த்தைகளைக் கேட்பவளாகையாலே ஶ்ரீ: எனப்படுகிறாள்] என்கிற ஶ்ரீ ஶப்₃த₃வ்யுத்பத்தியின்படி சேதனர்கள் சொல்லும்

தாழ்த்துக் கேட்குமவளுமாய், அவனைத் தன் பே்ராக்யதை யாலே துவக்கிக் கேட்பிக்குமவளுமாய், அதுக்குமேலே ஸ்தநந்தயப்ரஜைக்குத் தாய்கீழே ஒதுங்குகை ப்ராப்த மானவோபாதி ஸ்வரூப ப்ராப்தையுமாயிருக்கையாலே பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுகிறார். நெடுங் காலம் விஷயப்ரவணனாய்ப்போந்த ப்ரஜை, நிவ்ருத்த னானவன்று, பிதாவின்பக்கல் நேர்முகம் பார்த்துச் சொல்லுகை அரிதாய், மாதாவின் பக்கல் சொல்லுகை எளிதாயிருக்குமிறே. ப்ரதமத்தில் ஆஶ்ரயிக்கைக்குங்கூட இறாய்த்த இவர், இவளை ஆஶ்ரயித்தவனந்தரம், பண்ணின

---

வார்த்தையைச் செவிகொடுத்துக் கேட்பவளாய் "ஶ்ராவயதி இதி ஶ்ரீ:" [சேதனர் சொல்லும் வார்த்தைகளை எம்பெரு மானைக் கேட்பிப்பவளாகையாலே 'ஶ்ரீ:' எனப்படுகிறாள்] என் கிற வ்யுத்பத்தியின்படி எம்பெருமானைத் தன் இனிமை யிலே ஈடுபடுத்திச் சேதனர் வார்த்தையைக் கேட்பிக்குமவ ளாய், அதற்குமேலே கைக்குழந்தை தாயின் அரவணைப்பி லேயே இருக்கை தக்கதாகையாலே, நம் ஸ்வரூபத்துக்குத் தக்க உறவுடையவளாய் இருக்கையாலே எம்பெருமானார் பிராட்டி திருவடிகளிலே தமக்குத் தஞ்சமாக விளைப்பதற் காகச் சரணம் புகுவது தக்கதேயாகும். அநாதிகாலமாக தாய் தந்தையரை விட்டு நீங்கி மற்ற விஷயங்களிலேயே ஈடுபட்டிருந்த ஒரு பிள்ளை அவற்றிலிருந்து நீங்கினபோது தந்தையிடம் நேரே வார்த்தை சொல்லுவது அரியதாய், தாயிடம் வார்த்தை சொல்லுவது எளிதாயிருக்குமன்றோ; அதுபோலவே முதலில் எம்பெருமானை நேரே ஆஶ்ரயிப்பதற் கும் அஞ்சிய இவரும் தாயைத்தஞ்சமாகக் கொண்டு அவளை ஆஶ்ரயித்த பிறகு அவளுடைய பக்கபலத்தாலே "நான் பண்ணின குற்றங்களையெல்லாம் பொறுத்தருளவேணும்" என்று (பதினோராவது சூர்ணையில்) பிரார்த்திக்கிறாரன்றோ. [இவ்வளவும் பெரியவாச்சான்பிள்ளையின் அவதாரிகைப்படி]

அபராதங்களை "க்ஷமஸ்வ" என்கிறீரே அந்த:புரபரிசாரமாகையாலே.

---

श्रीः

श्रीमत्सुदर्शनभट्टार्यप्रणीत श्रुतप्रकाशिकाभिधानम्

## ॥ शरणागतिगद्यव्याख्यानम् ॥

* यतीन्द्रकृतभाष्यार्था यद्व्याख्यानेन दर्शिताः ।
वरं सुदर्शनार्यं तं वन्दे कूरकुलाधिपम् ॥

|| वरदं द्विरदाद्रीशं श्रीनिधिं करुणानिधिम् ।
शरण्यं शरणं यामि प्रणतार्तिहरं हरिम् ॥

उपायोपेयपरं द्वयं विशदीक्रियते । तत्र प्रतापोष्मलपितृत्वदुरासदभगवत्समाश्रयणसिद्धये पुरुषकारभूतवात्सल्यनिर्भरलक्ष्मीसमाश्रयणं श्रीमच्छब्दविवरणमुखेनाभिधीयते ॥

---

இனி, ஶ்ருதப்ரகாஶிகாசார்யரின் அவதாரிகை பின்வருமாறு:—இரண்டு கண்டங்களாலே முறையே உபாயத்தையும்

---

* ஶ்ருதிப்ரகாஶிகாசார்யரான ஸுதர்சன பட்டரின் இத்தனியனுக்குப் பொருள்:— யதிராஜர் அருளிய ஸ்ரீபாஷ்யத்தின் பொருள் எவருடைய வ்யாக்யானத்தின் மூலம் வெளியிடப்பட்டதோ, அத்தகைய மேலோராய், கூரத்தாழ்வான் குலத்துக்குத் தலைவரான ஸுதர்சனபட்டரை வணங்குகிறேன்.

|| ஸுதர்சனபட்டர் அருளிய இந்தமங்களஶ்லோகத்தின் பொருள்:— வரந்தரும் பெருமாளாய், அத்திகிரியப்பனாய், திருவை மார்பில் கொண்டவனாய், கருணைக்கடலாய், ஶரணமடையத்தக்கவனாய், ஶரணமடைந்தவரின் ஸம்ஸாரத் துன்பத்தைப்போக்குகிறவனான ஹரியைத்தஞ்சமாக அடைகிறேன்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீபகவத்ராமாநுஜமுநிபிரநுக்ருஹீதே கத்யத்ரயே

# சரணாகதிகத்ய வ்யாக்யாநம்

## * தனியன்கள்

1 யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம-
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே |
அஸ்மத்குரோர் பகவதோ ऽஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்யே

2 வந்தே வேதாந்த கர்ப்பூர சாமீகர கரண்டகௌ |
ராமாநுஜார்ய மார்யாணாம் சூடாமணிமஹர்நிஶம் ||

---

உபேயத்தையும் விவரிக்கும் த்வயமந்த்ரம் சரணாகதிகத்யத்தில் விவரிக்கப்படுகிறது. லக்ஷ்மீதேவியைச் சரணமடைந்து அவளுடைய 'அஞ்சேல்' என்னும் வார்த்தையைப் பெறுவதைக்காட்டும் முதல் நாலு சூர்ணைகள் த்வயத்தில் 'ஸ்ரீமத்' என்னும் பதத்தின் விவரணமாகும். எம்பெருமான் தந்தையாகையாலே நம்குற்றங்களைப் பார்த்துக் கோபம் கொண்டிருக்கையாலே அணுகுவதற்கு அரியவன். பிராட்டியோ வெனில், தாயாய், வாத்ஸல்யம் நிறைந்தவளாய், சேதனனை எம்பெருமானோடு சேர விடும் புருஷகாரபூதையாகையாலே எம்பெருமானைச் சரணமடைவது நிறைவேறும் பொருட்டு முதலில் இவளைப் பற்றுகிறார் எம்பெருமானார்.

---

* இத்தனியன்களின் பொருள்:—

1 எவரொருவர் அச்சுதனுடைய திருவடித்தாமரைகளாகிற பொன்னில் பேராசையாலே மற்றது அனைத்தையும் புல்லென மதித்தாரோ, அத்தகைய எனது ஆசார்யராய், கருணைக்கோர் கடலாயிருப்பவரான பகவத் ராமாநுஜருடைய திருவடிகளைத் தஞ்சமாக அடைகிறேன்;

# சரணாக₃திக₃த்₃யம்

## 1. ப₄க₃வந்நாராயண—

வ்யா:— (ப₄க₃வந்நாராயண) ப₄க₃வச்ச₂ப்₃த₃த்தாலே 11. (விநா ஹேயைர் கு₃ணாதி₃பி₄:) என்கிறபடியே ஹேயஸம்

---

यद्वा श्रिय प्रपद्य तत्सन्निधौ मूलमन्त्रेण स्वरूपानुरूपपुरुषार्थ-प्रार्थनं तदुपायप्रार्थनापर्यन्तं कृत्वा, तदनुज्ञया द्वयमनुसन्धीयत इति पूर्वाचार्यानुसन्धानमनुसरन् प्रथमं श्रियं प्रपद्यते भगवदिति ॥

---

ஸ்ருதப்ரகாசிகாசாரியர் மற்றொருவிதமாகவும் பின்வருமாறு அவதாரிகையிடுகிறார்:— பூர்வாசார்யர்கள் முதலில் பிராட்டியைப் புருஷகாரமாகச் சரணமடைந்து அவள் முன்னிலையில் திருவஷ்டாக்ஷரமந்த்ரத்தைக் கொண்டு எம்பெருமானிடம் ஸ்வரூபத்துக்குத் தக்கதான புருஷார்த்த₂த்தையும் அதற்குரிய உபாயத்தையும் பிரார்த்தித்து, பிராட்டியின் அநுமதியோடு த்₃வயத்தை அநுஸந்திக்கவேண்டும் என்னும் முறையைக் கைக்கொண்டிருப்பதைப் பின்பற்றி இவரும் முதலில் ஸ்ரீதேவியைச் சரணமடைகிறார் என்றும் கொள்ளலாம்.

வ்யா:— (ப₄க₃வந்நாராயண)

11& மைத்ரேய! ப₄க₃வச்ச₂ப்₃த₃ஸ் ஸர்வகாரணகாரணே!
12 ஸம்ப₄ர்த்தேதி தத₂ா ப₄ர்த்தா ப₄காரோர்த்த₂-
த்₃வயாந்வித:।
நேதா க₃மயிதா ஸ்ரஷ்டா க₃காரார்த்த₂ஸ் தத₂ா முநே॥

---

2 வேதா₃ந்தமாகிற கர்ப்பூரம் வைக்கப்பெற்ற பொற்சிமிழ் போலிருப்பவராய், எல்லா ஆசார்யர்களுக்கும் தலைக்கு அணிகலமாயிருப்பவரான ராமாநுஜரை எப்போதும் வணங்குகிறேன்.

ப4ந்த4ரஹித பூர்ணஷாட்3கு3ண்யத்தைச் சொல்லுகிறது. 11 (ஜ்ஞாநஶக்தி ப3லைஶ்வர்யவீர்யதேஜாம்ஸ்யஶேஷத:। ப4க3வச் ச2ப்3த3வாச்யாநி விநா ஹேயைர் கு3ணாதி3பி4:) என்னக் கடவதிறே. இத்தால் பயிருக்கு நீர் நிலைபோலே ஸர்வாத் மாக்களுக்குங்கூட உஜ்ஜீவநஹேதுவான கு3ணபூர்ணனு மாய், பிறருடைய தோ3ஷம் தட்டாதபடியான ஹேய ராஹித்யத்தையுமுடையவன் என்கிறது. (நாராயண) ப4க3 வச்ச2ப்3த3த்திலே ஸர்வமுமில்லையோ? இனி நாராயண ஶப்3தா3பேக்ஷை உண்டோ? என்னில்: 12. (அந்யத்ர

---

ஐஶ்வர்யஸ்ய ஸமக்3ரஸ்ய வீர்யஸ்ய யஶஸ: ஶ்ரிய:।
ஜ்ஞாநவைராக்3யயோஶ்சைவ ஷண்ணாம் ப4க3 இதீரணா ॥
வஸந்தி தத்ர பூ4தாநி பூ4தாத்மந்யகி2லாத்மநி ।
ஸ ச பூ4தேஷ்வஶேஷேஷு வகாரார்த2ஸ்
ததோ(அ)வ்யய: ॥
ஜ்ஞாநஶக்தி ப3லைஶ்வர்யவீர்யதேஜாம்ஸ்யஶேஷத: ।
ப4க3வச்ச2ப்3த3வாச்யாநி விநா ஹேயைர் கு3ணாதி3பி4: ॥
ஏவமேஷ மஹாஶப்3தோ3 மைத்ரேய! ப4க3வாநிதி ।
பரமப்3ரஹ்மபூ4தஸ்ய வாஸுதே3வஸ்ய நாந்யக3: ॥
தத்ர பூஜ்யபதா3ர்த்தோ2க்திபரிபா4ஷாஸமந்வித:।
ஶப்3தோ3(அ)யம் நோபசாரேண த்வந்யத்ர ஹ்யுபசாரத: ॥
[ வி பு 6-5-72...78]

[மைத்ரேயரே! 'ப4க3வான்' என்னும் ஶப்3த3ம் ஸர்வகாரணங்களுக்கும் காரணபூ4தனான ஸர்வேஶ்வரன் விஷயத்தில் சொல்லப்படுகிறது. 'ப்ரக்ருதியை கார்யதஶையை அடையச் செய்பவன்', 'ஸ்வாமி' என்னும் இரண்டு அர்த்த2ங்களுடன் கூடியது ப4காரம்; 'முனிவரே! அப்படியே 'நடத்துபவன், ஸம்ஹரிப்பவன், ஸ்ருஷ்டிப்பவன்' என்பது க3காரத்தின் அர்த்த2ம், ஸம்பூர்ணமான ஐஶ்வர்யம், வீர்யம், யஶஸ், செல்

ஷ்யுபசாரத:) என்கிறபடியே பகவச்சப்தத்துக்கு ப்ரஹ்ம ஸப்தத்தோபாதி வ்யக்த்யந்தரங்களிலே ஔபசாரிகமாக

---

வம், ஜ்ஞானம், வைராக்யம் என்னும் இந்த ஆறு குணங்களுக்கும் 'பக' என்னும் பதம் வாசகமாயிருக்கிறது. பூதங்களை ஸரீரமாகக் கொண்டவனும், எல்லாவற்றுக்கும் ஆத்மாவாயிருப்பவனுமான அவனிடத்தில் பூதங்கள் வஸிக்கின்றன. அவனும் எல்லா பூதங்களிலும் வஸிக்கிறான். ஆகையால் அழிவற்றவனான பகவான் வகாரத்துக்கு அர்த்தமாகிறான். கீழ்மையான முக்குணங்கள் முதலியவற்றுடன் சேராத ஜ்ஞானம், ஸக்தி, பலம், ஐஸ்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறுகுணங்களும், 'பகவாந்' என்னும் ஸப்தத்தினால் சொல்லப்படுகின்றன. மைத்ரேயரே! இம்மாதிரியாக பகவான் என்னும் இந்த மஹா ஸப்தம் பரப்ரஹ்மமான வாஸுதேவனுக்கே உரித்தானது; வேறொருவனையும் குறிக்காது. 'பூஜிக்கத்தக்க பொருளைக் குறிப்பது' என்னும் பரிபாஷையுடன் கூடிய இந்த ஸப்தம் அவன் விஷயத்தில் ஔபசாரிகமாகச் சொல்லப்படுவதில்லை. மற்ற விஷயங்களில் ஔபசாரிகமாக (அமுக்யமாக)ச் சொல்லப்படுகிறது.] என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் பராசரர் விவரித்தபடியே 'பகவான்' என்னும் சொல் தாழ்ந்தகுணங்கள் எதுவுமில்லாமல், ஜ்ஞானம், சக்தி, பலம், ஐஸ்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறு குணங்களோடு கூடியிருப்பவன் எம்பெருமான் என்று காட்டுகிறது. இதனால் பயிருக்கு நீரிலே போலே எல்லா ஆத்மாக்களும் உய்வதற்கு உறுப்பான குணங்களால் நிறைந்தவனும், பிறருடைய குறைகள் தன்மேல் படாதபடி தாழ்வில்லாதவனும் இருப்பவன் பகவான் என்றதாகிறது. (நாராயண) பகவான் என்னும் சொல்லே எம்பெருமானுடைய பெருமைகளையெல்லாம் சொல்லுவதாயிருக்க, 'நாராயண' எனும் இந்தச் சொல்லையிடுவது எதற்காகவெனில், கீழே எடுத்த விஷ்ணுபுராண வாக்யத்தின்படி ப்ரஹ்ம ஸப்

னாகிலும் ப்ரயோகமுண்டு. அதுவுமின்றியே அநந்ய பரமான நாராயணாநுவாகஸித்தமாய், யோகரூடியாலே நாராயணபதம் ஸர்வேஶ்வரனுக்கே வாசகமாயிருக்கும்; அத்தாலே விஶேஷிக்கிறது. ஆக, "பகவந் நாராயண" என்று ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், உபயவிபூதிநாதனான ஸர்வேஶ்வரனைச் சொல்லிற்றாயிற்று.

---

भगवन्नारायणशब्दौ गुणविभूतिपौष्कल्यपरौ * द्विषट्काष्टार्णयोरपि तत्साहित्यज्ञानपरौ च ।

---

தத்தைப் போலே பகவான் என்னும் சொல்லையும் மற்றவர்களைக் குறித்தும் உபசாரமாக வழங்குவது உண்டு. அக்குறையில்லாமல் எம்பெருமான் ஒருவனுக்கேஉரியதாயிருப்பது 'நாராயண' ஶப்தம். வேறு எவரையும் குறிக்கமாட்டாத நாராயணாநுவாகத்தில் பலமுறை முழங்கப்பட்டது இச்சொல். யோகத்தாலும் (தாது- அர்த்தத்தாலும்) ரூடி (இடுகுறி)யாலும் 'நாராயண' ஶப்தம் எம்பெருமான் ஒருவனையே குறிக்கும். ஆகையால் 'பகவான்' என்றதோடு நில்லாமல் 'நாராயண' என்றும் அருளிச்செய்கிறார். 'பகவான்' என்னும் சொல்லால் முற்கூறியபடி எல்லாக்கல்யாண குணங்களையும் உடையவன் என்று சொல்லப்படுகிறது. 'நார' ஶப்தத்தால் நித்யவிபூதி லீலாவிபூதி என்னும் இரண்டு விபூதிகளும் சொல்லப்படுகையாலே 'நாராயண' ஶப்தம் உபயவிபூதி நாதன் என்று காட்டுகிறது. பகவச்சப்தத்தாலே 'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய' என்னும் த்வாதஶாக்ஷரத்தையும், 'நாராயண' ஶப்தத்தாலே 'ஓம் நமோ நாராயணாய' என்னும் திருவஷ்டாக்ஷரத்தையும் உணர்த்தி இந்த மந்திரங்களிலும் பிராட்டியின் ஸம்பந்தத்தை அநுஸந்திக்க வேண்டும் என்று காட்டுகிறதென்று ஶ்ருதப்ரகாசிகாசார்யர் வியாக்யானம் அருளினர்,

பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுகிறாராகில், இவ்விடத்தில் இதுசொல்லவேண்டுவானென்னென்னில்: ஆற்றுக்கு ஸஹ்யம் போலேயும், விளைநிலத்திற்கு ஏரிக்கட்டு போலேயும், இவளுடைய கல்யாணகுணங்களுக்கு அடியான கல்யாணகுணயோகத்தையும், இவளுடைய விபூதிக்கு அடியான உபயவிபூதியோகத்தையும் சொல்லுகிறது. அவனைச் சொல்லும்போது 13. (ஶ்ரீமாந்) என்னவேண்டினவோபாதி இவளைச் சொல்

---

பகவச்சப்தத்தாலே குணபூர்த்தியும், நாராயண ஶப்தத்தாலே விபூதிபூர்த்தியும் அநுஸந்திக்கப்படுவதாகவும் அவர் அருளிச்செய்வர். ஶ்ரீதேசிகனும் பகவச்சப்தத்தாலே எம்பெருமான் குணபூர்த்தியும் தாழ்வற்றிருகைகயுமாகிற உபய லிங்கத்தை (இரு அடையாளங்களை) உடையவன் என்று உணர்த்தப்படுவதாகவும், நாராயண ஶப்தத்தாலே உபய விபூதியையும் உடையவன் என்று உணர்த்தப்படுவதாகவும் அருளிச்செய்தார்.

இவர் பிராட்டி திருவடிகளிலே சரணமடையும் இவ்விடத்தில் "பகவந் நாராயண" என்று எம்பெருமானுடைய ஸம்பந்தத்தை ஏன் சொல்லுகிறார்? எனில்—காவிரியாற்றுக்கு மூலமாக ஸஹ்யமலை அமைந்திருப்பது போலவும், விளைநிலத்திற்கு நீரளிக்கும் ஏரிக்கட்டு மூலமாக இருப்பது போலவும் இப்பிராட்டியினுடைய கல்யாண குணங்களுக்கு எம்பெருமானுடைய கல்யாண குணங்களே மூலம் என்பதையும், உபயவிபூதியும் அவனுக்கு உரியதாயிருக்கையாலே, அவனுடைய பத்தினியான இவளுக்கும் உரியதாயிருக்கிறது என்பதையும் காட்டுவதற்காக இப்பதங்களையிடுகிறார்.

13 ஏஷ நாராயண: ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: ।
நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம் ॥
[ஹரிவம்சம் 113-62]

லும் போதும் 14. (விஷ்ணுபத்நீ) என்னவேண்டியிறே இருப்பது. நிரூபகத்தையொழிய நிரூப்யத்துக்கு ஸ்திதி யில்லாதவோபாதி. நிரூப்யத்தையொழிய நிரூபகத்துக்கும ஸ்திதியில்லையே.

---

[பாற்கடலில் பள்ளிகொண்டவனை இந்த ஸ்ரீமந் நாராயணனை வைகுண்டபுரிக்குவர்திருக்கிறான்] என்கிறபடியே அவனைச்சொல்லும்போது 'ஸ்ரீமான்' என்று இவள் ஸம்பந்தத்தையிட்டுச் சொல்வதுபோலே,

14 அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணு பத்நீ

[யஜு-ஸம். 4-4-12]

[இவ்வுலகிற்கு ஈஶ்வரியாகவும் விஷ்ணுவுக்குப் பத்னியாகவும் இருப்பவள் பிராட்டி] என்கிறபடியே இவளைச் சொல்லும் போது 'விஷ்ணு பத்நீ' என்று அவனையிட்டு இவளைச் சொல்லவேண்டும்படியன்றோ இருப்பது. அவனுடைய ஸ்வரூபத்தை நிரூபித்துத்தரும் அஸாதாரண தர்மமாயிருப்பவள் இவள். ஆகையால், அவன் இவளைவிட்டு நிலைநிற்பதில்லை. அதுபோலவே இவனால் நிரூபிக்கப்படும் அவனை விட்டு அவனை நிரூபித்துத்தரும் இவளும் தனியே நிற்பதில்லை.

அஹந்தா ப்ரஹ்மணஸ் தஸ்ய ஸாऽஹமஸ்மி ஸநாதநீ/
ஆத்மா ஸ ஸர்வபூதாநாமஹம் பூதோ ஹரி: ஸ்ம்ருத: ॥
அஹந்தயா விநாऽஹம் ஹி நிருபாக்யோ ந ஸித்யதி
அஹமர்த்தம் விநாऽஹந்தா நிராதாரா ந ஸித்யதி ॥

[லக்ஷ்மீதந்த்ரம் 2-12, 13]

[பழமையானவளான நான் ப்ரஹ்மமாகிற அந்த பகவானுக்கு அஹந்தை (நானென்னும் தன்மை) யாயிருக்கிறேன். ஸர்வபூதங்கட்கும் ஆத்மாவான ஹரியானவர் அஹம்பூதராயிருக்கின்றார். அஹந்தையை விட்டு அஹமர்த்தமானது பெயரற்றதாய் ஸித்திக்காது. அஹமர்த்தத்தை விட்டு அஹந்தையானது ஆதாரமற்றதாய் ஸித்திக்காது.] என்று இவ்வர்த்தம் லக்ஷ்மீதந்த்ரத்தில் பிராட்டியாலேயே அருளிச்

## அபி,மதா,நுரூப—

(அபி,மத) ஏவம்வித,னுமிருந்துள்ள இவனுக்கு அபி,மதமாயிருக்கை. (அநுரூப) ராஜாக்கள் தேசஸ்த்ரீ காற்கடையிலே துவளுமாபோலே அபி,மதமேயாகிலும் அநநுரூபமாயிருப்பன உண்டு, அங்ஙனன்றிக்கே "உனக்கேற்கும்" என்னும்படியே அநுருபமாயிருக்கை. இப்படி அபி,மதமாய்,

---

अनुरूपेऽनभिमतिरननुरूपे चाभिमतिश्च दृश्यत इति तद्व्युदासाय अभिमतानुरूपशब्दौ ।

---

செய்யப்பட்டதன்றோ, "இப்படி ஒருவரையிட்டு ஒருவரை நிரூபிக்கவேண்டுமானால் அந்யோந்யாச்ரய தோ,ஷம் வருமே" என்னும் ஆக்ஷேபத்தைச் செய்து கொண்டு, "ஒளியையும் ஒளியையுடைய பொருளையும் ஒன்றையிட்டு மற்றொன்றை நிரூபிப்பது ப்ரமாணத்திலும் உலகவழக்கிலும் உண்டாகையாலே இந்ததோஷம் வராது" என்று ஸ்ரீதேசிகன் காட்டுகிறார். பிராட்டி ஒளிபோலே விசேஷணமாயிருப்பவள், பெருமாள் ஸூர்யன்போலே ஒளிக்கு ஆதாரமான விசேஷ்யமாயிருப்பவன் என்னும்விஷயம் ஸ்ரீராமாயணத்தில் "ப,ாஸ்கரேண ப்ரப,ா யதா,," என்று இருவராலும் சொல்லப்பட்டதன்றோ,

(அபி,மத) இத்தகைய நாராயணனுக்கு மிகவும் இனியளாயிருப்பவள் பிராட்டி என்று காட்டப்படுகிறது. (அநுரூப) பிராட்டி மிக இனியவளாயிருப்பதோடு மிகப் பொருத்தமாகவும் இருப்பவள் என்று காட்டப்படுகிறது. அரசர்களின் பத்னிகளில் சிலர் அவர்களுக்கு மிக இனியவர்களாக இருந்தபோதிலும் தாழ்ந்தகுடியிலே பிறந்தவர்களாக இருக்கையாலே பொருத்தமற்றவர்களாகவும் இருப்பர். அப்படியில்லாமல் "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" [திருவாய் 10-1-6] என்கிறபடியே, எம்பெருமானுக்கு மிகப்பொருத்தமானவளாகவும் இருப்பவள் பிராட்டி என்றபடி. இப்படி மிக இனிய

## ஸ்வரூபரூப—

அநுரூபமாயிருக்கிறவை எவையென்னில்: ஸ்வரூப ரூப கு₃ண விப₄வைச்வர்ய சீலாதி₃கள். அவனுக்கு இவள் ஸ்வரூபம் அபி₄மதமாயிருக்கையாவது – இவள் ஸ்வரூபம் அவன் ஸ்வரூபத்துக்கு தா₄ரகமாயிருக்கை. ராவணன் மாயா சிரஸ்ஸைக் காட்டினபோதும் இந்த்₃ரஜித் மாயா ஸீதையைக் காட்டினபோதும் இருவரும் மெய்யென்று ப்₄ர மிக்கச்செய்தே அந்யோந்யம் தா₄ரித்துக்கிடந்தவிடம ஸ்வரூபஸத்தையாலேயிறே. அவன் ஸ்வரூபம் இவ ளுக்கு தா₄ரகமாகிறது ஸ்வரூபத:; இவள் ஸ்வரூபம் அவனுக்கு தா₄ரகமாகிறது அபி₄மதத்வத்தாலே.

---

தாயும் பொருத்தமாயும் இருப்பவை பிராட்டியின் எந்த அம்சங்கள் எனில் ஸ்வரூபம், ரூபம், கு₃ணம், விப₄வம், ஐச்வர் யம் சீலம் முதலானவை அனைத்தும் என்கிறார். அவனுக்கு இவள் ஸ்வரூபம் மிக இனியதாயிருக்கையாவது—இவள் ஸ்வரூபம் அவன் ஸ்வரூபத்தை தா₄ரிக்கச்செய்வதாயிருக்கை. ராவணன் ஸீதையிடம் ராமனுடைய மாயா சிரஸ்ஸை (பொய்த் தலையை)க் காட்டி 'ராமன் இறந்து விட்டான்' என்று சொன்னபோதும், இந்திரஜித் ராமனிடம் மாயா ஸீதையைக் காட்டியபோதும், இருவரும் தங்களுடைய மனுஷ்யாவதாரத்திற்குச் சேர மெய் என்று மயங்கிய போதும் உயிர் தரித்திருந்தது மற்றவர் உண்மையில் இறக்காமை யாலன்றோ. எம்பெருமானுடைய ஸ்வரூபம் இவளை உயிர் தரிக்கச்செய்வது அந்தர்யாமியாய் நின்று இவளை ரக்ஷிக்கை யாலே. இவள் ஸ்வரூபம் அவனை தா₄ரிக்கச் செய்வது அது அவ னுக்கு மிகவும் இனியதாகையாலே; ஸ்வரூபத்தாலேயன்று.

அநுரூபமாகையாவது,— 15, (யதா₂ ஸர்வக₃தோ விஷ்ணுஸ் ததை₂வேயம்) என்றும், 16. (த்வயா ச விஷ்ணுநா சாம்ப₃) என்றும், 17. (யுக்தா ராமஸ்ய ப₄வதி) என்றும்,

---

இவள் ஸ்வரூபம் அவன்ஸ்வரூபத்துக்கு அநுரூபமாய் (பொருத்தமாய்) இருக்கையாவது:—

15 நித்யைவைஷா ஜக₃ந்மாதா விஷ்ணோ: ஶ்ரீரநபாயிநீ ।
யதா₂ ஸர்வக₃தோ விஷ்ணுஸ்ததை₂வேயம் த்₃விஜோத்தம ॥
[வி பு 1-8-17]

[ஜக₃ந்மாதாவாய், விஷ்ணுவுக்குச் செல்வமாயிருப்பவளாய், இறையும் அகலகில்லாதவளான இந்தப் பிராட்டி நித்யையே; ப்₃ராஹ்மணோத்தமரே! எப்படி ப₄க₃வான் ஸர்வவ்யாபியாய் இருக்கிறானோ, அப்படியே இவளும் ஸர்வவ்யாபினியாயிருக்கிறாள்.] என்றும்,

16 த்வம் மாதா ஸர்வலோகாநாம் தே₃வதே₃வோ ஹரி: பிதா ।
த்வயைதத்₃ விஷ்ணுநா சாம்ப₃ ஜக₃த் வ்யாப்தம் சராசரம் ॥
[ வி பு 1-9-126]

[தாயே! எல்லாவுலகங்கட்கும் நீ அன்னை; தே₃வதே₃வனாகிய ஹரி தந்தை; உன்னாலும் விஷ்ணுவாலும் இவ்வுலகம் வியாபிக்கப்பட்டுள்ளது] என்றும்,

17 யுக்தா ராமஸ்ய ப₄வதி த₄ர்மபத்நீ யஶஸ்விநீ ।
ப்ரதிஸந்தி₃ஶ மாம் தே₃வி க₃மிஷ்யே யத்ர ராக₄வ: ॥
[ரா-யு 116-47]

[பிராட்டியே! தேவரீர் ராமபிரானுக்குத் தகுந்தவராகவும், த₄ர்மபத்னியாகவும், கீர்த்திமிக்கவராகவும் இருப்பவர்; என்னை அனுப்புவீர்; நான் ராமனிருக்குமிடம் செல்வேன்] என்றும்,

18. (தவைவோசிதயா) என்றும் சொல்லுகிறபடியே இவளுடைய ஸ்வரூபம் அவனோடொக்கச் சொல்லலாம்படியிருக்கை. (ரூப) ரூபமாவது விக்₃ரஹம். ஸ்வரூபத்தைச் சொன்னவநந்தரம் ஸ்வரூபகு₃ணங்களைச் சொல்ல ப்ராப்த

---

18 ஸ்வவைஶ்வரூப்யேண ஸதா₃ऽநுபூ₄தயாऽப்யபூர்வவத்
விஸ்மயமாத₃தா₄நயா/
கு₃ணேந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ் ஸதா₃
தவைவோசிதயா தவ ஶ்ரியா ||
[ஸ்தோத்ர-ர.38]

*[தன் விஶ்வரூப நிலையுடன் எப்போதும் அனுப₄விக்கப்பட்ட போதிலும், கு₃ணங்களாலும், வடிவழகாலும், அழகிய செயல்களாலும் புதியதுபோல் ஆஶ்சர்யத்தைத் தருபவளாய், (பரம், வ்யூஹம், விப₄வம் முதலிய) எல்லா நிலைகளிலும் உனக்கே தகுந்தவளாய், உனக்குச் செல்வமாயிருப்பவளான பிராட்டியோடு.] என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் எங்கும் வியாபித்திருப்பது போலே இவளும் எங்கும் வியாபித்திருப்பவள் என்று சொல்லலாம்படியிருக்கை. கத்₃யவ்யாக்₂யானம் அருளிய பெரியவாச்சான்பிள்ளையே தம்முடைய பரந்த ரஹஸ்யத்தில் திருமந்த்ரத்தில் அகாரத்தின் பொருளை விவரிக்கும்போது இவள் அணுவாயிருந்த போதிலும் அகடிதகடனாசக்தியாலே எம்பெருமானுடைய ஸ்வரூபம் உள்ளவிடமெங்கும் வியாபித்திருக்கிறாள் என்று ப்ரமாணங்களைக் கொண்டு நிர்வஹித்திருப்பது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. ஸ்ரீ விஷ்ணுபுராண வ்யாக்₂யானத்தில் எங்களாழ்வானும் இவளுடைய ஸ்வரூப வ்யாப்தியை இப்படியே அருளிச்செய்துள்ளார்,*

*அடுத்தபடி (ரூப) என்று பிராட்டியின் திருமேனியும் எம்பெருமானுக்கு மிக இனியதாகவும் பொருத்தமாகவும் இருக்கிறது என்கிறார். ஸ்வரூபத்தைச் சொன்னவுடன் ஸ்வரூபத்திலுள்ள ஜ்ஞானம் ஶக்தி முதலான ஸ்வரூபகு₃ணங்களைச் சொல்ல வேண்டியது நியாயமாயிருக்க, அதைவிட்டுத் திரு*

மாயிருக்க, விக்₃ரஹத்தைச் சொல்லிற்று: ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூபாஶ்ரிதமான கு₃ணங்களுக்கும் ப்ரகாஶகமாகையாலே, ஸ்வரூபம் அபி₄மதமாகாநின்றால் ரூபம் அபி₄மதமென்னுமிடம் சொல்லவேண்டாவிறே; அதுதான் ஸ்வரூபாஶ்ரயமென்றிறே அபி₄மதமாயிற்று. ரூபம் அபி₄மதமாகையாவது — ''அகலகில்லேனிறையும்'' என்று அவள் ஈ ணுக்குத் துணுக்கென்னும்படியான அவன் தானும் மேல்விழும்படியாயிருக்கை. ''மெல்லியல்தோள் தோய்ந்தாய்'' ''மாமலர்மங்கை மணநோக்கமுண்டான்'' என்று அவனுக்கு உண்ணும் சோறு பருகுநீரும் இவள்

---

மேனியைச் சொன்னது ஸ்வரூபத்தையும், ஸ்வரூபத்திலுள்ள கு₃ணங்களையும் அந்தத் திருமேனி வெளிப்படுத்துகையாலே. பிராட்டியின் ஸ்வரூபம் எம்பெருமானுக்கு மிக இனியதாயிருக்கும் போது அவளுடைய திருமேனியும் மிக இனியது என்னும் விஷயம் சொல்லித் தெரியவேண்டியது அன்றன்றோ. உண்மையில 'ததோSபி தத்ப்ரியதரம் ரூபம்' [சதுஃஶ்லோகீ 4] [எம்பெருமானுடைய ஸ்வரூபத்தைக் காட்டிலும் அவனுக்கு இனியதான ரூபம் ] என்று ஆளவந்தார் எம்பெருமானுக்கு அருளிச்செய்தது போலே பிராட்டியினுடைய ஸ்வரூபமும் அவளுடைய மிக இனிய திருமேனிக்கு இருப்பிடமாயிருப்பதாலேயே இனியதாகிறதன்றோ. இந்தத் திருமேனி அவனுக்குஇனியதாகையாவது— ''அகலகில்லேன் இறையும்'' [திருவாய் 6-10-10]என்று 'எம்பெருமானை ஒருகணமும் விட்டுப் பிரியேன்' என்று பிராட்டி கூறும்படியான இனிமையையுடைய அவ்வெம்பெருமானே இவளுடைய திருமேனியின் இனிமையைக் கண்டு மிகவும் ஈடுபட்டிருக்கையேயாம். ''மெல்லியல் தோள் தோய்ந்தாய்'' [திருநெடு-13] ''மாமலர் மங்கை மணநோக்கமுண்டான்'' [பெரியதிரு 8-10-1] என்று அவனுக்கு ''உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும்'' [திருவாய் 6-7-1] எனப்படும் தா₄ரக போஷக போ₄க்₃யங்களெல்லாம் இவள் திருமேனியாயன்றோ இருப்பது. இத்திருமேனி அவனுக்கு

கு₃ணவிப₄வ—

வடிவேயாயிறே இருப்பது. இது அநுரூபமாகையாவது —ஶீலத்தாலும், வயஸ்ஸாலும், வ்ருத்தத்தாலும் துல்யமாயிருக்கை. (கு₃ண) ரூபாநந்தரப₄ாவித்வத்தாலே இதுதான் ஸௌந்த₃ர்யாதி₃களாகக் கடவது, இவையும் ரூபத்துக்கு நிறங்கொடுத்து, போ₄க₃வர்த்த₄கங்களுமாயிருக்கையாலே-அபி₄மதமாயிருக்கும்; அத ஏவ அநுரூபமாயிருக்கும். (விப₄வ) 19. (அர்த்தோ₂ விஷ்ணுரியம் வாணீ) என்று

रूपानन्तरगुणशब्दस्सौन्दर्यादिपरः

*அநுரூபமாய் (பொருத்தமாய்) இருக்கையாவது— ஸ்ரீராமாயணத்தில் [ஸு 16-5] அநுமன் கூறியபடியே ஶீலம் எனப்படும் கு₃ணத்தாலும், வயஸ்ஸாலும், ஒழுக்கத்தாலும் ஸ்ரீராமபிரானுக்குப் பொருத்தமாயிருக்கையேயாகும்.*

*(கு₃ண) ரூபத்தை அடுத்துச் சொல்லப்படுகையாலே இப்பத₃ம் ஸௌந்த₃ர்யம (அவயவ அழகு), லாவண்யம் (திருமேனி அழகு), ஸௌகுமார்யம் (மென்மை), ஸௌக₃ந்த்₄யம் (நறுமணம) முதலான ரூபகு₃ணங்களைச் சொல்லுகிறது. இவையும் பிராட்டியின் திருமேனிக்குச் சிறப்பளித்து, பிராட்டி எம்பெருமானோடு பரிமாறும்போது போ₄க₃த்தை வளர்க்கையாலே மிக இனியவையாய் இருக்கும். அதனாலேயே இதே கு₃ணங்களையுடைய எம்பெருமானுக்கு அநுரூபமாய் அதாவது பொருத்தமானவையாய் இருக்கும்.*

*(விப₄வ) இப்பத₃ம் செல்வத்தைக் குறிக்கிறது.*

*19 அர்த்தோ₂ விஷ்ணுரியம் வாணீ நீதிரேஷா நயோ ஹரி:|*
*போ₃தோ₄ விஷ்ணுரியம் பு₃த்₃தி₄: த₄ர்மோऽஸௌ ஸத்க்ரியா த்வியம்|| [வி-பு 1-8-18]*

*[விஷ்ணுவானவர் பொருளாயிருப்பவர்; இப்பிராட்டி (பொருளைச்சொல்லும்) ஶப்₃த₃மாயிருப்பவள். இவள் ந்யாய ஶாஸ்த்ரமாயிருப்பவள்: ஹரியானவர் ந்யாயமாகவே இருப்பவர். ப₄க₃வான் ஞானமாயிருப்பவர்; இவள் (அதற்கு உபகரணமான பு₃த்₃தி₄யாயிருப்பவள்; அவர் த₄ர்மமாயிருப்பவர்; இவ,*

அர்த்தாம்ஶம் அவனதாய், ஶப்தாம்ஶம் இவளதா யிருக்கை, 20. (புந்நாமா ப₄க₃வாந் ஹரி:, ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீ:) என்னும்படி புல்லிங்க₃பதா₃ர்த்த₂ங்கள் அவன தாய், ஸ்த்ரீலிங்க₃பதா₃ர்த்த₂ங்கள் இவளதாயிருக்கை, 21. (ஸர்வாந் போ₄கா₃ந் பரித்யஜ்ய) என்று ஸர்வபோ₄க₃ங் களையும் விட்டுக் காடேறப்புறப்பட்டாள் என்கையாலே

---

அதை ஸாதிக்கும் கற்கருமாயிருப்பவள்.] என்கிறபடியே அர்த்த₂ம் (பொருள்) முதலானவற்றை எம்பெருமான் அபி₄ மானிக்கையால் அவனுடைய செல்வங்களாகவும், அவற்றை விட்டுப் பிரியாதஶப்₃த₃ம் (சொல்) முதலானவற்றைப்பிராட்டி அபி₄மானிக்கையால் அவை அவளுடைய செல்வங்களாகவும் சொல்லப்படுகின்றனவன்றோ.

20 தே₃வதிர்யங்மநுஷ்யேஷு புந்நாமா ப₄க₃வாந் ஹரி: ।
ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய! நாநயோர் வித்₃யதே
பரம் ॥ [வி பு 1-8-35]

[மைத்ரேயரே! தே₃வர், திர்யக் (ஊர்வன), மநுஷ்யர்கள் ஆகிய ஜீவராசிகளுள் ஆணாயிருப்பது ப₄க₃வான் ஹரியின் அம்சம் பெற்றது. பெண்ணாயிருப்பது லக்ஷ்மியின் அம்ஶம் பெற் றது. இவ்விருவரைக் காட்டிலும் மேலானதில்லை.] என்கிறபடியே ஆண்பாற்பொருள்களை அவன் அபி₄மானிக்கையாலே அவனுடைய செல்வங்களாய், பெண் பாற்பொருள்களை இவள் அபி₄மானிக்கையாலே இவளுடைய செல்வங்களாயிருக்கும். இங்கு இவளுடைய செல்வமாகக்கூறப் பட்டவை, அவனுக்கு மிக இனிமையாகவும் பொருத்தமான வையாகவும் இருக்கும் என்பது தன்னடையே விளங்கும்.

21 இயம் ஸா த₃யிதா பா₄ர்யா ராக்ஷஸீவஶமாக₃தா ।
ஸர்வாந் போ₄கா₃ந் பரித்யஜ்ய ப₄ர்த்ருஸ்நேஹப₃லாத்-
க்ருதா ॥
அசிந்தயித்வா து₃:க்கா₂நி ப்ரவிஷ்டா நிர்ஜநம் வநம் ॥
[ரா-ஸு 16-19]

[ராமபிரானுக்கு இனியமனைவியும், (அவர் விபூ₄தியிலும் விஞ்சியுள்ள) லீலோபகரணபோ₄கோ₃பகரணங்கள் எல்லா

லீலோபகரணங்களும் போ₄கோ₃பகரணங்களும் அவன் விபூ₄தியிலும் விஞ்சியிருக்கை. அவையாவன: ''முற்றிலும் பைங்கிளியும் பந்துமூசலும் பேசுகின்ற சிற்றில் மென் பூவையும் விட்டகன்ற செழுங்கோதை'' ''பூவை பைங் கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள்'' என்னுமவையும் ஸ்ரக்சந்த₃நாதி₃களும்; இவைதான் ஸாமாந்யமாயும், அந் த₂:புரபரிகரமாயுமிருக்கும். அங்ஙனன்றியே 22. (யோ யோ

வற்றையும் விட்டு, அவரிடம் அன்பாலே உந்தப்பட்டவ ளாய், து₃:க்க₂ங்களைக் கணிசியாமல் மனிதர்களில்லாத காட்டை அடைந்தவளான இவளன்றோ ராக்ஷஸிகளுக்கு வரப்பட்டு நிற்கிருள்,] என்று பெருமாளும் ஸீதாபிராட்டி யும் 'காட்டுக்குப் புறப்படும்போது எல்லா போகங்களையும் விட்டு' என்று இவளுக்குக் குறிப்பிட்டுச்சொல்லுகையாலே, கிளி முதலான, விளையாட்டுக்கு உரியசெல்வங்களும், மாலை, சந்தனம், திருவாபரணம் முதலான போ₄க₃த்திற்குரிய செல்வங்களும் அவனுடைய செல்வங்களைக் காட்டிலும் விஞ்சியிருக்கும் என்று விளங்குகிறது. இவளுடைய செல் வங்களாவன:— ''முற்றிலும் பைங்கிளியும் பந்துமூசலும் பேசுகின்ற சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற செழுங் கோதை'' [பெரிய திரு 3—7—8] ''பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள்'' [திருவாய் 6-7-3] என்று ஆழ் வார்களால் சொல்லப்பட்டவையும், மாலை சந்தனம் முதலான வையும் ஆகும். பரமபதத்தில் எல்லாவிடத்திலுமுள்ள தோட்டங்களில் இவை பொதுவாகவும் பிராட்டியின அந்தப் புரத்தில் பிராட்டிக்கே உரியவையாயும் இருக்கும். ஸ்ரீவை குண்ட₂க₃த்₃யம் மூன்றாம் சூர்ணையில் இது அநுஸந்திக்கப்பட் டது. விப₄வஸப்₃த₃த்திற்கு வேறுவிதமாகவும் பொருள்கொள்ள லாம்,

22 யோ யோ ஜக₃தி பும்ப₄ாவ: ஸ விஷ்ணுரிதி நிஶ்சய:/
யோ யஸ்து நாரீப₄ாவ: ஸ்யாத் தத்ர லக்ஷ்மீர் வ்யவஸ்தி₂தா ||
ப்ரக்ருதே: புருஷாச்சாந்யஸ் த்ருதீயோ நைவ வித்₃யதே|
அத₂ கிம் ப₃ஹுநோக்தேந நரநாரீமயோ ஹரி: ||
[ஸநத்குமார ஸம்ஹிதை]

ஜக₃தி புமப₄ாவ:) 23. (ஶேஷித்வே பரம: புமாந்) என்னும் படியேயவிபூ₄திகளுக்கு ஈஶ்வரன் என்றுமாம். இது அவனுக்கு

---

[உலகில் ஆண்மை காணப்படுமிடமெல்லாம் ஹரி இருக்கிறுன் என்பது நிச்சயம். பெண்மையுள்ள இடமெல்லாம் பிராட்டியிருக்கிறுள். ப்ரக்ருதிக்கு அபி₄மானியாகிற பிராட்டியையும், புருஷாபி₄மானியான ப₄க₃வானையும் தவிர மூன்றுவதொன்றுமில்லை. பல சொல்லியென்? ஸ்த்ரீ புருஷர்கள் எல்லாமாயிருப்பவன் ஸ்ரீமந்நாராயணனே.]

23 ஹேலாயாமகி₂லம் சராசரமித₃ம் போ₄கே₃ விபூ₄தி: பரா
த₄ந்யாஸ்தே பரிசாரகர்மணி ஸதா₃ பஶ்யந்தி யே ஸூரய:/

ஸ்ரீரங்கே₃ஶ்வரதே₃வி! கேவலக்ருபாநிர்வாஹ்ய
வர்க்கே₃ வயம்
ஶேஷித்வே பரம:புமாந் பரிகரா ஹ்யேதே தவ
ஸ்ப₂ாரணே ॥ [ஸ்ரீகு₃ண 22]

[ஸ்ரீரங்க₃நாயகியே! அசைவதும் அசையாததுமடங்கிய இவ்வுலகெல்லாம் உன் விளையாட்டின் பொருட்டு ஆகிறது. மேலான நித்யவிபூ₄தி உன் போ₄க₃த்திற்காக இருக்கிறது. ப₄ாக்₄யஶாலிகளாய் எப்போதும் உங்களைக் கண்டுகொண்டிருக்கும் நித்யஸூரிகள் உனக்குக் கைங்கர்யம் செய்வதற்காக ஏற்பட்டவர்கள். உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினுலே ரக்ஷிக்கப்படுமவர்களின் கோ₃ஷ்டி₂யிலே நாங்களும் நிற்கிறேும். பரமபுருஷன் உனக்கு ஸ்வாமியாயிருக்கிறுன். இவையெல்லாம் உன்பெருமையை வெளிப்படுத்தும் பரிகரங்களாயுள்ளன.] என்கிறபடியே, உப₄யவிபூ₄தியும் அவற்றுக்கு அந்தர்யாமியான எம்பெருமானும் இவளுடைய பெருமையை வெளிப்படுத்தும் செல்வங்களாயுள்ளன என்றும் கொள்ளலாம். இவளுடைய இச்செல்வங்கள் ஸர்வலோக சக்ரவர்த்தியான அவனுக்கு இனியவையாவது அவனுடைய பட்டமஹிஷியின் அந்தப்புரத்தைச் சேர்ந்தவையாகையாலே.

## ஐஶ்வர்ய ஶீலாதி₃—

அபி₄மதமாகிறதும் அந்த:புரபரிகரமாகையாலே. (ஐஶ்வர்ய) அதாவது,—ஸகல பதா₃ர்த்த₂ நியமநஸாமர்த்₂யம். த்ரிவித₄ சேதநரையும் ஸ்வரூபேண நியமிக்கும்: ஈஶ்வரனை ப்ரணயித்வத்தாலே நியமிக்கும். நியமிக்கும் ப்ரகாரமென்? என்னில்: ப₃த்₃த₄ரைக் கர்மாநுகு₃ணமாக நியமிக்கும். நித்யமுக்தரை ஸ்வரூபாநுரூபமாக நியமிக்கும். ஈஶ்வரனை ரக்ஷணாநுகு₃ணமாக நியமிக்கும். இதுதான் அபி₄மதமாகிறதும் புருஷோத்தமத்வ ஸூசகமாகையாலே. ப்ரணயினியினுடைய நியமனம் ப்ரணயிக்குப் பும்ஸ்த்வாவஹமாயிருக்குமிறே. இது ஜ்ஞாநாதி₃கு₃ணங்களுக்கும் உபலக்ஷணம்.

---

(ஐஶ்வர்ய) இப்பத₃ம் எல்லாப்பொருள்களையும் நியமிக்கும் திறமையாகிற தி₃வ்யாத்ம கு₃ணத்தைக் குறிக்கிறது. அதாவது—ஸம்ஸாரத்தில் கட்டுண்டிருக்கும் ப₃த்₃த₄ர், அதிலிருந்து விடுதலை பெற்றிருக்கும் முக்தர், ஸம்ஸார ஸம்ப₃ந்த₄மேயில்லாத நித்யர் ஆகிய மூவகைச் சேதனரையும் தானே நியமிப்பாள். ஈஶ்வரனை அன்பு என்னும் வலையாலே கட்டி நியமிப்பாள். நியமிக்கும் வகை [முறை] என்ன? எனில்: ப₃த்₃த₄ஜீவர்களை அவர்களுடைய புண்யகர்மங்களுக்குத் தக்கபடி செல்வங்களைக் கொடுத்து நியமிப்பாள். நித்ய முக்தர்களை "தேவிமாராவார் திருமகள்பூமி ஏவ மற்றமரர் ஆட்செய்வார்" [திருவாய் 8-1-1] என்கிறபடியே அவர்களுடைய ஸ்வரூபத்திற்குத்தக்க கைங்கர்யங்களிலே நியமிப்பாள். ஸர்வேஶ்வரனை சேதனர்களுடைய ரக்ஷணத்திற்கு அநுகு₃ணமாகப் புருஷகாரம் செய்து நியமிப்பாள். இந்த ஐஶ்வர்யம் எம்பெருமானுக்கு மிக இனியதாயிருப்பது—இப்படிப்பட்ட ஈஶ்வரிக்கும் ஈஶ்வரனை இவனே புருஷோத்தமன் என்று உணர்த்துகையாலே. அன்பு மனைவியின் நியமனம் அன்புக் கணவனுக்கு ஆண்மையை வெளிப்படுத்துவதாகவன்றோ இருப்பது. இங்கு ஷட்₃கு₃ணங்களில் ஒன்றாகிய ஐஶ்வர்யத்தைச் சொன்னது ஜ்ஞானம் ப₃லம் வீர்யம் ஶக்தி தேஜஸ்ஸாகிய மற்ற ஐந்து கு₃ணங்களுக்கும் உபலக்ஷணம்.

(ஶீல) ஶீலம் ராக்ஷஸிகள் பக்கல் ப்ரஸித்₄த₄ம். ராவணனைக் குறித்து 24. (மித்ரமௌபயிகம் கர்த்தும்) என்றும், 25. (விதி₃தஸ் ஸ ஹி த₄ர்மஜ்ஞ:) என்றும், ராக்ஷஸிகளைக்குறித்து 26. (ப₄வேயம் ஶரணம் ஹி வ:) என்றும், 27. (ராஜஸம்

---

(ஶீல) இப்பதம் பெரியவர் தாழ்ந்தவர்களோடு புரையறக் கலந்து பரிமாறும் நீர்மைக் குணத்தைச் சொல்லுகிறது. இக்குணத்தை இலங்கையில் ராக்ஷஸிகளிடத்தில் இவன் காட்டினது பிரஸித்₃த₄மானது. ராவணனைக் குறித்து

24 மித்ர மௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்தா₂நம் பரீப்ஸதா ।
வத₄ம் சாऽநிச்ச₂தா கோ₄ரம் த்வயாऽஸௌ புருஷர்ஷப₄:॥
[ரா-ஸு 21-19]

[(ராவண!) நீ உன்னுடைய குடியிருப்பை விரும்பினாயாகில், கோ₄ரமான வத₄த்தை விரும்பாமலிருந்தாயாகில், இந்தப் புருஷஶ்ரேஷ்ட₂ரான ஸ்ரீராமபிரானை நண்பனாகக் கொள்வது தகுந்தது.] என்றும்,

25 விதி₃தஸ் ஸ ஹி த₄ர்மஜ்ஞஶ் ஶரணாக₃தவத்ஸல: ।
தேந மைத்ரீ ப₄வது தே யதி₃ ஜீவிதுமிச்ச₂ஸி ॥
[ரா-ஸு 21-20]

[(ராவணா!) ஸ்ரீராமபிரான் த₄ர்மத்தை அறிந்தவராகவும், ஶரணமடைந்தவரிடம் வாத்ஸல்யமுடையவராகவும் பிரஸித்₃த₄மானவர். நீ உயிர் வாழ விருப்பினாயாகில், அவருடன் உனக்கு நட்பு உண்டாகட்டும்.] என்றும் கூறியும், ராக்ஷஸிகளைக் குறித்து,

26 ததஸ் ஸா ஹ்ரீமதீ பா₃லா ப₄ர்த்துர் விஜயஹர்ஷிதா ।
அவோசத் யதி₃ தத் தத்₂யம் ப₄வேயம் ஶரணம் ஹி வ: ॥
[ரா-ஸு 58-90]

ம்ச்ரய வச்யாநாம்) என்றும், 28. (பாபாநாம் வா : ஶுபா₄நாம் வா) என்றும் திருவடியோடே மறுதலைத்து ரக்ஷித்தாளிறே. இக்கு₃ணம் அபி₄மதமாகிறது—தனக்கு ஸ்வரூபமான ரக்ஷணத்துக்கு உபயோகி₃யாகையாலே. 'ஆதி₃' ஶப்₃த₃த்தாலே அநுக்த ான கு₃ணவிஶேஷங்களை நினைக்கிறது.

---

[லஜ்ஜை நிரம்பியவளாய், கணவனின் ஜயத்தைக் கேட்டு ஆனந்த₃மடைந்தவளான அப்பிராட்டி, 'அக்கனவு உண்மையானால் உங்களுக்கு நான் அடைக்கலமாகிறேன்' என்று உரைத்தாள்.] என்று கூறியும்,

27 ராஜஸம்ஶ்ரயவச்யாநாம் குர்வந்தீநாம் பராஜ்ஞயா ।
விதே₄யாநாஞ்ச தா₃ஸீநாம் க: குப்யேத் வாநரோத்தம ॥
[ரா-யு 116-38]

[வானரர் தலைவ! ராஜாவை ஆச்ரயித்திருக்கையால் அவனுக்கு வசப்பட்டும், அவனுடைய ஆணையினால் காரியம் செய்பவராயும், அவனுக்கு விதே₄யராயும், தா₃ஸிகளாயுமுள்ள இந்த ராக்ஷஸிகளிடம் எவன் கோபம் கொள்வான்?] என்றும்,

28 பாபாநாம் வா ஶுபா₄நாம் வா வதா₄ர்ஹாணாம் ப்லவங்க₃ம ।
கார்யம் கருணமார்யேண நகஶ்சிந் நாபராத்₄யதி ॥

[வானரனே! பாபிகளாயிருந்தாலும், நல்லவர்களாயிருந்தாலும், கொலைத்தக்கவராயினும் நல்லவனாயிருப்பவன் அவர் திறத்துக் கருணை காட்டவேண்டும். குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே.] என்றும் அநுமனோடு எதிரிட்டும் இக்கு₃ணத்தைக் காட்டினான்றோ. இக்குணம் எம்பெருமானுக்கு மிக இனியதாகையாவது—தன்னுடைய ஸ்வரூப நிருபககு₃ணமான ரக்ஷணத்துக்கு இது உதவியாயிருக்கையாலே. ஆதி₃ ஶப்₃த₃த்தாலே, இங்கு சொல்லப்படாத மற்ற கணக்

அநவதி₄காதிஶயாஸங்க்₂யேய கல்யாண கு₃ண க₃ணம்;

ஸமஸ்தகல்யாண கு₃ணாத்மகனைப் பேசிலும் இவளைப் பேசி முடியாது என்கை. (அநவதி₄காதிஶய) இவைதான் ஓரொன்றே அபரிச்சே₂த்₃யமாயிருக்கும்; (அஸங்க்₂யேய) எண்ணிறந்திருக்கை. (கல்யாண) 29. (இயம் து ப₄வதோ பா₄ர்யா தோ₃ஷைரேதைர் விவர்ஜிதா)

परत्वसौलभ्यकोटिनिविष्टगुणजातप्रदर्शनार्थौ ऐश्वर्यशीलशब्दौ।
अनवधिकेत्यादि स्फुटार्थः।

கற்ற கு₃ணங்களைப் பேசுகிறார். ஸமஸ்த கல்யாண கு₃ணங்களும் நிறைந்தவன் என்று ப்ரமாணங்களில் பேசப்படும் அவனுடைய கு₃ணங்களையும் இவளுடைய கு₃ணங்கள் விஞ்சியிருக்கையாலே அவனுடைய கு₃ணங்களைப் பேசினாலும் பேசலாமேயொழிய இவளுடைய கு₃ணங்களைப் பேசஇயலாது என்று கருத்து. (அநவதி₄காதிஶய) கணக்கற்ற இக்கு₃ணங்களில் ஒவ்வொன்றும் அளவிடமுடியாதபடி எல்லையற்ற பெருமையை உடையதாய் இருக்கும். (அஸங்க்₂யேய) இத்தகைய குணங்கள் எண்ணமுடியாதபடி அளவற்றதாய் இருக்கும். (கல்யாண)

29 ஶதஹ்ரதா₃நாம் லோலத்வம் ஶஸ்த்ராணாம்
தீக்ஷ்ணதாம் ததா₂ |
க₃ருட₃ாநிலயோ: ஶைக்₄ர்யம் அநுக₃ச்ச₂ந்தி யோஷித:||
இயம் து ப₄வதோ பா₄ர்யா தோ₃ஷைரேதைர் விவர்ஜிதா|
ஶ்லாக்₄யா ச வ்யபதே₃ஶ்யா ச யதா₂ தே₃வீ ஹ்யருந்த₄தி||
[ரா-ஆ 13-7]

ஸ்த்ரீகள் மின்னலைப்போல் நிலையற்றவராயும், ஆயுதங்களைப் போல் கொடியவர்களாயும், க₃ருட₃னையும் காற்றையும்போல் வேக₃முள்ளவராயும் உள்ளனர். ராம! உன்பத்தினியான இச்சீதையோவெனில் இந்த தோ₃ஷங்களற்றவள். அருந்த₄தீ தே₃வியைப்போல் மிகவும் கொண்டாடத்தக்கவள்; புகழத்

என்கிறபடியே உள்ளதெல்லாம் அழகியதாயிருக்கை. இவன் குணங்களுக்கு வ்யாவர்த்தகம் அவன் குணங்கள். அவன் குணங்களுக்கு தோஷமேதென்னில், அவனுக்கு ஸ்வரு பாநுபந்தியான நிரங்குஶஸ்வாதந்த்ர்யமுண்டு; 30,(க்ரோத,மாஹாரயத்) என்றுகோபத்தை அருளப்பாடிட்டுக் கார்யம் கொள்ளவேண்டும் தஶையுண்டு; அதுதானும் இவனுக்கு இன்றிக்கேயிருக்கை. (குணகணம்) இவை தான் திரள் திரளாயிருக்கை.

---

தக்கவள்.] என்கிறபடியே ஒவ்வொரு குணமும் மிக அழகா யிருக்கும்; இவளுடைய குணங்கள் அவனுடைய குணங்களை விஞ்சியிருக்கும என்று கருத்து. அவன் குணங்களுக்குக்குற்றம் என்னவெனில்:—பரப்ரஹ்மமாகையாலே அவனுக்குப் பரம் பொருளின் இயல்வான தடையற்ற ஸ்வாதந்த்ர்யம் உண்டு;

30 க்ரோத,மாஹாரயத் தீவ்ரம் வதா,ர்த்த,ம் ஸர்வரக்ஷஸாம்|
துஷ்ப்ரேக்ஷ: ஸோऽப,வத் க்ருத்,தோ, யுகா,ந்தாக்,நிரிவ ஜ்வலந் || [ரா-ஆ 24-34]

[(ராமபிரான்) எல்லா ராக்ஷஸர்களையும் கொல்வதற்காகக் கடுங்கோபத்தை வரவழைத்துக்கொண்டார். (அப்படிக்) கோபங்கொண்ட அவர் ப்ரளயாக்,னிபோல் ஜ்வலிப்பவராய், காணவொண்ணாதவராயிருந்தார்.] என்கிறபடியே கோபத்தை வரவழைத்துக்கொண்டு தீயவர்களை அழிக்க வேண்டிய நிலை அவனுக்கு உண்டு. பரப்ரஹ்மம் அல்லாத இவளுக்குக்குற்றம் இல்லாமையாலே, இவளுடைய குணங்கள் அவனுடைய குணங்களைக்காட்டிலும் மிக அழகியதாய் இருக்கும். (குணகணம்) இப்படி இவளுடைய குணங்கள் ஒன்றிரண்டல்ல, திரள் திரளாக இருக்கும்.

"ஐஶ்வர்ய" ஶப்,த,த்தால் மேன்மைக்குரிய குணங்கள் அனைத்தையும், "ஶீல" ஶப்,த,த்தால் நீர்மைக்குரியகுணங்களனைத்தையும் உணர்த்துகின்றதென்று ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் வ்யாக்யானம் செய்தார்.

''ஏவம் பதிபாரார்த்₂ய யுக்த இதி₂தர ஸர்வஶேஷித்வாந் விதாநாம் அந்யேஷாமபி கு₃ணாநாம் ஆநுரூப்யம் ஸு₂க₂மம்' [இவ்வண்ணமாகக் கணவனான எம்பெருமானுக்கேயாயிருப்பவளாய், அவனைத் தவிர்ந்த மற்ற அனைவருக்கும் ஸ்வாமினியாய் இருக்கையோடு பொருந்தியவையான மற்ற குணங்களுக்குப் பொருத்தம் எளிதில் விளங்கும்] என்று இவ்விடத்தில் தேசிகன் அருளியிருக்கையாலும், இவளுடைய குணங்கள் எல்லையற்றிருப்பவை என்பதை ஆராயும்போதும், முடிவில்,

யதா₂ ப்ரப₄ாகு₃ணோத்கர்ஷே ப₄ாஸ்கரோ நிஸ்ஸமாதி₄க: ।
ஸ்ரீமாநபி ததை₂வ ஸ்யாத் பதி: பத்நீகு₃ணோந்நதௌ ॥
ஜ்ஞாந போ₄கா₃ஸமாநத்வே நித்யமுக்தேஶ்வரேஷு ச ।
யதா₂ வைஷம்ய நியதி: ததை₂வாத்ரேத்யதாவிலம் ॥

[ஒளியினுடைய பெருமை விஞ்சியிருப்பதால் ஸூர்யன் எப்படி ஒளியில் ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவனாய் இருக்கிறானோ, அப்படியே பத்தினியான ஸ்ரீதே₃வியின் குணங்களின் சிறப்பால் அவளையுடையவனான எம்பெருமான் ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவனாய் இருக்கிறான். நித்யர்கள், முக்தர்கள், ஈச்வரன் ஆகியவர்களுக்கு ஜ்ஞானமும், போ₄க₃மும் ஒத்தவை என்று ப்ரமாணங்கள் கூறிய போதிலும், ஜக₃த்ஸ்ருஷ்டி முதலானவை எம்பெருமானுக்கே உரியவை என்று நிர்ணயிப்பது போலே, பிராட்டி விஷயத்திலும் வேற்றுமையை ஒப்புக்கொள்ளவேண்டுமாகையாலே எக்குறையுமில்லை.] என்று ஒத்தாரும் மிக்காரும் இல்லாமை முதலான பரப்₃ரஹ்மலக்ஷணங்கள் எம்பெருமானுக்கே உரியவை என்று நிர்ணயித்திருக்கையாலும் பிராட்டியும் பரப்₃ரஹ்மமே என்றும், எம்பெருமானோடு ஒத்த ஈச்வரி என்றும் கூறும் கவிஞர்களின் கருத்துக்களை ஸ்ரீதேசிகன் ஏற்கவில்லை என்று விளங்குகிறது. இதன் விரிவு நம்முடைய ஸ்ரீதத்வஸர்வஸ்வத்திலும், பஞ்சமபக்ஷ ஶததூ₃ஷணியிலும் காணத்தக்கது.

பத்₃மவநாலயாம், ப₄க₃வதீம், ஶ்ரியம், தே₃வீம்,

(பத்₃மவநாலயாம்) பத்₃மஶப்₃த₃ம் மங்க₃ளங்களுக்கு உபலக்ஷணமாய், 'ஸர்வமங்க₃ள நிலாஸிநீ' என்கை. அங்ஙனன்றியே, 31 (ஸர்வக₃ந்த₄:) என்கிற வஸ்துவையும் ஸ்வஸம்ப₃ந்த₄த்தாலே பரிமளிதமாக்குகை என்றுமாம். பத்₃மஶப்₃த₃த்தாலே போ₄க்₃யதையைச் சொல்லிற்றாய், அத்தாலே நிரதிஶயபோ₄க்₃யபூ₄தை என்றுமாம். பரிமளமிறே இவள் வடிவுக்கு உபாதா₃னம். 31 (ஸர்வக₃ந்த₄ஸ் ஸர்வரஸ:) என்னும் இவையிரண்டும் இத்தலையிலே கிடந்தபடி. (ப₄க₃வ

परत्वसौलभ्ययोस्समाख्याः प्रमाणयति पद्मेत्यादिभिश्चतुर्भिः पदैः ।

''பத்₃மவநாலயாம், ப₄க₃வதீம், ஶ்ரியம், தே₃வீம்'' என்னும் நாலு திருநாமங்களும் இப்பிராட்டியினுடைய மேன்மையையும் எளிமையையும் காட்டுபவை என்று ஶ்ருதப்ரகாசிகாசாரியர் வ்யாக்யாநமிட்டார். இனி, பெரியவாச்சான் பிள்ளையின் விளக்கத்தைத் தொடருவோம்.

(பத்₃மவநாலயாம்) தாமரையைக் குறிக்கும் பத்₃மஶப்₃த₃ம் எல்லா மங்களப் பொருள்களுக்கும் உபலக்ஷணமாய், ''எல்லா மங்களங்களுக்கும் இருப்பிடமாய் இருப்பவள்'' என்று பொருள் படுகிறது. அப்படியல்லாமல், 'பத்₃ம' ஶப்₃த₃ம் நறுமணமுள்ள பொருள்களுக்கு உபலக்ஷணமாய், நறுமணங்கள் அனைத்துக்கும் இருப்பிடமாய் இருப்பவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

31 ஸர்வக₃ந்த₄ஸ் ஸர்வரஸ: [சா₂ந் 3-14-2]

[(பரமாத்மா) எல்லா க₃ந்த₄ங்களையுமுடையவன்; எல்லா ரஸங்களையுமுடையவன்.] என்கிறபடியே, எல்லா மணங்களுக்கும் இருப்பிடமான எம்பெருமானுக்கும் தன் தொடர்பாலே நறுமண மூட்டுபவள் என்று கருத்து. அல்லது, பத்₃ம ஶப்₃த₃த்தாலே இனிமையைச் சொல்லுகிறதாய், 'பத்₃மவநாலயாம்' என்று 'இனிமையுடன் கூடிய எல்லாப்

தீம்) ப₄க₃வச்ச₂ப்₃த₃ம் பூஜ்யவாசி. 12 (தத்ர பூஜ்யபத₃ார்த்₂-தே₂ாக்தி பரிப₄ாஷாஸமந்வித:] ஶப்₃தோ₂ா ₅யம் நோபசாரேண) என்கிறவனுக்கும் பூஜ்யையாயிருக்கை. ஆக, (பத்₃மவநால யாம் ப₄க₃வதீம்) என்கிற இத்தால் தன்வழியாக அவனைப் பற்றினல் குற்றம் பாராதபடி அவனைத் தன் போ₄ாக்₃யதை யாலே துவக்கிப் பொறுப்பிக்குமவளென்கை. (ஶ்ரியம்) தன்னைப்பற்றி ஸர்வமும் உண்டாம்படியாய், தான் அவனைப்பற்றி உளளுமாயிருக்கை. இதிலே நிருக்தி ப்ரக்ரி யையும் நடக்கக்கடவது. (தே₃வீம்)வடிவில் புகரிருக்கிறபடி.

---

பொருள்களுக்கும் இருப்பிடமாய் இருப்பவள்' என்கையாலே தலைசிறந்த இனிமையை உடையவள் என்று பொருள் படுகிறது. நறுமணத்தைக் கொண்டே அமைக்கப் பெற்றது போன்ற திருமேனியை உடையவளன்றோ இவள். இவ் விரண்டு பொருள்களாலும் பரமாத்மாவைப்போலே இவளும் ஸர்வக₃ந்தை₄யாய், ஸர்வரஸையாய் இருப்பவள் என்று விளங்குகிறது. (ப₄க₃வதீம்) 18 வது பக்கத்தில் எடுக்கப் பட்ட 12 வது ப்ரமாணத்தின்படி ப₄க₃வச்ச₂ப்₃த₃ம் பூஜிக்கத் தக்கவரைக் குறிக்கிறது. அந்த ப்ரமாணத்தின்படி ப₄க₃வச் ச₂ப்₃த₃த்தின் முக்₂யார்த்த₂மான எம்பெருமானுக்கும் பூஜிக் கத்தக்கவளாயிருக்கையாலே, இவள் 'ப₄க₃வதீ' எனப்படு கிருள். ஆக, 'பத்₃மவநாலயாம் ப₄க₃வதீம்' என்னும் இரண்டு பதங்களாலே, அடியார்கள் இவளைப் புருஷகாரமாகக் கொண்டு அவனைப்பற்றினுல் இவர்களுடைய குற்றங்களைப் பாராதபடி அவனைத் தன் இனிமையாலே ஈடுபடுத்தி இவர்களுடைய குற்றங்களைப் பொறுக்கச் செய்பவள் என்று விளங்குகிறது. (ஶ்ரியம்) கர்த்தரி வ்யுத்பத்தியாலும், கர் மணிவ்யுத்பத்தியாலும், எம்பெருமானைத் தவிர்ந்த மற்ற அனைவருடைய ஸ்வரூபமும் தன்னாலே உண்டாம்படியாய், தன்னுடைய ஸ்வரூபம் எம்பெருமானாலே உண்டாம்படியாய் இருப்பவள் என்று தேறுகிறது. (தே₃வீம்) "தி₃வு-த்₃யுதி"

நித்யாநபாயிநீம், நிரவத்₃யாம், தே₃வதே₃வதி₃வ்யமஹிஷீம்,

---

அவனோட்டைச் சேர்த்தியாலே த்₃யோதமானையாயிருக்கிற வளை. (நித்யாநபாயிநீம்) 15 (விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ) என்கிறபடியே அவனோடுண்டான நித்ய ஸம்ஶ்லேஷத்தாலே அபாயமின்றியேயிருக்கை. அபாய: -- விஶ்லேஷ:. (நிரவத்₃யாம்) கீழ்ச்சொன்ன ஏற்றமெல்லாம் ஸ்வார்த்த₂மாயிராதே அத்தலைக்கேயாம்படியிருக்கை. ஏதேனுமொன்று 'எனக்கு' என்கை அவத்₃யம். 'பிறர்க்கு' என்கை நிரவத்₃யம். இனி விஷயவிபா₄க₃மே யுள்ளது; அது வகுத்த விஷயமாமித்தனையே வேண்டுவது.

---

सदा अपराधानभिज्ञतायै नित्यानपायिनीमिति पदम् । दौर्भाग्यरूपावद्य-रहिता निरवद्या । कृताभिषेका महिषी । अतः अप्रतिहतचिकीर्षिता । अखिलच्छन्दः स्वान्तर्मात्रपरः । न स्वसद्वर्जितमिति भावः ॥

---

என்று த்₃யோதமானையாலே ஒளிவீசும் திருமேனியையுடையவள் என்று கருத்து. அவனோடு சேர்த்தியாலே ஒளிவீசுகின்றவள் என்றபடி, (நித்யாநபாயிநீம்) 25 வது பக்கத்தில் எடுக்கப்பட்ட 15 வது ப்ரமாணத்தின்படி அவனோடு என்றும் சேர்ந்திருக்கையாலே அவனை என்றும் பிரியாமல் இருப்பவள் என்று கருத்து. அபாயமாவது பிரிவு. அது இல்லாதவள் 'அநபாயிநீ'. (நிரவத்₃யாம்) குற்றமற்றிருப்பவள். இது வரையில் சொன்ன பெருமையெல்லாம் தனக்காயிராமல் எம்பெருமானுக்கே ஆம்படி இருப்பவள். எதுவாயினும் தனக்கு என்றிருப்பது குற்றம். பிறர்க்கு என்றிருப்பது குற்றமற்றது. 'பிறர்' என்பது யார் என்று நிர்ணயிக்கவேண்டியதே உள்ளது. அது ஸ்வரூபத்துக்குத் தகுந்த விஷயமாயிருக்க வேண்டும். இவள் விஷயத்தில் தன்பெருமையனைத்தையும் தன் ஸ்வாமியான எம்பெருமானுக்கு ஆக்கிவைக்கிறாள்,

அவன்தானும், தன்னையும் தன்உடைமையையும் 32 (ப₄க்தாநாம்) என்றிறே இருப்பது. (தே₃வதே₃வ தி₃வ்யமஹிஷீம்) ஸர்வேஶ்வர ஸாம்ராஜ்யத்திலே தேவர்க்கும் தேவனானவனோடொக்க அபி₄ஷிக்தையானவள்.

---

அவ்வெம்பெருமானும்,

32 ந தே ரூபம் ந சாகாரோ நாயுதா₄நி ந சாஸ்பத₃ம் ।
ததா₂Sபி புருஷாகாரோ ப₄க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே ॥
[ஜிதந்தே 1-5]

[(உன்னுடைய) தி₃வ்யாத்ம ஸ்வரூபமானது உனக்காக இராது; (ஸ்வதந்த்ரமான அது ஆஶ்ரிதர்களுக்காகப் பரதந்த்ரமாகவும் ஆகும் என்று தாத்பர்யம்) தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹமும் உனக்காக இராது. தி₃வ்யாயுத₄ங்களும் உனக்காயிருக்கவில்லை; இருப்பிடமான வைகுண்ட₂ம் முதலியவைகளும் உனக்காயிருக்கவில்லை; (இவையெல்லாம் உன் அடியார்களுக்காயிருக்கும் என்று பொருள்) ப₄க்தர்களுடைய உடைமையான நீ, இப்படி ஆஶ்ரிதபரதந்த்ரமான ஸ்வரூபரூபகு₃ண விபூ₄திகளை உடையனாயிருந்தபோதிலும் புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட ஸர்வாதி₄கனாயிருக்கும் தன்மையுடன் விளங்குகிறாய்.] என்கிறபடியே தன்னையும் தன் உடைமையையும் தன் அடியார்களுக்கு ஆக்கி வைத்திருக்கிறானன்றோ. "அடைதற்கு அரியவளாயிருக்கை குற்றம். அதில்லாமல் அடைதற்கு எளியவளாயிருக்கையே இவளுக்குக் குற்றமின்மை" என்று ஶ்ருத ப்ரகாசிகாசாரியர் வ்யாக்யானம். (தே₃வ தே₃வ தி₃வ்ய மஹிஷீம்) "தேவாதி தேவனை" [திருப்பாவை 8] "மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவாவோ" [திருவாய் 8-1-5] என்கிறபடியே அவன் இவ்வுலகிலுள்ள தேவர்களுக்கும் அயர்வறும் அமரர்களான நித்யஸூரிகளுக்கும் ஈஶ்வரனாயிருந்து அரசு செலுத்தும்போது அவனோடொக்கப் பட்ட மஹிஷியாக அபி₄ஷேகம் செய்யப்பெற்றிருப்பவள்.

அகி₂லஜக₃ந்மாதரம், அஸ்மந்மாதரம், அஶரண்யஶரண்யாம்,

---

33 (க்ருதாபி₄ஷேகா மஹிஷீ). (அகி₂ல ஜக₃ந்மாதரம்) இப்பெரிய மேன்மையைக்கண்டு இறாய்க்க வேண்டாதபடி ஸகலசேதநரோடுண்டான அவிநாபூ₄தமான குடல்துடக்கைச்சொல்லுகிறது. ஸார்வபௌ₄மன் மஹிஷி தன் ப்ரஜை சேற்றை அளைந்துமடியிலே ஏறப்புக்கால் அணைத்து உச்சிமுகக்குமித்தனையிறே. ப்ரஜையின் பக்கல் ப்ராப்தியேயிறே ஜீவிப்பது.

---

33 க்ருதாபி₄ஷேகா மஹிஷீ போ₄கி₃ந்யோऽந்யா
நருபஸ்த்ரிய: [அமரகோஶம் 2-6-5]

[அரசனுடன் பட்டாபி₄ஷேகம் செய்யப்பெற்றவள் மஹிஷியெனப்படுவாள்; மற்ற ராஜபத்னிகள் போ₄கி₃நி(போகபத்நி)களாவர்.] என்று அமரகோஶத்திலும் சொல்லப்பட்டதன்றோ. "இப்பதத்தால் இவள் நினைத்ததைத் தடையற்றுச் செய்ய வல்லவள் என்று உணர்த்தப்படுகிறது" என்று ஶ்ருதப்ரகாஶிகாசாரியர்.

(அகி₂ல ஜக₃ந்மாதரம்) அனைத்துலகுக்கும் தாயாயிருப்பவளை; இவ்வண்ணம் பட்ட மஹிஷியாயிருக்கையால் உண்டான பெரிய மேன்மையைக்கண்டு தயங்க வேண்டாதபடி எல்லாச் சேதனரோடும் அமைந்திருக்கும் தவிர்க்கவொண்ணாத உறவைச் சொல்லுகிறது. சக்ரவர்த்தியினுடைய பட்ட மஹிஷி தன் குழந்தை சேற்றிலே விளையாடி மடியிலே ஏறப்புகுந்தால் அணைத்து உச்சிமுகப்பதைத்தானே செய்வாள். குழந்தையோடு உண்டான உறவு வெற்றி கொள்ளுமேயொழிய குழந்தையிடம் உள்ள தோஷங்களைக் கணிசிக்கமாட்டாளன்றோ. "அகி₂ல"(எல்லாவுலகுக்கும)என்றவிடத்தில் தாமும் அடங்கிவராகையாலே தம்மையும்கூட்டிக் கொள்கிறார் (அஸ்மந்மாதரம்) என்று. 'அகி₂ல' ஶப்₃த₃த்தில் தாமும் அடங்கியிருந்த போதிலும், எல்லாவுலகும் ஒரு தட்டும், தாம் ஒரு தட்டுமாகத் தம்மிடம் பிராட்டி பேரன்பு செலுத்துவதைக் கண்டதாலே 'அஸ்மந்மாதரம்' என்று குறிப்பிட்டருளிச் செய்கிறார் என்றுப் கொள்ளலாம். 'அஸ்மந்மாதரம்' என்னும் பத₃ம் சிலருடைய பாடத்தில் இல்லையென்றும்,

*அகி₂ல ஶப்₃த₃த்தில் தாமும் அந்தர்ப்₄பூ₄தராகையாலே தம்மையும் கூட்டிக்கொள்கிறார். — (அஸ்மந்மாதரம்) என்று. (அஶரண்யஶரண்யாம்) கு₃ணலேஶமாத்ரத்தாலே குற்றங்களையடையப் பொறுத்து உகக்குமவள். அங்ஙனன்றிக்கே 25. (தேந மைத்ரீ ப₄வது) என்று குற்றத்தோடே உகக்குமவள். புறம்பு புகலற்றார்க்கு ப₄க₃வத்₃விஷயம் புகலாயிருக்

---

*ஸ்ரீ விஷ்ணு சித்தரான எங்களாழ்வான் முதலானோர் பாடத்தில் உண்டென்றும், "யாமுநமுநியின் (ஜ்ஞான) வம்சத்தில் பிறக்கையாலே எனக்குச் சிறப்பாக, தாயாயிருப்பவள்" என்று* **விஷ்ணுசித்தர் தம் க₃த்₃யவ்யாக்₂யானத்தில் உரை அருளியதாகவும் தேசிகன் அருளிச்செய்வர்.**

(அஶரண்ய ஶரண்யாம்) புகலற்றவர்களுக்குப் புகலாயிருப்பவள். பொதுவாக உலகிலிருப்பவர்கள், குற்றங்களில்லாமல் குணங்களுள்ளவர்களுக்கே தஞ்சமாயிருப்பார்கள். இவள் குற்றங்கள் நிறைந்து குணம் சிறிதே உள்ளவர்களுக்கும் குற்றங்களைப் பொறுத்து, அந்த குண லேசத்தைக் கொண்டு உகப்பவளாயிருப்பவள். ஆகையால் வேறெங்கும் புகலற்றவர்களுக்குப் புகலாயிருப்பவள் இவள். அப்படியல்லாமல், குற்றமே நிறைந்திருப்பவர்களை அந்தக் குற்றங்களோடே ஏற்றுக்கொண்டு அவர்களுக்கும் உகந்து தஞ்சமாயிருப்பவள் என்றும் கொள்ளலாம்.

25 விதி₃தஸ் ஸ ஹி த₄ர்மஜ்ஞ: ஶரணாக₃தவத்ஸல: |
தேந மைத்ரீ ப₄வது தே யதி₃ ஜீவிதுமிச்ச₂ஸி ||

*[ரா-ஸு 21-20]*

*[(ராவணா!)* ஸ்ரீராமபிரான் த₄ர்மத்தை அறிந்தவராகவும், ஶரணமடைந்தவரிடம் வாத்ஸல்யமுடையவராகவும் பிரஸித்₃

---

* "அகி₂ல ஶப்₃த₃த்தில் தாமும் அந்தர்ப்₄பூ₄தராயிருக்கச் செய்தேயும், அகி₂ல ஜக₃த்தும் ஒரு தட்டும் தாம் ஒரு தட்டுமாகத் தம் பக்கலிலே வாத்ஸல்யாதிஶயம் கண்டாராகையாலே விஶேஷித்து அருளிச்செய்கிறார்—அஸ்மந் மாதரம் என்று;" என்று சில சுவடிகளில் பாட₂மென்பர்,

அநந்யஶரணஃ

கும். புகஃவத்ஃவிஷயத்துக்கும் புறம்பாயிருப்பார்க்கும் புகலா யிருக்கும் இவள். "செய்தாரேல் நன்றுசெய்தார்" என்னுமவர் சீறிக்கையும் வில்லுமானவன்றும், இவள் திருவடிகளே புக லாயிருக்கும். "ஸர்வலோக ஶரண்யர்" என்று காளமூதித் திரிகிறவர் அஶரண்யரானவன்றும் இவள் ஶரண்யையா யிருக்கும். ஶரணம் என்கிற உக்தியைப்பற்றி ஶரண் யர் அவர். ஸம்பந்தமே ஹேதுவாக ஶரண்யையா

தமானவர். நீ உயிர்வாழ விரும்பினுயாகில், அவருடன் உனக்கு நட்புண்டாகட்டும் ] என்று குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமான ராவணனுக்கும் நல்ல உபதேசத்தைச் செய் தவளன்றோ இவள். வேறு எங்கும் புகலற்றவர்களுக்கு எம்பெருமான் தஞ்சமாயிருப்பான்; எம்பெருமானால் ஒதுக்கப் பட்டவர்களுக்குத் தஞ்சமாயிருப்பவள் இவள்,

"தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும்
சிதகுரைக்குமேல்
என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்
என்பர்போலும்" [பெரியாழ் திரு 4-9-2]

என்கிறபடியே, பிராட்டி 'கும்பத்தை ஆழப்புதைப்பதற்காக ஆட்டிப்புதைப்பது' என்னும் ஸ்தூணு நிகநந ந்யாயத் தால் அடியார்கள் திறத்தில் குறறத்தைக் காட்டினாலும் அவர்கள் அதைச்செய்யவில்லையென்றும், செய்திருந்தாலும் அது நல்லதேயென்றும் கூறி ரக்ஷிக்கக் கூடியவன் எம் பெருமான். அப்படிப்பட்டவன் சேதநன் செய்த குற்றத் தைக்கண்டு சீற்றமடைந்து கையும் வில்லுமாகி இவனைத் தண்டிக்கத் தொடங்கினாலும், இப்பிராட்டி திருவடிகளே தஞ்சமாயிருக்கும். "ஸர்வலோக ஶரண்யர்" [அனைத்துல குக்கும் தஞ்சமாயிருப்பவன் ] என்று விருது ஊதித்திரியும் எம்பெருமான் சிலருக்குத் தஞ்சமாகாதபோதும் இவள் தஞ்ச மாயிருப்பாள் என்று கருத்து. "மாதர் மைதிலி" [ஶ்ரீ குண 50] என்று பட்டர் அருளிச்செய்தபடியே ஶரணம் என் னும் வார்த்தையைச் சொன்னவர்களுக்குத் தஞ்சமாயிருப் பார் பெருமாள். அந்த வார்த்தையைக்கூட எதிர்பாராமல், ராக்ஷஸிகளிடம் கூட உறவு காரணமாகத் தஞ்சமாயிருப் பவள் இவள்.

யிருக்கும் இவள். 34. (ஸ பித்ரா ச பரித்யக்த:) 24. மித்ர மௌபயிகம் கர்த்தும்) 25. (விதி₃தஸ்ஸ ஹி த₄ர்மஜ்ஞ:) 27. ராஜஸம்ஶ்ரய வஶ்யாநாம்) 28. (பாபாநாம் வா ஶுபா₄நா— நாம் வா). "அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்ய" என்கிறபடியே ஸர்வஸமாஶ்ரயணீயமான ப₄க₃வத்₃விஷயத்துக்குப் புறம்பாயிருப்பாருமுண்டோவென்னில்: (அநந்ய

---

34 ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி₄:
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க₃த: ||
ஸ தம் நிபதிதம் பூ₄மௌ ஶரண்ய: ஶரணாக₃தம் /
வத₄ார்ஹமபி காகுத்ஸ்த₂: க்ருபயா பர்யபாலயத் ||
[ரா—ஸு 38-34, 35]

[அந்தக் காகாஸுரன். தந்தையினாலும், (தாயினாலும்), மஹர்ஷிகளுடன் கூடிய தே₃வர்களாலும் கைவிடப்பட்டவனாய், மூன்று உலகங்களையும் சுற்றித்திரிந்து அந்த ராமனையே ஶரணமடைந்தான். ஶரணமடைந்தவனும், பூ₄மியில் விழுந்தவனுமான அவனை, கொல்லத்தகுந்தவனாயிருந்தபோதிலும் ஶரணமடையத் தகுந்தவனான ஸ்ரீராமபிரான் (தன்) அருளாலே காப்பாற்றினான்.] என்கிறபடியே பெருமாள் பிரம்மாஸ்திரத்தை விட்டுத் துரத்திய பின்பு அவர் திருவடிகளிலே தலைகீழாக விழுந்த அஸஹ்யாபசாரியான காகாஸுரனையும் பெருமாளுடைய திருவடிகளிலே சேர்த்து ரக்ஷித்தவளன்றோ இவள். பக் 23 ல் எடுக்கப்பட்ட 24 25 பிரமாணங்களின்படி இவளிடம் தீரக்கழிய அபசாரம் செய்த இராவணனையும் திருத்த முற்பட்டவளன்றோ இவள். பக் 84 ல் எடுத்த 27. 28 பிரமாணங்களின்படி அரக்கிகளைத் தண்டிக்கவிருப்பிய அனுமனையும் நல்வார்த்தை சொல்லி அவன் மனத்தை மாற்றினளன்றோ.

மேலே 5 வது சூர்ணையில் எம்பெருமானால் பிறப்பு ஒழுக்கம் அறிவு முதலானவற்றை ஆராயாமல் அனைவரையும் ரக்ஷிப்பவனாகச் சொல்லப்பட்ட அந்த எம்பெருமானாலும் ஒதுக்கப்பட்டவர்கள் இருக்கமுடியுமோ? எனில்—(அநந்யஶரணோ஽ஹம்) அப்படி அவனுடைய கருணை

ஶரணமஹம் ப்ரபத்₃யே ||

ஶரண்யோऽஹம்) அந்த அநந்யஶரணனாகிறேன் நான் என்கிறார். (ஶரணம் ப்ரபத்₃யே) அஶரண்யர்க்கும் ஶரண்யரான தேவர் திருவடிகளையே உபாயமாக அத்₄யவஸிக்கிறேன். அஶரண்யர்க்கும் ஶரண்யையாவதென்? என்னில்: அகி₂லஜக₃ந்மாதாவாகையாலே அபேக்ஷா நிரபேக்ஷமாகப் பரிக்₃ரஹிக்கும் தேவர்க்கும் பரிக்₃ரஹித்தல்லது நிற்கவொண்ணாதபடியான அபேக்ஷையையும் பண்ணினேன் 35. (தாம் பத்₃மநேமிம் ஶரணமஹம் ப்ரபத்₃யே)

शरण्यं भगवन्तं अलब्धवन्तः अशरण्याः । अहमपि तेष्वेक इत्याह अनन्य इति ।

க்கும் இலக்காதவனாக நானே இருக்கிறேன் என்கிறார். (ஶரணம் ப்ரபத்₃யே) புகலற்றவர்களுக்கும் புகலாயிருப்பவரான தேவர் திருவடிகளையே உபாயமாக உறுதிகொள்ளுகிறேன். புகலற்றவர்களுக்கும் புகலாயிருப்பவள் இவள் என்பது எப்படி? எனில்—அனைத்துலகுக்கும் தாயாகையாலே பிரார்த்தனையையும் எதிர்பாராமல் எங்களைக் கைக்கொள்ளும் தேவரீர்க்கும் கைக்கொண்டல்லது நிற்கவொண்ணாதபடியான பிரார்த்தனையையும் பண்ணினேன்.

35 சந்த்₃ராம் ப்ரபா₄ஸாம் யஶஸா ஜ்வலந்தீம்
ஶ்ரியம் லோகே தே₃வஜுஷ்டாமுதா₃ராம் |
தாம் பத்₃மநேமிம் ஶரணமஹம் ப்ரபத்₃யே
அலக்ஷ்மீர் மே நஶ்யதாம் த்வாம் வ்ருணே ||

[ஸ்ரீஸூக்தம் 5]

[ஆனந்த₃ருபையும், மிகவும் விளங்குமவளும், கீர்த்தியினாலே பிரகாசிப்பவளும், எம்பெருமானுடன் (எப்போதும்) கூடியிருந்து அவனை ஸேவிப்பவளும், வண்மை மிகுந்தவளும், பத்மத்திலிருப்பவளுமான அந்த ஸ்ரீதே₃வியை நான் ஶரணமடைகிறேன், என்னுடைய அலக்ஷ்மியானது நஶிக்கட்டும். (அதற்காக) உன்னை ஶரணமாக வரிக்கிறேன்.] என்னும் ஸ்ரீ

இரண்டாவது சூர்ணை அவதாரிகை — (பாரமார்த்திக)
கீழ் பிராட்டியுடைய ஶரண்யதையையும், அதுக்கடியான

---

ஸூக்தமந்த்ரப்ரக்ரியையாலே பகவானிடம்செய்யப்போகும் சரணாரவிந்தசரணாகதியானது உள்ளபடி நிறைவேறுவதற்கு உபாயமாகப் பிராட்டியைப் பற்றுகிறார். இவ்விடத்தில் ஸ்ரீவேதாந்ததேசிகர்,

''ஶ்ரிய: ப்ரபத்திம்-சந்த்ராம் ப்ரபாஸாம் இதி மந்த்ரேண அலக்ஷ்மீ நாஶநார்த்தம் ஆமநந்தி; தத்ர 'ருச: ஸாமாநி யஜூம்ஷி ஸாஹி ஶ்ரீரம்ருதா ஸதாம்' இதி ந்யாயாத் முமுக்ஷுணும் மோக்ஷஹேது: வித்யைவ லக்ஷ்மீ:, தத்பாவநாஶோऽநயா க்ரியத இதி ததர்த்தம் ஶரண்யாபிப்ராய ஸம்வாதிநீ தந்மஹிஷீப்ரபத்தி: யுக்தைவ இதி ஸித்தம் | ஏவம் ஸேயம் ஸாக்ஷாத் பரம்பரயாவா ஸர்வ பலஸாதிகா | [''சந்த்ராம் ப்ரபாஸாம்'' என்னும் ஸ்ரீ ஸூக்த மந்த்ரத்தில் அலக்ஷ்மி போவதற்காகப் பிராட்டியைச் சரணமடைவதாக ஓதப்பட்டது.

''ருசஸ் ஸாமாநி யஜூம்ஷி ஸாஹி ஶ்ரீரம்ருதாஸதாம்''

[ரிக் யஜுஸ் ஸாமங்களாகிற வேதமே நல்லோர்க்குச் செல்வமாகிறது] என்னும் ந்யாயத்தாலே மோக்ஷத்திற்குக் காரணமான பக்தி ப்ரபத்தி முதலான வித்யையே இந்த ஸ்ரீஸூக்த மந்த்ரத்தில் லக்ஷ்மீ எனப்படுகிறது. அந்த லக்ஷ்மியில்லாமல் இருக்கை பிராட்டியால் போக்கப்படுகிறதாகையாலே, அதன் பொருட்டு ஶரண்யனை எம்பெருமானுடைய திருவுள்ளத்தைப் பின்செல்லும் அவனுடைய மஹிஷீ ப்ரபத்தி பொருத்தமானதென்றே தேறுகிறது. இவ்வண்ணமாக இப்பிராட்டி நேராகவோ அல்லது பரம்பரையாகவோ எல்லாப் பலன்களையும் ஸாதித்துத் தருகிறாள்.] என்று கத்யபாஷ்யத்தில் அருளியிருக்கும் ஸ்ரீஸூக்திகள் அநுஸந்திக்கத்தக்கவை. பரமார்த்த காமங்களையும் பகவத் ப்ரபத்தியையும் இவள் நேரே ஸாதித்துத் தருபவள் என்பதும், மோக்ஷத்தை எம்பெருமானிடம் புருஷகாரம் செய்து ஸாதித்துத் தருபவள் என்பதுமே ஸ்ரீவேதாந்த தேசிகரின் திருவுள்ளம் என்று இதிலிருந்து விளங்குகிறது.

இரண்டாவது சூர்ணை அவதாரிகை:— முதல் சூர்ணையில், பிராட்டி புகலற்றவர்களுக்கும் புகலாயிருப்பவள் என

ஊற்றுவாயையும், தம்முடைய அநந்யகதித்வத்தையும் சொல்லி. அவள் திருவடிகளிலே ஶரணம் புக்கு நின்றார். அநந்தரம் 'உமக்கு அபேக்ஷிதமென்' என்று பிராட்டி திருவுள்ளமாக, ''கைங்கர்யருசியும் ப்ரபத்திநிஷ்டையும் எனக்கு உண்டாகவேணும'' என்கிறார். ஈஶ்வரன் திருவடிகளிலே கைங்கர்யஸித்திக்கிறே ஶரணம் புகுவது. அவ்வளவன்றிக்கே, ருசிவிஶ்வாஸங்களென்று தனித்தனியே அபேக்ஷித்துப் பெறவேண்டுவன சில அதிகாரி விஶேஷணங்களுண்டிறே, இப்போது அபேக்ஷித்துப்பெற வேண்டும்படி இதுக்குமுன்பு இவர்க்கு இன்றிக்கேயிருந்ததோ? என்னில்; உண்டாயிலும். தந்தாமுக்கு என்றுமில்லையாகவிறே தந்தாமை நினைத்திருப்பது.

---

பதையும், அதற்குக் காரணம் அவள் தேவதேவனுக்கும் திவ்ய மஹிஷியாய் இருப்பதே என்பதையும், தாம் வேறு புகலற்றிருப்பவர் என்பதையும் சொல்லி, பெரிய பிராட்டியார் திருவடிகளிலே ஶரணம் புகுந்து நின்றார். அதற்குப்பின், 'நீர் எதை விரும்பி என்னைச் சரணமடைகிறீர்' என்று கேட்க, 'தேவரீரும் பெருமாளுமாயிருக்கிற சேர்த்தியிலே கைங்கர்யம் செய்வதில் ருசியும் (ஆர்வமும்), அந்தக் கைங்கர்யம் ஸித்திப்பதற்காக எம்பெருமானை உள்ளபடி ஶரணமடைவதில் ஊற்றமும் எனக்கு உண்டாக வேணும்' என்கிறார் இந்த இரண்டாவது சூர்ணையில். மேல் ஐந்தாவது சூர்ணையில் எம்பெருமான் திருவடிகளிலே கைங்கர்யம் கிடைப்பதற்காக இவர் அவனை ஶரணமடையப் போகிறார். அப்படி ஶரணமடைவதற்கு முன் அந்தக் கைங்கரியத்தில் ருசியும், ஶரணமடையும் போது மஹா விஶ்வாஸமும், தனித்தனியே பிரார்த்தித்துப் பெற வேணடிய சில அதிகாரி விஶேஷணங்கள் உண்டல்லவோ. அவை ஸித்திக்கவே பிராட்டி திருவடிகளிலே சரணமடைகிறார் என்று கொள்ளவேண்டும். "இப்போது பிரார்த்தித்துப் பெற வேண்டும்படி இதுக்கு முன்பு இந்த ருசி விஶ்வாஸங்கள் இவர்க்கு இல்லாமலிருந்ததோ?" எனில் :— இவருக்கு அவை பூர்ணமாக உண்டானாலும், ஆகிஞ்சந்யத்தையே (கைம்முதலில்லாமையையே) இயல்வாகக் கொண்ட இவர் தமக்கு ஒன்றும் இல்லை யென்றன்றோ நினைத்திருப்பார். அதனாலே பிரார்த்திக்கக் குறையில்லை. ருசி விஶ்வாஸங்களில் குறைய நிற்பார்க்கு வழி காட்டுவதற்காக அநுஸந்திக்கிறார் என்றும் கொள்ளலாம்.

2. பாரமார்த்திக -

வ்யா: — (பாரமார்த்திக) 'அர்த்தம்' என்று ப்ரயோஜனத்துக்கும் மெய்க்கும் பெயர், இது பரபக்திக்கு விசேஷணமானபோது, அதனுடைய அக்ருத்ரிமத்வம் சொல்லுகிறது. திருவடிகளுக்கு விசேஷணமானபோது அதினுடைய பரமப்ரயோஜநத்வம் சொல்லுகிறது. இப்பிரிவுக்கு ப்ரயோஜநமென்னென்னில், பக்தி விஷயமானபோது திருவடிகள் பரமப்ரயோஜநமாகக் கடவது. திருவடிகள் விஷயமானபோது பக்தி அக்ருத்ரிமையாகக் கடவது.

२. किमपेक्षितमित्यत्राह पारमार्थिकेति । अनुभवविशेषणम् । परमपुरुषार्थान्तर्भूतत्वात्, स्वयं परमपुरुषार्थत्वात्, अकृत्रिमत्वाद्वा पारमार्थिकत्वम् । अकृत्रिमत्वं – निरुपाधिकत्वम् । भक्तिविशेषणं वा

வ்யா :— (பாரமார்த்திக) 'அர்த்தம்' என்னும் சொல் ப்ரயோஜனம் எனப்படும் பயனையும், உண்மையையும் குறிக்கும். 'பாரமார்த்திக' என்னும் இச்சொல்லை அடுத்துள்ள 'பகவச்சரணாரவிந்த' என்று சொல்லப்படும் திருவடிகளுக்கு விசேஷணமாகவும் கொள்ளலாம். அதையடுத்துள்ள பரபக்திக்கு விசேஷணமாகவும் கொள்ளலாம். பரபக்திக்கு விசேஷணமாகும்போது 'அர்த்த' சப்தம் உண்மை என்று பொருள்படுவதாய், இந்தப் பரபக்தியானது பொய் கலவாமல் உண்மையாயிருப்பது என்று சொல்லப்படுகிறது. திருவடிகளுக்கு விசேஷணமாகும்போது அர்த்தசப்தம் ப்ரயோஜனம் என்று பொருள்படுவதாய், திருவடிகள் பரமப்ரயோஜநமாய் இருப்பவை என்று காட்டுகிறது. பரமார்த்திக சப்தம் பக்திஉண்மையானது என்றுகாட்டும்போது திருவடிகள் பரமப்ரயோஜனமானவை என்பது தன்னடையே ஸித்திக்கும். 'பாரமார்த்திக' என்னும் சொல் திருவடிகள் பரமப்ரயோஜனமானவை என்று காட்டும்போது பக்தி மெய்யானது என்பது தன்னடையே ஸித்திக்கும்.

**ப₄க₃வச்சரணாரவிந்த₃யுக₃ளைகாந்திகாத்யந்திக பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்தி —**

---

(ப₄க₃வச்சரணாரவிந்த₃) கீழ்ச்சொன்ன ப₄க₃வச்ச₂ப்₃த₃ம் ஸர்வோத்கர்ஷ வாசி. இது கு₃ணயோக₃த்தால் வந்த ரஸ்யதையைச் சொல்லுகிறது. கு₃ணங்களும் போ₄க்₃யமாயிருக்கையாலே பரமப₄க்திஜநகம். (சரணாரவிந்த₃) விக்₃ரஹவத்தையால் வந்த போ₄க்₃யதை சொல்லுகிறது. (யுக₃ள) சேர்த்தியால்

---

पारमार्थिकशब्दः। चरणारविन्देति-मातुः स्तन्यं पुत्रस्येव शेषभूतस्य प्राप्यमिति भावः। ऐकान्तिकत्वं - फलान्तरार्थित्वाभावात् भगवदेक-विषयत्वम्। आत्यन्तिकत्वं — अत एव सदानुवृत्तिः। नित्ययुक्त इति यावत्॥ उत्तरोत्तरसाक्षात्काराभिनिवेशः परभक्तिः। साक्षात्कारः पर-ज्ञानम्। उत्तरोत्तरानुभवाभिनिवेशः परमभक्तिः। परिपूर्णत्वादिपद-

---

(ப₄க₃வச்சரணாரவிந்த₃) முதல் சூர்ணையில் "ப₄க₃வந் நாராயண" என்றவிடத்தில் சொல்லப்பட்ட ப₄க₃வச்ச₂ப்₃த₃ம் எம்பெருமான் அனைவரிலும் மேம்பட்டவன் என்று காட்டிற்று. இந்த ப₄க₃வச்ச₂ப்₃த₃ம் எம்பெருமான் கல்யாண கு₃ணங்கள் உடையவனாய் இருக்கையாலே அவனுடைய திருவடிகள் சுவை மிக்கவை என்று காட்டுகிறது. "சரணாரவிந்த₃ ஶப்₃த₃த்தாலே தாயின் முலைப்பால் குழந்தைக்குப்போலே ஶேஷபூ₄தனுக்குத் திருவடித்தாமரைகள் ப்ராப்யம் என்று உணர்த்தப்படுகிறது" என்று ஶ்ருதப்ரகாஶிகாசார்யர். இந்த ப₄க₃வச்சரணாரவிந்த₃ ஶப்₃த₃ம் பரப₄க்தி முதலானவற்றுக்கு விஶேஷணமாய் உள்ளது. ப₄க₃வச்ச₂ப்₃த₃ம் கு₃ணங்கள் மிக இனியவையாயிருக்கையாலே பரப₄க்தி முதலானவற்றை உண்டாக்குகின்றன என்றும், 'சரணாரவிந்த₃' ஶப்₃த₃ம் திருவடிகள் சுவை மிக்கவையாகையாலே பரப₄க்தி முதலானவற்றை உண்டாக்குகின்றன என்றும் காட்டுகிறது. (சரணாரவிந்த₃) திருவடித் தாமரை என்கையாலே, எம்பெருமான் திருமேனியுடைய

வந்த பே₄ாக்₃யதை (ஐகாந்திக) ஏகமே அந்தமாயிருக்கை. அதாவது— வேறொரு விஷயத்தையுடைத்தன்றிக்கே யிருக்கை. (ஆத்யந்திக) அந்தத்தை அதிக்ரமித்திருக்கை. அதாவது — நித்யமாயிருக்கை. (பரப₄க்திபரஜ்ஞாநபரம ப₄க்தி) பரப₄க்தியாவது — ஸம்ஶ்லேஷவிஶ்லேஷ ஸுக₂ து₃:க்க₂ராம்படியான ப்ரேமவிஶேஷம். பரஜ்ஞாநமாவது— இதினுடைய விபாகத₃ஶையான ஸாக்ஷாத்காரம். பரம ப₄க்தியாவது— க்ஷணகாலமும் விஶ்லேஷத்தைப் பொறுக்க

---

வனாய் இருக்கையால் மிக இனியவனாய் இருப்பவன் என்று காட்டுகிறது. (யுக₃ள) திருவடிகள் இரண்டாயிருக்கையால் உண்டான சேர்த்தியால் விளைந்த இனிமையைக் காட்டு கிறது. (ஐகாந்திக) இப்பத₃மும் அடுத்த பத₃மும் பர ப₄க்தி முதலானவற்றுக்கு விஶேஷணம். ஏகமே அந்த மாயிருப்பது ஐகாந்திகம். அதாவது — இந்தப் பரப₄க்தி முதலானவை வேறொரு விஷயத்தைப் பற்றியிராமல் இந்தத் திருவடியிணையையே பற்றியிருப்பவை என்று கருத்து. (ஆத்யந்திக) அந்தத்தை அதிக்ரமித்திருப்பது ஆத்யந் திகம். அதாவது—இந்தப் பரப₄க்தி முதலானது முடிவற்ற தாய் நித்யமாயிருக்கும் என்று கருத்து. (பரப₄க்தி பர ஜ்ஞாந பரமப₄க்தி) பரப₄க்தியாவது :— எம்பெருமானோடு சேர்ந்திருக்கும்போது இன்பமும், பிரிந்திருக்கும்போது துன்பமும் அடையும்படியான அன்பின் நிலை. பரஜ்ஞாந மாவது :— பரப₄க்தி முற்றியபிறகு மனத்திலே விளையும் எம்பெருமானுடைய ஸாக்ஷாத்காரம் (காட்சி). பரமப₄க்தி யாவது :— ஒரு கணநேரமும் எம்பெருமானைப் பிரிந்திருப் பதைப் பொறுக்கமுடியாத நிலை. வேதாந்ததேசிகர் பரப₄க்தி முதலானவற்றுக்குத் தம் கீ₃தா₃பா₄ஷ்யத்தில் பின்வருமாறு லக்ஷணமுரைக்கிறார். அதாவது—பரபக்தியாவது மேன்மேலும் எம்பெருமானைக் காணவேண்டும் என்னும் ஸ்வயம் ப்ரயோஜநமான விருப்பம். பரஜ்ஞாநமாவது :— மேலும் மேலும் எம்பெருமானைக் காண்பது. பரமப₄க்தியாவது :— கண்ட எம்பெருமானை எப்போதும் அநுபவிக்கவேண்டும் என்னும் எண்ணம். ஶ்ருதப்ரகாசிகாசார்யரும் இவ் வண்ணமே வ்யாக்யானம் செய்துள்ளார்.

க்ருத பரிபூர்ணாநவரதநித்யவிஶததமாநந்யப்ரயோஜந-
அநவதிகாதிஶயப்ரிய—

---

மாட்டாத தஶை. "உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய" என்கிறபடியே ஜ்ஞாநகர்மங்களாலே ஸம்ஸ்க்ருதாந்த:கரணனாய், பக்தி பிறந்து, அதினுடைய விபாகதஶை பரமபக்தியாகக் கடவது உபாஸகனுக்கு. இவர்க்கு அந்த ஸ்தானத்திலே பகவதநுக்ரஹம் நிற்க, மேலுள்ள தஶை

---

षट्कमनुभवविशेषणम् । परव्यूहादिसर्वावस्थभगवद्विषयत्वं परिपूर्णत्वम् । सकृत्त्वव्यावृत्त्यर्थं अनवरतत्वम् । अविरतेच्छावधिमत्त्वव्युदासाय नित्यत्वम् । विरतनित्यत्वव्युदासाय अनवरतत्वम् । स्नानाग्निहोत्रादिकं हि विरतनित्यम् । परोक्षत्वव्युदासाय विशदतमत्वम् । प्रयोजनान्तरार्थत्वव्युदासाय अनन्यप्रयोजनत्वम् । तत्र हेतुः—अनवधिकातिशयप्रियत्वम् । प्रयोजनान्तरार्थत्वाभावेऽपि सावधिकातिशयप्रियत्वव्युदासार्थं अनवधिकातिशयप्रियत्वमुक्तम् ।

---

"உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய ஐகாந்திக ஆத்யந்திக பக்தியோகலப்ய:" [ஆத்மஸித்தி] [கர்மஜ்ஞாந யோகங்களாலே பரிஶுத்தப்படுத்தப்படுத்தப்பட்ட மனத்தையுடையவனுக்கு உண்டாவதாய் எம்பெருமானையே விஷயமாகக்கொண்டதாய் நித்யமாய் இருப்பதான பக்தியோகத்தினாலேயே அடையப்படுபவன் எம்பெருமான்] என்று ஆளவந்தார் ஆத்மஸித்தியில் அருளியபடியே பக்தியோகத்தை உபாயமாகக்கொண்டு மோக்ஷத்தைப்பெற நினைக்கும் உபாஸகனுக்கு, கர்மஜ்ஞாந யோகங்களாலே மனம் பரிஶுத்தியடைந்து அதனாலே பக்தி உண்டாகி, அதனுடைய முற்றியநிலை பரபக்தியாய் இருக்கும். இவருக்கு அந்த பக்தியோக ஸ்தானத்திலே எம்பெருமானுடைய அனுக்ரஹம் நிற்கிறது. அதாவது பகவதநுக்ரஹத்தாலேயே இவருக்குப் பரபக்தி பரஜ்ஞாநபரமபக்திகள் விளைகின்றன என்று கருத்து. இந்தப் பரமபக்தியினால்

களை அபேக்ஷிக்கிறார். (க்ருத) இவற்றாலே பண்ணப்பட்ட. (பரிபூர்ண) பரிபூர்ணமாகையாவது — ஸ்வரூபரூபகுணவிபூதிகளித்தனையும் ஒருகாலே அநுபவவிஷயமாகை. (அநவரத) அவிச்சின்னமாயிருக்கை. அதாவது—இடைவிடாதே செல்லுகை, (நித்ய) யாவதாத்மபாவியாயிருக்கை. (விஶததம) விஶதமாவது— பரபக்திதசையில் அநுபவம். விஶததரமாவது— பரஜ்ஞானதசையில் அநுபவம். விஶததமமாவது— பரமபக்திதசையில் அநுபவம். (அநந்யப்ரயோஜந) 'அநுபவஜநிதப்ரீதியும், ப்ரீதிகாரித கைங்கர்யமும் வேண்டா; இதுதானே அமையும்' என்னும்படியிருக்கை. (அநவதிகாதிஶயப்ரிய) அநவதிக

---

விலையும் நிலைகளைப் பிரார்த்திக்கிறார். மேலே—(க்ருத) இந்தப் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாலே உண்டு பண்ணப்பட்ட. (பரிபூர்ண) இது தொடக்கமாக (அநவதிகாதிஶயப்ரிய) என்பது ஈறாகவுள்ள ஆறு பதங்களும் அநுபவ விசேஷணம். பரிபூர்ணமாயிருக்கையாவது— ஸ்வரூபம், ரூபம், குணம், விபூதிகள் ஆகிய அனைத்தும் ஒரே காலத்தில் அநுபவத்திற்கு விஷயமாயிருக்கை, "பரம் வ்யூஹம் முதலான எல்லா நிலைகளிலும் உள்ள எம்பெருமானை விஷயமாகக் கொண்டிருக்கை பரிபூர்ணத்வம்" என்று ஶ்ருதப்ரகாசிகாசாரியர். (அநவரத) இடைவெளியில்லாமல் தொடர்ந்து செல்லுகை. (நித்ய) ஆத்மா உள்ளவரையில் தொடர்வதாயிருக்கை. (விஶததம) மிகமிகத்தெளிவாயிருக்கை. தெளிவாயிருக்கையாவது பரபக்தி நிலையில் அநுபவம். மிகத்தெளிவாயிருக்கையாவது பரஜ்ஞாந நிலையில் அநுபவம். மிகமிகத்தெளிவாயிருக்கையாவது பரமபக்தி நிலையில் அநுபவம். (அநந்யப்ரயோஜந) "இந்த அநுபவத்தால் உண்டாகும் ப்ரீதியும், அந்த ப்ரீதியால் உண்டாகும் கைங்கர்யமும் கூட வேண்டியதில்லை; இந்த அநுபவந்தானே பெரும்பேறாய் இருப்பது" என்னும்படியிருக்கை. இதற்குக் காரணத்தை மேலே அடுத்த பதத்தால் கூறுகிறார்.—(அநவதிகாதிஶயப்ரிய) எல்லையற்ற மேன்மையுடையதான ப்ரீதிரூபமாயிருக்கை. இத்தகைய

பகவதநுபவஜநிதாநவதிகாதிசய ப்ரீதிகாரிதாசே-
ஷாவஸ்தோசிதாசேஷசேஷதைகரதிரூப—

மான அதிசயத்தை உடைத்தான ப்ரீதி. (பகவதநுபவ) சரமசரீராவஸாந ஸமநந்தரமாக அர்ச்சிராதிகதியாலே போய்ப் பரமபதத்தில் அநுபவிக்கும் அநுபவம். (ஜநிதாநவதிகாதிசயப்ரீதிகாரித) அதனால் பிறந்த ப்ரீதியாலே பண்ணுவிக்கப்பட்ட; ஸ்வார்த்தணிஜந்தோ வா. (அசேஷாவஸ்தோசித) ஸர்வாவஸ்தைகளிலும் அநுகூலமா

---

ईदृशानुभवेन जनिता अनवधिकातिशयप्रीतिः -- "अहो मया ईदृशानुभवा लब्धः" इति पूर्वानुभवलब्धविषयनिरवधिकातिशयानुकूलप्रीतिसन्तानरूपा । तया अनुकारितम् । अशेषावस्थाः — आस्थानान्तःपुरस्थित्यादयः । अशेषशब्दः-छत्रचामरकलाचीपादुकाग्रहणताम्बूलदानादिपरः । अनन्तवैनतेयादीनां सर्वविधकैङ्कर्यप्राप्तावपि कैङ्कर्यं प्रतिनियतम् दृश्यते । तत्कथमिति शङ्कायामाह रतिरूपेति । स्वेन कृतत्वेऽपि परप्रीतिरेव फलम् । "प्रहर्षयिष्यामि" इति सूच्यते । तस्मादन्यकृतत्वेऽपि कैङ्कर्यस्य तज्जनितपरप्रीतिं दृष्ट्वा स्वकृतत्वे सतीव प्रीतिस्सर्वेषां जायत इति तादृशप्रीतिरूपं कैङ्कर्यमित्यर्थ इति मन्त्रचतुष्टयार्थोक्तिः ।

---

சிறப்புக்களையுடையது எது? எனில் — (பகவதநுபவ) கடைசி சரீரம் முடிந்தவுடன் அர்ச்சிராதிகதியாலே போய், பரமபதத்தில் அநுபவிக்கும் அநுபவம். (ஜநித அநவதிகாதிசய ப்ரீதிகாரித) இந்த அநுபவத்தால் உண்டான ப்ரீதியாலே செய்விக்கப்பட்டது மேலே சொல்லப்போகும் கைங்கர்யம் என்றபடி. "க்ருத"— செய்யப்பட்ட என்னும் பொருளிலேயே "காரித"— செய்விக்கப்பட்ட என்று வழங்கியிருப்பதாகவும் கொள்ளலாம். "ஸ்வார்த்தே ணிச்" (அசேஷாவஸ்தோசித) ஆஸ்தானத்தில் நிற்கும் நிலை, அந்தப்புரத்தில நிற்கும்நிலை ஆகிய எல்லா நிலைகளிலும் அநுகூலமாயிருக்கை. இதுவும் அடுத்துள்ள இரண்டு பதங்களும் கைங்கர்யத்துக்கு விசேஷணம். (அசேஷசேஷதைகரதிரூப)

யிருக்கை. (அஶேஷஶேஷதைகரதிரூப) 36. (நிவாஸ ஶய்யா) இத்யாதிப்படியே ஸர்வவிதஶேஷதையிலும்

நிவாஸஶய்யாஸநபாதுகாம்ஶுகோபதாநவர்ஷாதப-
வாரணாதிபி:||
ஶரீரபேதைஸ் தவ ஶேஷதாம் கதைர் யதோசிதம்
ஶேஷ இதீரிதே ஜநை: ||
[ஸ்தோத்ர 40]

[(ஶேஷியான உனக்கு] எழுந்தருளியிருக்கிற திருமாளிகையாகவும், கண்வளர்ந்தருளுகிற படுக்கையாகவும், ஸிம்ஹாஸநமாகவும், பாதுகையாகவும், திருப்பரியட்டமாகவும், அணையாகவும், மழைக்கும், வெயிலுக்கும் குடையாகவும், மற்றும் பலபடியாகவும் ஆகின்றவையாய், அந்தந்தக் காலத்திற்குத் தக்கபடி உனக்கு அடிமைப்பட்டவையான பல ஶரீரங்களாலே ஶேஷன் என்று எல்லா ஜனங்களாலும் சொல்லப்படுபவனுன திருவநந்தாழ்வானுடைய திருமேனியில் எழுந்தருளியிருக்கிறவன்] என்கிறபடியே எல்லாவிதமான கைங்கர்யத்திலும் உண்டான பேரார்வமே வடிவெடுத்ததாயிருக்கை. "எல்லாவிதமான கைங்கர்யம் என்று சொன்னது குடைபிடித்தல், சாமரம் வீசுதல், காளாஞ்சி பாதுகை முதலானவற்றை ஏந்துதல், தாம்பூலம் அளித்தல் முதலானவற்றைக் குறிக்கும்" என்று ஶ்ருதப்ரகாசிகாசார்யர் வ்யாக்யானம் செய்தார். இதற்குமேல், "அநந்தன கருடன் முதலானவர்களுக்கு எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்ய உரிமையிருந்தபோதிலும் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு விதமான கைங்கர்யம காணப்படுகிறதே! இது எப்படி?" என்னும் ஐயத்தைத் தவிர்ப்பதற்காக 'ரதிரூப' என்று விஶேஷித்தார். கைங்கர்யம செய்வது ஒருவராயிருந்தபோதிலும் அதன் பலன் எம்பெருமானுடைய உகப்பேயாகும். "கதா ப்ரஹர்ஷயிஷ்யாமி" [ஸ்தோ-ர 46] [எப்போது உகப்பிக்கப்போகிறேன்] என்று ஆளவந்தாரும் எம்பெருமானுடைய உகப்பே பலமென்று அருளிச்செய்தாரன்றோ. ஆகையால் வேறொருவர் செய்த கைங்கர்யத்தினால் எம்பெருமானுக்கு விளையும் உகப்பைக்கண்டு உகப்பது மற்றவர்களுக்கும் உண்டாகையாலே, எல்லாக் கைங்கர்யங்களையும் செய்வதா

நித்யகைங்கர்யப்ராப்த்யபேக்ஷயா பாரமார்த்திகீ

---

உண்டான அபி₄நிவேஶத்தையே வடிவாக உடைத்தா யிருக்கை. (நித்ய) அபுநராவ்ருத்திலக்ஷணமாயிருக்கை (கைங்கர்யப்ராப்த்யபேக்ஷயா) கைங்கர்யப்ராப்தியிலுண்டான அபேக்ஷையாலே. (பாரமார்த்தி₂கீ) ஆர்த்தரூபமாயிருக்கை.

---

पारमार्थिकीति तमःकार्यव्युदासाय। आनुकूल्यादिशरीरवती च सा॥ तद्धि तस्या उपायान्तरेभ्यो व्यावृत्तं स्वरूपम्।

---

லுண்டான உகப்பு அவனைவர்க்கும் உண்டு. இவ்விஷயமே "நாராயணாய நம:" என்று திருமந்த்ரத்தில் உணர்த்தப் பட்டது. இவ்வளவும் ஶ்ருதப்ரகாஶிகாசாரியரின் விளக்கம்.

(நித்ய) இந்தக் கைங்கர்ய ஸுகத்தைப் பெற்றவன் இதை இழந்து மறுபடி ஸம்ஸார மண்டலத்திற்குத் திரும்பி வருவதில்லையாதலால் இது நித்யமாயிருக்கும். (கைங்கர்யப்ராப்த்யபேக்ஷயா) இத்தகைய கைங்கர்யத்தைப் பெறுவதில் உண்டான அபேக்ஷையாலே. கைங்கர்யம் உண்டாவதற்காக என்று கருத்து.

இனிவரும் பகுதியாலே இந்தக் கைங்கர்யம் உண்டாவதற்கு வேண்டியதான எம்பெருமானை விஷயமாகக் கொண்ட சரணகதியைப் பிரார்த்திக்கிறார். (பாரமார்த்தி₂கீ) உண்மையானது என்று பொருள். 'ஶரீரத்தின் முடிவில் மோக்ஷம் கிடைத்தால் போதும்' என்று எண்ணும் த்₃ருப்தப்ரபத்தியாயிருந்தால் அது உண்மையானது ஆகாது. ஆகையால் இந்த ஶரீரத்தை விடுவதிலும் கைங்கர்யத்தைப் பெறுவதிலும் மிகுந்த ஆர்த்தியோடு கூடிய ஆர்த்த ப்ரபத்தியைக் குறிக்கிறது இச்சொல்.

பகவச்சரணாரவிந்தஶரணாகதி:

(பகவத்) ஜ்ஞாநஶக்த்யாதிகளால் பூர்ணமான விஷய மாகையாலே ஸஹாயாந்தர நிரபேக்ஷமான உபாயபௌஷ்கல்யம் சொல்லுகிறது. (சரணாரவிந்த) விக்ரஹத்தி னுடைய பரமோபாயத்வம் சொல்லுகிறது. (ஶரணாகதி:) ஸலக்ஷணமாயிருக்கை, (யதாவஸ்திதா) உபாயாந்தரங்களு

(பகவத்) ஜ்ஞானம் ஶக்தி முதலான குணங்களால் நிறைந்த ஒருவனாகையாலே. எம்பெருமான் வேறு துணையை எதிர்பாராத உபாயத்வ பூர்த்தியையுடையவன் என்கிறது. (சரணாரவிந்த) (ஶரணாகதி) திருவடித்தாமரையை விஷயமாகக் கொண்டது. இங்கு இதைச் சொன்னது திருமேனிக்கு உபலக்ஷணம். "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண் கழலாயிருக்கும்" [முமுக்ஷுப்படி சூர்ணை 146] என்கிறபடியே, பிராட்டியும் பெருமாளும் சேதனனைக் கைவிட்டாலும் இத்திரு வடிகளால் உணர்த்தப்பட்ட திருமேனி தன் அழகாலே இவனை ஈடுபடுத்திக் கைக்கொள்ளுமாகையாலே இப்பதத்தால் திரு மேனி மேலான உபாயம் என்று காட்டப்படுகிறது. இச் சூர்ணையின் தொடக்கத்திலுள்ள "சரணாவிந்த" ஶப்தத்தாலே திருவடிகள்—கைக்குழந்தைக்குத் தாய்முலை போலே மோக்ஷ பூதனுக்குப் பரமப்ராப்யம் என்று காட்டப்பெற்றது. இந்தச் சரணாரவிந்த ஶப்தத்தாலே அதுவே மேலான உபாயம் என்று காட்டப்படுகிறது. (ஶரணாகதி:)

அநந்ய ஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஶ்வாஸ
பூர்வகம் |
ததேகோபாயதாயாச்ஞா ப்ரபத்தி: ஶரணாகதி: ||
[பரத முனி - விஷ்வக்ஸேநஸம்]

[தன்னுடைய இஷ்டம் வேறொன்றாலும் ஆகாதபோது மஹா விஶ்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு, அவனொருவனையே உபாயமாக இருக்கவேண்டுமென்று யாசிப்பது ப்ரபத்தி; அதுவே ஶரணாகதி]

அஹமஸ்ம்யபராத₄நா மாலயோऽகிஞ்சநோऽக₃தி: |
த்வமேவ உபாயபூ₄தோ மே ப₄வேதி ப்ரார்த்த₂நா
மதி: ||
ஶரணாக₃திரித்யுக்தா ஸா தே₃வேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ||
[அஹிர்-ஸம்ஹிதை 37-30]

["நான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாயிருக்கிறேன். (என்னை ரக்ஷித்துக்கொள்ள) ஓர் உபாயமுமற்றவனாயிருக்கிறேன்; (உன்னையொழிய) வேறு க₃தியில்லாதவனாக இருக்கிறேன். நீயே எனக்கு உபாயமாக ஆவாயாக" என்று பிரார்த்திக்கும் பு₃த்₃தி₄யே ஶரணாக₃தி எனப்படுகிறது. அது இந்த பகவான் விஷயத்தில் செய்யப்படட்டும்.] என்கிற லக்ஷண வாக்யங்களில் சொன்னபடியே எம்பெருமானையே உபாயமாக வரிக்கும் நினைவே ஶரணாக₃தியென்றும், இதற்கு உபாயத்வம் இல்லையென்றும் அதி₄காரி விஶேஷணத்வமே உண்டு என்றும், இத்துடன் சேர்ந்திருக்கும் ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலான ஐந்தும் 'அவகா₄தஸ்வேத₃ம்' (நெல் குத்தினால் வியர்வை வடிவது) போலே தன்னடையே நிகழும் ஸம்பா₄விதஸ்வபா₄வங்கள் என்றும் பரந்தரஹஸ்யத்தில் பெரிய வாச்சான்பிள்ளையால் நிர்ணயிக்கப்பட்டது.

ஷோட₄ாஹி வேத₃விது₃ஷோ வத₃ந்த்யேநம் மஹாமுநே |
ஆநுகூல்ஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் ||
ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸோ கோ₃ப்த்ருத்வ வரணம் ததா₂ |
ஆத்மநிக்ஷேபகார்ப்பண்யே ஷட்₃விதா₄ ஶரணாக₃தி: ||
[அஹிர் ஸம் 37-27, 28]

[மஹரிஷியே! வேத₃மறிந்தவர்கள் இந்த ஶரணாக₃தியை ஆறு வகைப்பட்டதாகச் சொல்லுகின்றனர். அவையாவன —
1. (பா₄க₃வத்பா₄க₃வத விஷயத்தில) அநுகூலனாயிருப்பதாக ஸங்கல்பித்துக்கொள்வது. 2. (அவர்களுக்கு) ப்ரதிகூலமாயிருப்பவற்றை விடுவது. 3. உடையவன் உடைமையைக் காப்பாற்றுவான் என்னும் நம்பிக்கை. 4. நீயே என்னை உபாயமாயிருந்து ரக்ஷிக்க வேண்டும் என்று எம்பெருமானை வேண்டுவது 5. தன்னுடைய ஆத்மாவை அவனிடத்திலே அடைக்கலமாக வைப்பது. 6. அவனை

யடையத் தன்னிடம் ஒரு கைம்முதலுமில்லாமலிருப்பது என்று ஆறுவிதமான (தானே விளையும்) தன்மைகளோடு கூடியது ஶரணாகதி] என்று அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் சொல்லப் பட்டபடி ஆறு தன்மைகளையும் தன்னுள் கொண்டது ஶரணாகதி; அதுவன்றோ அந்த ஶரணாகதியை மற்ற உபா யங்களிலிருந்து வேறுபடுத்தும் ஸ்வரூபம்—என்று ஶ்ருதப்ர காசிகாசாரியர் வ்யாக்யாநம் செய்தார். ஆறுவிதமாகச் சொல் லப்பட்ட போதிலும் ''என்னை ஒருவனையே உபாயமாகப் பற்றுவாய்'' என்று சரமஶ்லோகத்தில் எம்பெருமான் விதிக்கை யாலும் 'ஸ்ரீமந் நாராயண சரணௌ ஶரணம் ப்ரபத்யே'' என்று அநுஸந்தாந ரஹஸ்யமான த்வயமும் உபாயமாகப் பற்றுவதையே காட்டுகையாலும், ஆழ்வார்களும் சரணமடை யும்போது பலவிடங்களில் உபாயமாக வரிப்பதையே சரணா கதியாகக் கூறுகையாலும், கோப்த்ருத்வவரணமே சரணாகதி என்றும், மற்ற ஐந்தும் ஸம்பாவித ஸ்வபாவங்கள் என்றும் பரந்த ரஹஸ்யத்திலும், 'கண்ணாதவாளவுணர்' [பெரிய திருமொழி 2-6] ப்ரவேசத்திலும் பெரியவாச்சான்பிள்ளையும், தனித்வய ரஹஸ்யத்தில் பிள்ளைலோகாசார்யரும் நிர்ணயித் தனர். இதை அநுஸரித்து கோப்த்ருத்வ வரணமாகிற உபா ய ஸ்வீகாரத்தையே சரணாகதி என்றும், மற்ற ஐந்தும் ப்ரபந் நனுக்குப் பிறக்கும் ஸம்பாவித ஸ்வபாவங்களாகிற அங்கங் கள் என்றும் பட்டர் நம்பிள்ளை வழிவந்த தென்னாசார்யர்கள் அனைவரும் நிர்ணயித்தார்கள்.

வேதாந்ததேசிகன் '' நிக்ஷேபாபரபர்யாய: ந்யாஸ: பஞ்சாங்கஸம்யுத: | ஸந்யாஸ: த்யாக இத்யுக்த: ஶரணா கதிரித்யபி ||'' [லக்ஷ்மீதந்த்ரம் 17-75] ['நிக்ஷேபம்' என்னும் மறுபெயரையுடைய ந்யாஸம் ஐந்து அங்கங்களை உடையது; அதுவே 'ஸந்யாஸம்' என்றும் 'த்யாகம்' என்றும் 'ஶரணாகதி' என்றும் சொல்லப்படுகிறது.] என்கிற வசனத்தை ஶரணாகதி லக்ஷணமாகக்கொண்டு ''ஆத்மாத்மீய பரந்யா ஸ:'' [தன்னையும் தன் உடைமைகளையும் எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பது] என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்படும் ஆத்ம ஸமர்ப்பணமே சரணாகதி என்றும், 'ஆநுகூல்ய ஸங்கல்பம்

யதா₂வஸ்தி₂தா அவிரதாऽஸ்து மே ||

---

டைய அநுபாயத்வபு₃த்₃தி₄பூர்வகமாக அத்தைப் பற்றுகை போலே காணும். அதாகிறது—பற்றி விடுகையுமன்றிக்கே, பற்றிப்பற்றுகையுமன்றிக்கே 'ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத' என்னுமாபோலே விட்டுப்பற்றுகை. (யதா₂வஸ்தி₂தா) என்றது இருந்தபடியே என்றபடி. இது இப்படிப்போலே காணுமிருப்பது. ரஹஸ்யமாகையாலே நேராக வெளியிடாதொழிகிறார். (அவிரதாऽஸ்து மே) அநந்யக₃தியாயிருந்துள்ள எனக்கு யாவத்ப்ராப்தி விச்சே₂த₃மின்றிக்கேயொழியவேணும்.

---

முதலான மற்ற ஐந்தும் அதற்கு அங்கங்கள் என்றும் இந்த சரணாக₃தி ஒரு ஸாத்₄யோபாயமே என்றும் நிர்ணயித்தார்.

(யதா₂ வஸ்தி₂தா) ஶரணாக₃திக்கு விசேஷணம். ஸ்வரூப ஸ்வபா₄வங்களில் மாறுபாடில்லாத ஶரணாக₃தி என்று கருத்து. அதாவது—மற்ற உபாயங்கள் உபாயமன்று என்னும் உறுதியோடுகூட எம்பெருமான் ஒருவனையே உபாயமாகப் பற்றுகையாகும். எம்பெருமானை உபாயமாகப்பற்றின பின்பு உபாயாந்தரங்களில் உபாயபு₃த்₃தி₄யை விடுவதுமல்ல₃ உபாயாந்தரங்களையும் உபாயமாகப்பற்றி எம்பெருமானை உபாயமாகப்பற்றுவதுமல்ல. 'ஸ்நாத்வாபு₄ஞ்ஜீத' [குளித்த பின்பே உணவு உண்ண வேண்டும்] என்னும் ஶாஸ்த்ரவிதி₄யிற்போலே உபாயாந்தரங்கள் உபாயம் என்னும் நினைவை வாஸனையோடு விட்டபின்பே எம்பெருமானை உபாயமாகப் பற்ற வேண்டும் என்று கருத்து. பிள்ளைலோகாசார்யரும் முமுக்ஷுப்படி சரமஶ்லோக ப்ரகரணம் 'பரித்யஜ்ய' என்னும் பத₃த்தின் வ்யாக்யானத்தில் "இப்பாலே 'ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத' என்னுமா போலே, உபாயாந்தரங்களை விட்டே பற்ற வேணும் என்கிறது" [சூர்ணை 220] என்று அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. (யதா₂வஸ்தி₂தா) ஆசார்யனுடைய உபதேசத்தின் மூலமே தெரிந்துகொள்ள வேண்டிய

यथावस्थितेति रजःकार्यव्युदासाय। प्रपत्तव्यविषयसंबन्धरूपः प्रकारः। तत्साहित्यमभिप्रेतम्। शरणवरणानर्हे शरण्यत्वधीर्हि अयथावस्थिता स्यात्। अविरता—आफलसिद्धेरविश्रान्ता। अव्यवहितसाधनमित्यर्थः। व्यवहितसाधने हि मध्ये साधनान्तरप्राचुर्ये स्वयं विरतं स्यात्। साक्षादस्तु मे।

---

ரஹஸ்யமாகையாலே வெளிப்படையாகச் சொல்லாமல் 'உள்ள படியே' என்று மறைத்துச் சொல்கிறார். (அவிரதா ऽஸ்துமே) வேறு புகலில்லாமலிருக்கும் எனக்கு எம்பெருமானை அடையும் வரையில் 'அவனே உபாயம்' என்னும் நினைவாகிற இந்த ஶரணாக₃தி அநுஸந்தானம் இடைவிடாமல் நடக்கவேணும்.

"பாரமார்த்தி₂கீ" என்னும் பதம் தமோ குணத்தால் செய்யப்படும் ஶரணாக₃தியைத் தவிர்க்கிறது என்றும், "யதா₂வஸ்தி₂தா" என்னும் பத₃ம் ரஜோகு₃ணத்தால் செய்யப்படும் ஶரணாகதியைத் தவிர்க்கிறது என்றும் ஶ்ருதப்ரகாசிகாசார்யர் வ்யாக்யானம் செய்தார். 'யதா₂வஸ்தி₂தா' என்னும் பதத்தில் அவஸ்த₂ா (நிலை) எனப்படுவதையும், மேலும் பின்வருமாறு விளக்கினார்—"யதா₂ऽவஸ்தி₂தேதி ரஜ: கார்யவ்யுதா₃ஸாய| ப்ரபத்தவ்ய விஷய ஸம்ப₃ந்த₄ரூப: ப்ரகார:| தத்ஸாஹித்யமபி₄ப்ரேதம்| ஶரணவரணாநர்ஹே ஶரண்யத்வதீ₄ர்ஹி அயதா₂வஸ்தி₂தாஸ்யாத்" ['யதா₂ऽவஸ்தி₂தா' என்றது ரஜோகு₃ணத்தால் செய்யப்படும் ஶரணாக₃தியைத் தவிர்ப்பதற்காக. ஶரணம் பற்றத்தகுந்தவனோடு உள்ள ஸம்பந்தமே இங்கு 'அவஸ்த₂ா' என்னும் பத₃த்தால் சொல்லப்படும் ப்ரகாரமாகும். ஶரணம் பற்றத்தகுந்தவனையே ஶரணமடைய வேண்டுமென்று கருத்து. ஶரணமடையத்தகாதவனிடம் உபாயம் என்னும் நினைவைக் கொள்வது அயதா₂வஸ்தி₂தமான (உள்ளபடியல்லாத) ஶரணாக₃தியாகும்] என்று. கீதையில் "யயா த₄ர்மம் அத₄ர்மஞ்ச அயதா₂வத் ப்ரஜாநாதி பு₃த்₃தி₄ஸ்ஸா பார்த₂ ராஜஸீ || [கீதை 18-31] [எந்த அறிவினால் த₄ர்மாத₄ர்மங்களை

உள்ளபடியல்லாமல் அறிகிறதோ அது ராஜஸமான அறிவாகும்] என்று ஸ்வபாவத்தை வேறாக அறிவது ராஜஸ புத்தி, என்றும், "அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா...புத்திஸ் ஸா பார்த்த தாமஸீ" [18 32] [எந்த அறிவானது தமோகுணத்தால் சூழப்பெற்று அதர்மத்தை தர்மமாக எண்ணுகிறதோ அது தாமஸமான அறிவாகும்] என்று ஸ்வரூபத்தையே வேறாக அறிவது தாமஸ புத்தி, என்றும் சொல்லப்பட்டதை உட்கொண்டு இங்கு ஸுதர்சன பட்டரின் வ்யாக்யானம் அமைந்துளது.

"அவிரதா" என்னும் பதத்திற்கு, "ஆமோக்ஷதாநாத் அவிச்ராந்தவ்யாபாரா இத்யர்த்த:| வ்யாபாரச் சாத்ர சரண்ய ப்ரஸாத விசேஷ ஏவ" [மோக்ஷம் அடையும் வரையில் நீங்காத வ்யாபாரத்தை (விளைவை) உடையது. இங்கு வ்யாபாரமாவது— சரண்யனை எம்பெருமானுடைய அருளேயாகும்] என்று பொருள் கொண்டு "இப்படிப் பொருள்கொண்டால்தான் ப்ரபத்தி ஒருமுறையே செய்யப்படவேண்டும் என்னும் ப்ரமாணங்களுக்கு விரோதமில்லாமல் இருக்கும்" என்று வ்யாக்யானம் செய்தார் தேசிகன்.

இவ்விடத்தில் பூர்வாசார்யர்களுக்கும், ஸ்ரீதேசிகனுக்கும் உள்ள கருத்து வேற்றுமை அறியத்தக்கது. பூர்வாசார்யர்கள் முற்கூறியபடி "எம்பெருமானே உபாயம்" என்னும் நினைவையே முக்ய சரணாகதியாகக் கொண்டார்கள். "சரணாகதி காயிகம், வாசிகம், மாநஸம் என்று மூன்று வகைப்படும்" என்றும், அஞ்ஜலி செய்வது, நமஸ்காரம் செய்வது ஆகியவை காயிக சரணாகதி என்றும், "சரணமடைந்தேன்" என்று வாயால் கூறுவது வாசிக சரணாகதி என்றும், எம்பெருமானையே உபாயமாக உறுதிகொள்வது மாநஸ சரணாகதி என்றும், இவற்றுள் மாநஸ சரணாகதியே முக்யமானது என்றும், உண்மையில் எம்பெருமானே உபாயமாகையாலும் சரணாகதி உபாயமாக இரா

மல் அதிகாரி விஶேஷணமாகவே இருப்பதாலும் பரம கருணையையுடைய எம்பெருமான் அமுக்யமான காயிகவாசிக ஶரணாகதிகளுக்கும் பலன் அளிப்பதுண்டு என்றும் அவர்கள் திருவுள்ளம் பற்றினார்கள். அதனாலேயே "ஸக்ருதேவ ப்ரபந்நாய" [ரா-யு 18-33] என்னும் ஶ்லோக வ்யாக்யானத்தில் வ்யாக்யான சக்ரவர்த்தியான பெரிய வாச்சான் பிள்ளை பின்வரும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்துள்ளார் :— "ஸக்ருதேவ ப்ரபந்நாய— ஒரு தடவை அல்லது சடக்கென ஶரணம் புகுந்தவனுக்குப; 'ஸஹஸா' என்னும் ஶப்தத்துக்குப் பதிலாக "ஸக்ருத்" என்னும் ஶப்தம் வருவதுண்டாகையாலே 'ஸக்ருத்' என்றதை 'ஸஹஸா' என்று கொண்டு ["ஸஹஸா" என்றது உடனே என்றபடி] சடக்கென சரணம் புகுந்தவனுக்கு என்று கொள்வது. அதாவது—தன்னுடைய அயோக்யதையைப் பார்த்துத் தயங்காமல் நம்குணத்தை நம்பிச்சடக்கென ப்ரபன்னனான் (விபீஷணன்) என்கை. இது நம் பெருமானுடைய முக்ய சிஷ்யரான கூரத்தாழ்வான் நிர்வாஹம். அப்படிக்கொள்ளாமல் 'ஸக்ருத்' என்றதுக்கு 'ஒருதரம்' என்றே பொருள் கொண்டு "இதற்குமுன் அநாதி காலம் ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கியிருந்தவன் இனிமேல் முடிவில்லாத காலம் பகவதநுபவமாகிற பலத்தை அநுபவிக்கப் போகிறானகையாலே, ஆயுளுள்ளவரை ஶரணம புகுந்து கொண்டேயிருந்தாலும் ஒரு தடவை என்று தான் சொல்லலாமாகையாலே, நிரந்தரத்வயாநுஸந்தானத்திற்கும் இங்கு ஸக்ருத் (ஒருதடவை) என்று சொன்னதற்கும் விரோதமில்லை" என்று எம்பெருமானாருடைய மற்றொரு சிஷ்யரான எம்பார் நிர்வஹிப்பர். 'இங்கு ஸக்ருதேவ (ஒருதடவையே) என்ற சொன்னது ஸர்வேஶ்வரன் இவனை ஸ்வீகரிப்பதற்கு ஒருதடவையேபோதும் என்பதைக் காட்டுகிறது. த்வயத்தை ஆயுளுள்ளவரை இடைவிடாமல் அநுஸந்திப்பது உபாயத்தின் பெருமை

யாலுண்டான இனிமையாலேயேயாகும். ஒருகால் சொன்னால் போராது என்னும் நினைவாலேயன்று" என்று கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், எம்பாருடைய சிஷ்யருமான பராசரபட்டர் நிர்வஹிப்பர். ஒருதடவையே என்றதாலே—'ஆவ்ருத்திரஸக்ருத் உபதேசாத்' [ப்ரஹ்மஸூத்ரம் 4-1-1] [பலதடவை செய்யப்படும் தியான ரூபமான அறிவே மோக்ஷஸாதனமாகும்: அப்படி (சாஸ்திரங்கள்) உபதேசிக்கின்றன வாகையால்] என்கிறபடியே, பகதியாகிற உபாயத்துக்குப் பல தடவை ஆவ்ருத்தி செய்வதை சாஸ்திரங்கள் விதிப்பதுபோலே இதற்கு இல்லை; சரணாகதியாகிற இது ஒருதடவையே செய்யத்தக்கது—என்று காட்டுகிறது. சரணாகதிக்கு மஹாவிச்வாஸம் முக்யமாகையாலும், பலதரம் செய்வது மஹாவிச்வாஸமின்மையைக் காட்டுமாகையாலும் ஒரு தடவை என்று நிர்பந்திக்கிறதென்று கருத்து. [இவ்வளவும் பெரியவாச்சான்பிள்ளையின் ஸக்ருதேவ தனிச்லோக வ்யாக்யான ஸ்ரீ ஸூக்திகளுக்கு நம்முடைய விவரணம்]

ஸ்ரீதேசிகன் சரணாகதி பற்றிய பூர்வாசார்யர்களின் இக்கருத்தை ஏற்கவில்லை. மேலே காட்டியபடி ஆத்ம ஸமர்ப்பணத்தையே சரணாகதியாகக் கொண்டார். அதனாலேயே 'அவிரதா' [இடைவிடாமல் செய்யப்படுவது] என்பதற்கு சரணாகதியின் பலமான எம்பெருமானுடைய அநுக்ரஹம் இடைவிடாமல் இருப்பது என்று அமுக்யமாகப் பொருள் கொண்டார்.

'ந்யாஸ: பஞ்சாங்க ஸம்யுத:' என்னும் லக்ஷ்மீதந்த்ர வசனம் சரணாகதியில் உபாய புத்தியைக் கொள்ளும் ஸ்வகதஸ்வீகார நிஷ்டனுடைய ப்ரபத்தியைச் சொல்லுவதாக ஸ்ரீவசநபூஷணத்தை விளக்கும் ஸ்ரீவசநபூஷண மீமாம்ஸா பாஷ்யத்தில் நிர்வஹிக்கப்பட்டது.

3. அஸ்து தே ||

---

மூன்றாவது சூர்ணை வ்யா :— (அஸ்து தே) பிராட்டி அருளிச்செய்கிறார்,—உமக்கு அப்படியே உண்டாயிடுக.

---

अस्तु त इति — "तेन मैत्री भवतु ते" इत्यादिमानगत्या निश्चित्येति केचित् ।

---

**மூன்றாவது சூர்ணை வ்யாக்யான விவரணம் :— (அஸ்துதே) எம்பெருமானாருடைய இந்தப் பிரார்த்தனையைக் கேட்டுப் பிராட்டி அருளிச்செய்கிறார் — 'உமக்கு அப்படியே உண்டாயிடுக' என்று; 'என்னையே தஞ்சமாகக் கொண்ட உமக்கு நீர் பிரார்த்தித்ததெல்லாம் நிறைவேறட்டும்' என்று கருத்து. எம்பெருமானாருக்கும் பிராட்டிக்கும் எம்பெருமானுக்கும் உண்மையாகவே ஸம்வாதம் நிகழ்ந்தது என்பதே பூர்வாசார்யர்களின் திருவுள்ளம் என்பது பெரியவாச்சான் பிள்ளையின் வ்யாக்யானத்திலிருந்து விளங்குகிறது. ஶ்ருதப்ரகாஶிகாசார்யரின் வ்யாக்யானத்திலிருந்து "தேந மைத்ரீ பவது தே" [ரா-ஸு 21-19] [ராமபிரானை நண்பனாகக் கொள்வது உனக்குத் தக்கது] என்று இராவணனுக்கும் உபதேசிக்கும் பிராட்டியின் இயல்வையறிந்தவராகையாலே ஶரணாகதரான தம் விஷயத்தில் பிராட்டி இப்படி வரம் அருளியிருப்பாள் என்று உத்ப்ரேக்ஷித்து (ஊஹித்து) அருளிச்செய்கிறார் என்று சிலர் கருதியிருப்பதாகத் தெரிகிறது. ஸ்ரீதேஶிகனுகந்ததும் இப்பக்ஷமே.** 3.

**4. தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே ||**

நாலாவது சூர்ணை வ்யா :— (தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே) அப்படிப்பட்ட உபாயந்தன்னாலேயே பரபக்தி தொடக்கமாகக் கைங்கர்யமீறாக நடுவுள்ள தசைகளடைய உண்டாகக்கடவது.

**स्वसंबन्धिसंबन्धिनिस्तरणमपि सर्वशब्दाभिप्रेतम् ॥**

**நாலாவது சூர்ணை வ்யாக்யான விவரணம்:**— (தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே) அப்படிப்பட்ட எம்பெருமான் திருவடிகளில் செய்யப்படும் சரணாகதியாலேயே பரபக்தி தொடங்கி, கைங்கர்யம் ஈறாக நடுவிலுள்ள எல்லா நிலைகளும் உமக்கு உண்டாகக்கடவது. 'ஸர்வம்' எனும் பதத்திற்கு வேறுவகையாகப் பொருள் கொண்டார் ச்ருதப்ரகாசிகாசார்யர். "ஸ்வ ஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தரணமபி ஸர்வ சப்தாபிப்ரேதம்" [ஸர்வ சப்தத்தாலே எம்பெருமானாரோடு பரம்பரயா ஸம்பந்தம் கொண்டவர்களுக்கும் மோக்ஷம் உண்டு என்று கருதப்படுகிறது] என்று வ்யாக்யானம் செய்தார். இதிலிருந்து இன்றளவும் எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரையில் வந்த நமக்கும் மோக்ஷம் உண்டு என்று பிராட்டி வரம் அருளியிருக்கிறார் என்று விளங்குகிறது. இன்றளவும் எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரையில் வந்த அனைவருக்கும் மோக்ஷம் கிடைத்துவிடுமா? என்னும் கேள்வி இங்கு எழுகிறது. அவருடைய சிஷ்ய பரம்பரையிலுள்ள ஓர் ஆசார்யனிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்று, அந்த ஆசார்யன் உபதேசிக்க த்வய மந்திரத்தைத் திருப்பிச் சொல்லுவதன் மூலம் சரணாகதி அநுஷ்டானம் பிறந்து 'எம்பெருமானார் ஸம்பந்தம் பெற்றவன்' என்று அந்தர்யாமியான நாராயணன் அறியும்படி வாழ்பவனுக்கே இப்பேறு கிடைக்குமென்று கொள்ளவேணும். உண்மையில் எம்பெருமானையே உபாயமாக உறுதிகொள்ளும் இந்த அதிகாரிக்கு எம்பெருமானே உபாயமாகிறானாகையாலும், இவனுடைய சரணாகதியுள்ளிட்ட எந்தச் செயலும் உபாயமாகவில்லையாகையாலும், 'எம்பெருமானார் ஸம்பந்தமே உத்தாரகம்'

என்று ஸகல பூர்வாசார்யர்களும் அறுதியிட்டிருப்பது நாயனாராச்சான் பிள்ளையின் சரமோபாய நிர்ணயம் முதலான க்ரந்தங்களில் வலியுறுத்தப்பட்டிருக்கையாலும், ஶ்ருத ப்ரகாசிகாசார்யரின் இந்த வ்யாக்யானம் அதிவாதம் (மிகைமொழி) அன்று என்பது தெளிவு.

மூன்றாவது சூர்ணையின் வ்யாக்யானத்தில்

"உபாயதா₃நம் ஏதஸ்யா: தத்₃த₃ம் பதிஸம்மதம்|
யதா₂ தஸ்யா: ப்ரஸீத₃ந்த்யா: ஹாரதா₃நம் ஹநூமதே||"

[உபாயம் நிறைவடைய வேண்டும் என்று பிராட்டி அருள் புரிந்தது பதியான எம்பெருமானும் இசைந்தது. (ராம பட்டாபிஷேகத்தின் போது) ஸீதாபிராட்டி உகந்து அநுமனுக்கு ஹாரத்தை அளித்தது போன்றது] என்று ஸ்ரீதேசிகன் அருளியிருப்பது பிராட்டி எம்பெருமானுக்குப் பரதந்த்ரை என்பதே அவர் திருவுள்ளம் எனக்காட்டுகிறது.

நாலாவது சூர்ணை வயாக்யானத்தில், "ஏவகாரேண அத்ர உபாயாந்தரவ்யவதா₄ந நைரபேக்ஷ்யம் த்₃யோத்யதே| யத்₃வா, 'அஸ்துதே' இத்யேதாவதைவ பர்யாப்தே, 'தயைவ' இத்யாதி₃கம் விபீ₄ஷண ஸஹாக₃த ராக்ஷஸத்யாயேந யதா₂பி₄மத—அநுப₃ந்தி₄ ரக்ஷணாபி₄ப்ராயம்| அத₂வா, ஶ்லோகத்ரயோதி₃த ஜ்ஞாநித்வாதி₃கம் அத்ர பரத்ர ச யத் ப்ரார்த்த₂யிஷ்யதே, தத்ஸர்வமிஹ ஸர்வஶப்₃தா₃ர்த்த₂: | உக்தேந ஸஹ வக்ஷ்யமாணம் அநுக்தம் ச அநுப₃ந்தி₄ ரக்ஷணம் அபி₄மதத்வாவிஶேஷாத் ஸங்கலய்ய ப்ராச்யதே||" [இங்கு ஏவகாரத்தால் (ப₄க்தியோக₃ம் முதலான) மற்ற உபாயங்களை இடையிட வேண்டிய அவசியமில்லை என உணர்த்தப்படுகிறது. அன்றிக்கே, மூன்றுவது சூர்ணையில் "உமக்கு உண்டாயிடுக" என்று அருளியதே போதுமாயிருக்க, நாலாவது சூர்ணையில் மறுபடியும் வரமளிப்பது—விபீ₄ஷணனோடு கூட வந்த ராக்ஷஸரும் விபீ₄ஷண சரணாகதியாலே ரக்ஷிக்கப்பட்டது போலே தாம் விரும்பும் சிஷ்யப்ரஶிஷ்யர்களுடைய ரக்ஷணத்தைக் குறிக்கிறது என்றும் கொள்ளலாம். அப்படியுமல்லாமல், "இங்கும் மேலும் பிரார்த்திக்கப்படும் (ஶ்லோகத்ரயத்தில் சொல்லப்பட்ட) ஞானியாகை (ஸ்த₂ாநத்ரயத்தில் சொல்லப்பட்ட) ப₄க்தியுடையவனாகை ஆகியவை 'ஸர்வ' ஶப்₃த₃த்தால் கருதப்படுகிறது; மற்றும்

### 5. அகி₂லஹேயப்ரத்யநீக

ஐந்தாவது சூர்ணை அவ :— மேல் ஆஶ்ரயணீயவஸ்து நிர்த்தே₃ஶம் பண்ணுகிறார். ஆஶ்ரயணீயனானவன் நாராயணனிறே. அதில் நாரஶப்₃த₃ார்த்த₂ம் மேல் சொல்லுவதாகக் கோலி, அதுக்கு ஆஶ்ரயமாய் அயந ஶப்₃த₃ார்த்த₂மான தி₂வ்யாத்மஸ்வரூபத்தை முதலிலே அருளிச்செய்கிறார்.

வ்யா :—(அகி₂லஹேயப்ரத்யநீக) 37. "निर्गुण" (நிர்க்கு₃ணம்) என்கிற வஸ்து இருக்கிறபடி. ஹேயங்களாவன,—

---

अथ द्वयस्थं नारायणशब्दं विवृणोति-अखिलेत्यादिना । तत्र प्रथमपदेन नारशब्दवाच्यानां धर्म्युच्यते । अखिलशब्दः चिद-

---

எம்பெருமானார் இங்கு திருவுள்ளம் பற்றியதோடு மேலே சொல்லப்படுபவையும், சொல்லப்படாத பரம்பரா ஸம்ப₃ந்த₄முள்ளவர்களின் ரக்ஷணமும் சேர்த்துச் சொல்லப் படுகிறது'' என்றும் கொள்ளலாம்] என்று ஸ்ரீதேசிகன் அருளியிருப்பதிலிருந்து இவ்வளவும் எம்பெருமானார் ஸம்ப₃ந்த₄ம் பெற்றவர்களாக உள்ளபடி வாழ்க்கை நடத்துபவர் களும் அவர் ஸம்ப₃ந்த₄த்தாலேயே முக்தியடைவார்கள் என்பதே அவர் திருவுள்ளமும் ஆகும் என விளங்குகிறது. 4.

ஐந்தாவது சூர்ணை அவதாரிகை :— இந்த ஐந்தாவது சூர்ணையில த்₃வய மஹாமந்திரத்தை விவரித்து அதன் இறுதியல் த்₂வயத்தையும் அநுஸந்திக்கும்படி நியமிக்கிறார் எம்பெருமானார். முதலில் உபாயமாக ஆஶ்ரயிக்கத்தக்கவன் நாராயணனே என்று காட்டுவதற்காக, "நாராயண" ஶப்₃த₃த்தை விவரிக்க முற்பட்டு, அதில 'நார' ஶப்₃த₃ார்த்த₂த்தை அடுத்தபடியாக விவரிக்கத் திருவுள்ளம் பற்றி, அந்த நாரங்களுக்கு இருப்பிடமாய் 'அயந' ஶப்₃த₃த்திற்குப் பொருளான எம்பெருமானுடைய தி₂வ்யாத்ம ஸ்வரூபத்தை முதல் விளியாலே அருளிச்செய்கிறார்.

வ்யா : — (அகி₂ல ஹேய ப்ரத்யநீக) "நிர்க்குணம்" [ஆத்மோபநிஷத்] [ப்₃ரஹ்மமானது (தாழ்ந்த) கு₃ணங்க

அசித்₃க₃தமான பரிணாமமும், சேதநக₃தமான து₃:க்கா₂ஜ்ஞா நாதி₃களும், நித்யமுக்தர் பக்கலுண்டான பாரதந்த்ர்யமும்; அகி₂லஸப்₃த₃த்தாலே உப₄யவிபூ₄தியிலுண்டான சேதநா சேதநங்களைச் சொல்லுகிறது. பாரதந்த்ர்யம் ஹேயமாமோ வென்னில்: புருஷனுக்கு ஸ்தநோத்₃பே₄த₃மும் ஸ்த்ரீக்கு

---

चिद्गतक्लेशादिभावविकारादिहेयपरः। प्रत्यनीकेति- न केवलं विरह- मात्रमित्यर्थः। आनन्दकल्याणशब्दौ स्वपरापेक्षया अनुकूलपरौ।

---

ளற்றது] என்னும் வேத வாக்கியத்தில் பொதுவாக ப்₃ரஹ்ம மானது குணமற்றது என்று சொல்லப்பட்ட போதிலும, மற்ற பல வேத₃வாக்கியங்கள் ப்₃ரஹ்மத்திற்குக் கல்யாண குணங்கள் உண்டு என்று காட்டுகையாலே 'நிர்க்கு₃ண'' வாக்கியம் 'தாழ்ந்த குணங்கள் ப்₃ரஹ்மத்திற்கு இல்லை' என்றே காட்டும் என விளங்குகிறது. 'ஹேயம்' என்று ப்₃ரஹ்மம் தவிர்ந்த மற்ற பொருள்களிலிருக்கும் தாழ்ந்த குணங்களைக் குறிக்கிறது. அவையாவன :— (1) அசேதனப் பொருள்களிலுள்ள பரிணாமம் (2) இவ்வுலகிலுள்ள ப₃த்₃த₄ சேதனரிடமுள்ள துன்பம், அறிவின்மை மலம். முதலானவை. (3) பரம பதத்திலுள்ள நித்யசேதனர் முக்தசேதனர் ஆகிய அனைவரிடமும் உள்ள பாரதந்த்ரியம். ''அகி₂ல'' ஸப்₃த₃த் தாலே நித்ய விபூ₄தியாகிற பரமபதத்திலும் லீலாவிபூ₄தி யாகிய இவ்வுலகிலும் இருக்கும் (எம்பெருமான் தவிர்ந்த) சேதநாசேதநங்கள் அனைத்தையும் சொல்லுகிறது. இந்த அனைவரிடமும் உள்ள முற்கூறிய தாழ்வுகளுக்கு எம்பெரு மான் எதிர்த்தட்டாய் இருப்பவன் என்று கருத்து. பெரிய பிராட்டியார் தொடக்கமாக, சேதனர்கள் அனைவர்க்கும் பெருஞ் செல்வமாயிருக்கும் பாரதந்த்ரியம தாழ்வாகுமோ? எனில்—மற்ற சேதனருக்கு இது பெருஞ்செல்வமாயிருந்த போதிலும் எம்பெருமானுக்கு இது தாழ்வையாகும். புருஷ னுக்கு முலைவளர்வதும், பெண்பிள்ளைக்கு மீசை வளர்வதும

ஶமஶ்ருஸம்யோக3ம் போலே பரதந்த்ரனுக்கு ஸ்வாதந்த்ர்யம் ஹேயம். அப்படியே ஸ்வதந்த்ரனான ஈஶ்வரனுக்குப் பாரதந்த்ர்யம் ஹேயமாகக்கடவது. ப்ரத்யநீகத்வமாவது,— பதா3ர்த்தா2ந்தரஸம்ஸர்க்கா3பா4வாதா4ரத்வம். ஆஶ்ரிதருடைய ஹேயநிரஸநத்துக்கு அடியான ஹேயப்ரத்யநீகத்வமென்றுமாம். (கல்யாணைகதாந) கல்யாணைகவிஸ்தார. அக2ண்டை3

---

आनन्दविवरणं वा कल्याणशब्दः। कल्याणानां गुणानामेकास्पदमिति वा कल्याणैकतानशब्दार्थः। यद्वा स्वसंबन्धिनामपि मङ्गलावहता कल्याणशब्दार्थः। एकशब्देन प्रदेशभेदेन जडत्वप्रतिकूलत्वव्युदासः॥

---

போலே, ஒருவருக்குச் சிறப்பாயிருப்பது மற்றொருவருக்குத் தாழ்வாயிருப்பதைக் காண்கிறோமன்றோ. ஆகையால், பரதந்த்ரரான மற்ற சேதனருக்கு ஸ்வாதந்த்ரியம் தாழ்வாகும். அவ்வண்ணமே ஸ்வதந்த்ரனான ஈஶ்வரனுக்குப் பாரதந்த்ரியம் தாழ்வேயாகும். தாழ்வுகளுக்குப் ப்ரத்யநீகமாய் (எதிர்த்தட்டாய்) இருக்கையாவது — அத்தாழ்வுகளால் என்றுமே தொடப்படாமலிருக்கையேயாகும். அல்லது, தன்னிடம் அத்தாழ்வுகள் இல்லாமலிருப்பதோடன்றியில், அடியார்களுடைய தாழ்வுகளைப் போக்குவதற்கும் வல்லதாயிருக்கையே தாழ்வுகளுக்கு எதிர்த்தட்டாயிருக்கை என்றும் கொள்ளலாம். (கல்யாணைகதாந) முழுவதும் மங்களமாகவே இருக்கை. 'அக2ண்டை3கரஸம்' [ஒரு பகுதிவிடாமல் அனைத்தும் சுவையுடைத்தாய் இருப்பது] என்பதுபோலே இது ஒரு முழுச்சொல். "அகி2ல ஹேய" என்பதற்கு "(சேதநாசேதனங்களிலுள்ள) எல்லாத் தாழ்வுகளுக்கும்" என்றும் "கல்யாணைகதாந" என்பதற்கு "கல்யாணாநாம் கு3ணாநாம் ஏகாஸ்பத3ம்" [மங்களமான குணங்களுக்கு ஒரே இருப்பிடமாயிருப்பது] என்றும் ஶ்ருதப்ரகாசிகாசார்யர் பொருள்கொண்டார். "தன்னோடு தொடர்புடையவர்களுக்கும் மங்களத்தை அளிப்பதாயிருக்கையே 'கல்யாண' ஶப்3த3த்தின் பொருள். 'ஏக' ஶப்3த3ம் ஒருபகுதி கூட ஜட3மாகவோ ப்ரதிகூலமாகவோ இல்லையென்று காட்டுகிறது" என்றும் பொருள் கொண்டார்.

**கல்யாணகுணாகர ஸ்வேதர ஸமஸ்த வஸ்து விலக்ஷண—**

---

கரஸம் போலே இஸ்ஸப்₃த₃ம். (ஸ்வேதரஸமஸ்தவஸ்து விலக்ஷண) அத ஏவ ஸமஸ்தவஸ்துவிலக்ஷண. (அநந்த) த்ரிவித₄பரிச்சே₂த₃ரஹித. விபு₄த்வாத் தே₃ஸபரிச்சே₂த₃ ராஹித்யம். நித்யத்வாத் காலபரிச்சே₂த₃ராஹித்யம். ஸ்வவ்ய திரிக்தஸமஸ்த வஸ்துக்களுக்கும் தான் ப்ரகாரியாய், தனக்கு ப்ரகார்யந்தரமில்லாதபடி நிற்கையாலே ஸத்₃ருஸவஸ்த்வ

---

(ஸ்வேதரஸமஸ்த வஸ்து விலக்ஷண) முற்கூறியபடி தாழ்வு களுக்கு எதிர்த்தட்டாகவும் மங்களங்களுக்கு ஒரே இருப் பிடமாகவும் இருக்கையால், தன்னைத் தவிர்ந்த மற்ற எல்லாப் பொருள்களைக் காட்டிலும் சிறப்புற்றதாயிருக் கிறது ப₄க₃வத் ஸ்வரூபம் என்று கருத்து. (அநந்த) "ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்₃ரஹ்ம" [தை-ஆந 1] என்று உபநிஷத்₃வாக்யத்தில் ப்₃ரஹ்மத்துக்கே உரிய தாகச் சொல்லப்பட்ட மூன்று பெருமைகளில் இதுவும் ஒன்று. அதாவது—தேசத்தாலோ, காலத்தாலோ, வஸ்து வாலோ அளவுபடாமலிருப்பது என்று கருத்து. ப்₃ரஹ்ம ஸ்வரூபம் எங்கும் பரந்த விபு₄வாகையாலே தேசத்தால் அளவுபட்டிருப்பதல்ல. ப்₃ரஹ்ம ஸ்வரூபம் என்றும் இருப் பதாகையாலே காலத்தாலே அளவுபட்டிருப்பதல்ல. 'க₄டம் படமல்ல; படம் மற்றொன்றல்ல' என்னும் வழக்குகளுக்கு உட்பட்டிருக்கையாலே க₄டம் படம் முதலான பொருள்கள் வஸ்துவால் அளவுபட்டிருப்பவை. ப்₃ரஹ்ம ஸ்வரூபத்தைப் பார்த்தால், தன்னைத் தவிர்ந்த மற்ற பொருள்கள் அனைத்தை யும் தனக்கு ப்ரகாரமாக (தன்னைப் பிரிந்தால் ஸத்தையில் லாத பொருளாகக்) கொண்டிருப்பதாய் இருக்கையாலே, ப்₃ரஹ்ம ஸ்வரூபமே க₄டம் படம் முதலான எல்லாப்

**அநந்த ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப!**

---

பூ₄ரவத்தாலே வஸ்துபரிச்சே₂த₃ராஹித்யம். துல்யாலேயாதல், ப்ரஸ்தா₂தி₃களாலேயாதல் வரும் பரிச்சே₂த₃ராஹித்யத்தைச் சொல்லிற்றுகவுமாம். (ஜ்ஞாநாநந்தை₃கஸ்வரூப) அநந்யாதீ₄நப்ரகாஶத்வாஹ்லாத₃கரத்வஜ்ஞாநமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ:—ஜ்ஞாநாநந்தை₃கஸ்வரூப: ; அதாவது, — ஸ்வயம்ப்ரகாஶத்வ ஸுக₂ ரூபத்வங்களே ஸ்வரூபமாயிருக்கை. இப்படி தி₃வ்யாத்ம ஸ்வரூபம் சொல்லப்பட்டது.

---

பொருளுமாய் இருக்கிறது' என்று சொல்லத் தகுதியுண்டு. ஆகையால் இதற்கு வஸ்துவால் அளவுபட்டிருக்கையும் இல்லை, அன்றிக்கே, தான் மற்ற எல்லாப் பொருள்களுக்கும் ப்ரகாரியாய் இருப்பதுபோலே தனக்கு ஒரு ப்ரகாரியில்லாமையாலே, தன்னையொத்த பொருள் எதுவுமில்லாமல் இருக்கையே வஸ்துவால் அளவுபடாமலிருக்கை என்றும் கொள்ளலாம். அன்றிக்கே—எடையை நிறுக்கும் தராசினாலும், படிக்கல் முதலானவற்றாலும், பரிமாணத்தை அளவிடும் படி, மரக்கால் முதலானவற்றாலும் அளவிட முடியாதிருக்கையே வஸ்து பரிச்சே₂த₃ம் இன்மை என்றும் கொள்ளலாம். (ஜ்ஞாநாநந்தை₃க ஸ்வரூப) ஜ்ஞாநமாவது—வேறொன்றுக்கு அதீ₄நமாயல்லாமல் தானே ஒளிவிடும் பொருளாகும். இந்த ஜ்ஞாநமே மகிழ்ச்சியை விளைக்கும் போது 'ஆனந்தம்' என்று சொல்லப்படுகிறது. ஆக, "வேறொன்றுக்கு அதீ₄நமாயல்லாமல் தானே பிரகாசிப்பதாய் மகிழ்ச்சியை விளைப்பதான ஜ்ஞாநத்தையே ஸ்வரூபமாக உடைய தி₃வ்யாத்ம ஸ்வரூபங்கொண்டவனே!'' என்றபடி. அதாவது—தானே பிரகாசிக்கையும் ஸுக₂ரூபமாயிருக்கையுமே இயல்வாகக் கொண்டது திவ்யாத்ம ஸ்வரூபம் என்று கருத்து. இந்த முதல் விளியால் தி₃வ்யாத்ம ஸ்வரூபம் சொல்லப்பட்டது.

ஸ்வாபி4மத — அநுரூப —

அநந்தரம், நாரஶப்3த3வாச்யங்களில் ஸ்வரூபகு3ணங்களுக்கு ப்ரகாஶகமாய், பஞ்சோபநிஷண்மயமான தி3வ்ய விக்3ரஹத்தை அருளிச்செய்கிறார் — (ஸ்வாபி4மத) கீழ்ச்சொன்ன ஸ்வரூபத்துக்கு, கு3ணங்களிற்காட்டில் ப்ரகாஶகமுமாய், அந்தரங்க3முமாயிருக்கையாலே கு3ணங்களுக்கு முன்னே விக்3ரஹத்தை அருளிச்செய்கிறார். (ஸ்வாபி4மத) "இச்சா2

---

अथ रूपम् । अभिमतानुरूपशब्दौ पूर्ववत् । एकरूपत्वं रूपय-

---

இனி, நாரஶப்3த3த்தால் உணர்த்தப்படும் பொருள்களைச் சொல்லத் தொடங்கி, அடுத்த விளியாலே எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைச் சொல்லுகிறது. திருமேனியைக் காட்டிலும் அந்தரங்க3மான தி3வ்யாத்ம ஸ்வரூப கு3ணங்களைச் சொல்லாமல், ரூபத்தை முதலில் சொன்னது—பஞ்சோபநிஷத்துக்களாலான திவ்யமங்கள விக்ரஹம், திவ்யாத்ம ஸ்வரூபத்தையும், ஸ்வரூப குணங்களையும் வெளிப்படுத்துவதாய் இருக்கையாலும், எம்பெருமானுக்கு மிகவும் இனியதாய் இருக்கையாலும், அடியார்களால் மிகவும் ஆதரிக்கப்படுவதாய் இருக்கையாலும், (ஸ்வாபி4மத) முந்தின விளியிற் சொன்ன ஸ்வரூபத்தை, அதிலுள்ள கு3ணங்களைக் காட்டிலும் சிறப்பாக வெளிப்படுத்துவதாகையாலே எம்பெருமானுக்கு மிகவும் இனியதாயிருக்கும் என்கை. (ஸ்வாபி4மத)

ஸமஸ்தகல்யாணகு3ணாத்மகோ஽ஸௌ
 ஸ்வஶக்திலேஶோத்3த்4ருதபூ4தஸர்க்க3:।
இச்சா2க்3ருஹீதாபி4மதோருதே3ஹஸ்
 ஸம்ஸாதி4தாஶேஷஜக3த்3தி4தோ஽ஸௌ॥

[வி-பு 6-5-84]

ஏகரூப—அசித்ய—தி₃வ்ய—அத்₃பு₄த—

---

க்₃ருஹீதாபி₄மதோருதே₃ஹ:" என்கிறபடியே திவ்யாத்மஸ்வ ரூபத்திற்காட்டில் அபி₄மதமாயிருக்கை. (அநுரூப) ஸ்வரூபா நுப₄வத்துக்குத் திரோத₄ாயகமாயிருக்கையன்றிக்கே, ஸ்வரூபா நுப₄வத்துக்கு வர்த்த₄கமாயிருக்கை. (ஏகரூப) ஷட்₃ப₄ாவ விகாரரஹிதமாயிருக்கை. "ஸதை₃கரூபரூபாய" என்றிருக்கை.

---

लिङ्गत्वप्राप्यत्वोपास्यत्वैः । तर्कागोचरत्वं अचिन्त्यत्वम् । दिव्यशब्दद्वयं

---

[இந்த ப₄க₃வான் ஸகலகல்யாண கு₃ணங்களையும் இயற்கை யாகவே உடையவன்; தன்னுடைய சக்தியில் ஒரு சிறிய பகுதியினாலேயே த₄ரிக்கப்பட்ட பூதங்களை உடையவன்; இச்சை₂யினாலே எடுக்கப்பட்டவையும், இஷ்டமானவையுமான பல சிறந்த தே₃ஹங்களை உடையவன் இவன் எல்லா ஜக₃த் துக்கும் நன்மையைச் செய்பவன்.] என்று விஷ்ணு புராணத் தில் இவனுடைய திருமேனி, இவனுக்கு மிகவும் இனியது என்று சொல்லப்பட்டதன்றோ. (அநுரூப) ப்ராக்ருத தேஹங் களைப்போலே ஸ்வரூபத்தை மறைக்காமல் ஸ்வரூபத்தின் அநுபவத்தை வளர்ப்பதாய் இருக்கை. (ஏகரூப) ப்ராக்ருதப் பொருள்களைப்போலே—தோன்றுதல், வளர்தல், குறைதல், பரிணமமடைதல், நாசமடைதல், இவற்றை உடையதாகவே இருத்தல் என்னும் ஆறு ப₄ாவவிகாரங்களை உடையதா யிராமல்

அவிகாராய ஶுத்₃த₄ாய நித்யாய பரமாத்மநே |
ஸதை₃கரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே ||

[வி-பு 1-2-1]

[(அசேனத்தைப்போலல்லாமல்) விகாரம் அற்றவனாகவும், (ஸம்ஸாரிசேதனனைப் போலல்லாமல்) அஶுத்₃தி₄ இல்லாத

(அசிந்த்ய) இதரஸஜாதீயதயா சிந்தயிதும் அஶக்யமா யிருக்கை. (தி₃வ்ய) வருந்தியும் உபமானமின்றிக்கே யிருக்கை. அப்ராக்ருதமாயிருக்கை என்றுமாம். (அத்₃பு₄த) க்ஷணந்தோறும் அபூர்வமாயிருக்கை; அத ஏவ ஆஶ்சர்யா

---

द्रव्यसंस्थानवैलक्षण्यपरम् । अद्भुतत्वं प्रतिक्षणापूर्वत्वम् । नित्य-

---

வனாகவும், (முக்தாத்மாவைப்போலல்லாமல்) நித்ய ஶுத்₃த₄னாகவும், (நித்யஸூரிகளைப்போலல்லாமல்) தனக்கு மேல் ஒருவனற்றவனாகவும், எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும் தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்தை உடையவனாகவும், ஸர்வவ்யாபியாகவும், எல்லாவற்றையும் ஜயிப்பவனாகவுமுள்ள ப₄க₃வானுக்கு (நமஸ்காரம்).] என்கிறபடியே எப்போதும் ஒருபடிப்பட்டதாயிருக்கை. "(1) கு₃ணங்கள் நிறைந்திருக்கை தாழ்வுகளற்றிருக்கையாகிய உப₄யலிங்க₃ம் உடையதாயிருக்கை. (2) ப்ராப்யமாயிருக்கை. (3) உபாஸிக்கத்தக்கதாய் இருக்கை ஆகியவற்றில் ஒருபடிப்பட்டிருக்கை" என்று பொருள் கொண்டார் ஸுதர்சன ப₄ட்டர். (அசிந்த்ய) 'மற்ற பொருள்களை ஒத்தது' என்று நினைப்பதற்கும் ஒண்ணாததாயிருக்கை. 'தர்க்கத்தால் ஸாதிக்க முடியாததாயிருக்கை' என்று ஸுதர்சன ப₄ட்டர் பொருள் கொண்டார். (தி₃வ்ய) 'எவ்வளவு தேடினாலும் உபமானமற்றதாய் இருக்கை' என்றோ 'அப்ராக்ருதமாய் இருக்கை' என்றோ பொருள் கொள்ளலாம். இந்த "தி₃வ்ய" ஶப்₃த₃த்திற்கு இப்படிப் பொருள் கொண்ட பெரியவாச்சான் பிள்ளை, இந்த விளியின் கடைசியிலுள்ள "தி₃வ்ய" ஶப்₃த₃த்திற்கு 'பரமபதத்திலிருப்பது' என்று பொருள் கொண்டார். ஸுத₃ர்சன ப₄ட்டர் "த்₃ரவ்யத்தாலும் அமைப்பாலும் சிறப்புற்றதாயிருப்பதை இரண்டு 'தி₃வ்ய' ஶப்₃த₃ங்களும் காட்டுகின்றன". என்று கொண்டார். (அத்₃பு₄த) கணந்தோறும் புதிதுபுதிதாயிருக்கை. அதனாலேயே ஆச்சர்யத்தை

நித்ய—நிரவத்3ய—நிரதிஶயௌஜ்ஜ்வல்ய—
ஸௌந்த3ர்ய—ஸௌக3ந்த்4ய—ஸௌகுமார்ய—

வஹமாயிருக்கை. (நித்யநிரவத்3ய) நித்யநிர்தோ3ஷமாயிருக்கை. அதாவது — என்றுமொக்க ஸ்வார்த்த2மாயிராதொழிகை. "ப4க்தாநாம்" என்றிருக்கும் இருப்பு. (நிரதிஶ

संस्थानत्वं नित्यत्वम् । दौर्गन्ध्याद्यवद्यरहितत्वं निरवद्यत्वम् । सौन्दर्य—

விளைப்பதாயிருக்கை. (நித்ய) 'பரமபதத்திலிருக்கும் திருமேனி நித்யமாயிருப்பதைக் காட்டுகிறது' என்றார் வேதார்சன ப4ட்டர். (நித்ய நிரவத்3ய) என்று சேர்த்துப் படிக்கும் போது — 'எப்போதும் குற்றமற்றிருக்கை. அதாவது — என்றுமே தனக்காயிராமல் பிறர்க்காகவே இருக்கை' என்று பொருள் கொண்டார் பெரியவாச்சான்பிள்ளை.

> ந தே ரூபம் ந சாகாரோ நாயுதா4நி ந சாஸ்பத3ம்।
> ததா2பி புருஷாகாரோ ப4க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே ||
>
> [ஜிதந்தே 1-5]

[(உன்னுடைய) தி3வ்யாத்ம ஸ்வரூபமானது உனக்காக இராது; (ஸ்வதந்த்ரமான அது ஆஶ்ரிதர்களுக்காகப் பரதந்த்ரமாகவும் ஆகும் என்று தாத்பர்யம்) தி3வ்யமங்க3ள விக்3ரஹமும் உனக்காயிராது; தி3வ்யாயுத4ங்களும் உனக்காயிருக்கவில்லை; இருப்பிடமான வைகுண்ட2ம் முதலியவைகளும் உனக்காயிருக்கவில்லை' (இவையெல்லாம் உன் அடியார்களுக்காயிருக்கும் என்று பொருள்) பக்தர்களுடைய உடைமையான நீ, இப்படி ஆஶ்ரிதபாரதந்த்ர்யமான ஸ்வரூபரூபகு3ண விபூ4திகளை உடையவனாயிருந்தபோதிலும், புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட ஸர்வாதி4களுமிருக்கும் தன்மையுடன் விளங்குகிறாய்.] என்று திருமேனியும் பிறர்க்கேயாக இருப்பதாகச் சொல்லப்பட்டதன்றோ. (நிரவத்3ய) 'அடியார்க்கு

யௌஜ்ஜ்வல்ய) ஸர்வதேஜஸ்ஸுக்களையும் கீழ்ப்படுத்திக் கொண்டிருக்கும் ஔஜ்ஜ்வல்யம். இத்தால் ப்ரஹ்மாதிகளுக்கும் அமைத்துக் காட்டவேண்டும்படியாயிருக்கை. இத்தால் விக்ரஹ வைலக்ஷண்யம் சொல்லிற்று. அதவிக்ரஹ குணநாஹ (ஸௌந்தர்ய) அவயவஶோபை. (ஸௌகந்த்ய) "ஸர்வகந்த:" என்கிறபடியே ஸர்வத்தையும் பரிமளிதமாக்க வற்றாயிருக்கை. (ஸௌகுமார்ய) நாய்ச்சிமாரும் உறைக்கப் பார்க்கப் பொறுதபடி புஷ்பஹாஸஸுகுமாரமாயிருக்கை.

---

अवयवशोभा । लावण्यं— अवयविशोभा । आदिशब्दार्थः पिन·

---

அடைய முடியாததாய் இருக்கையாகிற குற்றமற்றிருக்கை' என்று ஸுதர்சன பட்டர் பொருள் கொண்டார். (நிரதிஶய ஔஜ்ஜ்வல்ய) ஒளியுள்ள பொருள்களையெல்லாம் கீழ்ப்படுத்திக் கொண்டிருக்கும் ஒளியுடையதாய் இருக்கை. பிரமன் முதலான தேவர்களுக்குக் காட்சியளிக்கும்போதும் தன் ஒளியைக் குறைத்துக்கொண்டு திருமேனியைக் காட்டுகிறான் என்று இதிலிருந்து விளங்குகிறது. இதுவரையில திருமேனியின் சிறப்பு சொல்லப்பட்டது; இனி, திருமேனியின் குணங்களைச் சொல்லுகிறார். (ஸௌந்தர்ய) அவயவங்களின் அழகைச் சொல்லுகிறது. (ஸௌகந்த்ய) நறுமணமுடையதாய் இருக்கை.

"ஸர்வகந்த: ஸர்வரஸ:" [சாந் 3-14-2]

[(பரமாத்மா) எல்லா கந்தங்களையுமுடையவன்; எல்லா ரஸங்களையுமுடையவன்.] என்கிறபடியே தன்னோடு தொடர்பு உடைய அனைத்தையும் நறுமணமுடையதாக்குவதாய் இருக்கிறதன்றோ. (ஸௌகுமார்ய) நாய்ச்சிமாரும் உறைக்கப்பார்க்கப் பொறுதபடி பூ அலர்ந்தாற்போல் மென்மையுடையதாய் இருக்கை. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் "புஷ்பஹாஸ:" என்னும் திருநாமம் இந்த மென்மையைச் சொல்லிற்று. (லாவண்ய) 'ஸௌந்தர்ய' ஶப்தம் அவயவங்களின் அழகைச் சொல்லிற்று. 'லாவண்ய' பதம் திருமேனி முழுப

**லாவண்ய — யௌவநாத்₃யநந்த கு₃ண நிதி₄, தி₃வ்யரூப!**

---

(லாவண்ய) ஸமுத₃ாயஶோபை₄. அதாவது,— லவணம்போலே எங்குமொக்க வ்யாபித்துநின்று ரஸத்தைத் தராநிற்குமிருக்கை. (யௌவந) "யுவா ऽकுமார:" என்கிறபடியே நித்யயுவாவாயிருக்கும் பருவம். (ஆதி₃) இவை தொடக்கமான. (அநந்தகு₃ண நிதி₄) அஸங்க்₂யாதமான கு₃ணங்களுக்குக் கொள்கலமாயிருக்கும். (தி₃வ்யரூப) தி₃வ்யஸ்தி₂தரூப! அதாவது,— இவ்விபூ₄தியில் அடங்காதிருக்கை.

விக்₃ரஹ கு₃ணங்கள் விக்₃ரஹத்துக்கு பூ₄ஷணமாயிருக்குமாபோலே தி₃வ்யாத்ம ஸ்வரூபத்துக்கு பூ₄ஷணமான ஸ்வரூப

---

**वृत्तायतभुजत्वादि ॥ अथ दिव्यात्मगुणाः ।**

---

**தும் பரவியிருக்கும் ஸமுதா₃ய ஶோபை₄யைச் சொல்லுகிறது. லவணம் (உப்பு) போலே எங்கும் ஒருபடியாகப் பரவி நின்று சுவையைத் தரக் கூடியதாய் இருக்கையால் இது லாவண்யம் என்று சொல்லப்படுகிறது. (யௌவன)**

**யுவா ऽகுமார:।** **[ருக்₃வே- ஆ 2-8-25]**

**[யௌவனத்தையுடையவனாகவும், சிறிது பா₃லனாகவுமிருப்பவன்.] என்கிறபடியே எப்போதும் வாலிபப்பருவத்தை உடையனாயிருக்கை. (ஆதி₃) இவை தொடக்கமான மற்ற பல குணங்களைச் சொல்லுகிறது. "பருத்து உருண்டு நீண்ட கைகளையுடையதாயிருக்கை முதலானவற்றைச் சொல்லுகிறது" என்பர் ஸுதர்சன ப₄ட்டர். (அநந்த கு₃ணநிதி₄) எண்ணில் அடங்காத குணங்களுக்குக் கொள்கலமாயிருக்கை. (தி₃வ்யரூப) பரமபதத்தில் இருக்கும் திருமேனியையுடையவனே! இந்த லீலாவிபூ₄தியில் அடங்காதது இத்திருமேனி என்று கருத்து.**

**திருமேனியின் குணங்கள் திருமேனிக்கு அலங்காரமாயிருப்பது போலே, தி₃வ்யாத்மஸ்வரூபத்துக்கு அலங்காரமாயிருக்கும் ஆத்ம கு₃ணங்களைச் சொல்லுகிறார் அடுத்த வினியாலே.**

ஸ்வாப₄ாவிக—அநவதி₄காதிஶய—ஜ்ஞாந—ப₃ல—

---

கு₃ணங்களைச் சொல்லுகிறது. (ஸ்வாப₄ாவிக) ஜலத்துக்கு ஶைத்யம்போலே ஸ்வபா₄வஸித்₃த₄மாயிருக்கை. (அநவதி₄காதிஶய) நிஸ்ஸீமமுமாய், ஆஶ்சர்யகரமுமாயிருக்கை. ப்ரத₂மத்தில் ஜ்ஞாநாதி₃கள் ஆறும் ஸர்வவிஷயங்கள். அவற்றில்,—(ஜ்ஞாந) "யோ வேத்தி யுக₃பத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா₃ ஸ்வத:" என்கிறபடியே எல்லாவற்றையும் ஒருகாலே எப்போதும் உள்ளபடி அறியவற்ருயிருக்கை. (ப₃ல) ஸங்கல்ப

---

स्वाभाविकेत्यादि स्फुट ।

---

(ஸ்வாப₄ாவிக) நீருக்குக் குளிர்ச்சி போலே எம்பெருமானுக்கு இந்த கு₃ணங்கள் இயல்வாயிருப்பவை என்றபடி. (அநவதி₄காதிஶய) கு₃ணங்கள் எல்லையற்றவையாய், வியப்பை விளைப்பவையாய் இருப்பவை என்று கருத்து. அடுத்துவரும் குணங்களில் ஜ்ஞானம் தொடங்கி தேஜஸ் வரையில் உள்ள ஆறு குணங்கள் படைத்தல் காத்தல் முதலானவற்றில் பயன படுபவையாகையால் அனைவர்க்கும் பொதுவாகப் பயன்படும் குணங்கள். அதற்குமேல் பன்னிரண்டு கு₃ணங்கள் அடியார்களைக் காப்பதற்காகவே ஏற்பட்டவை. (ஜ்ஞாந)

> யோ வேத்தி யுக₃பத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா₃ ஸ்வத:|
> தம் ப்ரணம்ய ஹரிம் ஶாஸ்த்ரம் ந்யாயதத்த்வம்
> ப்ரசக்ஷ்மஹே|| [(நாதமுனிகளருளிய) ந்யாயதத்வம்]

[எவனொருவன், எப்போதும் எல்லா வஸ்துக்களையும் ஒரே சமயத்தில் தானாகவே நேரில் அறிகிருனே, அந்த ஹரியை வணங்கி ந்யாயதத்வம் என்னும் கிரந்தத்தை இயற்றுகிருேம்] என்று நாதமுனிகள் ந்யாய தத்வத்தின் மங்கள ஶ்லோகத்தில் அருளியபடியே, எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் எப்போதும் உள்ளபடி அறியவல்லதாய் இருக்கை. (ப₃ல) ஸங்கல்பம் ஒன்றினாலேயே எல்லாப் பொருள்களையும் த₄ரிக்குப

ஐஸ்வர்ய—வீர்ய—ஶக்தி—தேஜ:—

---

மாத்ரத்தாலே ஸர்வபதார்த்தங்களையும் தரிக்கும் தாரணஸாமர்த்யம். (ஐஶ்வர்ய) ஸமஸ்தபதார்த்த நியமநஸாமர்த்யம். (வீர்ய) ஸர்வத்தையும் தரித்து நியமித்துப்போராநின்றால் புருவம் வேராத அநாயாஸம். எல்லாவற்றையும் உண்டாக்காநின்றால் தான் அவிக்ருதனாயிருக்கும் அவிகாரதை என்னவுமாம். (ஶக்தி) ப்ரவ்ருத்த்யுந்முகரான சேதநர்க்கு ஶக்தியைக் கொடுத்து ப்ரவர்த்திப்பிக்கும் ப்ரவர்த்தகத்வஸாமர்த்யம். அகடிதகடநாஸாமர்த்யம் என்னவுமாம். ஜகதுபாதாநா ஶக்தி என்னவுமாம். (தேஜ:) பராபிபவநஸாமர்த்யம். "தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்" இத்யாதி.

---

**ஐஶ்வர்யம் ஸாதாரணம் ।**

---

தாரண ஸாமர்த்யம். (ஐஶ்வர்ய) பிராட்டி தொடங்கி எல்லாச் சேதநாசேதநப் பொருள்களையும் நியமிக்கும் ஸாமர்த்யம். (வீர்ய) அந்த எல்லாப் பொருள்களையும் தரித்து நியமிப்பதைச் செய்யும்போது, புருவம் கூட வேர்க்காதபடி விளையாட்டாகச் செய்வது வீர்யமாகும். அன்றிக்கே, எல்லாவற்றையும் படைத்து மாறுபாடு அடையச்செய்யும்போது தான் மாறுபாடு அடையாமலிருக்கை வீர்யம் என்றும் கொள்ளலாம். (ஶக்தி) செயல்களைச் செய்யமுற்படும் சேதநர்களுக்கு சக்தியைக் கொடுத்து, அவர்களைச் செயல்களைச் செய்யும்படி செய்யும் திறமை. அன்றிக்கே, பிறரால் இயலாத காரியங்களையும் செய்யும் திறமை (அகடிதகடநா ஸாமர்த்யம்) என்றும் கொள்ளலாம். உலகிற்கு உபாதாந காரணமாயிருக்கும் சக்தி என்றும் கொள்ளலாம். (தேஜ:) பிறரை அடக்கும் திறமை.

ஸௌஶீல்ய-

இப்படி ஸர்வோத்க்ருஷ்டனானவனுக்கு, இனி பன்னி ரண்டு குணம் ஆஶ்ரிதவிஷயம். (ஸௌஶீல்ய) 43. (மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷஸ்வபாவத்

सौशील्यादिद्वादशं भक्तरक्षणासाधारणम् । सौशील्येत्यादि—शीलं हि नाम महतो मन्दैस्सह नीरन्ध्रेण संश्लेषस्वभावत्वम् । तस्य च

42\. ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நி:।
தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி॥ [கடோப 2-5]

[அந்தப் பரமபுருஷனிடத்தில் ஸூர்யனும் பிரகாசிக்கிறதில்லை; சந்த்ரநக்ஷத்திரங்களும் பிரகாசிக்கிறதில்லை; மின்னல்களும் பிரகாசிக்கிறதில்லை; இந்த அக்னியைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? பிரகாசிக்கும்படியான அவனைப் பின்பற்றியே எல்லாம் பிரகாசிக்கின்றன; அவனுடைய ஒளியினாலே இவையெல்லாம் ஒளிவிடுகின்றன.] என்கிறபடியே ஒளியுடையவை அனைத்தையும் ஒளிவிடச் செய்பவனாகையாலே இவனுடைய தேஜஸ் நிகரற்றது.

இப்படி அனைவரிலும் மேம்பட்டவனான எம்பெருமானுக்கு இனிவரும் பன்னிரண்டு குணங்கள் அடியார்களைக் காப்பதற்காக ஏற்பட்டவை. (ஸௌஶீல்ய)

43\. மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷ
ஸ்வபாவத்வம் ஶீலம்

[ஶீலமென்பது, பெரியவன் தாழ்ந்தவர்களோடு நெருங்கிப் பழகும் தன்மை.] என்பது 'ஶீலம்' என்னும் பதத்தின் பொருள். ஸுஶீலனின் தன்மை ஸௌஶீல்யம், தன்னு

வாத்ஸல்ய —

---

வம் ஶீலம்). அந்த மஹத்த்வம் தம் திருவுள்ளத்திலும் இன்றிக்கேயொழிகை ஸௌஶீல்யம். 44. (ஆத்மாநம் மாநுஷம் மந்யே) என்னுமாபோலே. (வாத்ஸல்ய) தன் ப்ரேமத்தாலே

---

प्रयोजनान्तरौपयिकत्वाभावात् सौशील्यम्। यद्वा ईश्वरत्वबुद्ध्या यथा आश्रितानां साध्वसं न स्यात्, यथा च स्वयमपि न स्वस्य परत्व-

---

டைய அந்தப் பெருமை தன் நெஞ்சிலும் படாதிருக்கை ஸௌஶீல்யமாகும். ஸுதர்சன பட்டர் இந்த ஶீலகுணம் ஒரு பயனைக் கருத்தில் கொண்டதாயிராமை ஸௌஶீல்யம்' என்றும், 'தன்னை ஈஶ்வரன் என்று நினைத்து அடியார்கள் பயப்படாமலிருக்கும் படியும், தான் ஈஶ்வரன் என்பது தன நெஞ்சில் படாமலிருக்கும் படியும் இருக்கை ஸௌஶீல்யம்' என்றும் பொருள் கொண்டார்.

44. அப்₃ரவீத் த்ரித₃ஶஶ்ரேஷ்ட்டா₂ந் ராமோ த₄ர்மப்₄ருதாம் வர:|
ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் த₃ஶரத₂த்மஜம்||
[ரா-யு 120-11]

['நான் என்னை மனுஷ்யனாகவும், த₃ஶரத₂ன் பிள்ளை ராமனாகவும் நினைக்கிறேன்'' என்று தர்மவான்களில் மேலான ராமன் தே₃வஶ்ரேஷ்ட்டர்களைக் குறித்துச் சொன்னான்.] என்று அவதாரங்களில் எம்பெருமான் இந்த ஶீலகு₃ணத்தை வெளிப்படுத்துகிறானன்றோ. (வாத்ஸல்ய) தன்னுடைய அன்பினாலே அடியார்களிடம் உள்ள குற்றங்களையும் குணமாகக் கொள்ளுகை. "வத்ஸம் லாதி இதி வத்ஸலா தஸ்யா: பா₄வ: வாத்ஸல்யம்'' என்னும் வ்யுத்பத்தியின்படி வத்ஸத்தின் (அன்றீன்ற கன்றின்) அழுக்கையே போ₄க்₃யமாகக் கொள்ளும் பசுவின் கு₃ணம் இது. இதையே அருளாளப்பெருமான் எம்பெருமானார் ''அற்றமுரைக்கில் அடைந்தவர்பால் அப்புயை

ஆஶ்ரிதக்ருதமான தோ₃ஷமும் கு₃ணமாகத் தோற்றுகை. **45.** (கோ₃பாலத்வம் ஜு₃கு₃ப்ஸிதம்). (மார்த்₃வ) ஆஶ்ரிதவிஶ்லே

---

बुद्धया विलक्षणः स्यात्, तथाशीलत्वम् सौशील्यम्। वात्सल्यं दोषेऽपि गुणबुद्धिः। यथा सद्यःप्रसूताया धेनोर्वत्से। इदञ्च क्षमाकार्यरूपम्। अत एव हि पृथगनुक्तिः क्षमायाः। आश्रित

---

கோன் குற்றமுணர்ந்து இகழும் கொள்கையனோ?—எற்றே! தன் கன்றின் உடம்பின் வழுவன்றோ காதலிப்பது அன்று அதனை ஈன்று உகந்த ஆ." [ஞானசாரம் 25] என்று ஞான சாரத்தில் அருளிச்செய்தார். "குன்றனைய குற்றம் செயினும் குணம் கொள்ளும்" [முதல் திருவ 41], "செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே!" [திருச்சந்த 111] என்று ஆழ்வார்களும் இந்த மஹாகு₃ணம் எம்பெருமானுக்கு உண்டு என்று காட்டினார்கள். குற்றங்கள் எம்பெருமானுக்கு போ₄க்₃யமானால் அடியார்கள் குற்றங்களையே செய்யவேண்டி வருமே? எனில்—இவன் எத்தகைய அடியார்கள் விஷயத்தில் இந்த மஹாகு₃ணத்தைக் காட்டுவான் என்பது எவர்க்கும் தெரியாதாகையாலே, அடியார்கள் குற்றங்களைச் செய்ய வேண்டி வராது. பெரியவாச்சான் பிள்ளையும் ஶ்ருதப்ரகாசி காசார்யரும் இப்படியே பொருள்கொண்டார்கள். 'இந்த குணம் "க்ஷமா" எனப்படும் பொறுமையின் எல்லைநிலமாகையாலே அந்த கு₃ணத்தைத் தனியாக எடுக்கவில்லை' என்றும் ஸுத₃ர்சன பட்டர் அருளினார். "தன்னால் ரக்ஷிக்கப்பட வேண்டியவர்களின் தோஷங்களைப் போக்கடிப்பதற்கு உறுப்பான அன்பே வாத்ஸல்யம்" என்று ஸ்ரீதே₃சிகன் லக்ஷணமுரைத்தார். 'குற்றங்களைக் குணமாகக் காண்பது வாத்ஸல்யம்' என்பது அதிவாத₃ம் (மிகைமொழி) என்றும் கூறினார்.

**45. கோ₃பாலத்வம் ஜு₃கு₃ப்ஸிதம்**

[வெறுக்கத்தக்கதான இடைச்சாதியை ப₄க₃வான் மேற்கொண்டான்.] என்கிறபடியே, கிருஷ்ணாவதாரத்தில் ஆயர்களுடைய குற்றங்களையே குணமாகக் கொண்டு அருள்புரிவதன் மூலம்

**மார்த்த$_3$வ—ஆர்ஜவ—**

---

ஷம் பொறுக்கமாட்டாத திருவுள்ளத்தில் மென்மை. 46. (அநித்$_3$ரஸ் ஸததம் ராம:). (ஆர்ஜவ) ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தில் தன்னுடைய மநோவாக்காயங்கள் ஏகரூபமாயிருக்கை. அதாவது,—அவர்களுக்குத் தன்னை நியமித்துக் கொடுக்கை. (ஸௌஹார்த்த$_3$) ஆஶ்ரிதர்க்கு ஸர்வமங்க$_3$ளாந்வேஷணபர

---

**विरहासहत्वं मार्दवम् । तेऽस्थानभयशङ्कित्वं वा । मनोवाक्कायैक**

---

இந்த மஹாகு$_3$ணத்தைக் காட்டினான் எம்பெருமான். (மார்த்த$_3$வ) அடியார்களின் பிரிவைப் பொறுக்கமாட்டாத திருவுள்ளத்தில் மென்மை.

**46. அநித்$_3$ரஸ் ஸததம் ராம: ஸுப்தோऽபி ச நரோத்தம:|**
**ஸீதேதி மது$_4$ராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபு$_3$த்$_4$யதே||**
*[ரா-ஸு 36-44]*

[(ஸீதையைப் பிரிந்த) ராமன் எப்போதும் தூக்கமற்றவராகவே இருக்கிறார். நரஶ்ரேஷ்டரான அவர் தூங்கினாலும் 'ஸீதே' என்னும் அழகிய சொல்லை உச்சரித்துக்கொண்டே விழித்தெழுகிறார்.] என்று ஸீதையைப் பிரிந்தபோது இந்த மஹாகு$_3$ணத்தைப் பெருமாள் வெளிப்படுத்தினார். 'அடியார்கள் எம்பெருமான் விஷயத்தில் அஸ்தா$_2$நே ப$_4$யஶங்கைகொண்டு என் வருகிறதோ? என்று பயப்படுவது போலே, இவனும் அடியார்கள் விஷயத்தில் அப்படியிருக்கை மார்த்த$_3$வம்' என்றும் ஸுதர்சனப$_4$ட்டர் பொருள் கொண்டார். (ஆர்ஜவ) மனம் மெய் மொழி என்னும் முக்கரணங்களாலும் ஒருபடிப்பட்டிருக்கை ஆர்ஜவம் எனப்படும் நேர்மை. இதை எம்பெருமான் அடியார்களோடு கலக்கும்போதே காட்டுவான். அதாவது அவர்களுக்குத் தன்னை வசப்படுத்தி வைப்பான்.

ஸௌஹார்த்த₃—ஸாம்ய—

ணுகை. "ஶோப₄நாஶம்ஸீதி—ஸுஹ்ருத்". (ஸாம்ய) ஜாதி கு₃ணவ்ருத்தாதி₃களைப் பாராதே அவர்களுக்கு ஆஶ்ரயணீயத்

रूप्यं आर्जवम् । यथा—"ऋजुबुद्धितया सर्वानाख्यातुमुपचक्रमे' इति । सौहार्द-तेषां अभिमतश्रेयोभिध्यायित्वम् । स्वसत्तानपेक्षरक्षापरत्वं वा । साम्यं-जन्मवृत्तगुणवैषम्यमनपेक्ष्य सर्वेषां समाश्रयणीयत्वे, स्वीकृतानां तेषां संभावनाविशेषेषु, मनसा तद्विषयादरे च

"ருஜு பு₃த்₃தி₄தயா ஸர்வமாக்₂யாதும் உபசக்ரமே|
அந்ருதம் நஹி ராமஸ்ய கதா₃சித₃பி ஸம்மதம்||"

[ரா-ஆ 17-15]

[நேர்மையான எண்ணமுடைடவனுகையாலே ராமன் தன்னைப் பற்றிய எல்லா வரலாறுகளையும் சூர்ப்பணகையிடம் சொலலத் தொடங்கினுன். ராமனுக்குப் பொய் கூறுவது எப்பொழுதுமே இயைந்ததல்ல.] என்னும் ப்ரமாணத்தைக் காட்டி, அடியார்களல்லாதவர்கள் விஷயத்திலும் எம்பெருமான் இந்த நேர்மைக்குணத்தைக் காட்டுவது உண்டு என்று விளக்கினுர் ஸுதர்சனப₄ட்டர். (ஸௌஹார்த்த₃) அடியார்க்கு எல்லா நலன்களையும் தேடுபவனுயிருக்கை. "ஶோப₄நாஶம்ஸீதி-ஸுஹ்ருத்" [(பிறர்க்கு) நன்மைகளைத்தேடுபவன் ஸுஹ்ருத்] என்று சொல்லப்படுகிறதன்றே. 'தனக்குத் தீங்கு வருமாயினும் அடியார்களை ரக்ஷிப்பவனுய் இருக்கை ஸௌஹார்த்த₃ம்' என்றும் ஸுதர்சனப₄ட்டர் பொருள் கொண்டார். (ஸாம்ய) அடியார்கள் தன்னை ஆஶ்ரயிக்கும்போது அவர்களுடைய சாதி குணங்கள் ஒழுக்கம் முதலானவற்றில் ஏற்றத்தாழ்வுகளைப் பாராமல் அனைவருக்கும் ஒக்க ஆஶ்ரயிக்கத்தக்கவனுயிருக்கை.

47. கு₃ஹேந ஸஹிதோ ராமோ லக்ஷ்மணேந ச ஸீதயா
[ரா-பா₃ 2-30]

காருண்ய—

வத்தில் ஸமனாயிருக்கை. 47. (கு₃ஹேந ஸஹித:) 48. (ஶப₃ர்யா பூஜித:). (காருண்ய) 49. (ஸ்வார்த்த₂நிரபேக்ஷபரது₃:க்க₂ாஸஹிஷ்ணுத்வம்) 50. (ருஷேர் த₄ர்மாத்மநஸ் தஸ்ய

समत्वम्-तारतम्यधीरहितत्वम् । कारुण्यं स्वार्थनिरपेक्षा परदुःखासहिष्णुता । माधुर्यं हन्तुं प्रवृत्तावपि रसावहत्वम् । यथा "एह्येहि

[ராமபிரான் குஹனோடும், லக்ஷ்மணனோடும், சீதையோடும் கூடியவரானார்.] என்கிறபடியே இளையபெருமாளும், ஸீதாப் பிராட்டியும் ஆஶ்ரயித்ததோடொக்க. குஹன் தன்னை ஆஶ்ரயித்ததையும் நினைத்தாரன்றோ ஸ்ரீராமபிரான்.

48. ஶப₃ர்யா பூஜித: ஸம்யக் ராமோ த₃ஶரத₂ாத்மஜ:
[ரா-பா₃ 2-58]

[த₃ஶரத₂குமாரனான ராமபிரான் ஶப₃ரியாலே நன்கு பூஜிக்கப்பட்டான்.] என்று தான் சக்ரவர்த்தித் திருக்குமாரனாயிருந்தபோதிலும் ஒரு வேடுவிச்சியின் உபசாரத்தை மனமுவந்து ஏற்றுக்கொண்டானன்றோ. ஸுதர்சனபட்டர், "அடியார்கள் தன்னை ஆஶ்ரயிக்கும்போதும், ஏற்றுக்கொண்ட அவர்களுக்குப் பரிசளிக்கும் போதும், அவர்களுடைய பிறப்பு, ஒழுக்கம், குணங்கள் ஆகியவற்றின் ஏற்றத்தாழ்வைப் பாராமல் அனைவரிடமும் ஒக்க நடந்துகொள்ளுதல் ஸாம்யம்" என்று பொருள்கொண்டார். (காருண்ய)

49. ஸ்வார்த்த₂நிரபேக்ஷபரது₃:க்கா₂ஸஹிஷ்ணுத்வம்

[தனக்குப் ப₂லனை எதிர்பாராமல், பிறர் துன்பம் பொறாமலிருத்தல் த₃யையாகும்.] என்பது கருணையின் லக்ஷணம்.

50. தத₂ாவித₄ம் த்₃விஜம் த்₃ருஷ்ட்வா நிஷாதே₃ந நிபாதிதம்।
ருஷேர் த₄ர்மாத்மநஸ் தஸ்ய காருண்யம் ஸமபத்₃யத॥
[ரா-பா₃ 2-13]

மாதுர்ய—

---

காருண்யம்). (மாதுர்ய) ஹந்தும் ப்ரவ்ருத்தத்வேऽபி ரஸாவஹத்வம். 51. (ஏஹ்யேஹி புல்லாம்புஜபத்ரநேத்ர). 52.

---

फुल्लाम्बुजपत्रनेत्र" इति ।

---

[வேடனால் அடிபட்ட அப்பறவையைப் பார்த்தவுடன் தர்மாத்மாவான அந்த வால்மீகி மஹர்ஷிக்குக் காருண்யமுண்டாயிற்று.] என்று வால்மீகி மஹரிஷி அடிபட்ட பறவையைக் கண்டு தான் துன்புற்று நின்றதை, 'காருண்யம்' என்று வழங்கினாரன்றோ. பெரியவாச்சான்பிள்ளை ஸுதர்சனபட்டர் ஆகிய இருவரும் காருண்ய சப்தத்திற்கு இப்படியே பொருள் கொண்டார்கள். "தனக்கு ஒரு பயன் கருதாமல் பிறர் துன்பத்தைப் போக்குவதில் விருப்பம் காருண்யம். பிறர் துன்பம் கண்டு துன்புறுகை முதலானது காருண்ய லக்ஷணமாகாது. ஏனெனில் கருணையுள்ள இடங்களிலெல்லாம் இது இல்லாமையாலும் கருணையில்லாத இடங்களிலும் இது இருக்கையாலும். அனைவரையும் நியமிக்கும் ஸர்வேஶ்வரன் குற்றம் புரிந்தவர்களுக்குத் தண்டனை வழங்குகிறான் என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கையால் அதற்கு முரண்படாமல் கருணைக்கு லக்ஷணம் உரைக்க வேண்டும். உலகிலும் அப்படியே காணப்படுகிறது" என்பது தேசிகனுடைய விமர்சம். (மாதுர்ய) தன்னைக் கொல்ல வந்த காலத்திலும் இனியவனாயிருக்கை என்று பெரியவாச்சான் பிள்ளை ஸுதர்சன பட்டர் இருவரும் பொருள் கொண்டார்கள்.

51. ஏஹ்யேஹி புல்லாம்புஜ பத்ரநேத்ர
நமோऽஸ்து தே தேவவராப்ரமேய।
ப்ரஸஹ்ய மாம் பாதய லோகநாத
ரதோத்தமாத் பூதஶரண்ய ஸங்க்யே॥
[பாரத-பீஷ்மபர்வம் 59-98]

கா₃ம்பீ₄ர்ய—

---

(அஸூர்யமிவ ஸூர்யேண நிவாதமிவ வாயுநா| க்ருஷ்ணேந ஸமுபேதேந ஜஹ்ருஷே பா₄ரதம் புரம்||) 31. (ஸர்வரஸ:) (கா₃ம்பீ₄ர்ய) ஆஶ்ரிதர்க்குச் செய்ய நினைத்திருக்குமவை ஒருவராலும் பரிச்சே₂தி₃க்க அரிதாயிருக்கை. அதாவது,—தன் கொடையின் சீர்மையும், கொள்ளுகிறவன் சிறுமையும் பாராதிருக்கை. 53. (ய ஆத்மதா₃ ப₃லதா₃:)

---

[மலர்ந்த தாமரையிதழ்போன்ற திருக்கண்களையுடையவனே! வாராய்! வாராய்! ஸர்வபூதங்களுக்கும் ஶரண்யனே! யுத்₃த₄த்தில், என்னை இந்தச் சிறந்த ரத₂த்திலிருந்து ப₃லாத்கரித்து வீழ்த்துவாய். லோகநாதனே! தே₃வ ஶ்ரேஷ்ட₂னே! அளத்தற்கரியாய்! உனக்கு நமஸ்காரம்.] என்று பிதாமஹரான பீஷ்மர் தன்னைக் கொல்ல வந்த கண்ணனிடம் இனிமை கண்டாரன்றோ.

52. அஸூர்யமிவ ஸூர்யேண நிவாதமிவ வாயுநா |
க்ருஷ்ணேந ஸமுபேதேந ஜஹ்ருஷே பா₄ரதம் புரம்||

[ஸூர்யனற்றவிடத்தில் ஸூர்யன் உதித்தாற்போலவும், காற்றில்லா இடத்தில் காற்றடித்தாற்போலவும் க்ருஷ்ணன் வந்ததும் பா₄ரதராஜதா₄னி ஆநந்தித்தது.] என்று இவன் சென்றவிடத்திலுள்ள அனைவரும் இவனைக் கண்டதும் இன்புற்றார்களன்றோ. 31. "ஸர்வரஸ:" [சா₂ந் 3-14-2] என்று, "எல்லா இனிமைகளும் தன்னுட்கொண்டவன்" என்றன்றோ இவனைப்பற்றி உபநிஷத்தும் உத்கோஷித்தது. (கா₃ம்பீ₄ர்ய) அடியார்களுக்குச் செய்ய நினைத்திருக்கும் காரியங்கள் எவராலும் அளவிட்டு அறியமுடியாதபடியிருக்கை. அதாவது—தான் கொடுக்கும் பரிசின் சிறப்பையும் கொள்கின்றவருடைய தாழ்வையும் பாராதிருக்கை. "கா₃ம்பீ₄ர்ய" ஶப்₃த₃ம் திருவுள்ளத்தின் ஆழத்தைக் குறிக்கிறது.

ஔதா3ர்ய—

---

(ஔதா3ர்ய) ஆஶ்ரிதருடைய அபேக்ஷிதங்களைத் தானே இரந்து கொடுக்கை. 54. (ஸ ஸர்வாநர்த்தி2நோ த்3ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்3ய ச) 55. (உதா3ராஸ் ஸர்வ ஏவைதே).

---

गाम्भीर्यं आश्रितविषये "एतेनेदं चिकीर्षितम्" इति परिच्छेत्तुमशक्यत्वम्। दीयमानगौरवसंप्रदानलाघवानपेक्षत्वं वा। औदार्यं— "अन्यस्मै ददामि" इत्यभिमानविरहेण "पुत्रवत् ग्रासं भुङ्क्ते" इति

---

**53. ய ஆத்மதா3 ப3லதா3:** [யஜு-காட2 7-5-36]

[எந்தப் பரமபுருஷன் தன்னையும் கொடுத்துத் தன்னை அனுப4விக்கத் தக்க ப3லத்தையும் கொடுக்கிறனோ.] என்று தன்னையும் கொடுத்து, தன்னை அநுபவிப்பதற்கு ப3லத்தையும் கொடுப்பதாக வேதம் ஓதிற்றன்றோ. (ஔதா3ர்ய) அடியார்கள் விரும்பியவற்றை, அவற்றைப் பெற்றுக்கொள்ளும்படி தானே யாசித்துக்கொடுக்கை.

**54. அத2 மத்4யமகக்ஷ்யாயாம் ஸமாக3ச்ச2த் ஸுஹ்ருஜ்ஜனை:।**
**ஸ ஸர்வாநர்த்தி2நோ த்3ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்3யச॥**
[ரா-அ 16-27]

[அந்த ஸ்ரீராமன் யாசிப்பவர்களைக் கண்டு, (அவர்களை) எதிர்கொண்டு, ஆநந்த3ப்படுத்திப் பிறகு நடுக்கட்டில் நண்பர்களுடன் சேர்ந்தார்.] என்று கொடுக்கும்போதும் யாசகர்களை எதிர்கொண்டு உகப்பித்துக் கொடுக்கிறானன்றோ.

**55. உதா3ராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்**
[கீ3தை 7-18]

[இவர்கள் அனைவரும் உதா3ரமானவர்களே; ஜ்ஞாநியோ எனக்கே ஆத்மா (தா4ரகன்) என்று என் ஸித்3தா4ந்தம்.] என்று தன்னிடம் ஒன்றைப் பெறுபவர்களைத் தனக்கு வண்மைக் குணத்தைக் கொடுப்பவர்களாகவும், தனக்கே தா4ரகர்களாகவும் பாராட்டினானன்றோ.

**சாதுர்ய—**

---

(சாதுர்ய) ஆஶ்ரிததோ₃ஷங்களைப் பிராட்டியும் அறியாதபடி மறைத்துக்கொண்டிருக்கை. ஆஶ்ரிதருடைய அதிஶங்கையைப் போக்கி ரக்ஷிக்கை என்னவுமாம். 56. (பாத₃ாங்கு₃ஷ்டே₂ந சிக்ஷேப ஸம்பூர்ணம் த₃ஶயோஜநம்) (ஸ்தை₂ர்ய) ப்ரத்யூஹ

---

**बुद्धया दातृत्वम् । "इदमियद्दत्तं मया" इत्यस्मरणशीलत्वं वा । यद्वा सर्वं दत्त्वापि "ऋणं प्रवृद्धमिव मे" इत्यतृप्तत्वं औदार्यम् । चातुर्य- आश्रितार्थेषु अजडक्रियत्वम् । यथा सानुबन्धरावणवधेन विभीषणा-**

---

ஸோதர்சனபட்டர், (1) மற்றொருவனுக்குக் கொடுக்கிறோம் என்று நினையாமல், தன் பிள்ளையான இவன் தனக்கு உரியதைப் பெற்று அனுபவிக்கப் போகிறான் என்னும் நினைவோடு கொடுக்கை. (2) "இது இவ்வளவு என்னால் கொடுக்கப்பட்டது" என்று நினையாமல் கொடுக்கை. (3) அனைத்தையும் கொடுத்தாலும் திரௌபதி விஷயத்திற்போலே திருப்தியடையாமல் இருக்கை என்று **"ஔதா₃ர்ய"** ஶப்₃த₃த்திற்கு மூன்று வகையாகப் பொருள்கொண்டார். (சாதுர்ய) அடியார்களுடைய குற்றங்களைப் பிராட்டியும் அறியாதபடி மறைத்துக் கொண்டிருக்கும் திறமை.

**"தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்**
**என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர்**
**போலும்"** [பெரியாழ் திரு 4-9-2]

என்று பெரியாழ்வார் அருளிச்செய்தாரன்றோ. அடியார்கள் இவனுடைய வல்லமையில் ஐயமுற்றாலும் அதையும் போக்கி ரக்ஷிக்கும் திறமை என்றும் கொள்ளலாம்.

**56. உத்ஸ்மயித்வா மஹாபா₃ஹு: ப்ரேக்ஷ்ய சாஸ்தி₂ மஹாப₃ல:।**
**பாத₃ாங்கு₃ஷ்டே₂ந சிக்ஷேப ஸம்பூர்ணம் த₃ஶயோஜநம் ॥**
[ரா-பா 1-65]

ஸ்தைர்ய— தைர்ய—

ஸதைரபி ஆஶ்ரிதரக்ஷண ப்ரதிஜ்ஞாபங்கம் ந கரோதி. 57. (ந த்யஜேயம் கதஞ்சந). (தைர்ய) அதுக்கடியான நெஞ்சில் திண்ணிமை.

निषेधः; यद्वा आश्रितदोषगोपनं वा चातुर्यम्। यथा पित्रादेरिव। स्थैर्य--"न त्यजेयं कथञ्चन" इत्यभिसन्धिमत्त्वम्। भक्तरक्षणोपयोगिगुणा द्वादश॥

अथ तस्यैव रक्षणे विरोधिनिरसनौपाधिकं लिङ्गम्। धैर्य—स्वस्मिन् प्रतिपक्षागमे सति अविकृतत्त्वम्। यथा * "जटाचूडग्रन्थि

[பெருவலிமையுடையவரும் தடந்தோளருமான ராமபிரான் முறுவலித்துக் கொண்டு அந்த துந்துபியின் எலும்பைப் பார்த்து, பத்து யோஜனை தூரத்திற்கு அப்பால், அதைத் தம் கால் கட்டைவிரலாலே தள்ளினார்.] என்று ஸுக்ரீவனுடைய ஐயத்தையும் போக்கி ரக்ஷித்தானன்றே. "அடியார்கள் காரியங்களை ஆராய்ந்து செய்கை சாதுர்யம். இராவணனைப் பூண்டோடு ஒழித்து விபீஷணனுக்கு அபிஷேகம் செய்ததுபோல்" என்றும், "தாய் தந்தையர் பிள்ளையின் தோஷங்களை மறைப்பது போல் அடியார்களின் தோஷங்களை மறைப்பது சாதுர்யம்" என்றும் ஸுதர்சனபட்டர் இருவகையாகப் பொருள்கொண்டார். (ஸ்தைர்ய) நூற்றுக்கணக்கான இடையூறுகள் வந்தாலும், 'அடியார்களை ரக்ஷிப்பேன்' என்னும் பிரதிஜ்ஞையைக் கைவிடாமல் நிலையாக நிற்கை.

57. மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந ।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத்கர்ஹிதம்॥
[ரா-யு 18-3]

[நண்பனுடைய பாவத்தோடு நெருங்கின இவ்விபீஷணனை ஒரு பொழுதும் கைவிடமாட்டேன். அவனிடம் தோஷமிருந்தாலும் இருக்கட்டுமே. நல்லோர்களுக்கு இவனை ஸ்வீகரிப்பது நிந்திக்கத்தக்கதல்ல.] என்கிறபடியே ஸுக்ரீவன் முதலான பலர் ஆக்ஷேபித்த போதிலும், விபீஷணனை நிலையாக நின்று காப்பாற்றினானன்றே. (தைர்ய) இப்படி அடியார்களைக் காப்பதில் நிலையாயிருப்பதற்குக் காரணமான நெஞ்சில் உறுதியுடையவனாயிருக்கை.

ஶௌர்ய—பராக்ரம—

அநந்தரம் இரண்டு கு3ணம் ப்ரதிபக்ஷவிஷயம். (ஶௌர்ய) ஆஶ்ரிதவிரோதி4களை அழியச் செய்யவல்லனாயிருக்கை. (பராக்ரம) அளவற முடுகினாலும் வினைசெய்யவல்லனாயிருக்கை. அத2வா தை4ர்யாதி3த்ரயோ கு3ணா: ப்ரதிபக்ஷவிஷயா: (தை4ர்ய) மூலப3லே ஸந்நிஹிதேऽபி பூர்வகக்ஷணாத் ந விஶேஷ:. (ஶௌர்ய) அவ்வளவன்றிக்கே, அநுகூல இவ தத்3ப3லப்ரவேஶநம். (பராக்ரம) 58. (பரஹர்த்தா ச) 59. (சி2ந்நம்

दहयति" इति । स्वगृह इव परबले प्रवेशसामर्थ्यं शौर्यम् । प्रवेशे सति तन्निरासकौशलं पराक्रमः । यथा "छिन्नं भिन्नं" इत्यादि ।

அடியார்களைக் காக்கும்போதும் அவர்களுடைய விரோதிகளை நிரஸிப்பதற்கு உறுப்பான இரண்டு குணங்களைச் சொல்லுகிறார். இனி (ஶௌர்ய) அடியார்களின் விரோதிகளை அழியச்செய்ய வல்லவனாயிருக்கை. (பராக்ரம) எதிரிகள் மிகவும் போரிட்டாலும் அவர்களை அழிக்கவல்லவனாயிருக்கை. **'தை4ர்யம், ஶௌர்யம், பராக்ரமம்'** என்ற இந்த மூன்று குணங்களும் எதிரிகளை அழிப்பதற்கு உறுப்பானவை என்றும் கொள்ளலாம். (தை4ர்ய) மூலப3லஸேனை அருகில் வந்த பின்பும் முன்பிருந்த நிலையிலிருந்து மாறுபாடில்லாமல் இருக்கையாகிற தீரத்தன்மை. (ஶௌர்ய) அப்படி விகாரமில்லாமல் இருப்பதோடன்றியில் அநுகூலக் கூட்டத்திற்போலே, அந்த ஸேனையின் நடுவில் நுழையும் திறமையாகிற ஶூரத்தன்மை. (பராக்ரம) அப்படி நுழைந்த பின்பு அந்த ஸேனையை ஆக்ரமித்து அழிக்கும் திறமை பராக்ரமம்.

> **59. சி2ந்நம் பி4ந்நம் ஶரைர் த3க்3த4ம் ப்ரப4க்3நம் ஶஸ்த்ர பீடி3தம் ।**
> **ப3லம் ராமேண த3த்3ருஶுர் ந ராமம் ஶீக்4ரகாரிணம் ॥**
>
> [ரா-யு **94-22**]

[ராக்ஷஸஸேனையானது அம்புகளால் வெட்டப்பட்டும், பிளக்கப்பட்டும், எரிக்கப்பட்டும், நன்கு உடைக்கப்பட்டும், துன்புறுத்தப்பட்டும் கிடப்

**ஸத்யகாம—ஸத்யஸங்கல்ப—**

பி₄ந்நம் ஶரைர் த₃க்₃த₄ம்). (ஸத்யகாம) "காம்யந்த இதி காமா:"—காம்யம் என்றது காமிக்கப்படும் விஷயத்தை. ஸத்யா: காமா: யஸ்ய ஸ:—ஸத்யகாம:| கல்யாண கு₃ணங்களையும் விபூ₄திகளையும் சொல்லுகிறது. ஆஶ்ரிதர்க்கு அநுப₄வ்யமான கு₃ணவிபூ₄திகள் என்கை. (ஸத்யஸங்கல்ப) அமோக₄மான அபூர்வபோ₄க்₃யங்களை ஸ்ருஷ்டிக்க க்ஷமனாகை.

**अथ भोग्यगुणयुगम्। सत्यकामेति नित्यविभूतिमत्त्वम्। "काम्यः स्पृहा स्मरः कामः" इत्यनेकार्थः। सत्यसङ्कल्पेति लीलाविभूतिमत्त्वम्।**

பதை அனைவரும் கண்டனர். மிகவேக₃மாகக் காரியம் செய்யும் ராமனைக் கண்டாரில்லை.] என்று இராமபிரானின் பராக்ரமம் பேசப் பட்டதன்றோ.

58. **அபி₄யாதா ப்ரஹர்த்தா ச ஸேநாநயவிஶாரத₃:**

[ரா-அ 1-29[

[ராமபிரான் (எதிரியிருக்குமிடம்) சென்று சண்டை செய்பவர்; ஸைந்ய நீதிகளை நன்கறிந்தவர்.] என்கிறபடியே எதிரிகள் வரப்பார்த்திருக்காமல் அவர்கள் இருக்குமிடம் சென்று போரிடுகை பராக்ரமம் என்றும் கொள்ளலாம்.

அடுத்தபடியாக, இவன் பரமபோ₄க்₃யமானவன் என்பதைக் காட்டும் இரு கு₃ணங்களைச் சொல்லுகிறார். (ஸ்த்யகாம) **"காம்யந்த இதி காமா:"** (விரும்பப்படுபவை எவையோ அவையே காமங்கள்) என்னும் வ்யுத்பத்தியாலே, 'காம' ஶப்₃த₃ம் விரும்பப்படுபவற்றைக் குறிக்கிறது. காம்ய: ஸ்ப்ருஹா ஸ்மர: காம: [வைஜயந்தி த்₃வ்யக்ஷர 1-17] என்று வைஜயந்தியிலும் 'காம' ஶப்₃த₃ம் காம்யத்தையும் குறிக்குமென்று சொல்லப்பட்டதன்றோ. இங்கு விரும்பப்படும் கல்யாண குணங்களையும் விபூ₄திகளையும் சொல்லுகிறது. **ஸத்யா: காமா: யஸ்ய ஸ: ஸத்ய காம:** [அநுபவிக்கத்தக்க காமங்களையுடையவன் ஸத்யகாமன்] என்னும் வ்யுத்பத்தியாலே அடியார்களுக்கு அநு

**க்ருதித்வ க்ருதஜ்ஞதாதி3—**

---

ஆஸ்ரிதஸம்ரக்ஷண விஷயோ மநோரத: காம: | ஸோऽப்ரதிஹதோ ப4வதீதி ஸத்யகாம: || தத்3ரக்ஷணாய தே3வமநுஷ்யாத்3யவதாரஸங்கல்போ மநோரத2: | ஸோऽப்ரதிஹதோ ப4வதீதி ஸத்யஸங்கல்ப: || இக்கு3ணங்களிரண்டும் உக்த ஸ்ருஷ்டிக்குறுப்பாகையாலே மத்4யஸ்த2ஜக3த்3ரக்ஷணார்த்த2மாகவுமாம். (க்ருதித்வ) ஆஸ்ரிதர் அபேக்ஷிதம் பெற்றால்

---

स्वसङ्कल्पानुवर्त्युभयविभूतिमत्त्वं वा । अथ भक्तरक्षाविषयं उक्तद्वाद-शकादिविलक्षणगुणद्वयमाह—कृतीति । आश्रितकार्यपूरणेन कृतार्थत्वं कृतित्वम् । यद्वा कृतं क्रियाः तद्वत्त्वम् । आश्रितकर्तव्यस्य स्वयं कर्तृत्वम् ।

---

பவிக்கத்தக்க குணங்களையும் விபூ4திகளையும் உடையவன் என்று பொருள் படுகிறது. (ஸத்ய ஸங்கல்ப) பழுதாகாத அபூர்வமான பே4ாக்3யங்களை ஸ்ருஷ்டிக்க வல்லவனுயிருக்கை. வேறு வகையாகவும் பொருள்கொள்ளலாம். அடியார்களைக் காக்கும் விஷயத்தில் மநோரத2மாகிற பாரிப்பு காமம் என்று கொண்டு தடையற்ற அத்தகைய பாரிப்பை உடையவன் ஸத்யகாமன் என்றும் கொள்ளலாம். அடியார்களைக் காப்பதற்காக தேவர் மனிதர் முதலான பிறவிகளில் அவதரிப்பதற்குச் செய்யும் ஸங்கல்பம் தடையற்றதாயிருக்கப் பெற்றவன் ஸத்யஸங்கல்பன். **'ஸத்யகாமன்'** என்று நித்ய விபூ4தியையுடையவனுய் இருக்கையையும், **'ஸத்யஸங்கல்பன்'** என்று லீலாவிபூ4தியையுடையவனுயிருக்கையையும் குறிக்கிறது என்று ஸுதர்சனப4ட்டர் பொருள் கொண்டார். தடையற்ற விருப்பமுடையவனுயிருக்கையாகிற ஸத்யகாமத்வமும், தடையற்ற ஸங்கல்பத்தை உடையனுயிருக்கையாகிற ஸத்யஸங்கல்பத்வமும் பொதுவாக உலகனைத்தையும் காப்பதற்கு உறுப்பாகையாலே இவ்விரு குணங்களும் பொதுவானவை என்றும் கொள்ளலாம். (க்ருதித்வ) அடியார்கள் விருப்பத்தை நிறைவேற்றினுல் அந்த லாப4ம் தன்னுடையதாயிருக்கை.

அந்த லாப₄ம் தன்னதாயிருக்கை. 60. (அபி₄ஷிச்ய ச லங்கா யாம்). இவர்கள் கர்த்தவ்யங்களையடையத் தானே ஏறிட்டுக் கொண்டிருக்கை என்னவுமாம். ஆதி₃கர்மணி க்தி்நந்த:. (க்ருதஜ்ஞதா) ஒருகால் ஶரணமென்னும் உக்திமாத்ரத்தாலே, பின்பு செய்யும் குற்றங்கள் பாராதே அத்தையே நினைத்திருக்கை. ஆஶ்ரிதர்க்கு எல்லாம் செய்தாலும் அவற்றை மறந்து அவர்கள் செய்த ஸுக்ருதலவத்தையே நினைத்திருக்கை

---

यथा ※ "अहं स्मरामि" इति । कृतमेव जानाति न तु करिष्यमाणाश- मकृतमिति कृतज्ञः । यद्वा स्वल्पमप्याश्रितैर्यत्साधु कृतं तदेव जानाति आश्रितकृतं दोषं स्वकृतं श्रेयश्च न स्मरतीति कृतज्ञः । एकैकगुणेष्वने-

---

60\. அபி₄ஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்₃ரம் விபீ₄ஷணம் ।
க்ருதக்ருத்யஸ்தத₃ா ராமோ விஜ்வர: ப்ரமுமோத₃ ஹ ॥
[ரா-பா₃ா 1-85]

[லங்கையில் ராக்ஷஸ ராஜாவாக விபீ₄ஷணனை அபி₄ஷேகம் செய்து தன் காரியத்தைச் செய்துமுடித்தவனான ராமன், அப்போதே கவலை நீங்கப்பெற்று உகந்தான்.] என்று விபீ₄ஷணன் காரியத்தைத் தன் காரியமாக எண்ணினானன்றோ. அடியார்கள் செய்யவேண்டிய காரியங்கள் அனைத்தையும் தான் செய்யவேண்டியவையாக ஏறிட்டுக் கொண்டிருக்கை என்றும் பொருள்கொள்ளலாம். **'க்ருத'** ஶப்₃த₃ம் க்ரியையைக் குறிப்பது. அதை உடையவன் **'க்ருதீ'** என்றபடி. வராஹ சரம ஶ்லோகத்திலுள்ள **"அஹம் ஸ்மராமி"** [(அவன் நினைக்க முடியாதபோது) நான் அவனை நினைக்கிறேன்] என்றதை ஸுதர்சனபட்டர் இதற்கு ப்ரமாணமாகக் காட்டுகிறார். (க்ருதஜ்ஞதா) ஒரு தரம் "உன்னை உபாயமாகப் பற்றுகிறேன்" என்னும் சொல்லைச் சொன்னதாலே பின்பு செய்யும் குற்றங்களைக் காணாமல் அச்சொல்லையே நினைத்திருக்கை; அடியார்களுக்கு எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றினாலும், அவற்றை மறந்து அவர்கள் முதலில் செய்த ஒரு சிறு அனுகூலம் செயலையே நினைத்திருக்கை என்றும் கொள்ளலாம்.

என்னவுமாம். *61.* (ஹ்ருத3யாந்நாபஸர்ப்பதி) ஆஶ்ரிதவிஷயத்தில் தான் செய்த அபகாரத்தையே நினைத்திருக்கை என்னவுமாம். 62. (ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா). "ஆதி3" ஶப்3த3த்தாலே அநுக்த கு3ணங்களை நினைக்கிறது.

---

कारुण्यौदार्याभिप्रायो गुणशब्दः । स एव ओघः प्रवाहः, तस्य महार्णवः । न गुणायत्तं महत्त्वं, गुणास्तु स्वव्याख्यानाय भगवत्स्वरूपगताः, अन्यथा न स्थातुं शक्नुवन्तीति भावः ॥

---

**61. கோ3விந்தே3தி யதா3க்ரந்த3த் க்ருஷ்ணா மாம் தூ3ரவாஸிநம் ।**
**ருணம் ப்ரவ்ருத்3த4மிவ மே ஹ்ருத3யாந்நாபஸர்ப்பதி ॥**

[பா4ர-உத்3யோ 47-22]

[த்3ரௌபதி3யானவள் வெகுதூரத்திலிருந்த என்னைக் குறித்து 'கோ3விந்தா3!' என்று கூக்குரலிட்டது (வட்டியினால்) மிக வளர்ந்த கடனைப்போல் என்னுடைய ஹ்ருத3யத்திலிருந்து அகலுகிறதில்லை.] என்று திரௌபதி விஷயத்தில் அவளுடைய விருப்பங்களையெல்லாம் நிறைவேற்ற முற்பட்ட பின்பும் அவள் முதலில் சொன்ன கோவிந்த நாமத்தையே நினைத்திருந்தானன்றோ. அடியார்கள் விஷயத்தில் தான் செய்த அபகாரத்தையே நினைத்திருக்கை என்றும் பொருள் கொள்ளலாம்.

**62. தம் து மே ப்4ராதரம் த்3ரஷ்டும் ப4ரதம் த்வரதே மந: ।**
**மாம் நிவர்த்தயிதும் யோऽஸௌ சித்ரகூடமுபாக3த: ॥**
**ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா ॥**

[ரா-யு 124-19]

[என்னைத் திருப்பியழைத்துச்செல்ல எவனொருவன் சித்திரகூடத்திற்கு வந்தானோ, அந்த என்னுடைய தம்பியாகிய ப4ரதனைப் பார்க்க என் மனம் விரைகிறது. தலையாலே யாசித்த அவனுடைய வார்த்தை என்னால் செய்யப்படவில்லையே.] என்று பரதன் விஷயத்தில் அவன் விரும்பியதை நிறைவேற்றாத அபகாரத்தையே நினைத்திருந்தானன்றோ.

**அஸங்க்₂யேய—கல்யாண—கு₃ணக₃ணௌக₄—**

(அஸங்க்₂யேய) இக்கு₃ணங்கள் எண்ணிறந்திருக்கை. 'அநவதி₄காதிஶய' என்று நிஸ்ஸீமத்வம்; இத்தால் நிஸ்ஸங்க்₂யேயத்வம். (கல்யாண) உள்ளதெல்லாம் நன்றாயிருக்கை. (கு₃ணக₃ணௌக₄) அவைதான் திரள் திரளாயிருக்கை. க்ரோ

"அடியார்கள் விஷயத்தில் அவர்கள் விரும்பியதைத்தான் நிறைவேற்றியதை அறிவானேயொழிய அவர்களுக்கு மேலும் செய்யவிருப்பதை அளவிட்டு அறியாதவன்" என்றும் ஸுதர்சனபட்டர் பொருளுரைத்தார். "உன்னடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ" [பெரிய திருவ 53] என்ற பாசுரம் இங்கு அனுஸந்திக்கத்தக்கது. "அப்படியல்லாமல், அடியார்களால் செய்யப்பட்ட சிறு நன்மைகளையே அறிவான். அவர்கள் செய்த குற்றங்களையும், தான் அவர்களுக்குச் செய்த நன்மைகளையும் அறியமாட்டான் என்றும் பொருள் கொள்ளலாம்" என்றார் அவர். "**ஆதி₃**" ஶப்₃த₃த்தாலே இது போன்ற மற்ற கு₃ணங்களை நினைக்கிறது. (அஸங்க்₂யேய) இக்குணங்கள் எண்ணிக்கையற்றிருப்பவை என்று காட்டுகிறது. "**அநவதி₄காதிஶய**" என்னும் முதலில் வந்த பதத்தால் ஒவ்வொரு கு₃ணமும் எல்லையற்றது என்று காட்டப்பட்டது. இப்பதம் அப்படிப்பட்ட குணங்கள் எண்ண முடியாதவை என்று காட்டுகிறது. (கல்யாண) உள்ள குணங்களெல்லாம் மங்களமானவையாயிருக்கை. ஆனந்தமாயிருந்த போதிலும் பிறர் துன்பம் கண்டு ஆனந்திப்பது அமங்களமாகையாலே இவனிடம் இல்லை. து₃:க்க₂மாயிருந்த போதிலும், பிறர் துன்புறும்போது தானும் துன்பமடைகை மங்க₃ள கு₃ணமாகையால் இவனிடம் உண்டு. "**வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்₄ருஶம் ப₄வதி து₃:க்கி₂த:** ।" [ரா. அ. 2-40] [(ராமன்) மனுஷ்யர்களுடைய **து₃:க்க₂ங்களில்** (அவர்களைக் காட்டிலும்) மிகுதியாகத் துன்புறு**கிறான்.**] என்று வால்மீகி சொன்னானன்றோ. (கு₃ணக₃ணௌக₄) அந்த கு₃ணங்கள் ஒன்றிரண்டு அல்ல. திரள்திரளாயிருப்பவை என்று கருத்து. "**கு₃ண** ஶப்₃த₃ம் ஒவ்வொரு கு₃ணத்திலும் பல கு₃ணங்கள் அடங்கியிருப்பதைக் காட்டு

**மஹார்ணவ!**

---

*த₄ாதி₃களும் ஆஶ்ரிதர்க்கு ப்ராப்யமாயிருக்கை. (மஹார்ணவ) அஸ்மந்மநோகோ₃சரா: கேசிதே₃வ உக்தா: ; 63. (வர்ஷா யுதைர் யஸ்ய கு₃ணா ந ஶக்யா:) 64. (சதுர்முக₂ாயு:).*

---

கிறது'' என்றார் ஸுத₃ர்சனப₄ட்டர். ''ஓக₄'' ஶப்₃த₃ம் ப்ரவாஹம் போலே கு₃ணங்கள் வெள்ளமிடுவதைக் குறிக்கிறது. இவனுடைய கோபம் முதலான குணங்களும் அடியார்களின் விரோதி₄களின் விஷயத்திலேயே செயல்படுகையால், அடியார்களுக்கு ப்ராப்யமாய் இருந்துகொண்டு கல்யாண கு₃ணங்கள் ஆகின்றன. (மஹார்ணவ) (இக்குணங்களுக்குப்) பெருங்கடலாயிருப்பவரே! எனது மனத்திற்குப் பட்ட சில குணங்களே சொல்லப்பட்டன. முழுவதும் சொல்லி முடியாது என்று கருத்து.

**63. வர்ஷாயுதைர் யஸ்ய கு₃ணா ந ஶக்யா:**
**வக்தும் ஸமேதைரபி ஸர்வலோகை: ।**
**மஹாத்மந: ஶங்க₂சக்ராஸிபாணேர்**
**விஷ்ணோர் ஜிஷ்ணோர் வஸுதே₃வாத்மஜஸ்ய ॥**

[பா₄ர-பீ₄ஷ்மபர்வம் கர்ணவாக்யம்]

[மஹாபுருஷனும், ஶங்க₂சக்ரங்கள் வாள் ஆகியவற்றைக் கையில் ஏந்தியிருப்பவனும், ஸர்வவ்யாபியும், ஜயஶீலனும், வஸுதே₃வ புத்ரனுமான எவனுடைய குணங்கள், பதினாயிரம் வருஷங்களிலும் எல்லா உலகங்களும் கூடியும் பேசமுடியாதவையோ.]

**64. சதுர்முக₂ாயுர் யதி₃ கோடிவக்த்ரோ**
**ப₄வேந்நர: க்வாபி விஶுத்₃த₄ சேதா: ।**
**ஸ தே கு₃ணாநாமயுதைகதே₃ஶம்**
**வதே₃ந்ந வா தே₃வவர ப்ரஸீத₃ ॥** [வராஹ 73-94]

[பல ப்₃ரஹ்மாக்களின் ஆயுளை உடையவனாய், கோடிக்கணக்கான முக₂ங்களை உடையவனாய், மிகவும் ஶுத்₃த₄மான மனத்தையுடையவ

ஸ்வோசித,—

(ஸ்வோசிதேதி) 'ஏவம்வித₄ஞனவனுக்கு ஶோப₄ாவஹமான திவ்யாப₄ரணங்களைச் சொல்லுகிறது. ஜ்ஞாநாதி₃கள் ஆத்ம ஸ்வரூபத்துக்கு அலங்காரமானவோபாதி விக்₃ரஹத்துக்கு ஆப₄ரணங்கள் அலங்காரமாகையாலே, அவற்றைச் சொல்லுகிறார். (ஸ்வோசித) அவயவங்கள் தான் ஒருபடி பூத்தாப்போலே

ஞன ஒரு மனிதன் இருப்பானேயாகில், அவன் உன்னுடைய கு₃ணங்களில் பதினாயிரத்தில் ஒரு பங்கைச் சொல்லுவானோ மாட்டானோ அறியோம். தே₃வர்களில் சிறந்தவனே! அருள் புரிய வேண்டும்.] என்னும் ப்ரமாணங்கள் இங்கு அநுஸந்திக்கத்தக்கவை.

அடுத்தபடியாக திவ்யமங்கள விக்ரஹத்தின் குணங்களான ஸௌந்தர்யம் முதலானவையே பூத்ததுபோலே சாத்திக் கொண்டிருக்கும் கிரீடம் மகுடம் முதலான தி₃வ்யாப₄ரணங்களை அனுஸந்தித்தருளுகிறார். (ஸ்வோசித...) எம்பெருமானுக்கு அழகை அளிக்கும் தி₃வ்யாப₄ரணங்களை இந்த வாக்யத்தாலே அருளிச்செய்கிறார். இந்தச் சூர்ணையின் முதல் வாக்யத்தாலே தி₃வ்யாத்ம ஸ்வரூபத்தைச் சொன்னார். இரண்டாம் வாக்யத்தாலே திருமேனியைச் சொன்னார். மூன்றும் வாக்யத்தாலே ஸ்வரூபத்துக்கு அலங்காரமாய் இருக்கும் ஜ்ஞானம் முதலான குணங்களைச் சொன்னார். இந்த நாலாம் வாக்யத்தாலே ஜ்ஞானம் முதலானவை ஆத்ம ஸ்வரூபத்துக்கு அலங்காரமாயிருப்பது போலே திருமேனிக்கு அலங்காரமாயிருக்கும் ஆபரணங்களைக் கூறுகிறார். (ஸ்வோசித) தனக்குத்தகுந்த, எம்பெருமானுடைய திருமேனியை ஒரு கற்பக வருக்ஷமாக உருவகப்படுத்தினால், அவனுடைய அவயவங்கள் அக்கற்பக மரத்தின் கிளைகள் போல் அமைந்துள்ளன. அந்த அவயவங்களில் அணிந்திருக்கும் தி₃வ்யாப₄ரணங்கள் அந்தக் கிளைகள் பூத்ததுபோலே பொருத்தமா

* (பா) விக்₃ரஹ கு₃ணமான ஸௌந்த₃ர்யாதி₃களோபாதி பூத்தாப்போலே சாத்தின கிரீடமகுடாதி₃ தி₃வ்யாப₄ரணங்களை அநுஸந்தி₄த்தருளுகிறார்.

**விவித$_4$—விசித்ராநந்தாஶ்சர்ய—நித்ய—**

தகுந்திருக்கை. (விவித$_4$) அவைதான் நாநாவாயிருக்கை. அதாவது—கிரீடாதி$_3$ பே$_4$த$_3$த்தாலே பலவகைப்பட்டிருக்கை. (விசித்ர) அங்கு$_3$லீயகம் என்றால், இடைச்சரி, கடைச்சரி என்னுமாபோலே ஒரோர் வகைகளிலே நாநாவித$_4$மாயிருக்கை. (விவித$_4$) முத்தின்படி மாணிக்கப்படி என்கிற விவித$_4$ பே$_4$த$_3$த்தைச் சொல்லுகிறது; (விசித்ர) கிரீடாதி$_3$நூபுராந்தமான வைசித்ர்யத்தைச் சொல்லுகிறதென்னவுமாம். (அநந்தாஶ்சர்ய) எல்லையிறந்த ஆஶ்சர்யத்தை உடைத்தாயிருக்கை. ஒரோ ஆப$_4$ரணச்சேர்த்தியை அநுப$_4$வித்து முடிக்கவொண்ணாதிருக்கை. நிரவத்$_3$யங்களாயிருக்குமவற்றுக்கும் காத்$_3$ராசித்க

---

**अथ भूषणानि । कटकमकुटादिजातिभेदो वैविध्यम् । एकैकावान्तरभेदपरो विचित्रशब्दः । अनन्ताश्चर्ये — निरतिशयाश्चर्यम् ।**

---

யிருக்கின்றன் என்று கருத்து. (விவித$_4$) அவை பலவாய் இருக்கின்றன. அதாவது கிரீடம் மகுடம் கடகம் போன்ற பல விதமான ஜாதியைச் சேர்ந்தவையாய் இருக்கின்றன. (விசித்ர) அதில் ஒவ்வொரு ஜாதியும் பலவகைப்பட்டவையாய் இருக்கின்றன. விரலில் இடும் அங்கு$_3$லீயகமாகிற மோதிரங்களை எடுத்துக் கொண்டால் அவற்றில் இடைச்சரி, கடைச்சரி என்றாப்போலே பலவகையாய் இருக்கின்றன என்று கருத்து. இப்படியல்லாமல் "**விவித$_4$**" ஶப்$_3$த$_3$ம் முத்தால் செய்த ஆபரணங்கள், மாணிக்கத்தால் செய்த ஆபரணங்கள் என்று பலவகைப்பட்டிருப்பதையும், "**விசித்ர**" ஶப்$_3$த$_3$ம் கிரீடமாகிற தலையலங்காரம் தொடங்கி நூபுரமாகிற திருவடியலங்காரம் வரையில் பலஜாதியைச் சேர்ந்தவையாய் இருப்பதையும் குறிப்பதாகவும் கொள்ளலாம். (அநந்த-ஆஶ்சர்ய) ஒவ்வொரு ஆபரணமும் எல்லையற்ற ஆஶ்சர்யத்தையுடைத்தாய் இருப்பதைச் சொல்லுகிறது. "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?" [திருவாய் 3-1-1] என்பதுபோலே ஒவ்வொரு ஆபரணமும் திருமேனியோடு சேர்ந்திருக்கும் அழகை அநுபவித்து முடிக்கவொண்ணாதிருக்கை. (நித்ய நிரவத்$_3$ய) என்றுமே குற்றமற்

நிரவத்₃ய—

மான அவத்₃யங்களுண்டாயிருக்கும். அங்ஙனன்றிக்கே நித்ய நிரவத்₃யங்களாயிருக்கை. (நித்ய) உத்பத்தி விநாஶரஹித மாயிருக்கை. (நிரவத்₃ய) 65. (ஸ்ரக்₃வஸ்த்ராப₄ரணைர் யுக்தம்) என்கிறபடியே தி₃வ்யாப₄ரணாழ்வார்கள் சேதநராகை யாலே தந்தாமுடைய ஶோபை₄ ஸ்வார்த்த₂மன்றிக்கேயிருக்கை. சேதநராயிருப்பார்க்கு ஸ்வார்த்த₂ம் என்றிருக்கை.

उत्तरोत्तरं निरवद्यत्वमनुसन्धेयम् । विग्रहचिन्तायामपि पूर्वभाविनी हि

றிருக்கையைச் சொல்லுகிறது. குற்றமற்றிருக்கும் ஆபரணங்களும் சில சமயங்களில் அழுக்குச் சேர்ந்து குற்றமுடையதாவதைக் காண கிறோம். அப்படியில்லாமல் எம்பெருமானுடைய திருவாபரணங்கள் என்றுமே குற்றமற்றவையாய் உள்ளன என்று கருத்து. இவ் விரு பதங்களையும் தனித்தனியாகக் கொண்டும் பொருளுரைக்க லாம்.—(நித்ய) ஒரு காலத்தில் உண்டாக்கப்பட்டு ஒரு காலத்தில் அழிந்து போவதாயிருக்கும் நிலை இவற்றுக்கு இல்லை என்று கருத்து. (நிரவத்₃ய)

65. ஸ்ரக்₃வஸ்த்ராப₄ரணைர் யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை:।
சிந்மயை: ஸ்வப்ரகாஶைஶ்ச அந்யோந்யருசிரஞ்ஜகை: ॥

[பௌஷ்கரஸம்ஹிதை]

[தனக்குத் தகுந்தவையும், ஒப்பற்றவையும், ஞானமயமாயிருப்பவை யும், ஸ்வயம் ப்ரகாஶமானவையும், ஒன்றுக்கொன்று (சேர்த்தியினலுண் டான) காந்தியினால் அழகாயிருப்பவையுமான மாலைகளோடும், வஸ்த் ரங்களோடும், ஆப₄ரணங்களோடும் கூடியிருப்பது பரப்ரஹ்மம்.] என்கிறபடியே, ஒவ்வொரு திவ்யாபரணமும் நித்யஸூரியான சேதன ரங்களாலே அவர்கள் தங்களுடைய அழகைத் 'தங்களுக்கு' என்று நினைக்காமல் எம்பெருமானுக்கு என்று நினைத்திருப்பார்கள் என்று கருத்து. அறிவுடைய சேதனராயிருப்பவர்களுக்கு, தங்கள் பெருமைகளைத் 'தங்களுக்கு' என்று நினைப்பது குற்றம்; அந்தக்குற்றம்

நிரதிஶய ஸுகந்த₄—நிரதிஶய ஸுக₂ஸ்பர்ஶ—
நிரதிஶயௌஜ்ஜ்வல்ய—

அவத்₃யமிறே. (நிரதிஶயஸுக₃ந்த₄) 31. (ஸர்வக₃ந்த₄:) என்கிற விஷயத்துக்கும் ஸ்ப்ருஹா விஷயமாயிருக்கை. அதாவது,—திருவாப₄ரணம் சாத்தினால் திருமாலை சாத்துகை பரிமளத்துக்கு உறுப்பன்றிக்கே அலங்காரத்துக்கு உறுப்பாம்படியிருக்கை. (நிரதிஶயஸுக₂ஸ்பர்ஶ) அல்லாத ஆப₄ரணங்கள் அழகுக்குறுப்பாகையாலே, போ₄க₃த்தில் வந்தால் கழற்ற வேண்டிவரும். இவையோவென்னில் பிராட்டிமாரோட்டைக் கலவியிலும் கழற்றவேண்டாதபடி ஸ்ரக்சந்த₃நாதிகளோபாதி அநுகூலமாயிருக்கும். (நிரதிஶயௌஜ்ஜ்வல்ய) விக்₃ரஹ காந்தியையும் அமுக்கும் ஔஜ்ஜ்வல்யத்தை உடைத்தாயிருக்கை.

दिव्याभरणचिन्ता । निरतिशयसुगन्धत्वादिकं — इतरभूषणवैलक्षण्यम् ।

அற்றிருப்பவர்கள் என்று கருத்து. (நிரதிஶய ஸுக₃ந்த₄) ஒவ்வொரு திருவாபரணமும ஒப்பற்ற மணமுடையதாய் இருக்கை.

31. ஸர்வக₃ந்தஸ் ஸர்வரஸ: [சா₂ந் 3-14-2]

[(பரமாத்மா) எல்லா க₃ந்த₄ங்களையுமுடையவன்; எல்லா ரஸங்களையுமுடையவன்.] என்கிறபடியே, எல்லா நறுமணங்களும் உடைய எம்பெருமானும் ஆசைப்படும்படி நறுமணமுடையதாயிருக்கை. அதாவது—திருவாபரணம் சாத்தினால் அதுவே நறுமணம் உடையதாயிருக்கையாலே, நறுமணத்திற்காகத் திருமாலை சாத்தவேண்டிய அவசியமில்லை. அலங்காரத்திற்கே திருமாலை சாத்துவது என்னும் நிலை. (நிரதிஶய ஸுக₂ஸ்பர்ஶ) ஒப்பற்ற இனிய ஸ்பர்ஶத்தையுடையவை. இவ்வுலகில் ப்ராக்ருதமான ஆப₄ரணங்கள் அழகுக்கு உறுப்பாகுமே யொழிய மென்மையுடன் இருக்கமாட்டாவாகையாலே மனைவியை அணைக்கும்போது அவற்றைக் கழற்றிவைக்க வேண்டிவரும். எம்பெருமானுடைய இந்த அப்ராக்ருதமான ஆபரணங்களோவெனில்—பிராட்டிமாரை அணைக்கும்போதும் கழற்ற வேண்டாதபடி மாலை சந்தனம் முதலானவற்றைப்போலே மிக இனிய ஸ்பர்ஶமுடையவையாய் இருக்கும் என்று கருத்து. (நிரதிஶயௌஜ்ஜ்வல்ய) ஒப்பற்ற

**கிரீட மகுட சூட₃ாவதம்ஸ மகரகுண்ட₃ல—
க்₃ரைவேயக—ஹார—**

(கிரீட மகுட) கிரீடமாகிறது—திருவபி₄ஷேகத்தின் சுற்று. மகுடமாகிறது—மேலில் கவிப்பு (சூட₃) *திருச்சுட்டி. (அவதம்ஸ) திருச்செவிமலர். (மகரகுண்ட₃ல) மகராகாரமான திருத்தோடுகள். (க்₃ரைவேயக) †திருக்கழுத்தில் சாத்தும் திருவட்டமணி முதலானவை. (ஹார) "பெரியவரை மார்பில்

"सर्वगन्धस्सर्वरसः" इत्यादिवत् । मकुटम्—किरीटाग्रावयवो नायकाकारः । यद्वा मकुटं शिरोभूषणमात्रम् । यथा "नाकुण्डली नामकुटी"

ஒளியுடையதாயிருக்கை. திருமேனியுடைய ஒளியையும் அமுக்கும் படியான மிகச்சிறந்த ஒளியையுடையதாக ஒவ்வொரு திருவாபரணமும் இருக்கும் என்று கருத்து. இதுவரையில் ஒவ்வொரு திருவாபரணத்திற்கும் உள்ள பெருமைகளைக் கூறினர். இனி அந்தத் திருவாபரணங்களில் முக்கியமானவற்றை எடுக்கிறார்—(கிரீட மகுட) இவையிரண்டும் தலையலங்காரங்கள். அதில் 'கிரீடம்' என்பது தலையைச் சுற்றியிருக்கும் கீழ்ப்பகுதி; 'மகுடம்' என்பது மேலே கவித்திருக்கும் பகுதி. (சூட₃) என்பது முன்புறம் நெற்றியில் தொங்கும் பதக்கமாகிற திருச்சுட்டி. (அவதம்ஸ) செவிக்கு மலர் போலே அலங்காரமாயிருக்கும் திருவாபரணம். (மகரகுண்ட₃ல) மகரம் எனப்படும் மீன்கள் போன்ற வடிவு படைத்த திருத்தோடுகள். "மகரம் சேர் குழை இருபாடு இலங்கியாட" [திருநெடு. 21] என்கிறார் திருமங்கைமன்னன். (க்₃ரைவேயக) "க்₃ரீவா" எனப்படும் கழுத்தில் சாத்தும் திருவாபரணங்களான திருவட்டமணி முதலானவை. பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானத்தின் பாட₂பேத₃த்தின்படி கழுத்திலுள்ள மூன்று ரேகைகளுக்கும் ஆபரணமாகவுள்ள முத்துத்திருக்கட்டுகளைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். (ஹார) "பெரியவரை மார்பில் பேராரம்

*(பா) திருச்சுட்டு. †(பா) ரேகா₂த்ரயங்களுக்கும் ஆப₄ரணமான முத்துத் திருக்கட்டு.

**கேயூர—கடக—ஸ்ரீவத்ஸ—கௌஸ்துப₄—**
**முக்தாதா₃ம—**

பேராரம் பூண்டு'' என்னுமாபோலே திருமார்பில் மடித்துச் சாத்தவேண்டும்படியான திருவாரம். (கேயூர) திருத்தோள் வளை. (கடக) முன் கையில் சாத்தும் திருவளைகள். (ஸ்ரீவத்ஸ) திருமறு. கீழுள்ள ஆப₄ரணங்கள் போலே ப்ருத₂க்ஸ்தி₂தி யோக்₃யமன்றிக்கே ஸர்வேஶ்வரத்வசிஹ்நமான ஆப₄ரணம். (கௌஸ்துப₄) ஸ்ரீகௌஸ்துப₄ம். ஒரு காலமும் பிரியாதபடி அபி₄மதமாய், ஸர்வேஶ்வரத்வசிஹ்நமாயிருக்கும் ரத்நம். (முக்தாதா₃ம) ஏகாவளி, த்ரிஸரம், பஞ்சஸரம் தொடக்கமான திருமுத்துவடங்கள்.

[रा यु-६-२०] इति । किरीटरूपं मकुटं किरीटमकुटम् । दिव्यशब्दः सर्वत्र अप्राकृतपरः ॥

பூண்டு'' [மூன் திருவ 55] என்று பேயாழ்வார் அருளியபடியே திருமார்பில் மடித்துச் சாத்தவேண்டும்படியான ஹாரம். "திருவார மார்பதன்றே அடியேனை ஆட்கொண்டதே'' [அமலனுதிபிரான் 5] என்று திருப்பாணுழ்வார் இதில் ஈடுபட்டார். (கேயூர) திருத்தோள்வளை. (கடக) முன்கையில் சாத்தும் திருவளைகள். (ஸ்ரீவத்ஸ) திருமறு:— "ஸ்ரீவத்ஸவக்ஷா:'' [ரா-யு 114 15] [ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவை மார்பில் உடையவன்) என்றாள் ஸ்ரீராமாயணத்தில் மண்டோதரி. "திருமறுமார்வ'' [திருமாலை-40] என்றார் தொண்டரடிப்பொடியாழ்வார். கீழே சொன்ன திருவாபரணங்கள் போலே திருமேனியைவிட்டுக் கழற்றிவைக்கக் கூடியதல்ல இது. திருமார்பில் "இவனே ஸர்வேஶ்வரன்'' என்று காட்டும் மச்சமாய் ஒரு திருவாபரணமாகவும் விளங்குவது. (கௌஸ்துப₄) ஸ்ரீகௌஸ்துப₄ம் என்னும் மணி. எக்காலத்திலும் மார்பைவிட்டுப் பிரியாதபடி எம்பெருமானுக்கு மிக இனியதாய், இவனே ஸர்வேஶ்வரன் என்று காட்டித்தரும் ரத்தினம். (முக்தாதா₃ம) ஒரேவடத்தைக் கொண்ட ஏகாவளி, மூன்று வடங்களைக் கொண்ட த்ரிஸரம், ஐந்து வடங்களைக்கொண்ட பஞ்சஸரம் முதலான மார்பில் சாத்தும் திருமுத்து வடங்கள். 'ஹாரம்' என்பது ரத்ன ஹாரத்தைக் குறிக்கிறதாகையாலே இங்கு புநருக்தியில்லை.

**உதர பந்தந பீதாம்பர காஞ்சீகுண—**

(உதர பந்தந) திருவுதரபந்தநம். ப்ரளயாபத்துக்களிலே ஜகத்தைத் திருவயிற்றிலே வைத்துப்போந்த ஆபத்ஸகத்வத்துக்குப் பட்டங்கட்டினாற்போலேயிருக்கை. (பீதாம்பர) ஸர்வேஶ்வரத்வ லக்ஷணமாய், திருவரை பூத்தாற்போலே ஸுஸங்கதமாய், பும்ஸ்த்வாவஹமாயிருந்துள்ள திருப்பீதாம்பரம். (காஞ்சீகுண) அந்தத் திருப்பீதாம்பரத்துக்கு ஶோபாவஹமாய், அந்தரங்கமாய் இருந்துள்ள அரைநூல்பட்டிகை. (நூபுர) பகவத்விஷயத்தில் இழிவார் எல்லாருக்கும் இழியும் துறையான திருவடிகளுக்கு ப்ரகாஶகமான திருச்சிலம்பு. "ஆதி" ஶப்தத்தாலே "புடையார் பொன் நூலினன்" என்கிறபடியே அநுக்தமான திருயஜ்ஞோபவீதம், கணையாழி

(உதர பந்தந) திருவயிற்றைச் சுற்றியுள்ள திருஉதரபந்தனம் என்னும் திருவாபரணம். 'திருவயிற்று உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்று உலாகின்றதே'' [அமலனாதிபிரான் 4] என்று திருப்பாணாழ்வாரும் இதை அநுபவித்தாரன்றோ. ப்ரளய காலத்தில் உலகம் முழுகும்போது உலகனைத்தையும் தன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்து அந்த ஆபத்திற்கு உதவும் நண்பனாயிருக்கும் பெருமைக்குப் பட்டம் கட்டினாற்போலேயிருக்கை. (பீதாம்பர) "மாஹாரஜநம் வாஸ:" [ப்ருஹ 4-3-6] என்று உபநிஷத்தில் ஏறுக்கப்பட்டதாகையாலே இவனே ஸர்வேஶ்வரன் என்று காட்டித்தரும் லக்ஷணமாய் இருப்பதாய், "பரஞ்சோதி ஆடையொடும் பல்கலனாய் நின்பைம்பொன் கடிச்சோதி கலந்ததுவோ!" [திருவாய் 3-1-1] என்று நம்மாழ்வார் அநுபவித்தபடியே, திருவரை (இடை) பூத்தாற்போலே மிகவும் பொருந்தியிருப்பதாய் இவனே புருஷோத்தமன் என்பதைக் காட்டித்தருவதாய் உள்ள திருப்பீதாம்பரம் (பீதகவாடை). (காஞ்சீ குண) அந்தத் திருப்பீதாம்பரத்திற்கு அழகளிப்பதாய், திருமேனியோடு நெருங்கியிருப்பதான "திரு அரை நாண்". (நூபுர) எம்பெருமானை ஆஶ்ரயிப்பவர்கள் அனைவரும் பற்றும் துறையான திருவடிகளுக்கு ஒளியளிக்கும் திருச்சிலம்பு. "ஆதி" ஶப்தத்தாலே, "புடையார் பொன்னூலினன்" [திருவாய் 3-7-4] "ஈது அவன் கைம்மோதிரமே"

**நூபுராத்3யபரிமித—தி3வ்யபூ4ஷண!**

---

மோதிரம் முதலானவற்றைச் சொல்லுகிறது. (அபரிமித) "எண்ணில் பல்கலன்" என்றும், "பலபலவேயாபரணம்" என்றும் சொல்லுகிறபடியே திருவாப4ரணங்களுக்குத் தொகையில்லையென்கிறது. (தி3வ்யபூ4ஷண) ஶுத்3த4ஸத்வாத்மகமாய், தி3வ்யாவயவங்களுக்கும் ஆப4ரணங்களுக்கும் உண்டான சேர்த்தியழகுக்கும் அடியான த்3ரவ்யவைலக்ஷண்யம்.

---

**अथ दिव्यायुधानि । एकैकायुधस्य सर्वायुधकार्यशक्तिमत्त्वं अचिन्त्यशक्तिमत्त्वम् । यथा "सहायकृत्यं किं तस्य येन सप्त**

---

[பெரியாழ் திரு 3-10-8] என்கிறபடியே இங்கு சொல்லப்படாத திருயஜ்ஞோபவீதம் (பூணூல்), கணையாழி மோதிரம் முதலானவற்றைச் சொல்லுகிறது. (அபரிமித) "எண்ணில்பல்கலன்" [திருவாய் 4-3-5], "பலபலவே ஆபரணம்" [திருவாய் 2-5-6] என்று சொல்லுகிறபடியே திருவாபரணங்களுக்கும் இவ்வளவு என்னும் எண்ணிக்கையில்லை என்கிறது. (தி3வ்யபூ4ஷண) அப்ராக்ருதமான சுத்த ஸத்வ த்3ரவ்யத்தாலான திருவாபரணங்களையுடையவனே! எம்பெருமானுடைய திருமேனியும் அதிலுள்ள அவயவங்களும் இந்த ஶுத்3த4 ஸத்வத்3ரவ்யத்தால் ஆனவை. அவற்றுக்குப் பொருத்தமாக, திருவாபரணங்களும் அதே திரவியத்தால் ஆனவையாகையாலே சேர்த்தியழகு விஞ்சி நிற்கிறது என்று கருத்து.

ஸ்வாநுரூப—அசிந்த்ய ஶக்தி—

(ஸ்வாநுரூபேதி) கீழ்ச்சொன்ன ஆப₄ரணங்களோடு விகல்பிக்கலாம்படியான தி₃வ்யாயுத₄வர்க்க₃த்தைச் சொல்லுகிறது. (ஸ்வாநுரூப) கீழ்ச்சொன்ன ப₃லவீர்யாதி₃களையுடைய தனக்கு அநுரூபமாயிருக்கை. அத₂வா, ஆஶ்ரிதவிரோதி₄களை அழியச் செய்யும்போது ஆயுத₄மாய், ஆஶ்ரிதரை உகப்பிக்கும்போது ஆப₄ரணமாயிருக்குமென்றுமாம். (அசிந்த்யஶக்தி) ஸர்வ ஶக்தியினுடைய ஶக்தியைப் பரிச்சே₂தி₃க்கிலும் பரிச்சே₂தி₃க்க

महार्हाः । शैलाश्च वसुधा चैव बाणेनैकेन दारिताः" इति । परशु-

'ஸ்வாநுரூப' என்று தொடங்கும் அடுத்த வாக்கியம் முன் வாக்கியத்தில் சொல்லப்பட்ட ஆபரணங்களைப்போலே இவையும் சில ஆபரணங்களோ? என்று நினைக்கத்தக்க திவ்யாயுதங்களைச் சொல்லுகிறது. (ஸ்வாநுரூப) கீழே தி₃வ்யாத்ம கு₃ணங்களைச் சொல்லும்போது எடுக்கப்பட்ட ப₃லம், வீர்யம் முதலான குணங்களையுடைய தனக்குப் பொருத்தமாயிருப்பவை இந்த ஆயுதங்கள் என்று கருத்து. அல்லது— அடியார்களிடம் அருளையும் அவர்களுடைய விரோதிகளிடத்தில் சீற்றத்தையும் கொள்ளும் தனக்குத் தகுந்தபடி அடியார்களுக்கு ஸேவை ஸாதித்து அவர்களை உகப்பிக்கும்போது ஆபரணமாய், அவர்களுடைய விரோதிகளை அழியச் செய்யும்போது ஆயுதமாய் இருப்பவை என்றும் கருத்துரைக்கலாம். (அசிந்த்ய ஶக்தி) நினைப்பதற்கு அரிய சக்தியை உடையவை. "பராஸ்ய ஶக்தி:" [ஶ்வே] என்று மிகப்பெரியதாகச் சொல்லப்பட்ட ஸர்வ சக்தியுடையவனுடைய சக்தியை அளவிட்டாலும், அளவிடமுடியாதபடி இருக்கும் இந்த ஆயுதங்களின் சக்தி என்று கருத்து. ஸுதர்சனப₄ட்டர் "ஒவ்வொரு ஆயுதமும் எல்லா ஆயுதங்களினுடைய ஶக்தியையும் உடையவையாயிருப்பது" என்று இப்பதத்திற்குப் பொருள் கொண்டார்.

**ஶங்க2—சக்ர—க3தா3[ஸி]—ஶார்ங்க3ாத்3யஸங்க்2யேய—**

அரிதான ஶக்தியையுடைத்தாயிருக்கை. (ஶங்க2சக்ரக3தா3 ஶார்ங்க3) இவை அஞ்சுக்கும் உபலக்ஷணம். அஸிஶப்3த3 விது4ரமாகவே கிடக்கிறது. "பத்3யவத் க3த்3யத்துக்கும் ஒரு நியதியுண்டாயிருக்குமிறே" என்று பிள்ளை அருளிச்செய்வர். (ஆதி3) இவை முதலான. (அஸங்க்2யேய) இவை தான் எண்ணிறந்திருக்குமிறே. ஆப4ரணங்களோபாதி தி3வ்யாயுத4ங்களுக்கும் தொகையில்லாமையாலே ப்ரதா4நமான சில

**टङ्कखनित्रादिकार्यं एकेन सालगिरिरसातलभेदिना शरेण हि कृतम्।**

"ஸஹாயக்ருத்யம் கிம் தஸ்ய யேந ஸப்த மஹாத்3ருமா: ।
ஶைலாஶ்ச வஸுதா4 சைவ பா3ணேநைகேந தா3ரிதா: ॥"

[ரா-கி-36-8]

[எந்த இராமபிரானாலே ஏழு பெரிய மராமரங்களும், மலைகளும், பூமியும் ஒரு பா3ணத்தாலே பிளக்கப்பட்டனவோ, அவனுக்குத் துணை புரிவோரும் வேண்டுமோ?] என்கிறபடியே கோடரி, ஊளி, மண்வெட்டி முதலான பல ஆயுதங்களால் செய்ய வேண்டிய காரியங்களை இராமபிரானின் அம்பு ஒன்றே செய்ததை திருஷ்டாந்தமாகவும் காட்டினார் ஸுதர்சன பட்டர். (ஶங்க2 சக்ர க3தா3 ஶார்ங்க3) ஶங்கம் சக்ரம் கதை ஶார்ங்கவில் ஆகிய நாலு ஆயுதங்களை: இங்குச் சொன்னது நாந்தகவாளையும் சேர்த்துப் பஞ்சாயுத4ங்களுக்கும் உபலக்ஷணம். இங்கு வாளைச்சொல்லும் "அஸி" சப்தம் இல்லாமலே பாடம் கொண்டே பெரியவாச்சான்பிள்ளை இவ்வண்ணம் வியாக்கியானம் செய்தார். 'அப்படிப் பாடம் கொண்டால்தான் ஓசை நயம் உண்டு' என்றும், "ஶ்லோகங்களில் அமைந்த பத்3ய க்3ரந்த2ங்களுக்குப்போலே க3த்3ய க்3ரந்த2ங்களுக்கும் ஓசை நயம் உண்டு" என்றும் நம்பிள்ளை அருளிச்செய்ததாகவும் கூறுவர். (ஆதி3) இவை முதலான; பரசு முதலான மற்ற பல ஆயுதங்களும் இவனுக்கு உண்டு என்று கருத்து. (அஸங்க்2யேய) எண்ணிக்கையற்ற. திருவாப4ரணங்களைப்போலே தி3வ்யாயுத4ங்களுக்கும் எண்ணிக்கையில்லாமையாலே, முக்கியமான

**நித்ய—நிரவத்₃ய—நிரதிஶய கல்யாண—**

சொன்னவித்தனை. (நித்ய) உத்பத்திவிநாஶ ரஹிதங்களாயிருக்கை. (நிரவத்₃ய) சிந்மயராகையாலே ப்ரதிகூலநிரஸநாதிகளில் ஶக்திப்ரவ்ருத்திகள் ஸ்வார்த்த₂மாயிராதே ஶேஷிக்கு உறுப்பாயிருக்கை. அத₂வா, (நித்யநிரவத்₃ய) நாள் செல்ல நாள் செல்ல மழுங்குகையன்றிக்கே "மழுங்காத வைந்நுதிய" என்கிறபடியே ஶத்ரு ஶரீரங்களில் தைக்கத் தைக்கச் சாணையிலிட்டாப்போலே கூர்மை மிக்கிருக்கை (நிரதிஶய கல்யாண) ஸ்வஸம்ப₃ந்த₄த்தாலே ஸர்வ மங்க₃ளங்களையும்

निरवद्यत्वं पूर्ववत्। निरतिशयकल्याणत्वं —शोभनावहत्वम्। तानि

சில ஆயுத₄ங்களே சொல்லப்பட்டன என்று கருத்து. (நித்ய) ப்ராக்ருதமான ஆயுதங்களைப்போலே இவை ஒரு காலத்தில் தோன்றுவதும் ஒரு காலத்தில் அழிவதும் கிடையாது என்று கருத்து. (நிரவத்₃ய) குற்றமற்ற. ஒவ்வொரு ஆயுதத்தையும் திருமேனியாகக் கொண்டவர் ஒரு நித்ய ஸூரியாகையாலே, எதிரிகளை அழிப்பதில் அவர்களுடைய சக்தியும் செயலும், 'தங்களுக்கு' என்று இராமல் ஸ்வாமியான எம்பெருமானுக்கே உறுப்பாயிருக்கையே குற்றமற்றிருக்கையாகும். இப்படித் தனித்தனிப் பதங்களாகக் கொள்ளாமல், "**நித்ய நிரவத்₃ய**" என்று ஒரே பதமாகக் கொண்டு, எப்போதும் குற்றமற்றிருப்பவை இந்த ஆயுதங்கள் என்றும் பொருள் கொள்ளலாம். அதாவது— ப்ராக்ருதமான ஆயுதங்களைப்போலே நாள் செல்ல, நாள் செல்ல மழுங்கிப் போகாமல், "மழுங்காத வைந்நுதிய சக்கரம்" [திருவாய் 3-1-9] என்கிறபடியே, எதிரிகளின் சரீரங்களில் அழுந்த அழுந்த, சாணை பிடித்ததுபோலே கூர்மை மிகுந்துவருகிறபடியைச் சொல்லுகிறது. (நிரதிஶய கல்யாண) ஒப்பற்ற மங்களத்தை உடையவை. தம் சேர்த்தியாலே எல்லா மங்களங்களையும் எம்பெருமானுக்கு உண்டாக்கவல்லவை என்று கருத்து. அதாவது—அடியார்களுடைய

தி3வ்யாயுத4!—ஸ்வாபி4மத - நித்ய — நிரவத்3யாநுரூப—

அத்தலைக்கு உண்டாக்கப் பற்றாயிருக்கை. அதாவது,— ஆஶ்ரித விரோதி4நிரஸநத்தில் வந்தால் ஈஶ்வரஸங்கல்பத்திலும் முற்பாடராயிருக்கை. "அறாயமாழி" யிறே. (தி3வ்யாயுத4) அப்ராக்ருத விக்3ரஹராயிருக்கை.

(ஸ்வாபி4மத நித்ய நிரவத்3யாநுரூப ஸ்வரூபரூப கு3ண விப4வைஶ்வர்ய ஶீலாத்3யநவதி4காதிஶயாஸங்க்2யேய கல்யாண கு3ணக3ணௌக4 ...) கீழ்ச்சொன்ன விக்3ரஹாதி3வைலக்ஷண்ய மடையக் காட்டிலெரித்த நிலாவாகாதபடி போ4க்த்ரிகளான மஹிஷீவர்க்க3த்தைச் சொல்லுகிறது. ப்ரத2ம சூர்ணையிலும் இக்கு3ணங்கள் உக்தமாயிருக்கத் திரிபட்டும் சொல்லுகிறது புநருக்தமன்றோவென்னில்; இவர் தாம் பிறர்க்கு உபதேஶிக்

आभरणकोटावपि हि निविशन्ते । अथ दिव्यमहिषीविशेषणानां पूर्ववदर्थः।

எதிரிகளை அழிக்கும்போது எம்பெருமான் ஸங்கல்பிப்பதற்கு முன்பே செயல்படுபவையாய் இருப்பதைச் சொல்லுகிறது. "அறமுயலாழிப் படை" [திருவாய் 2-10-5] என்று இவ்வர்த்தத்தை நம்மாழ்வாரும் அருளிச்செய்தாரன்றோ. (தி3வ்யாயுத4) அப்ராக்ருதமான ஆயுத4ங்களையுடையவனே! இந்த ஆயுத4ங்களின் திருமேனியும் அப்ராக்ருத த்3ரவ்யத்தால் ஆனது என்று கருத்து.

(ஸ்வாபி4மத நித்ய நிரவத்3யாநுரூப ஸ்வரூபரூப கு3ணவிப4வைஶ்வர்யஶீலாத்3யநவதி4காதிஶயாஸங்க்2யேய கல்யாண கு3ணக3ண ஶ்ரீவல்லப4) இந்த ஐந்தாவது சூர்ணையில் இதுவரையில் சொன்ன தி3வ்யரூபம், பூ4ஷணம், ஆயுத4ம் முதலானவற்றின் சிறப்பு முழுவதும் காட்டில் வீசும் நிலவொளிபோலே வீணாகாதபடி அனுபவிக்கும் மஹிஷிகளை அடுத்த இரண்டு வாக்யங்களாலே சொல்லுகிறார். அதில் முதல் சூர்ணையாலே ப்ரதா4ன மஹிஷியான பெரியபிராட்டியாரைச் சொல்லுகிறார். முதல் சூர்ணையிலும் பெரியபிராட்டியாருக்கு இங்கு சொல்லப்பட்ட கு3ணங்கள் அனைத்தும் சொல்லப்பட்டிருக்க, மறுபடியும் இங்கு சொல்லுவது புநருக்தி (கூறியது கூறல்) என்னும்

**ஸ்வரூபரூபகு₃ண— விப₄வைஶ்வர்ய—ஶீலாத்₃யநவதி₄-காதிஶயாஸங்க்₂யேய கல்யாண கு₃ணக₃ண ஶ்ரீவல்லப₄ !**

---

*கிறாரன்றியிலே அநுப₄விக்கிறாராய், அத்தாலே வந்த ஆதராதிஶயம் சொல்லுவிக்கச் சொல்லுகிறாராகையாலே புநருக்தி தோ₃ஷமில்லை. அத₂வா, அங்கு ஶரண்யதைக்குறுப்பாக அருளிச்செய்தார். இங்கு வால்லப்₄யத்துக்குறுப்பாக அருளிச் செய்கிறார். இங்குள்ள பத₃ங்களுக்கு அர்த்த₂மதுவே. (ஶ்ரீவல்லப₄) ஏவம்வித₄ வைலக்ஷண்யோபேதையான பிராட்டிக்கு நாயகனானவனே! பசியன் சோற்றின்மேலே விழுமா போலே அவன்தானும் மேல்விழும்படியாயிருக்கை. "பித்தர் பனிமலர் மேல் பாவைக்கு" என்னக்கடவதிறே. இவ்வால்லப்₄யம் புருஷகாரப₄ாவத்துக்கும் ப்ராப்யதைக்கும் உறுப்பாயிருக்குமிறே.*

---

தோ₃ஷத்தின் பாற்படாதோ? எனில், இவர் இவற்றைப் பிறர்க்கு உபதேசிப்பதற்காகவல்லாமல், அநுபவிப்பதற்காகப் பேசுகிறாராகையாலே, அவ்வனுபவத்தால் வந்த ஆர்வமிகுதி சொல்லுவிக்கச் சொல்லுகிறாராகையாலே, புநருக்தி தோ₃ஷம் இல்லை. அப்படியல்லாமல், முதல் சூர்ணையில், பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றுவதற்குறுப்பாகவும், இங்கு எம்பெருமானுக்கு இனிய நாயகி என்று காட்டுவதற்காகவும் இக்குணங்களை எடுக்கிறாராகையாலே புநருக்தியில்லை என்றும் கொள்ளலாம். இங்குள்ள பதங்களுக்கு முதல் சூர்ணையிற்போலவே பொருள் கொள்ளவேண்டும். **(ஶ்ரீவல்லப₄)** இப்படிப்பட்ட பெருமையுடைய பிராட்டிக்கு இனிய நாயகனானவனே! இனிய மனைவியாகக் கொண்டவனே! என்றும் பொருள் கொள்ளலாம். பசித்தவன் சோற்றைக் கண்டால் வாரிவிழுங்குவதுபோலே, எம்பெருமானும் மேல்விழுந்து ஈடுபடும் சிறப்பையுடையவள் இப்பிராட்டி என்று கருத்து. "பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" (திருநெடு 18) என்று திருமங்கையாழ்வாரும் அருளினாரன்றோ. இவள் இனிய மனைவியாயிருப்பது இவளுடைய புருஷகாரத்தன்மைக்கும், அடையத்தக்க ப்ராப்யமாயிருக்கைக்கும் உறுப்பாயிருக்குமன்றோ.

**ஏவம்பூ4த பூ4மிநீளாநாயக!**

---

(ஏவம்பூ4த) ஏவம்வித4வைலக்ஷண்யோபேதைகளான. (பூ4மிநீளாநாயக) "வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள்" என்னக்கடவதிறே.

---

**अथातिदेशः एवमिति । लक्ष्मीवच्छ्रिया भूम्यादीनामपि शेषत्वाभिप्रायेण पृथगुक्तिः । यथा — "याभिस्त्वं स्तनबाहुदृष्टिभिरिव स्वाभिः प्रियं श्लाघसे" इति ॥**

---

இனி, இந்தப் பெரிய பிராட்டியார்க்கும் ஶேஷபூ4தைகளாய்,

> **பே4க்3யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்க3ராகை3: ஸமம்**
> **நிர்வ்ருத்த ப்ரணயாதிவாஹநவிதெ4ள நீதா: பரீவாஹதாம் ।**
> **தே3வி த்வாமநு நீளயா ஸஹ மஹீ தே3வ்ய: ஸ்ஹஸ்ரம் தத2ா**
> **யாபி4ஸ் த்வம் ஸ்தநபா3ஹுத்3ருஷ்டிபி4ரிவ ஸ்வாபி4: ப்ரியம்**
> **ஶ்லாக4ஸே ॥** [ஸ்ரீகு3ண-26]

[ஸ்ரீதே3வியே! பதிபத்னிகளாகிற உங்களிருவர்க்கும் புஷ்ப சந்த3நாதி3களைப்போல் இன்றியமையாதவராயிருப்பதினால் இனியவர்களாயிருப்பவர்களாய், கரைபுரண்ட காதல் வெள்ளப்பெருக்கிற்கு வெட்டி விடப்பட்ட மடைபோல் நியமிக்கப்பட்டிருப்பவர்களாய் விளங்குகின்றனர் — உன்னையொட்டியிருக்கும் நீளாதே3வியோடு கூடிய பூ4தே3வியும் மற்றும் ஆயிரக்கணக்கான தே3வியரும். உம்முடைய கொங்கை, திருக்கைகள், திருக்கண்ணுக்கு ஆகியவற்றால் காந்தனை உகப்பிப்பதுபோலே இவர்களாலும் அவனை உகப்பிக்கிறீர்.] என்று ப4ட்டர் அருளிச்செய்தபடியே; அவளுடைய அவயவங்கள் போலிருப்பவர்களான பூ4மி நீளாதேவிகளுக்கும் நாயகனாயிருக்கும்படியைக் காட்டுகிறார் — (ஏவம்பூ4தபூ4மிநீளாநாயக) பெரிய பிராட்டியார்க்குச் சொன்ன சிறப்புக்களையுடைய பூமிதேவிக்கும், நீளாதேவிக்கும் நாயகனே!

ஸ்வச்ச₂ந்த₃ாநுவர்த்தி—

கீம் (ஸ்ரீவல்லப₄) என்றது; இங்கு, (நாயக) என்கிறது இவர்கள் பக்கல் முறையாலே பரிமாறுகையும், அவள் பக்கல் முறை கெடப் பரிமாறுகையும். இம்முறைகேடுதனக்கு இவர்கள் தானும் தங்களை எழுதிக்கொடுத்திறேயிருப்பது.

(ஸ்வச்ச₂ந்த₃ாநுவர்த்தி) இப்படிப் பிராட்டிமாரோட்டைச் சேர்த்தியே தங்களுக்கு ஸ்வரூபலாப₄மாய், அவர்களோட்டைக்

"வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள்" [திருவாய் 9-2-10] என்று நம்மாழ்வார் 'மற்றை' என்னும் பதத்தால் சொன்ன ஸ்ரீதேவி ஸாம்யத்தை 'ஏவம்பூ₄த' என்று உணர்த்துகிறார். "குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும் நிழற்போல்வனர்" [திருவிருத்தம் 3] என்கிறபடியே மூவரும் எம்பெருமானுக்கு நிழலைப்போல் அவனாலே ஸத்தை முதலானவற்றைப் பெற்றிருப்பவரானாலும், பூ₄மி நீளைகள் பெரிய பிராட்டியார்க்கும் ஶேஷ பூ₄தராயிருப்பவர்கள் என்பது சாஸ்த்ரஸித்₃த₄ம். பெரிய பிராட்டியாரோடு ஸம்பந்தத்தைச் சொல்லும்போது "ஸ்ரீவல்லப₄" [ஸ்ரீதேவியை இனிய மனைவியாகக் கொண்டவனே!] என்று அருளிச்செய்தார். பூ₄மி நீளைகளோடு ஸம்பந்தத்தைச் சொல்லும் இங்கு அவர்களுக்கு 'நாயகன்' என்கிறார். மூவருமே இவனுக்கு ஶேஷபூ₄தர்களானாலும், பெரியபிராட்டியார் பட்ட மஹிஷியாகையாலே, அவளிடம் ஶேஷிஶேஷி ப₄ாவம் தட்டு மாறி, தாழ நின்றும் பரிமாறுவான். இவர்கள் விஷயத்தில் ஶேஷி என்னும் முறை தவறுமல் நாயகனாகவே பரிமாறுவான் என்று உணர்த்தப்படுகிறது. இவ்விரு தேவிகளும் பெரிய பிராட்டியாருக்குத் தங்களை அவயவங்களாக நினைத்திருப்பார்களாகையாலே, அவளிடம் முறைகெடப்பரிமாறுவதில் மிகவும் ஈடுபட்டிருப்பார்கள் என்பது அறியத்தக்கது.

இனி அடுத்த வாக்யத்தாலே பிராட்டிமாருடன் கூடி எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் அழகு, காட்டில் எரித்த நிலாப்போலே வீணாகாதபடி அனுபவிக்கும் பரிஜனங்களான நித்ய ஸூரிகளைச் சொல்லுகிறார். இந்தப் பிராட்டிமாருடன் சேர்த்தியாலே ஸ்வரூப லாப₄ம் பெற்றவர்

ஸ்வரூபஸ்தி2தி—

*கலவிக்குக் கைதொடுமானமாயிருக்கிற பரிஜனத்தைச் சொல்லு கிறது. (ஸ்வச்ச2ந்த3ா நுவர்த்தி) நித்யஸூரிகள் முகம் (முறை) அறிந்து பரிமாறுமவர்களாகையாலே ஸ்வச்ச2ந்த3ா நுவர்த்தி களாயிருப்பர்கள். ஸம்ஸாரிகள் முறையறியாதே பரிமாறுகை யாலே ஸங்கல்பாநுவர்த்திகளாயிருக்கும். ஸ்வச்ச2ந்தா நுவர்த்தி*

---

**अथ परिजनः। सजातीयविजातीयव्यावर्तकाकारविशिष्टं स्वरूपम्। तस्य प्रतिनियतकालसंबन्धः स्थितिः। ईश्वरेच्छां ज्ञात्वा। अनुवर्तन्ते**

---

களாய், இந்த திவ்யதம்பதிகளுக்குக் கைங்கர்யம் செய்வதையே இயல் பாக உடையவர்களன்றோ இவர்கள். (ஸ்வச்ச2ந்த3ாநுவர்த்தி) எம் பெருமான் திருவுள்ளத்தைப் பின்செல்லுகின்றவர்கள் இந்த நித்ய ஸூரிகள் என்று கருத்து. இவர்கள் முறையறிந்து பரிமாறுகிறவர் களாகையாலே எம்பெருமானுடைய திருவுள்ளத்தைப் பின்பற்றுவார் கள். இந்த ஸம்ஸார மண்டலத்திலிருப்பவர்கள் அவனுக்கும் தமக்கும் உள்ள முறை அறியாமல் காரியம் செய்பவர்களாகையாலே, அவனு டைய ஸங்கல்பத்தை அனுஸரித்து அவர்கள் பரிமாற்றம் அமையும். இவர்களைத் திருவுள்ளத்தாலே நியமிப்பான். அவர்களைக் கர்மாநு கு3ணமான ஸங்கல்பத்தாலே நடத்துவான் என்றபடி. **ஸ்வச்ச2ந்த3ாநு வர்த்தி ஸ்வரூப ஸ்தி2தி ப்ரவ்ருத்தி பே4த3ங்களாவது :** — எம்பெரு மான் எந்த நித்யஸூரியைக் கொண்டு எந்த அடிமையைக் கொள்ள எண்ணுகிறானோ அந்த அடிமைக்குத்தக்கபடி தன் அழைப்பாகிற ஸ்வரூபத்தையும், ஸ்தி2தி (நிலை) யையும், செயல்களாகிற ப்ரவ்ருத்தி யையும் ஏற்றுக்கொள்பவர்களாக இருப்பார்கள் அவர்கள் என்று கருத்து. பே4த3 ஶப்3த3ம் ஸ்வரூப விஶேஷங்களையும் ஸ்தி2தி விஶேஷங்களையும், ப்ரவ்ருத்தி விஶேஷங்களையும் காட்டுகிறது. ஸ்வரூப ஸ்தி2தி ப்ரவ்ருத்திகள் பல வகைப்பட்டிருக்கும் என்றபடி. "சென்றால் குடையாம்" [முதல் திருவ 53] என்ற பாட்டை அனுஸந்திப்பது.

ப்ரவ்ருத்தி—பே₄த₃ாஶேஷ—ஶேஷைதைகரதிரூப—

ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்தி பே₄த₃ங்களாவது:— ஈஶ்வரன் யாவர் சிலரைக் கொண்டு யாதோரடிமைகொள்ள நினைத்தருளுகிறான், அவ்வடிமைக்கு அநுரூபமான ஸ்வரூபமும் ஸ்தி₂தியும் ப்ரவ்ருத்தியுமாயிருக்கை. 66. (ப₄ாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந) என்னக்கடவதிறே. (அஶேஷஶேஷைதைக ரதிரூப) ஈஶ்வரன் அடிமை கொள்ளும்போது அவ்வோ அடிமைகளில் வ்யவஸ்தி₂தராயிருக்குமத்தனை போக்கி அவ்வாத₃ரத்தைப் பார்த்தால் ஸர்வஶேஷவ்ருத்தியிலும் உண்டான ஆத₃ரத்தையே வடிவாக உடையராயிருப்பர்கள்.

नित्यसिद्धाः, संसारिणस्तु तदनभिज्ञाः, तत्सङ्कल्पात् प्रवर्तन्त इति भिन्नाः अभिन्नाः । भेदः— स्वरूपस्थितिप्रवृत्तिविशेषः । यद्वा संसारिभ्यो नित्यानां व्यावर्तकधर्माः स्वच्छन्दानुवर्तिस्वरूपस्थिति-

66. ப₄ாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந த₄ர்மஜ்ஞேந ச லக்ஷ்மண ।
த்வயா புத்ரேண த₄ர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம ॥
[ரா-ஆ 15-28]

[லக்ஷ்மணா! நினைவறிந்து காரியம் செய்பவனும், (த₃ஶரத₂ சக்ரவர்த்தி எனக்குச்) செய்யுமவற்றை அறிபவனும், (ஶேஷத்வ) தருமமறிந்தவனுமான உன்னைப் பிள்ளையாகப் பெற்ற த₄ர்மாத்மாவான தந்தை எனக்கு இறக்கவில்லை.] என்று இளையபெருமாள் முதலான அவதாரங்களிலும் இவர்கள் நினைவறிந்து காரியம் செய்பவர்களாகச் சொல்லப்பட்டார்களன்றோ. (அஶேஷஶேஷைதைக ரதிரூப) எல்லாக் கைங்கர்யங்களிலும் ஈடுபட்டிருப்பவர்கள் என்று கருத்து. எம்பெருமான் அடிமை கொள்ளும்போது அந்தந்த அடிமைகளில் நிலை நிற்பவர்களாக இவர்கள் இருந்த போதிலும் அவர்களுடைய ஈடுபாட்டைப் பார்த்தால் எல்லாக் கைங்கர்யங்களிலும் உண்டான ஆர்வத்தையே வடிவாகவுடையவர்கள் என்று விளங்கும் என்றபடி.

**நித்ய—நிரவத்₃ய—**

---

தா₃ஸ்யோபகரணங்களைச் சொல்லுகிறது மேல். (நித்ய) முக்தரைப்போலே ஒருகால் இல்லாமல் ஒருகால் உண்டாகை யன்றிக்கே, எப்போதுமுண்டாயிருக்கை. (நிரவத்₃ய) ஜ்ஞா நாதி₃கள் ஸ்வோத்கர்ஷ ஹேதுவாயிருக்கையன்றிக்கே. 67. (ப்ரஹர்ஷயிஷ்யாமி) என்று கைங்கர்யத்துக்கு அநுகூல

---

**प्रवृत्तय इत्यर्थः। नित्यनिरवद्येति मुक्तव्यावृत्तिः। क्रिया-कैङ्कर्यम्।**

---

இவர்கள் செய்யும் கைங்கர்யங்களுக்கு உதவி புரியும் கல்யாண கு₃ணங்களைச் சொல்லுகிறது அடுத்தபடியாக. (நித்ய) இந்தக் கல்யாண கு₃ணங்கள் முக்தரைப்போலே சில காலம் இல்லாமலிருந்து ஒரு காலத்தில் உண்டாவதாயிராமல் என்றுமே உள்ளதாய் இருக்கையைச் சொல்லுகிறது. (நிரவத்₃ய) குற்றமற்றவை. ஜ்ஞாநம் முதலான இந்தக் கல்யாண குணங்கள் தமக்குப் பெருமையை விளைப்பதாகிற குற்றம் இல்லாமல், எம்பெருமானுக்குப் பெருமையை விளைப்பதாகவே இருக்கும் என்று கருத்து.

**67. ப₄வந்தமேவாநுசரந் நிரந்தரம்**

**ப்ரஶாந்த நிஶ்ஶேஷமனோ ரதா₂ந்தர: ।**

**கதா₃ऽஹமைகாந்திகநித்யகிங்கர:**

**ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத₂ஜீவித: ॥ [ஸ்தோ-ர-46]**

[உன்னையே இடைவிடாமல அனுஸரித்துக்கொண்டு மற்ற எல்லா ஆசைகளும் வாஸனையுமில்லாமல் நீங்கப்பெற்றவனும், ஒருபடிப்பட்டதாய் நித்யமான கைங்கர்யத்தை உடையவனும், ப்ரயோஜனத்துடன் கூடிய வாழ்வை உடையவனும் என்று நான் (உன்னையே) மிகவும் உகப்பிக்கப் போகிறேன்?] என்கிறபடியே எம்பெருமானுடைய முக மலர்த்திக்கு உறுப்பானதன்றோ இவர்கள் செய்யும் கைங்கர்யம். ஜ்ஞாநக்ரியாதி₃ கு₃ணங்களை உடையவராய் இருந்தபோதிலும் எம்பெருமான் இவர்கள் திருவாப₄ரணம் புஷ்பம் முதலானவை ஆகி,

**நிரதிஶய—ஜ்ஞாநக்ரியைஶ்வர்யாத்₃யநந்த—**

---

மாயிருக்கை. அஜ்ஞராய், அக்ரியராய், இருக்கிலும் இருப்பர்கள். (நிரதிஶயஜ்ஞாந) அடிமைக்குறுப்பான அஸங்குசித ஜ்ஞாநம். (க்ரியா) ஜ்ஞாநாநுரூபமான வ்யாபாரம். (ஐஶ்வர்ய) அடிமைக்குறுப்பான நியமநம். ஸேனைமுதலியார் பிரம்புங் கையுமாய்ப் பிறரை நியமிக்குமதுவும் அங்குற்றைக்கு உறுப்பாயிருக்குமிறே. 'ஆதி₃' ஶப்₃த₃த்தாலே அநுக்தங்களான கு₃ணவிஶேஷங்களை நினைக்கிறது. (அநந்த) ஈஶ்வரனுடைய ரக்ஷண விஷயமான குணங்களுக்குத் தொகையில்லாதாப் போலே, கைங்கர்ய விஷயமான கு₃ணங்களுக்குத் தொகையின்

---

**ऐश्वर्य-देहेन्द्रियादिनियमनम् ।**

---

தன் திருமேனியை அலங்கரிக்க வேண்டும் என்று நினைத்தால் அவ்வண்ணமே ஆகி, தம் அறிவையும் செயல் திறமையையும் காட்டாமல் அறிவற்ற பொருள்போலே திருமேனியிலேயே அலங்கரித்துக்கொண்டு கிடப்பர் என்றும் கருத்து. (நிரதிஶயஜ்ஞாந) கைங்கர்யத்துக்கு உதவும் எல்லையற்ற அறிவையுடையவர்கள. (க்ரியா) அந்த அறிவுக்குத் தக்க செயல்களையும் உடையவர்கள். (ஐஶ்வர்ய) அந்த அறிவுக்கும் செயல் திறமைக்கும் பொருத்தமாய், பிறரை நியமிக்கவல்ல செல்வத்தை உடையவர்கள். விஷ்வக்ஸேநர் தாம் அனைவர்க்கும் தலைவர் என்பது தோற்ற, பிரம்பைக் கையில் கொண்டு மற்ற நித்ய ஸூரிகளை நியமிப்பதும் எம்பெருமானுடைய உகப்புக்கு உறுப்பானதாகவே இருக்கும் என்றபடி. 'ஐஶ்வர்ய' ஶப்₃த₃த்தாலே தம்முடைய தே₃ஹேந்த்₃ரியாதி₃களை நியமிப்பதைச் சொல்லுவதாக ஸுத₃ர்ஶனப₄ட்டர் பொருள் உரைத்தார். '**ஆதி₃**' ஶப்₃த₃த்தாலே இங்கு சொல்லப்படாத மற்ற பல கல்யாண கு₃ணங்களை நினைக்கிறார். (அநந்த) ஈஶ்வரன் அடியார்களை ரக்ஷிப்பதற்கு உறுப்பான குணங்களுக்கு எண்ணிக்கையில்லாதது போலே, இவர்களுடைய கைங்கர்யத்துக்கு உறுப்பான குணங்களுக்கும் எண்ணிக்கையில்லை என்று கருத்து. (கல்யாண கு₃ணகண) இந்தக் கல்யாண குணங்களைக் கூட்டம் கூட்டமாக

**கல்யாண—கு$_3$ண க$_3$ண—ஶேஷ—**
**ஶேஷாஶந—க$_3$ருட$_3$ப்ரமுக$_2$—**

---

*றிக்கேயிருக்கை. (கு$_3$ண க$_3$ண) திரள் திரளாக அறியுமத்தனை போக்கித் தனித்தனியே காண அரிதாயிருக்கை. (ஶேஷ) திருவநந்தாழ்வான். (ஶேஷாஶந) ஸேனைமுதலியார். (க$_3$ருட$_3$) பெரிய திருவடி. (ப்ரமுக$_2$) இவர்கள் தொடக்கமான. (நாநாவித$_4$) சண்ட$_3$ாதி$_3$த்$_3$வாரபாலர்கள், (குமுத$_3$ாதி$_3$க$_3$ணாதி$_4$பர்கள் முதலான விவித$_4$பே$_4$த$_3$ங்கள். (அநந்தபரிஜந) கு$_3$ணங்களுக்குத் தொகையில்லாதாப்போலே இவர்களுக்கும் தொகையின்றிக்கேயிருக்கை. (பரிசாரிகா பரிசரித சரணயுக$_3$ள) ஏவம்*

---

**शेषाशनः — सेनापतिः । छत्रचामरपादुकापतद्ग्रहधारणादिभेदेन नानाविधाः । तत्र एकैककोटिनिविष्टाश्च अनन्ताः ।**

---

அறியலாமே யொழிய தனித்தனியே அறிய அரிதா யிருக்கும் என்று கருத்து. (ஶேஷ) அடிமையாலேயே நிரூபகமாகக் கொண்ட ஆதிசேஷன். அதனாலேயே இவரை முதலில் கூறுகிறார். (ஶேஷாஶந) நித்யஸூரிகளுக்குத் தலைவராய் எம்பெருமான் உண்டு மிகுந்ததை உண்பவராகையாலே 'ஶேஷாஶனர்' என்று பெயர் பெற்றவரான ஸேனைத்தலைவர். (க$_3$ருட$_3$) வாஹனமாய் இருக்கையாலே 'பெரிய திருவடி' என்று பெயர் பெற்ற கருடன். (ப்ரமுக$_2$) இவர்கள் முதலான நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. (நாநாவித$_4$) பலவகைப் பட்டவர்கள் என்று கருத்து. சண்ட$_3$ன், ப்ரசண்ட$_3$ன், ஜயன், விஜயன் முதலான த்$_3$வாரபாலர்கள், குமுதன் முதலான க$_3$ணத் தலைவர்கள், குடை, சாமரம், பாதுகை, படிக்கம் ஏந்துவார் முதலான பலவகைப்பட்டவர்கள். (அநந்த பரிஜந) கு$_3$ணங்களுக்கு எண்ணிக்கையில்லாதது போலே, இந்த பரிஜனங்களுக்கும் எண்ணிக்கை யில்லை. (பரிசாரிகா பரிசரித சரணயுக$_3$ள) புருஷரூபத்தை ஏற்றுக் கொண்டிருக்கும் பரிஜனங்களைப் போலே, ஸ்த்ரீரூபத்தை ஏற்றுக் கொண்டிருப்பவர்களாய், முன் சொல்லப்பட்ட ஜ்ஞானம் க்ரியை முதலான கல்யாண கு$_3$ணங்களை உடையவர்களான விமலை முதலான நித்ய ஸூரிகளும்,

**நாநாவித₄நந்த—பரிஜந—பரிசாரிகா—
பரிசரித—சரண யுக₃ள !**

---

*வித₄ ஜ்ஞாநாதி₃களையுடைய விமலாதி₃களென்ன. 68. (ஶதம் மாலாஹஸ்தா:) என்கிறபடியே மதிமுகமடந்தையரென்ன, ஸூத்ரவதி முதலான இவர்கள் மஹிஷிகளென்ன, இவர்களாலே அடிமை செய்யப்பட்ட ஏற்றத்தையுடைய திருவடி*

---

**विमलाद्यभिप्रायेणोक्तं परिचारिकेति ॥**

---

**68. தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதிதா₄வந்தி ஶதம் மாலா
ஹஸ்தா:
ஶதமஞ்ஜநஹஸ்தா: ஶதம் சூர்ணஹஸ்தா: ஶதம்
வாஸோஹஸ்தா:
ஶதம் பணஹஸ்தாஸ் தம் ப்₃ரஹ்மாலங்காரேண
அலங்குர்வந்தி ॥ [கௌஷீதகீ 1-34]**

[அந்த முக்த புருஷனிடம் ஐந்நூறு மதிமுக மடந்தையர் விரைகின்றனர்; நூற்றுவர் மாலையைக் கைக்கொண்டும், நூற்றுவர் மையைக் கைக்கொண்டும், நூற்றுவர் வாசனைப்பொடியைக் கைக்கொண்டும், நூற்றுவர் ஆடைகளைக் கைக்கொண்டும், நூற்றுவர் ஆபரணங்களைக் கைக்கொண்டும் அவனை ப்₃ரஹ்மத்தின் அலங்காரத்தினால் அலங்கரிக்கின்றனர்.] என்று உபநிஷத்திலும், "மதிமுக மடந்தையர்" [திருவாய் 10-9-10] என்று தமிழ் வேதத்திலும் முக்தாத்மாவை எதிர் கொண்டழைத்து அலங்கரிப்பவர்களாகச் சொல்லப்பட்டவர்கள், ஸேனை முதலியாரின் பத்நியான ஸூத்ரவதி, கருடனின் பத்நிகளான ருத்₃ரா ஸுகீர்த்திகள் ஆகிய பரிசாரிகைகளாலும் அடிமை செய்யப்படும் பெருமையை உடைய திருவடிகளை உடையவனே! இந்த நித்ய ஸூரி களின் பத்னிகளும் இவர்களுடைய ஆனந்தத்துக்கு உறுப்பானவர்

**பரமயோகி₃—வாங்மநஸாபரிச்சே₂த்₃ய—**

**ஸ்வரூபஸ்வபா₄வ (!)**

---

*கனை யுடையவனே! இவர்கள் மஹர்ஷிகள் தம் பே₄ாக₃த்துக்கு உறுப்பாகையன்றிக்கே அங்குத்தைக்கு உறுப்பாயிருப்பரிறே. "அயர்வறுமமரர்களதிபதி" என்றிறே ஏற்றம்.*

---

**उक्तस्वरूपरूपगुणविभूषणादीनां परत्वसौलभ्यसाधारणत्वात्, दिव्यलोकविशेषात्पूर्वं तदुभयमाह परमेति । परमस्वरूपं-नियन्तृस्वरूपम्; परमस्वभावः सौलभ्यम्। निरूपकादन्यो निरुपाधिकधर्मः स्वभावः ॥**

---

களாய் இராமல், எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதற்கே உறுப்பானவர்களாய் இருப்பார்களன்றோ. "அயர்வறும் அமரர்கள் அதிபதி" [திருவாய் 1-1-1] என்று அவனைத் தலைவனாகக் கொண்டிருப்பதன்றோ இவர்கள் அனைவருக்கும் சிறப்பு.

அடுத்த வாக்யத்தில், **"பரமயோகி₃"** என்று தொடங்கி **"வைகுண்ட₂நாத₂"** என்பது வரையில் பரமபத₃த்தைச் சொல்லும் ஒரே வாக்யமாகக் கொண்டார் பெரியவாச்சான்பிள்ளை. **"பரமயோகி₃ வாங்மநஸாபரிச்சே₂த்₃ய ஸ்வரூபஸ்வபா₄வ"** என்பதை விளியாகக் கொண்டு தனிவாக்யமாக்கியும் பொருள்கொண்டார் ஸுதர்சனப₄ட்டர். இதுவரையில் சொல்லப்பட்ட ஸ்வரூபம், ரூபம், குணம், ஆப₄ரணம் முதலானவை பரநிலைக்கும் அவதாரங்களிலுள்ள ஸௌலப்₄ய (எளிமை யுடைய) நிலைக்கும் பொதுவாகையால், திவ்யலோகத்தை வர்ணிப்பதற்கு முன் இந்தப் பரத்வ ஸௌலப்யங்களைச் சொல்லுகிறார் என்று அவர் அவதாரிகை இட்டார். (பரமயோகி₃ வாங் மநஸாऽ-பரிச்சே₂த்₃ய ஸ்வரூப ஸ்வபா₄வ) மேலானவையாய், யோகிகளின் வாக்குக்கும் மனத்திற்கும் அளவிடவொண்ணாதவையான பரத்வமாகிற ஸ்வரூபத்தையும், ஸௌலப்₄யமாகிற ஸ்வபா₄வத்தையும் உடையவனே! என்று பொருள்.

(பரமேதி) ஸூரிபோக்யமான கைங்கர்யத்தினுடைய ஸ்வரூபம் சொல்லிற்று கீழ். அந்தக் கைங்கர்யத்துக்கு வர்த்தகமான தேஶவிஶேஷத்தைச் சொல்லுகிறது மேல். (பரம யோகி வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூபஸ்வபாவ) 69. (முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்வேதத்வீபவாஸிநாம்)

---

'பரமஸ்வரூபம்' என்று அனைவரையும் நியமிக்கும் பரத்வமாகிற ஸ்வரூபத்தையும், 'பரம ஸ்வபாவம்' என்று அனைவர்க்கும் எளியனுயிருக்கையாகிற ஸௌலப்யத்தையும் குறிக்கிறது. பரத்வம் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை நிரூபித்துத் தரும் குணமாகையாலே அதை 'பரமஸ்வரூபம்' என்றார். ஸ்வரூபத்தை நிரூபித்துத் தரும் குணங்களைக் காட்டிலும் வேறுபட்டவையாய், இயல்பானவையான மற்ற தன்மைகள் 'ஸ்வபாவம்' எனப்படுமாகையால், அவற்றில் மிகச்சிறந்ததான ஸௌலப்யத்தை 'பரம ஸ்வபாவம்' என்றார்.

இனி, இவ்வாக்யத்தை ஒன்றாகக் கொண்டு பரமபதத்தை வர்ணிப்பதாகப் பெரியவாச்சான்பிள்ளை விவரித்தருளிய பொருள் விளக்கப்படுகிறது. முந்தின வாக்யத்தில் நித்ய ஸூரிகள் விரும்பும் கைங்கர்யத்தின் ஸ்வரூபத்தைச் சொன்னார். இந்த வாக்யத்தில் அந்தக் கைங்கர்யத்தை வளர்க்கும் தேசமான பரமபதத்தை வர்ணிக்கிறார். (பரம யோகி வாங்மநஸாऽபரிச்சேத்ய ஸ்வரூப ஸ்வபாவ) மேலான யோகிகளின் வாக்குக்கும் மனத்திற்கும் அளவிடவொண்ணாத ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் உடையது பரமபதம் என்று பொருள்.

**69. முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்வேதத்வீப வாஸிநாம்।**
**நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந: ॥**

**[பார-ஶாந்தி 344-45]**

[ஶ்வேதத்வீபவாஸிகளுக்கு எது லக்ஷணமோ அதுவே முக்தர்களுக்கும் லக்ஷணமாகும்; அதாவது:—எப்போதும் அஞ்ஜலி செய்துகொண்டிருப்பார்கள்; (அதனால்) ஆநந்திப்பார்கள்; வாயால் 'நம:' என்றே

என்கிற ஸநகாதி₃களுடைய வாங்மநஸ்ஸுக்களால் பரிச்சே₂தி₃க்கவொண்ணாத ஸ்வரூபஸ்வபா₄வங்களையுடைத்தாயிருக்கை. அதாவது,—பஞ்சோபநிஷந்மயம், ஶுத்₃த₄ஸத்வமயம் என்று திரள நினைத்தல் சொல்லுதல் செய்யுமத்தனையொழிய ஏவம் ஸ்வரூபம், ஏவம்ஸ்வபா₄வம் என்று பரிச்சே₂தி₃க்க அரிதாயிருக்கை. பஞ்சோபநிஷந்மயமாகையாலே ஏக த்₃ரவ்யமென்னவொண்ணாது; அநேகத்₃ரவ்யோபசயாத்மகமாகையாலே

---

परमयोगीत्यादिकं देशविशेषणं वा। तथा श्रीवैकुण्ठगद्योक्तेः। तदा, स्वरूपं — संनिवेशविशेषविशिष्टद्रव्यम्। तस्य भोग्यताप्रकारः स्वभावः।

---

சொல்லும் தன்மையுடையவர்களாயிருப்பார்கள்.] என்று பா₄ரதத்தில் சொன்னபடியே ப்₃ரஹ்மருத்₃ரர்கள் ஸநக ஸநந்தன ஸநாதன ஸநத் குமாரர்கள் முதலான மேலான யோகி₃களுடைய வாக்குக்கும் மனத்துக்கும் அளவிடுவதற்கு அரிய ஸ்வரூபத்தையும் ஸ்வபா₄வத்தையும் உடையது பரமபதம் என்று கருத்து. ஸ்வரூபம் என்று ஓர் அமைப்புடன் கூடிய த்₃ரவ்யத்தையும், ஸ்வபா₄வம் என்று அதனுடைய இனிமையையும் குறிப்பதாக ஸுதர்சனப₄ட்டர் உரையிட்டார். (பரம யோகி₃) "யோகி₃ வர்யாக்₃ரகு₃ண்யை: விதி₄ ஶிவஸநகாத்₃யை:" [ஸ்தோத்ர 47] [யோகி ஶ்ரேஷ்டர்களில் முன் நிற்பவர்களான பிரமன், சிவன், ஸநகர் முதலானோராலே] என்று ஆளவந்தாரால் அருளிச் செய்யப்பட்டவர்கள் இங்கு பரம யோகி₃கள் எனப்படுகின்றார்கள். (வாங்மநஸாபரிச்சே₂த்₃ய ஸ்வரூப ஸ்வபா₄வ) இவர்களுடைய வாக்குக்கும் மனத்திற்கும் அளவிடவொண்ணாத ஸ்வரூப ஸ்வபா₄வங்களை உடைத்தாயிருக்கையாவது — 'பஞ்சோபநிஷத்துக்களால் ஆனது, ஶுத்₃த₄ ஸத்வத்₃ரவ்யத்தால் ஆனது' என்று திரண்ட பெருமையைச் சொல்லலாமேயொழிய, தனித்தனியாகப் பிரித்து இப்படிப்பட்ட ஸ்வரூபத்தையுடையது, என்று அளவிடமுடியாமல் இருக்கையேயாகும். பரமேஷ்டீ புமான், விஶ்வ: நிவ்ருத்த:, ஸர்வ: என்று சொல்லப்படும்

ஸ்வாபி₄மத—

---

*நித்யத்₃ரவ்யமென்னவொண்ணாது. அவஸ்தா₂ந்தராபத்தியில் லாமையாலே பரிணாமஸ்வபா₄வமென்னவொண்ணாது. ப₄க₃வத் ஸங்கல்பத்தாலே சிலவுண்டாகச் சொல்லுகையாலே ஏகரூபம் என்னவொண்ணாது. ஆகையால், அளவுடையராயிருக்கும் பரமயோகி₃களாலும் பரிச்சே₂தி₃க்க வொண்ணாதாயிருக்குமாய்த்து தே₃ஶம். (ஸ்வாபி₄மத) "அன்புற்றமர்ந்துறைகின்ற" என்கிறபடியே ஆத₃ரித்து வர்த்திக்கிறபடியாலே அபி₄மத*

---

ஐந்து உபநிஷத்துக்களால் ஆனதாகையாலே, இதை 'நித்யத்₃ரவ்யம்' என்றும் சொல்லமுடியாது. ஶுத்₃த₄ ஸத்வமாய் இருக்கும் இதன் நிலைக்கு என்றும் மாறுபாடு இல்லாமையாலே 'மாறுபடக்கூடியது' என்றும் சொல்லமுடியாது. எம்பெருமானுடைய ஸங்கல்பத்தாலே கோபுரம், மண்டபம், ஆறு, குளம் முதலானவையாகப் பரிணமிக்கையாலே 'ஒருபடிப்பட்டது' என்றும் சொல்லமுடியாது. ஆகையால் மிகச்சிறந்த ஜ்ஞாநத்தையுடைய பரம யோகி₃களாலும் அளவிடவொண்ணாதது இந்த தேசம் என்று சொல்லப்படுகிறது. ஸ்ரீவைகுண்ட க₃த்₃யத்தில் மூன்றுவது சூர்ணையில் ஸ்வாமி எம்பெருமானார்—

**"ப்₃ரஹ்மாதீ₃நாம் வாங்மநஸ – அகோ₃சரே ஸ்ரீமதி**
**வைகுண்டே₂ தி₃வ்யலோகே, ஸநகவிதி₄ ஶிவாதி₃பி₄ரபி**
**அசிந்த்ய ஸ்வபா₄வைஶ்வர்யை: நித்ய ஸித்₃தை₄:......"**

என்று இவ்விஷயத்தை அநுஸந்தித்தது இங்கு அறியத்தக்கது. (ஸ்வாபி₄மத) "இன்பம் பயக்க எழில்மலர் மாதரும் தானும் இவ்வேழுலகை—இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான்" [திருவாய் 7-10-1] என்று நம்மாழ்வார் அருளியபடியே, எம்பெருமான் மிகவும் ஆர்வத்துடன் எழுந்தருளியிருக்கும் தேசமாகை

**விவித₄—விசித்ராநந்த—போ₄க்₃ய—**
**போ₄கோ₃பகரண—போ₄க₃ஸ்த₂ாந—ஸம்ருத்₃த₄—**
**அநந்தாஶ்சர்யாநந்தமஹாவிப₄வாநந்த—பரிமாண—**
**நித்ய—நிரவத்₃ய—நிரதிஶய—வைகுண்ட₂நாத₂ !**

---

மாய். (விவித₄ விசித்ர) நாநாவித₄மாய். (அநந்த) முடிவின் றிக்கேயிருப்பதான. (போ₄க்₃ய போ₄கோ₃பகரண போ₄க₃ ஸ்த₂ாநஸம்ருத்₃த₄) போ₄க்₃யங்களான அப்ராக்ருதமான ஶப் த₃ாதி₃ விஷயங்களென்ன, போ₄கோ₃பகரணங்களான சூட்டு நன்மாலை பரிஜநபரிச்ச₂த₃ாதி₃களென்ன, போ₄க₃ஸ்த₂ாநங் களான தே₃ஶவிஶேஷங்களென்ன இவற்றாலே ஸம்ருத்₃த₄மா யிருந்துள்ள. (அநந்தாஶ்சர்ய) அளவிறந்த ஆஶ்சர்யத்தை உடைத்தான. (அநந்த மஹாவிப₄வ) அநந்தோத்₃யாந நதீ₃தடாகாதி₃லக்ஷணமான விப₄வத்தையுடைத்தாயிருக்கை.

---

**विविधत्वं जातिभेदः । एकैकस्य व्यक्त्यानन्त्यं अनन्तशब्दार्थः । आश्चर्यतारूपेण आनन्त्यं वा । विभवः— आयतनाद्बहिः भोग्यसमृद्धिः । स्रक्चन्दनादिव्यतिरिक्तरथादिसमृद्धिर्वा । नित्यं— नित्यसंस्थानम् ।**

---

யாலே அவனுக்கு மிகவும் இனியது என்று கருத்து. (விவித₄ விசித்ர) பரமபதத்திலுள்ள பொருள்கள் பலவிதமானவையாய் ஒவ்வொன்றும் ரூபம் கந்தம் முதலானவற்றில் மிகச்சிறந்ததாயிருக்கும் என்று கருத்து. (அநந்த) அங்குள்ள பொருள்களுக்கு எண்ணிக்கையில்லை என்று கருத்து. ஒவ்வொரு வகையிலும், எண்ணிக்கையற்ற பொருள் கள் இருக்கும் என்றும் கொள்ளலாம். (போ₄க்₃ய போ₄கோ₃பகரண போ₄க₃ ஸ்த₂ாந ஸம்ருத்₃த₄) அப்ராக்ருதமான ஶப்₃த₃ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தங்களாகிற விஷயங்கள் "போ₄க்₃யங்கள்" எனப்படுகின்றன. "சூட்டு நன் மாலை" [திருவிருத்தம் 21] முதலான ப்ரமாணங்களில் சொல்லப்படும் மாலை திருவாபரணம் முதலியவையும். அனந்தன், க₃ருடன் முதலான பரிஜனங்களும், குடை, சாமரம் முதலான பரிச் சரங்களும் எம்பெருமானுடைய போ₄க₃த்தை வளர்க்கும் போ₄கோ₃ப கரணங்களாகும். மண்டபம், நந்தவனம் முதலான இடங்கள் போ₄க₃ஸ்த₂ானங்கள் ஆகும். இம்மூன்றாலும் நிறைந்திருப்பது பரம பதம் என்றபடி. (அநந்த-ஆஶ்சர்ய) அளவற்ற ஆச்சர்யத்தை உடை

அநந்தாஸ்சர்யமாகையாவது — க்ருதகம் என்ருதல், நவம் என்ருதல், புராதநம் என்ருதல் சொல்லவொண்ணுதே அக்ருத்ரிமமாய், ப்ரதிக்ஷணம் அபூர்வமாயிருக்கை. மஹத்வமாவது- இவற்றுள் ஒரொன்றே போ₄க்தாக்களால் அநுப₄வித்து முடிக்க வொண்ணுதிருக்கை. (அநந்த பரிமாண) ஆயாம விஸ்தாரங்களால் அளவிறந்திருக்கை. (நித்ய நிரவத்₃ய நிரதிஶய வைகுண்ட₂நாத₂) ஸதை₃கரூபமாய், ஹேயப்ரத்யநீகமாய், ஸர்வப்ரகாரத்தாலும் அதிஶயிதமான ஸ்ரீவைகுண்ட₂த்துக்கு நாத₂னுனவனே! பரமபத₃த்தில் போ₄க்தாக்களைச் சொல்லா

---

निरवद्येति -- अवद्यादयो न तत्रत्यानामित्यर्थ। निरतिशयेति अनुत्तमवत् ।

---

யது பரமபதம் என்றபடி. (அநந்த மஹாவிப₄வ) பலபல சோலைகள், நதிகள், குளங்கள் முதலான செல்வங்களை உடையது பரமபதம் என்றபடி. அங்குள்ள சோலை முதலானவை ஒரு காலத்தில் உண்டு பண்ணப்பட்டது என்ருே, புதிதானது என்ருே, மிகப்பழயது என்ருே சொல்லமுடியாதபடி இயற்கையானவையாய் ஒவ்வொரு கணத்திலும் புதிதுபுதிதாக இருக்கையாலே “அநந்தாஶ்சர்ய” என்று சொல்லப் படுகிறது. அங்குள்ள சோலைகள் முதலான செல்வங்களில் ஒவ்வொன்றே எவராலும் அனுபவித்து முடிக்கவொண்ணுதபடியிருக்கையாலே “மஹாவிப₄வம்” எனப்படுகிறது. (அநந்த பரிமாண) நீளம் அகலம் உயரம் பரப்பு முதலானவற்றால் அளவற்றிருப்பது பரமபதம். “பாதோ₃ஸ்ய விஶ்வா பூ₄தாநி த்ரிபாத₃ஸ்யாம்ருதம் தி₃வி” [புருஷஸூக்தம் 1-3] [இவ்வுலகிலுள்ள எல்லாப் பொருள்களும் அவனுடைய செல்வத்தில் கால் பகுதியாகும். அவனுடைய செல்வத்தில் அழியாத முக்கால்பகுதி பரமபதத்தில் உள்ளது] என்று சொல்லப் பட்டதன்ருே. (நித்ய நிரவத்ய நிரதிஶய வைகுண்ட₂நாத₂) எப்போதும் ஶுத்₃த₄ஸத்வமாகிற ஒரே குணத்தையுடையதாய், தாழ்வுகள் அற்றிருப்பதோடன்றியில் அங்கு செல்பவர்களையும் தாழ்வற்றவர்களாக்குவதாய், எல்லா வகையிலும் மிகச்சிறந்ததான ஸ்ரீவைகுண்டத்துக்கு நாதனுனவனே! பரமபதத்தை இவ்வளவு விரிவாக வர்ணித்தவர்

*தொழிந்தது, "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்ப" என்கிறபடியே இவர்கள் பே₄ாக₃த்துக்குக் கைதொடு மானமாம் ஆகாரமொழிய 'அஹம் மம' என்றிருப்பாரில்லாமை யாலே. ஆனால் ஶ்ருதி 70. (அந்நாத₃:) என்று போ₄க்தாக் களைச் சொல்லிற்றில்லையோவென்னில்; தான் அங்குத்தைக்கு ஸ்ரக்சந்த₃நாதி₃களோபாதி பே₄ாகே₃ாபகரணமாயிருக்கும் ருப்பு புருஷார்த்த₂மாகையாலே சொல்லிற்றித்தனை. அங்ஙன்ன்றகில் 70. (அஹமந்நம்) என்றத்தோடு விரோதி₄க்குமிறே.*

---

அதை அனுபவிப்பவர்களை இந்த வாக்யத்தில் சொல்லாமல் இருந்தது, "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்ப" [திருவாய் 4-9-10] என்று நம்மாழ்வார் பெரிய பிராட்டியாரும் பரமபத நாதனுமே அங்கு இருப்பதாகச் சொன்னதுபோலே, மற்றவர்களெல்லாம் இவர்களுடைய பே₄ாக₃த்துக்குக் கருவியாய் இருப்பவர்களேயொழிய, தனித்துத் தமக்கு ஒரு பே₄ாக₃ம் இல்லாமல் இருப்பவர்களாகையாலே — என்று கொள்ளுவது.

70. **ஏதத் ஸாம கா₃யந்நாஸ்தே। ஹா வுஹா வுஹா வு।**
**அஹமந்நமஹமந்நமஹமந்நம்। அஹமந்நாதோ₃ऽஹ-**
**மந்நாதோ₃ऽஹமந்நாத₃: ॥** [தை-ப்₄ருகு₃ 10-6]

[முக்தாத்மா (பரமாத்மாவையடைந்து) இந்த ஸாமத்தைப் பாடிக் கொண்டிருக்கிறான்,—ஹா வுஹா வுஹா வு; நான் (பரமாத்மாவுக்கு அன்னமாயிருப்பவன்; அன்னமாயிருப்பவன்; அன்னமாயிருப்பவன். நான் (பரமாத்மாவின் உகப்பாகிற) அன்னத்தை பு₄ஜிப்பவன்; அன்னத்தை பு₄ஜிப்பவன்; அன்னத்தை பு₄ஜிப்பவன்] என்று வேத₃ வாக்யமும் "அந்நாத₃:" என்று அனுபவிக்கும் நித்ய ஸூரிகளைச் சொன்ன போதிலும், மாலை சந்தனம் முதலானவைபோலே அங்குள்ள நித்ய ஸூரிகளும் தங்களை தி₃வ்ய த₃ம்பதிகளின் போ₄க₃த்திற்குக்

ஸ்வஸங்கல்பாநுவித₄ாயி—

(ஸ்வஸங்கல்பேதி) இப்படி அப்ராக்ருதமான நித்ய விபூ₄தி யுக்தனுக்கு ஆவதழிவதாய், லீலாரஸஹேதுவான லீலா விபூ₄தியோக₃ம் சொல்லுகிறது மேல் (ஸ்வஸங்கல்பாநுவித₄ாயிஸ்வரூபஸ்தி₂தி ப்ரவ்ருத்தி) ஸ்வஸங்கல்பத்தைப் பின் செல்லாநின்றுள்ள ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளை உடைத்தாய். ப்ரக்ருதியாவது — ஸத்வாதி₃கு₃ணத்ரயாத்மகமாய், அநந்தமாய், விசித்ரமான அவஸ்த₂ாவிஶேஷ ரூபபரிணாமத்துக்கு ஸமர்த்த₂மாயிருந்துள்ள ப்ரத₄ாநம். ப்ரக்ருதிக்கு ஸ்வ

---

கருவியாய் இருப்பதையே புருஷார்த்த₂மாகக் கொண்டிருப்பவர்களாகவே சொல்லிற்றேயொழிய, தனித்து ஒரு போ₄க₃த்தை உடையவர்கள் என்னும் கருத்தாலே சொல்லவில்லை. அந்த வாக்கியத்திலேயே முதலில் "அஹம் அந்நம்" என்று தான் எம்பெருமானுக்கு அன்னம் (உணவு) போலே போ₄க்₃யமாயிருப்பவன் என்று அனுஸந்திப்பதாகவே சொல்லப்பட்டது ஆகையால் அந்த வாக்கியத்திற்குப் பொருந்தும் படியாகப் பொருள் கொள்ளும்போது எம்பெருமானுடைய உகப்பே நித்யர்களுக்கு போ₄க்₃யமேயொழிய தனித்து ஒரு போ₄க₃மில்லை என்று விளங்கும்.

இவ்வண்ணமாக ஶுத்₃த₄ ஸத்வமயமாகையாலே அப்ராக்ருதமான நித்ய விபூ₄தியோடு கூடிய எம்பெருமானுக்கு "மிஶ்ர" (ரஜஸ் தமஸ்ஸுக்களோடு கூடிய) ஸத்வ குணத்தையுடையதாய், ஸ்ருஷ்டி காலத்தில் படைக்கப்பட்டு ப்ரளய காலத்தில் அழிவதாய், எம்பெருமானுக்கு லீலா ரஸத்தை (விளையாட்டுச் சுவையை) அளிப்பதான லீலா விபூ₄தியோடு கூடியிருக்கையாகிற பெருமையை அடுத்த வாக்யத்தில் கூறுகிறார் (ஸ்வ ஸங்கல்பாநுவித₄ாயி ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்தி) இந்தத் தொடரும், "ஸ்வஶேஷதைக ஸ்வப₄ாவ" என்னும் அடுத்த தொடரும் ப்ரக்ருதி, புருஷன், காலம் என்னும் மூன்றுக்கும் விஶேஷணமாய் இருக்கின்றன. எம்பெருமானுடைய ஸங்கல்பத்தைப் பின்பற்றி நிற்கும் ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளையுடையதாய் இருப்பவை இந்த மூன்று தத்துவங்களும் என்றுகருத்து. இந்த மூன்று தத்துவங்களில் முதலாவதான ப்ரக்ருதியாவது - ஸத்வம் ரஜஸ் தமஸ்

ஸ்வரூப—ஸ்திதி—ப்ரவ்ருத்தி—

---

ரூபமாவது, — ஸத்வாதி₃ கு₃ணகமான ஜட₃த்வம். ஸ்தி₂தியாவது,— சேதநருக்கு போ₄க₃மோக்ஷ ஸாத₄நாநுஷ்டா₂நத்துக்கும், ப₂லாநுப₄வத்துக்கும் உபகரணமாயிருக்கை. ப்ரவ்ருத்தியாவது.—தத₃ர்த்த₂மாக போ₄க்₃யபோ₄கோ₃பகரண போ₄க₃ஸ்தா₂நரூபேண பரிணமிக்கை.

ஸம்ஸாரிசேதநனுக்கு ஸ்வரூபமாவது:—அசித்₃விஶிஷ்டாகாரத்வம். ஸ்தி₂தியாவது—அந்நாதி₃களால் த₄ரிக்கை. ப்ரவ்ருத்தியாவது, — புண்யபாபரூப கர்மாநுஷ்டா₂னமென்ன, தத்ப₂லாநுப₄வமென்ன இவை.

---

என்னும் மூன்று குணங்களோடு கூடியதாய் நித்ய விபூ₄திக்குக் கீழே எல்லையற்று விரிந்திருப்பதாய், ஆச்சர்யமான நிலைகளாகப் பரிணமிக்க வல்லதாயிருக்கும் "ப்ரதா₄நம்" என்னும் 'அசித்' தத்வமாகும். ப்ரக்ருதிக்கு ஸ்வரூபமாவது—ஸத்வ ரஜஸ்தமோ கு₃ணங்களையுடையதாய், தானே ப்ரகாசிக்காத ஜட₃மாயிருக்கை. அதற்கு ஸ்தி₂தியாவது—ஸம்ஸாரி ஜீவர்களுக்கு இவ்வுலக போ₄க₃ங்களுக்கும் மோக்ஷத்திற்கும் உறுப்பான ஸாத₄னங்களை அனுஷ்டிப்பதற்கும், அந்த போ₄க₃ ப₂லங்களை அனுப₄விப்பதற்கும் கருவியாய் இருக்கை. ப்ரவ்ருத்தியாவது—முற்கூறிய ஸாத₄நாநுஷ்டானத்திற்கும், ப₂லாநுப₄வத்திற்கும் உறுப்பாக, பல போ₄க்₃யப்பொருள்களாகவும் போ₄க₃த்தை அனுபவிப்பதற்கு வேண்டிய உபகரணங்கள் எனப்படும் கருவிகளாகவும், அந்த போ₄க₃த்தை அனுப₄விக்கும் இடங்களான ஸ்தா₂னங்களாகவும் பரிணாமம் அடைகை.

மூன்று தத்வங்களில் இரண்டாவதான ஸம்ஸாரி ஜீவர்களுக்கு ஸ்வரூபமாவது—முற்கூறிய அசித்தின் பரிணாமமான ஶரீரத்தோடு கூடியிருக்கை. ஸ்தி₂தியாவது—அன்னம், பானம் முதலானவற்றால் தரித்து நிற்கை. ப்ரவ்ருத்தியாவது—புண்யம் என்று சொல்லப்படும் நற்கருமங்களையும், பாபம் என்று சொல்லப்படும் தீயகருமங்களையும் அநுஷ்டிப்பது, அவற்றின் ப₂லமான ஸுக₂ து₃க்க₂ங்களை அநுபவிப்பது முதலானவை.

ஸ்வமேஷைதகஸ்வபாவ—ப்ரக்ருதி—புருஷ-காலாத்மக—

காலத்துக்கு ஸ்வரூபமாவது,—அசித்த்வம். ஸ்திதியாவது,—சேதநாசேதநங்களுடைய பரிணமங்களுக்கு நிர்வாஹகமாயிருக்கை. ப்ரவ்ருத்தியாவது, — நிமேஷகலாகாஷ்டாதிரூபத்தாலே உத்பத்திவிநாஶாதிகளை ப்ரவர்த்திப்பிக்கை. (ஸ்வமேஷைதகஸ்வபாவ) தனக்கு அநந்யார்ஹமேஷமாயிருக்கை, (ப்ரக்ருதிபுருஷகலாத்மக) இப்படிப்பட்ட ப்ரக்ருதி

अथ लीलाविभूतिः। नियमनं धारणं च सिद्धं स्वसङ्कल्पेति। शेषत्वमाह स्वेति। कालस्य प्रकृत्यनन्तरानुक्तिः प्रकृतिपुरुषयोस्संयोग-

மூன்ருவது தத்துவமான காலத்துக்கு ஸ்வரூபமாவது—அறிவில்லாத அசேதனமாய் இருக்கை. ஸ்திதியாவது—சேதனுசேதனங்களுடைய மாறுபாடுகளுக்குத் துணை புரிவதாய் இருக்கை. ப்ரவ்ருத்தியாவது—நிமிஷம், கலை, காஷ்டை, நாழிகை, பகல், இரவு முதலானவையாய் ஆகி, பொருள்களின் உற்பத்தி விநாசம் முதலானவற்றை நடத்திவைக்கை. இந்த ப்ரக்ருதி புருஷ கால தத்வங்கள் மூன்றும் எம்பெருமானுக்கு மரீரமாய் இருப்பவை. மரீர லக்ஷணங்களில் நியமிக்கப்படுவதாய் இருக்கை, தரிக்கப்படுவதாய் இருக்கை என்னும் இரண்டும் 'ஸ்வ ஸங்கல்பாநு விதாயி ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி' என்னும் தொடரால் சொல்லப்பட்டது. சரீரத்தின் மற்ருெரு லக்ஷணமான மேஷத்வத்தை, "ஸ்வமேஷைதக ஸ்வபாவ" என்னும் அடுத்த தொடரால் காட்டுகிருர்—(ஸ்வமேஷைதக ஸ்வபாவ) எம்பெருமானுக்குச் சிறப்பை விளக்கும் மேஷப்பொருளாய் இருப்பதையே இயல்வாகக் கொண்டதாய், வேறு எவர்க்கும் அப்படியாகாததாய் இருக்கை என்று கருத்து. (ப்ரக்ருதி புருஷ காலாத்மக) நியமிக்கப்படுவதாய், தரிக்கப்படுவதாய் மேஷப்பொருளாய் இருப்பவை ப்ரக்ருதி, புருஷன், காலம் என்னும் மூன்று தத்வங்களும் என்று கருத்து. ப்ரக்ருதி என்னும் ஒரு 'அசித்' தத்வத்தைச் சொன்னபிறகு 'காலம்' என்னும் மற்ருெரு 'அசித்' தத்வத்தைச் சொல்லாமல் ப்ரக்

**விவித₄—விசித்ராநந்த—பே₄ாக்₃ய—**

புருஷ காலரூபமாய், (விவித₄) அத ஏவ விவித₄மாய். (விசித்ர) விசித்ரமாய், (அநந்த) அநந்தமான, (பே₄ாக்₃ய) பே₄ாக்₃ய மென்ன, (பே₄ாக்த்ருவர்க்க₃) போக்த்ருவர்க்கமென்ன, (பே₄ாகே₃ாபகரண) போகோபகரணங்களென்ன, (பே₄ாக₃

**वियोगहेतुत्वात् । *"तस्यैव येऽन्येन धृते वियुक्ते रूपान्तरे" इति**

ருதி புருஷர்களுக்குப் பிறகு அதைச் சொல்லுவானேன்? எனில்— ப்ரக்ருதி புருஷர்கள் ஒன்று சேர்வதற்கும், பிரிவதற்கும் காலம் காரண மாயிருக்கையாலே, காலத்தை அவ்விரண்டு தத்வங்களுக்கும் பிறகு சொல்லிற்று என்று ஸுதர்சன ப₄ட்டர் உரையிட்டார்.

**"விஷ்ணோ: ஸ்வரூபாத் பரதோதி₃தே த்₃வே ரூபே ப்ரத₄ாநம் புருஷஶ்ச விப்ர ।**
**தஸ்யைவ யேऽந்யேந த்₄ருதே வியுக்தே ரூபாந்தரம் தத்₃த்₃விஜ காலஸம்ஜ்ஞம் ॥"** [வி.பு. 1 2-24]

[அந்தணரே! விஷ்ணுவினுடைய மேலான திருமேனியிலிருந்து உண் டானவை ப்ரக்ருதி புருஷன் என்னும் இரண்டு தத்துவங்கள். அவ்விரு தத்துவங்களும் எதனால் சேர்க்கப்பட்டு, பிரிக்கவும் படுகின்றனவோ அந்தத் தத்துவம் காலம் எனப்படுகிறது] என்னும் விஷ்ணு புராண ஶ்லோகத்தையும் இதற்கு ப்ரமாணமாகக் காட்டினார். (விவித₄) இப்படி மூன்று வகைப்பட்டிருப்பதாலே பலவகைப்பட்டதாய். ஶப்₃த₃ ஸ்பர்ஶாதி₃ கு₃ணங்களையிட்டு ப்ரக்ருதி தத்வம் பலவகைப்பட்டதாக வும், தே₃வர், திர்யக், மநுஷ்யர் ஸ்த₂ாவரம் என்று புருஷ தத்வம் பல வகைப்பட்டதாகவும், சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்று காலதத்வம் மூன்றுவகைப் பட்டதாகவும் இருப்பதைக் குறிப்பதாகவும், கொள்ளலாம். (விசித்ர) ஒவ்வொரு பிரிவிலும் ஆஶ்சர்யமான பல வகைகள் இருப்பதைச் சொல்லுகிறது. (அநந்த) இப்பிரிவுகளுக்கு எண்ணிக்கையில்லை என்றபடி. விவித₄, விசித்ர, அநந்த என்னும் பதங்களை, 'பே₄ாக்₃ய', 'பே₄ாக்த்ருவர்க்க₃', 'பே₄ாகே₃ாபகரண' 'பே₄ாக₃ஸ்த₂ாந' என்னும் நான்கு பத₃ங்களுக்கும் விஶேஷணமாகவும் கொள்ளலாம். (பே₄ாக்₃ய) இனிய பொருள்கள். (பே₄ாக்த்ருவர்க்க₃)

பே₄ாக்த்ருவர்க்க₃— பே₄ாகே₃ாபகரண—பே₄ாக₃ஸ்த₂ாநரூப

---

ஸ்த₂ாந) பே₄ாக₃யோக்₃யங்களான ஸ்த₂ாநவிஶேஷங்களென்ன, (ரூப) இவற்றை வடிவாகவுடைய, (நிகி₂ல ஜக₃து₃த₃ய விப₄வ லய லீல) ஸகலலோகங்களினுடைய உத்பத்தி ஸ்தி₂தி ஸம்ஹாரங்களை லீலையாக உடையவனே! விசித்ரமாகையாவது,—நாநாவித₄மாயிருக்கை. அநந்தமாகையாவது,—தொகையின்றிக்கேயிருக்கை. பே₄ாக்த்ருவர்க்க₃மாவது,—தே₃வாதி₃ ஶரீரங்களிலே அஹம்பு₃த்₃தி₄யாலே ஸ்வதந்த்ரராய், ஶப்₃தா₃தி₃ விஷ

---

ल्यते । शब्दस्पर्शादिरूपेण वैविध्यम् । तदवान्तरभिदया विचित्रत्वम्।

---

அந்த இனிய பொருள்களை அனுபவிக்கும் ஜீவர்கள். (பே₄ாகே₃ாபகரண) பே₄ாக₃ங்களை அனுப₄விப்பதற்குக் கருவியாய் இருக்கும் இந்திரியங்கள் முதலானவை. (பே₄ாக₃ஸ்தா₂ந) இந்த பே₄ாக₃ங்களை அனுப₄விக்கக்கூடிய இடங்களான பூ₄மி, ஸ்வர்க்க₃ம் முதலானவை. (ரூப) இவற்றை வடிவாக உடையதாய் இருப்பது "நிகி₂ல ஜக₃த்" என்று அடுத்தபடி சொல்லப்படும் அகில உலகமும். (நிகி₂ல ஜக₃து₃த₃ய விப₄வ லய லீல) எல்லா உலகங்களுக்கும் ஸ்ருஷ்டி ரக்ஷணை ஸம்ஹாரங்களைச் செய்வதை விளையாட்டாக உடையவனே! "இன்புறும் இவ்விளையாட்டுடையான்" [திருவாய் 3-10-7] என்று நம்மாழ்வாரும்,

"நாட்டைப் படையென்று அயன் முதலாத் தந்த நளிர்மாமலருந்தி
வீட்டைப்பண்ணி விளையாடும் விமலன் தன்னைக் கண்டீரே!"

[நாச் திரு 14-9] என்று நாச்சியாரும் உலகைப் படைத்தல் முதலானவற்றை எம்பெருமானுக்கு விளையாட்டாகக் கூறினார்களன்றோ. 'விவித₄ம்' என்று பலவகைப்பட்டிருப்பதையும், "விசித்ரம்" என்று அவை ஒவ்வொன்றிலும் பலவகைகளிருப்பதையும் காட்டுகிறது. "அநந்தம்" என்று எண்ணிக்கையற்றிருப்பதைக் காட்டுகிறது. "போக்த்ரு வர்க்க₃ம்" என்று தேவர் மனிதர் முதலான ஶரீரங்களில் 'நான்' என்னும் எண்ணத்தைக் கொண்டு சுதந்திரர்களாகத் திரிபவர்

**நிகி₂ல—ஜக₃து₃த₃ய—விப₄வ—லய—லீல!**

---

யங்களுக்கு போ₄க்தாக்களாகை. ப்₃ரஹ்மாதி₃களுக்கு ஸ்ரஷ்ட்ருத்வாதி₃களுண்டாகிறது ஈஶ்வரனுக்கு உபகரணதயாவல்லது ஸ்வதந்த்ரதயாவல்ல. ஆனால் து₃:க்க₂ரூபமாயிராதோ? என்னில்: அவர்களுக்குத் தப:ப₂லமாய் வந்ததாகையாலே ஸுக₂ரூபமாயிருக்கும். நித்யவிபூ₄தியோக₃த்தால் வந்த பூர்த்தியை உடையனாகையால் ஈஶ்வரனுக்கு இது லீலையாயிருக்கும். ஆக நாராயண ஶப்₃தா₃ர்த்த₂ம் சொல்லிற்றாயிற்று.

---

**निखिलशब्देन ब्रह्मादिभ्यः द्युतिः ॥**

---

களாய், ஶப்தம், ஸ்பர்சம் முதலான விஷயங்களை அனுபவிப்பவர்களைக் காட்டுகிறது. "நிகி₂ல ஜக₃த்" என்பதால் ஓர் அண்டத்தில் வ்யஷ்டிப் பொருள்களை மாத்திரம் படைப்பது முதலானவற்றைச் செய்யும் பிரமன், சிவன் முதலானவர்களைக் காட்டிலும் அகி₂ல லோக ஸ்ரஷ்டாவும், அகி₂ல ஸம்ஹர்த்தாவுமான இவனுக்கு உள்ள சிறப்பு காட்டப் படுகிறது. மேலும் பிரமன் முதலானோர் தமக்குரிய படைப்பு முதலானவற்றைச் செய்வதும் அந்தர்யாமியான எம்பெருமானுக்குக் கருவியாய் இருந்துகொண்டே செய்கிறார்களேயல்லாது சுதந்திரராகச் செய்யவில்லை. 'அவனால் தூண்டப்பட்டு இவர்கள் படைப்பு முதலானவற்றைச் செய்வதானால் அது அவர்களுக்குத் துன்பத்தை விளைக்காதோ?' எனில்—அவர்கள் தவம் புரிந்து இந்தப் படைப்புத் தொழில் முதலானவற்றைப் பெற்றவர்களாகையாலே அது இன்பத்தை விளைக்குமேயொழியத் துன்பத்தைத் தராது. ஆனந்த மயமான நித்ய விபூ₄திக்குத் தலைவனாய் இருப்பதால் வந்த நிறைவை உடையவனாகையாலே, எம்பெருமானுக்கு இந்த விபூ₄தியைப் படைப்பது முதலானவற்றைச் செய்வது விளையாட்டாகவே இருக்கும். அதனாலேயே இது லீலாவிபூ₄தி என்று பெயர் பெற்றது. ஆக, இந்த ஐந்தாவது சூர்ணையில் இதுவரையில் "நாராயண" ஶப்₃த₃த்தின் பொருள் விவரிக்கப் பட்டதாயிற்று.

## முக்கியமான குறிப்பு

இதற்குமேல் பெரியவாச்சான் பிள்ளையின் வ்யாக்யானம் மிகுந்த பாடபேதங்களையுடையதாய், பெரும்பகுதி இரண்டு வ்யாக்யானங்களாகவே அமைந்திருப்பதாய் உள்ளது. ஆகையால் அவை முழுவதையும் அச்சிட்டு, கீழே விவரணம் செய்தால் க்ரந்தம் மிகப்பெரியதாகும். மேலும் அண்மையில் பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யானத்தின் மூன்றாவது பதிப்பு நம்மால் வெளியிடப்பட்டுள்ளது. ஆகையால் அதை ஸேவிக்க விரும்புகிறவர்கள் அப்புத்தகத்தை ரூ. 60-00. விலையில் நம்மிட மிருந்து பெற்றுக்கொள்ளலாம். ஆகையால் இனி இந்த நான்கா வது பதிப்பில் பெரியவாச்சான்பிள்ளையின் க₃த்₃ய வ்யாக்யானத் தின் மூலத்தை அளிக்காமல், நம்முடைய விவரணத்தை மட்டுமே கொடுக்கிறோம்.

ஸர்வேஶ்வரன் திருவடிகளை **ஆஶ்ரயிப்பது** உபேயமாகிற கைங்கர் யத்தில் ஈடுபாடும், **"உபாயம் அவனே"** என்கிற உறுதிப்பாடும் உண்டானால்தான் கைகூடுமாகையாலே அவ்விரண்டும் விளைவதற்காக முதல் சூர்ணையில் பிராட்டி திருவடிகளிலே சரணம் புகுந்தார். இரண்டு மூன்று நான்கு சூர்ணைகளாலே பிராட்டியின் அருளாலே அவ்விரண் டையும் பெற்றார். அடுத்தபடி, **"ஆஶ்ரயிக்கத்தக்கவன் யார்?"** என்று ஆராயும்போது,

**71. கார,ணம் து த்₄யேய:** **[அத₂ர்வஶிகை₂]**

[காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது.]

**72. யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்**

**யோ வை வேத₃ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை।**

**தம் ஹ தே₃வமாத்மபு₃த்₃தி₄ப்ரஸாத₃ம்**

**முமுக்ஷுர் வை ஶரணமஹம் ப்ரபத்₃யே॥**

[ஶ்வே 6-18]

[எவன் பிரமனை முன் படைத்தானோ, எவன் வேத₃ங்களையும் அவ னுக்கு உபதே₃ஶித்தானோ, அப்படிப்பட்ட தே₃வனும், தன் விஷயமான ஜ்ஞானத்தை வெளிப்படுத்துபவனுமான பரமபுருஷனை, மோக்ஷமடைய

விரும்பும் நான் ஶரண்மடைகிறேன்.] என்கிற உபநிஷத் வாக்யங்களின்படி எல்லாவுலகிற்றும் காரணமாயிருக்கும் நாராயணனே ஆஶ்ரயிக்கத்தக்கவனாகையாலே, ஐந்தாவதான "அகில ஹேய" என்று தொடங்கும் சூர்ணையில் 'நார' ஶப்தத்தால் சொல்லப்படும் எல்லாப் பொருள்களுக்கும் இருப்பிடமான திவ்யாத்ம ஸ்வரூபத்தை முதலில் சொல்லி, அடுத்தபடி ஸ்வரூபத்தையும் குணங்களையும் வெளிப்படுத்தும் திவ்யமங்கள விக்ரஹத்தைச் சொல்லி, அதற்கு அடுத்தபடியாக அத்திருமேனிக்கு அலங்காரமான திவ்யாபரணங்களைச் சொல்லி, அடுத்தபடி இவையனைத்துக்கும் காவலான திவ்யாயுத ஸமூஹத்தைச் சொல்லி, அடுத்தபடி இத்தகைய பெருமையுடைய எம்பெருமானின் இனிமை ஆளரவமற்ற காட்டில் எரித்த நிலாவைப்போல் வீணாகாதபடி அருகிலேயே இருந்து அனுபவிக்கும் திவ்ய மஹிஷிகளைச் சொல்லி, அடுத்தபடி இச்சேர்த்தியழகைக் கண்டு அனுபவித்துத் தோற்றுத் தங்களை அடிமையாக எழுதிக் கொடுத்துக் கைங்கர்யம் செய்யும் திவ்ய பரிஜனங்களைச் சொல்லி, அடுத்தபடி இத்தகைய கைங்கர்யம் செய்வதற்கே ஏற்பட்ட இடமாய், அதை வளர்ப்பதான நித்ய விபூதியைச் சொல்லி, அடுத்தபடி படைத்தல் காத்தல் அழித்தல் ஆகியவைகளுக்கு இலக்கான லீலாவிபூதியைச் சொல்லி, இவ்வண்ணமாக **"அவன் உபய விபூதிநாதன்"** என்று காட்டுவதன்மூலம் நாராயண ஶப்தார்த்தத்தைப் பேசியருளினர்.

இனி அந்த நாராயணனை உபாயமாகப் பற்றுவதே அடுத்தபடி செய்யவேண்டியது. இப்படி ஆஶ்ரயிப்பதற்கு உதவி புரியும் எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லுகிறது — "அபாரகாருண்ய!" என்று தொடங்கும் விளியிலிருந்து. "அந்த விளிக்கு முன்னால் எட்டுத் திருநாமங்களையிட்டு எம்பெருமானை விளிப்பதன்மூலம் எட்டு குணங்கள் சொல்லப்படுகின்றனவே; இவற்றின் தாத்பர்யம் என்ன?" எனில் — மேலே செய்யப்படும் ஆஶ்ரயணத்திற்கும் உதவி புரிபவையாய் இது வரையில் சொல்லப்பட்டவற்றைத் திருப்பிச் சொல்லுவதாய் இருக்கின்றன இந்த எட்டு குணங்களும் என்று கண்டுகொள்வது. இது வரையில் ஆஶ்ரயிக்கத்தக்கவனான நாராயணனைப் பற்றிச் சொல்லி விட்டதாகில் உடனே அவனை ஆஶ்ரயிக்கக் கூடாதோ? எனில்: கூடாது. ஆசார்யனின் உபதேசத்தை முன்னிட்டுக் கொண்டே எம்பெருமானை ஆஶ்ரயிக்க வேண்டும். அப்படிச் செய்யும்போது ஆசார்

யனின் உபதேசத்தாலே ஈஶ்வரனே ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் இருப்பவன் என்னும் உறுதி பூண்டு அதற்குப் பிறகு அவனை ஆஶ்ர யிக்கவேண்டும். இப்படிச் செய்யாவிட்டால், அவன் நம்மை ரக்ஷிப் பானோ? அவனே உபாயமாவானோ? என்னும் ஐயங்கள் ஏற்பட இட முண்டு. அப்படி ஐயங்கள் உண்டானால் இவன் ஆஶ்ரயிப்பவன் ஆக மாட்டான் ஆகையால்,

**73. அநந்யஸாத்₄யே ஸ்வாபீ₄ஷ்டே மஹாவிஶ்வாஸ பூர்வகம்।**
**ததே₃கோபாயதா யாச்ஞா ப்ரபத்தி: ஶரணாக₃தி:**

**[பரதமுனி; விஷ்வக்-ஸம்]**

[தன்னுடைய இஷ்டம் வேறொன்றாலுமாகாதபோது, மஹா விஶ்வா ஸத்தை முன்னிட்டுக்கொண்டு, அவனொருவனையே உபாயமாக இருக்க வேண்டுமென்று யாசிப்பது ப்ரபத்தி; அதுவே ஶரணாக₃தி] என்று பாஞ்சராத்ரத்தில் சொன்ன ப்ரபத்தி லக்ஷணத்தை அனுஸரித்து இது வரையில் சொன்ன "**நாராயண**" ஶப்₃த₃ப் பொருளைத் திருப்பிச் சொல்லிக்கொண்டு, "அவனே உபாயமும் உபேயமுமாய் இருப்பவன்" என்று உறுதி கொள்கிறார். இரண்டு, மூன்று, நான்கு சூர்ணைகளில் பிராட்டியின் அருளாலே தாம் பெற்றதை அனுஸந்தி₄க்கிறார்.

இவ்வெட்டு கு₃ணங்களில் "**ஸத்யகாம, ஸத்யஸங்கல்ப, பர ப்₃ரஹ்மபூ₄த, புருஷோத்தம**" என்னும் நாலு விளிகளால் சொல்லப் படும் கு₃ணங்கள் எம்பெருமான் அனைத்தையும் படைத்தவன் என்று காட்டுகின்றன. "**மஹாவிபூ₄தே**", "**ஶ்ரீமந்**", "**நாராயண**", "**ஶ்ரீவைகுண்டநாத₂**" என்னும் மேல் நாலு விளிகளாலும் சொல்லப் படும் கு₃ணங்கள், "அவனே அடையத்தக்கவன்" என்று காட்டுகின் றன. "**ஸத்யகாம**" "**ஸத்யஸங்கல்ப**" "**பரப்₃ரஹ்மபூ₄த**" என் னும் மூன்றும், "**ஸ்வஸங்கல்பாநுவித₄ாயி........ லயலீல**" என் னும் லீலா விபூ₄தி சூர்ணையை உணர்த்துகின்றன. "**புருஷோத்தம**" "**நாராயண**" என்னும் இரண்டும், "**ஸ்வாப₄ாவிக**" என்று தொடங்கி "**கு₃ணக₃ணௌக₄ மஹார்ணவ**" என்பது ஈறான கு₃ண சூர்ணையை உணர்த்துகின்றன. "**மஹாவிபூ₄தே**" "**ஶ்ரீவைகுண்டநாத₂**" என்

ஸத்யகாம !

னும் இரண்டும். "பரமயோகி" என்று தொடங்கி, "வைகுண்ட நாத" என்பது ஈருண நித்யவிபூதி நிர்வாஹத்தை உணர்த்துகின்றன. "ஸ்ரீமந்!" என்னும் விளி, "ஸ்வாமிமத" என்று தொடங்கி, "பூமிநீளா நாயக" என்பது ஈருண மஹிஷீ நிர்வாஹத்தை உணர்த்துகிறது. "ஸ்ரீவைகுண்டநாத" என்னும் எட்டாவது விளி எம்பெரு மானை ஆஸ்ரயித்தபின்பு அவன் அடிமை கொள்ளும் தேசத்தைச் சொல்லுகிறது. அவனை ஆஸ்ரயித்துவிட்டால் அதற்குப்பின் அடிமை செய்வதேயன்றோ சேஷபூதனான ஜீவன் செய்யவேண்டியது. இதனால் எம்பெருமான் அடிமை கொள்ளும்படி அவனை அடைவதே ஆஸ்ர யணம் என்று சொல்லப்பட்டதாயிற்று.

இனி "ஸத்யகாம!" முதலான விளிகள் விவரிக்கப்படுகின்றன. எம்பெருமானுடைய திருவடிகளில் சரணம் புகுவதற்கு உறுப்பாக, சேதனர்களைப் படைத்தது முதலாக, பரம புருஷார்த்தத்துக்கு எல்லை யான கைங்கர்யம் ஈருக நடுவிலே சேதனன் பெறுபவை அனைத்தும் எம்பெருமான் இட்ட வழக்கு என்று அருளிச் செய்கிறார் எட்டு குணங் களைக் காட்டும் இந்த எட்டு விளிகளாலே.

(ஸத்யகாம) பத்த சேதனர்களுக்கு சரீரத்தோடு தொடர்பு ஏற் படுவதற்குக் காரணமான ஜகத் ஸ்ருஷ்டிக்கு உறுப்பான இருபத்து நாலு அசேதன தத்வங்களாக விரிந்திருக்கும் மூலப்ரக்ருதியின் விகார மான நித்யமான பொருள்களை உடையவன் என்கிறது.

74. காம்ய: ஸ்ப்ருஹா ஸ்மர: காம:

[வைஜயந்தீ-த்வ்யக்ஷர 1-17]

[காமஶப்தம், காமிக்கப்படும் வஸ்துவையும், ஆசையையும், மன்மத னையும் குறிக்கும்.] என்கிற வைஜயந்தி நிகண்டுவின்படி 'காம' ஶப்தம் மன்மதனையும், விரும்பப்படும் பொருளையும், விருப்பத்தையும் குறிக்கும். கீழே குணநிர்வாஹத்தில் "ஸத்யகாம" என்னும் பதம் எம் பெருமானை அடைந்தவர்களுக்கு அனுபவிக்கத்தக்கதாய், அவ்வழி யாலே எம்பெருமானுக்கும் அனுபவிக்கத்தக்கதான உபய விபூதிகளை யும் சொல்லிற்று. இங்கு "ஸத்யகாம" என்கிறது இன்புறும் விளை யாட்டுக்காக, ப்ரக்ருதி, புருஷன், காலம் என்னும் மூன்றையும் உடை கொண்ட லீலாவிபூதியை விரும்பத்தக்கதாகக் கொண்டவன் என்று கூறுகிறது. முதல் "ஸத்யகாம" பதம் விரும்பப்படும் விஷயங்களைச் சொல்லிற்று. இங்கு விருப்பத்தைச்சொல்லுகிறது என்றும்கொள்ளலாம்.

ஸத்யஸங்கல்ப !

---

''ஸத்ய'' ஶப்₃த₃ம் 'நித்யமான' என்னும் பொருளையுடையது. படைத்தலுக்கு உட்படும் ப₃த்₃த₄ ஜீவ ஸமூஹம், படைக்கப்படும்அவர்களுக்கு போ₄க்₃யமாகவும், போகோ₃பகரண மாகவும், போ₄க₃ஸ்தா₂னமாகவும் இருக்கும் மூலப்ரக்ருதி, இவற்றைக் கர்மானுகு₃ணமாக நடத்திச் செல்லுகைக்கு வேண்டிய காலம் ஆகியவற்றை ''ஸத்யகாம'' பதம் குறிக்கிறது.

உலகைப் படைப்பது முதலானவை பிரமன் முதலானார்க்கு அவர்கள் புரிந்த தவத்தின் பயனாகையாலே, போ₄க₃ரூபமாய் இருக்கும். எம்பெருமானுக்கு அவன் விரும்பிச் செய்வதாகையாலே லீலையாயிருக்கும். உலகைப் படைத்தல் முதலானவை ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டி வைப்பதாய், அவனுக்கு ஸ்வரூபநாசத்தையும் விளைப்பதாய், ஈஶ்வரனையும் மறைத்துத் தீங்கிழைப்பதாய் இருக்க, அதை ஈஶ்வரன் விரும்பும் லீலை என்று சொல்லுவது எப்படிப் பொருந்தும்? எனில்—

**75. ஶுகோ முக்தோ வாமதே₃வோ விமுக்த:**

[ஶுகர் முக்தரானார்; வாமதே₃வர் முக்தரானார்.] என்கிறபடியே, இவன் செய்யும் இக்காரியம் ஒரு சிலருக்கு முக்தியளிப்பதன் மூலம் பயனுடையதாகையாலே, மேலும் சிலரும் தன்னிடம் வரலாம் என்னும் ஆசையாலே இவனுக்கு இது விரும்பப்படும் லீலையாகிறது. அதனாலேயே இந்த லீலா விபூதியை அழித்து அழித்துப் படைப்பது, ரக்ஷிப்பது, முறைதவறி நடக்கும்போது ஸம்ஹரிப்பது என்று இதையே திருப்பித் திருப்பிச் செய்கிறான் எம்பெருமான். இது எதைப்போல என்றால், ஒரு வயல் நெடுங்காலம் சாவியாய்ப் போனாலும் ஒரு சமயம் நன்கு விளைவதையும் காண்கையாலே உழவன் அதை அழித்து அழித்துப் பயிர்செய்வது போலே இதுவும் என்று கொள்வது. (ஸத்ய ஸங்கல்ப) படைப்பதற்காகச் செய்யும் ஸங்கல்பம் வீணாகாததாய் இருக்கும் என்கிறது. கு₃ணசூர்ணையிலும் இந்த கு₃ணம் சொல்லப்பட்டிருக்க, இங்கும் கூறுவது 'கூறியது கூறல்' அன்றோ? எனில்—

**பரப்₃ரஹ்மபூ₄த !**

அங்கு குணம் உண்டு என்பதற்காகச் சொல்லிற்று. இங்கு படைப்பதற்கு உறுப்பாகச் சொல்லுகிறது. ஆகவே 'கூறியது கூறல்' என்னும் குற்றமில்லை. தன்னையடைந்தவர்களுக்கு அனுபவிக்கத்தக்க அபூர்வ போகங்களைத் தன் ஸங்கல்பத்தாலேயே ஸ்ருஷ்டிக்கத் தக்கவன் என்று கருத்து. இங்கு "ஸத்ய" ஶப்₃த₃ம் வீணாகாதது என்னும் பொருளையுடையது. லீலைக்குக் காரணமான ஸங்கல்பம் தடைபடாததாய் இருக்கும் என்றபடி. படைக்கும் கடவுள் என்று சொல்லப்படும் பிரமனின் ஸங்கல்பமும் சில சமயங்களில் வீணாகிவிடும். எங்கேயெனில் — ஸநகர், ஸநந்தனர் முதலானவர்களை உலகைப் படைப்பதற்காகப் பிரமன் ஸ்ருஷ்டித்தான். அவர்களோவென்றால்;— "மோக்ஷத்தை விரும்பும் எங்களுக்கு இந்தப் படைப்புச் செயலைச் செய்ய இயலாது. நீயே செய்து கொள்" என்று இகழ்ந்து போனார்கள். தான் படைத்த அஸுரர்கள் கையிலே வேதத்தைப் பறிகொடுத்து,

> **76. வேதா₃ மே பரமம் சக்ஷு: வேதா₃ மே பரமம் த₄நம் ।**
> **வேதா₃ மே பரமம் தா₄ம வேதா₃ மே ப்₃ரஹ்ம சோத்தமம்॥**
> **[பா₄ர-ஶாந்தி 357-31]**

[வேத₃ங்களே எனக்கு உயர்ந்த கண்; வேத₃ங்களே எனக்கு மேலான தனம்; மறைகளே எனக்கு மேலான தேஜஸ்; வேத₃ங்களே எனக்கு உயர்ந்த ப்₃ரஹ்மம்.] என்று ஸர்வேஶ்வரன் காலிலே விழுந்து கூப்பிட்டதையும் காணலாம். (பரப்₃ரஹ்ம பூ₄த)

> **77. ததை₃க்ஷத ப₃ஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி**
> **தத்தேஜோ஽ஸ்ருஜத ।** **[சாங்-உப 6-2-3]**

[அந்தப் பரப்₃ரஹ்மம் '(நானே) பலவாக ஆகக்கடவேன்' என்று ஸங்கல்பித்தது; அது தீயை ஸ்ருஷ்டி செய்தது.] என்கிறபடியே ஸ்தூ₂லமான உலகை உடலாகக் கொண்டு விரிவடைந்தவனே! என்று பொருள். காரண நிலையில் ஸூக்ஷ்மமான சேதநாசேதநங்களோடு கூடிய ப்₃ரஹ்மமாயிருந்தவன் காரிய நிலையில் ஸ்தூ₂லமான சேதநாசேதநங்களோடு கூடிய ப்₃ரஹ்மமாக ஆகிறானன்றோ! (புருஷோத்தம)

## புருஷோத்தம !

புருஷாணாம் உத்தம: (அனைத்துப் புருஷர்களைக் காட்டிலும் சிறந்தவன்); புருஷாணாம் என்கிற பன்மையாலே பத்தர் முக்தர் நித்யர் என்ற மூவகைப்பட்ட சேதநரைக் காட்டிலும் இவன் சிறந்தவன் என்கிறது. **புருஷ:; உத்புருஷ; உத்தரபுருஷ; உத்தமபுருஷ:** என்று புருஷர்கள் நான்குவகை. அறிவற்ற அசித்தைக் காட்டிலும் மேம்பட்டிருக்கும் ஸம்ஸாரி ஜீவர்கள் புருஷர் எனப்படுகிறார்கள். ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகையாலே புருஷர்களைக் காட்டிலும் சிறந்தவர்களான முக்தர்— 'உத்புருஷர்' எனப்படுகிறார்கள். என்றுமே ஸம்ஸார ஸம்பந்தம் இல்லாமலிருக்கையாலே முக்தர்களைக் காட்டிலும் சிறப்புற்ற நித்யர் 'உத்தர புருஷர்' எனப்படுகிறார்கள். அந்த நித்ய ஸூரிகளையும் ஆள்பவனாகையாலே அவர்களைக் காட்டிலும் சிறப்புற்ற ஸர்வேச்வரன் 'உத்தமபுருஷன்' எனப்படுகிறான். பத்தர் தாழ்ந்த உடலோடு கூடியிருப்பர். முக்தர் விரஜையில் குளித்தபின்பு அத்தாழ்விலிருந்து விடுபட்டுக் கரையேறினவராய் இருப்பர். நித்யர் என்றுமே இத்தாழ்வில்லாதவராயிருப்பர். ஆனால் பிறருடைய தாழ்வுகளைப் போக்கவல்லவர் அல்லர். ஈச்வரன் தான் தாழ்வில்லாது இருப்பதோடல்லாமல் பிறருடைய தாழ்வுகளையும் போக்கவல்ல ஹேயப்ரதிபடனாயிருப்பான். அவன் மூவகைப்பட்ட சேதநர்களிடமும் அசேதனங்களிடமும் அந்தராத்மாவாய் இருந்தபோதிலும் அவற்றினுடைய தாழ்வுகளின் நாற்றமும் தன்மேல் படாதவனாய், அடியார்களுடைய தாழ்வுகளைப் போக்க வல்லவனுமாய் இருப்பான். **'புருஷோத்தம''** என்னும் இப்பதத்தால், படைக்கப்பட்ட உலகை வியாபிப்பவனாய், தரிப்பவனாய், அதற்கு ஸ்வாமியாய் இருப்பதாலுண்டான சிறப்பு சொல்லப்படுகிறது. இச்செயல்களால் விளங்காநிற்பவன் என்று கருத்து. அன்றிக்கே **''புரு-பஹு, ஸநோதி-ததாதி இதிபுருஷ:''** [அதிகமாகக் கொடுக்கிறவனாகையால் புருஷன் எனப்படுகிறான்] என்னும் வ்யுத்பத்தியைக் கொண்டு தன்னால் படைக்கப்பட்ட பிரமன் முதலானார்க்கு அவர்கள் விரும்பும் புருஷார்த்தங்களையும் கொடுக்கிறவனாகையாலே, அதிகமாகக் கொடுப்பவர்களில் தலைசிறந்தவன் என்றும் பொருள் கொள்ளலாம். (மஹாவிபூதே) கீழேயும் நித்ய விபூதியையும், லீலா விபூதியையும் சொன்னார். மேலேயும், **''ஸ்ரீவைகுண்டநாத''** என்று விபூதியைச் சொல்லப்போகிறார். இடையில் இங்கும் சொல்லுவது 'கூறியது

**மஹாவிபூ₄தே ! ஶ்ரீமந் !**

---

கூறல்' என்னும் குற்றத்தின் பாற்படுமே எனில்—இரண்டு விபூ₄திகளை யும் உடையவன் என்று உணர்த்துவதற்காக, கீழே இரண்டு விபூதி களையும் சொல்லிற்று. வேறு பயன் கருதாதவர்களுக்கு அவ்விபூ₄தி களைக் கொடுப்பான் எம்பெருமான் என்று உணர்த்துவதற்காக உபய விபூ₄திகளையும் அடியார்க்குக் கொடுக்கும் இயல்புடையவன் என்று இங்கே சொல்லுகிறது. மேலே, கைங்கர்யம் செய்வதற்குரிய தேசம் என்று பயனுயிருக்கும் நித்ய விபூ₄தியைச் சொல்லுகிறது. ஆகை யாலே குற்றமில்லை. **(ஶ்ரீமந்)** பெரியபிராட்டியாரோடு கூடியவனே! அடியார்களுக்குக் கொடுத்த நித்ய விபூ₄தியில் பரம போ₄க்₃யமாகக் காட்சியளிக்கும் தம்பதியைச் சொல்லுகிறது. அங்கு இருவருமான சேர்த்தியிலன்றோ அடிமை கொள்ளுவது.

**78. வைகுண்டே₂ து பரே லோகே ஶ்ரியா ஸார்த்த₄ம் ஜக₃த்பதி: ।**
**ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா ப₄க்தைர் பா₄க₃வதைஸ் ஸஹ ॥** **[ஶிவபுராணம்]**

[மேலான உலகமான வைகுண்ட₂த்தில், ஜக₃த்பதியும், நினைக்கவொண் ணாத ஸ்வரூபத்தை உடையவருமான விஷ்ணு, ப₄க்தர்களுடனும், பா₄க₃வதர்களுடனும் கூடியவராய் ஶ்ரீதே₃வியுடன் கூட எழுந்தருளி யிருக்கிறார்.] என்று சொல்லப்படுகிறதன்றோ. (நாராயண) அள வற்ற மங்கள குணங்களையுடையவனாய் நிறைவுடன் இருந்து அடிமை கொள்ளுபவன் என்கிறது. "நார" ஶப்₃த₃ம் ஸகல கு₃ணங்களையும் சொல்லுகிறது. ஆக, **"ஶ்ரீமந் நாராயண"** என்கையாலே பிராட்டி யும் பெருமாளுமாகிய மிதுநமே ப்ராப்யம் (அடையத்தக்கது) என்கி றது. **(ஶ்ரீவைகுண்ட₂நாத₂)** அடிமை கொள்ளுவதற்காகவே அமைக் கப்பட்ட பரமபதத்தில் நாதனுயிருந்து அடிமை கொள்ளுபவன் என் கிறது. இதுவரையில் சொல்லப்பட்ட எட்டு குணங்களில், **"புருஷோத் தம!"** என்பது ஈருகச் சொல்லப்பட்ட நாலு குணங்கள் ஸ்ருஷ்டிக்கு உறுப்பாயிருக்கும். **"ஶ்ரீவைகுண்ட₂நாத₂"** என்பது ஈருக மேல் நாலு குணங்கள் பரமபதத்தில் ஒருமிதுநமே அடையத்தக்கது என்று காட்டுகை யாலே ப்ராப்யத்வத்துக்கு உறுப்பாயிருக்கும். ஜக₃த்காரணமாய், ப்ராப்

நாராயண !

---

अथ * उक्ताकारेषु समाख्याष्टकं प्रमाणयति। सत्यकामेति नित्यविभूतिमत्त्वसिद्धिः। सत्यसङ्कल्पेति लीलाविभूतिमत्त्वसिद्धिः। निमित्तमात्रत्वं सत्यसङ्कल्पतया सिद्धमिति उपादानतामप्यभिप्रयन्नाह परब्रह्मभूतेति। उपादानत्वेऽपि चिदचिद्गतदोषास्पृष्टत्वमाह पुरुषोत्तमेति। उपादानभूतस्य कथं जगद्वैलक्षण्यमिति शङ्कायां, घटकमर्थमाह 'महाविभूते' इति। शरीरतया विभूतिमत्त्वमभिप्रेतम्। विभूति प्रति

---

யமுமாய் இருக்கும் பொருளன்றோ ப்ராபகமாகவும் ஆகிறது. இந்த எட்டு பதங்களுக்கும் ஶ்ருதப்ரகாசிகாசார்யர் வ்யாக்யானம் பின்வருமாறு : இது வரை சொல்லப்பட்ட பெருமைகளைக் காட்டும் எட்டு திருநாமங்களைக் கூறுகிறார்— **"ஸத்யகாம"** என்று தொடங்கி. **"ஸத்யகாம"** என்று நித்யவிபூ4தியோடு கூடியிருக்கையைச் சொல்லுகிறது. **"ஸத்யஸங்கல்ப"** என்று லீலா விபூ4தியோடு கூடியிருக்கையைச் சொல்லுகிறது. "ஸத்யஸங்கல்ப" என்றதாலே உலகிற்கு நிமித்தகாரணம் என்று ஸித்திக்கிறது. நிமித்த காரணமாய் இருப்பதோடன்றியில் உலகிற்கு உபாத3ான காரணமாகவும் ஆகிறவன் என்பதைக் காட்டுகிறது **"பரப்3ரஹ்மபூ4த"** என்னும் திருநாமம். உலகிற்கு உபாத3ான காரணமாய் இருந்தபோதிலும், சேதநாசேதநங்களில் உள்ள தோ3ஷங்களால் தொடப்படாதவன் என்று காட்டுகிறது **"புருஷோத்தம"** என்னும் திருநாமம். இவன் உபாத3ான காரணமாயிருந்தால் உலகைக் காட்டிலும் எப்படி வேறுபட்டவனாய் இருக்கமுடியும்? என்னும் ஐயத்திற்குப் பதிலுரைக்கிறது **"மஹாவிபூ4தே"** என்னும் திருநாமம். இவ்வுலகம் இவனுக்கு சரீரமாகவே இருக்கிறபடியால் உலகத்தைக் காட்டிலும் இவன் வேறுபட்டவன் என்று கருத்து. விபூ4தியைக் குறித்து ஶேஷியாயிருக்கை பிராட்டியும் பெருமாளுமாகிற இருவருக்கும் பொதுவானது என்பதை **"ஶ்ரீமந்"** என்னும் திருநாமம் காட்டுகிறது. **"மஹாவிபூ4தே"** என்னும் திருநாமத்தால் உப4யவிபூ4திகளும் இவனுக்குச் சரீரம் என்றுகாட்டியதை விளக்குவதற்காகவும் லீலாவிபூ4தியின் தோஷங்களால் தொடப்படாதவன் என்றுஸித்திப்பதற்காகவும் லீலாவிபூ4தியை ஶரீரமாகக் கொண்டவன் என்று காட்டுகிறது **"நாராயண"** என்னும் திருநாமம்.

ஸ்ரீவைகுண்ட3நாத2 !

---

शेषित्वं द्विनिष्ठमित्यभिप्रायेणाह श्रीमन्निति । 'महाविभूते' इति शरीरतया विभूतिमत्त्वसाधारणोक्तमर्थं विविच्य दर्शयिष्यन् दोषास्पृष्ट-त्वसिद्धये लीलाविभूतिशरीरकत्वमाह नारायणेति । * "नराज्जातानि तत्त्वानि नाराणीति ततो विदुः" इति निर्वचनमिहाभिप्रेतम् । नित्य विभूतियोगे समाख्यां स्पष्टयति वैकुण्ठनाथेति । "कुठि गतिप्रतिघाते" इति धातुः । ज्ञानप्रतिघातिकर्मादिरहिताः सूरयो विकुण्ठाः । तत्स-न्निधिदेशो वैकुण्ठाख्यः ॥

---

"நராஜ்ஜாதாநி தத்த்வாநி நாராணீதி ததோ விது3:।
தாந்யேவ சாயநம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத: ॥
[பா4ர-ஆநு 186-7]

[நரனென்கிற பகவானிடமிருந்து உண்டானவை தத்துவங்களெல்லாம், ஆகையால் அவற்றை நாரங்களென்று அறிகின்றனர். அவையே அவனுக்கு இருப்பிடமாயின. ஆகையால் அவன் நாராயணன் என்று சொல்லப்படுகிறான்] என்னும் நிர்வசனம் இங்கு காணத்தக்கது. நித்யவிபூ4தியோடு கூடியவன் என்பதைக் காட்டுவது "வைகுண்ட2 நாத2" என்னும் திருநாமம். "குடி2—க3திப்ரதிகா4தே" என்னும் தாது4 பாடத்தின்படி "குடி2" தா4து க3தியின் தடையைக் காட்டும். 'க3தி' என்பது பு3த்3தி4யையும் காட்டும். ஆக ஜ்ஞானத்தைத் தடை செய்யும் கர்மம் முதலானவைகள் அற்ற நித்யஸூரிகள் விகுண்டர் எனப்படுகின்றனர். இவர்கள் இருக்கும் தேசம் "வைகுண்ட2ம்" எனப் படுகிறது. இதுவரையில் இந்த எட்டு திருநாமங்களுக்கு ஶ்ருதப்ரகாசி காசார்யரின் வ்யாக்யானம் விளக்கப்பட்டது.

அடுத்தபடி எம்பெருமான் ஆஶ்ரயிக்கத் தக்கவனாகும்போது மிக வும உதவிபுரியும் குணங்களைச் சொல்லுகிறது. "இதுவரையில் உபா யத்வத்துக்கும் உபேயத்வத்துக்கும் பொதுவான குணங்கள் சொல்லப் பட்டன. இனி, உபாயத்வத்திற்கே உரிய குணங்கள் சொல்லப் படுகின்றன" என்று ஸுதர்சன ப4ட்டர் அவதாரிகை. (அபார

அபாரகாருண்ய ஸௌஶீல்ய

एवं उपायोपेयत्वसाधारणाकारा उक्ताः । अथ उपायत्वैकान्त-गुणा उच्यन्ते अपारेत्यादिना । कारुण्याश्रगोचरे मय्यपि कार्यकरं

காருண்ய ஸௌஶீல்ய வாத்ஸல்ய ஔதா3ர்ய ஐஶ்வர்ய ஸௌந்த3ர்ய மஹோத3தே4 !) எல்லையற்ற கருணை, ஸௌஶீல்யம் (நீர்மை), வாத்ஸல்யம் (பேரன்பு), ஔதா3ர்யம் (வண்மை), ஐஶ்வர்யம் (நியமிக்கும் தன்மை), ஸௌந்தர்யம் (அழகு) ஆகியவற்றுக்குக் கடலாயிருப்பவனே! இவற்றில் காருண்யமாவது கிருபை. அதாவது — பிறர் துன்பம் பொறுக்காமை. இது எல்லையற்றிருக்கையாவது—

79. ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட2 த3த்தமஸ்யாப4யம் மயா ।
விபீ4ஷணோ வா ஸுக்3ரீவ! யதி3 வா ராவண: ஸ்வயம் ॥

[ரா-யு 18-34]

[வானரர்களுள் சிறந்தவனான ஸுக்3ரீவனே! இவனை அழைத்துவா; விபீ4ஷணனாயிருந்தாலும், ராவணன் தானேயாயிருந்தாலும், இவனுக்கு என்னால் அப4யமளிக்கப்பட்டது.] என்று தீரக்கழிய அபசாரம் செய்த இராவணனிடமும் வெள்ளமிடுவதாய் இருக்கை. அப்படியல்லாமல், "கருணை காட்டத்தகாத என்னளவும் வந்து வெள்ளமிடுவதாயிருக்கை" என்று குணங்கள் அனைத்துக்கும் பொதுவான விஶேஷணமான அபார ஶப்3த3த்திற்குப் பொருள் கொண்டார் ஸுத3ர்சன ப4ட்டர்.

(ஸௌஶீல்ய) உயர்ந்தவன் தாழ்ந்தவர்களோடு வந்து பரிமாறினால் 'இவன் நம்முடையவன்' என்று வேற்றுமையில்லாமல் கலக்கலாய்படியிருக்கை. இது எல்லையற்றிருக்கையாவது — தேவன் மனிதன் முதலான உயர்ந்த பிறப்புக்களில் மாத்திரமல்லாமல், தாழ்ந்த பிறப்புக்களான மீன், ஆமை முதலானவையாய் அவதரிக்கும்போதும், மற்ற மீன்கள் ஆமைகள் முதலானவையும், இந்த மீன் அல்லது ஆமை நம்மைச் சேர்ந்ததே என்று இருக்கையும், தானும் அவற்றிலே ஒன்றுயிருக்கையும், இவற்றிலே நாம் ஒன்று என்று நினைத்திருக்கையும் ஆகும்.

வாத்ஸல்ய

---

**कारुण्यादिकमिति अपारशब्दस्य भावः । कारुण्यादि पूर्ववत् ।**

---

**80. நாஹம் தே₃வோ ந க₃ந்த₄ர்வோ ந யக்ஷோ ந ச தா₃நவ:।
அஹம் வோ பா₃ந்த₄வோ ஜாதோ நைதச்சிந்த்யம்
இதோऽந்யதா₂ ॥** [வி-பு 5-13-12]

[நான் தே₃வனல்லன்; க₃ந்த₄ருவனல்லன்; யக்ஷனல்லன்; அஸுரனு மல்லன்; நான் உங்களுக்கு உறவினனாகப் பிறந்திருக்கிறேன். என் பிறப்பு இதைத்தவிர வேறு விதமாக (உங்களால்) நினைக்கத்தக்கதல்ல] என்னும் ஸ்ரீவிஷ்ணுபுராண ஶ்லோகமும் 82-ம் பக்கத்திலுள்ள 44-வது ப்ரமாணமான ஸ்ரீராமாயண ஶ்லோகமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

(வாத்ஸல்ய) வாத்ஸல்யமாவது—அன்பினாலே அடியாரிடம் உள்ள குற்றமும் குணமாகத் தோற்றுகை. "குன்றனைய குற்றம் செயினும் குணங்கொள்ளும்" [முதல் திருவ 41], "செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே!" [திருச்சந்த 111] என்று சொல்லப்பட்ட தன்றோ. இது எல்லையற்றிருக்கையாவது—

**81. ஸகே₂! ராக₄வ! த₄ர்மஜ்ஞ! ரிபூணமபி வத்ஸல!।
அப்₄யநுஜ்ஞாதுமிச்சா₂மி க₃மிஷ்யாமி யதா₂க₃தம் ॥**
[ரா-யு 50-56]

[நண்பரே! ரகு₄குலத்தில் உதித்தவரே! தர்மத்தை அறிந்தவரே! ஶத்ருக்களிடத்தும் வாத்ஸல்யத்தை உடையவரே! விடைபெற்றுக்கொள்ள விரும்புகிறேன். வந்தவாறே போய்விடுகிறேன்.] என்று எதிரிகள் பக்கலிலும் குற்றத்தை குணமாகக் கொள்ளுகை. அப்படியானால் எதிரியான இராவணனுடைய தலையை அறுத்து அவனை அழிக்கக் காரணமென்ன? எனில்—எதிரிகள் விஷயத்திலும் அவன் வாத்ஸல்ய குணத்தைக் காட்டத்தான் செய்தான். அது செயல்படாதபடி அவர் கள் நடந்து கொண்டார்கள். ஆகையாலே குறையில்லை. அப்படி யல்லாமல் 'அவர்கள் தலையறுப்பதே வாத்ஸல்ய குணத்தினால் விளைந் தது' என்றும் கொள்ளலாம். எப்படியெனில், குழந்தைக்கு விளை யாடக் கொடுத்த குச்சியைக் கொண்டு அது கண்ணிலே குத்திக் கொள்ளத் தொடங்கினால் அதைப் பிடுங்கிவைக்கும் தாயைப்போலே இவனும் குற்றம் புரிவதற்கு உதவிடும் சரீரத்தை வாங்குவதும் வாத் ஸல்யத்தால் விளைவதே.

ஔதா3ர்யைஶ்வர்ய—

"संसारिणां स्वरक्षणविघातकत्वेऽपि तान् स्वातन्त्र्येण नियम्य रक्षितुं शक्तः" इत्यभिप्रेत्य ऐश्वर्यमुक्तम् । ऐश्वर्यं-नियन्तृत्वम् । संसारि-

(ஔதா3ர்ய) ஔதா3ர்யமாவது—அடியார்களுடைய ஸ்வரூபத்துக்குத் தகுந்த விருப்பங்களைக் கொடுக்கும்போது, தன் விருப்பம் நிறைவேறினாற்போலே கொடுக்கை. இது எல்லையற்றிருக்கையாவது—அடியார்க்கு எல்லாம் செய்தாலும் 'ஒன்றும் செய்யவில்லையே' என்று எப்போதும் மனவருத்தம் கொண்டிருக்கை. 96 ம் பக்கத்திலுள்ள 61-வது ப்ரமாணமான மஹாபா4ரத ஶ்லோகமும், "உன்னடியார்க்கு என்செய்வனென்றே இருத்தி நீ" [பெரிய திருவ 53] என்னும் அருளிச்செயலும் இங்கு அனுஸந்திக்கத்தக்கது.

(ஐஶ்வர்ய) ஐஶ்வர்யமாவது—விரும்பிக் கேட்பவர்கள் கேட்டவற்றையெல்லாம் கொடுக்கும்படியான செல்வமுடைமை. இது எல்லையற்றிருக்கையாவது—இச்செல்வம் அளவுபட்டதாயிராமல் கொடுக்கக் கொடுக்க மேன்மேலும் வளர்ந்து கொண்டிருப்பதாய் இருக்கை. "ஸம்ஸாரிகள் தங்கள் ரக்ஷணத்தைத் தாங்களே தடுத்துக் கொண்டாலும் ஸ்வதந்த்ரனாயிருந்து, அவர்களைத் தானே மேல் விழுந்து நியமித்து ரக்ஷிப்பதற்கு வல்லவனாய் இருக்கை—ஐஶ்வர்யம். இங்கு ஐஶ்வர்யம் என்பது நியமிக்கும் தன்மையைக் குறிக்கிறது" என்று ஸுத3ர்சனப4ட்டர் வ்யாக்யானம்.

(ஸௌந்த3ர்ய மஹோத3தே4:) ஸௌந்த3ர்யமாவது—அழகு. இது எல்லையற்றிருக்கையாவது—

82. ரூபௌதா3ர்யகு3ணை: பும்ஸாம் த்3ருஷ்டிசித்தாபஹாரிணம் [ரா அ 3-29]

[வடிவழகு, வண்மை, மற்ற கு3ணங்கள் ஆகியவற்றால் ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் அபஹரிக்கும் ராமனை.] என்கிறபடியே சருகு இலை தின்னும் ரிஷிகளையும் கூட அன்பின் மிகுதியாலே அவனை அணை-

**ஸௌந்த₃ர்ய—மஹோத₃தே₄ ! அநாலோசிதவிஶேஷாஶேஷ லோகஶரண்ய ! ப்ரணதார்த்திஹர !**

---

**चित्तवशीकरणोपायतया सौन्दर्यमुक्तम्। यथा "पुंसां दृष्टिचित्तापहारिणं" इति। "जितं ते" इति च। उक्तविशेषणफलमाह अनालोचितेति। विशेषः—जन्मवृत्तगुणतारतम्यम्। * "लोकस्तु भुवने जने"। एवं गुणवत्त्वं निश्चित्याह प्रणतार्तिहरेति। स्वस्य एवंविधबुद्धियोगप्रदं वरद-**

---

வதற்கு மடலெடுக்கப் பண்ணுவதாய் இருக்கை. **"ஜிதம் தே புண்டரீகாக்ஷ"** [ஜிதந்தே] [தாமரைக் கண்ணனே! உன்னால் இவ்வாத்ம வஸ்து வெல்லப்பட்டது] என்று அனுகூலரை மாத்திரமல்லாமல், எதிரியான சூர்ப்பணகிபோல்வாரையும் அன்பின் மிகுதியாலே வரம்பு மீறின காரியத்தைச் செய்யப் பண்ணுகை என்றும் கொள்ளலாம். **"மஹோத₃தே₄"** என்றது இக்குணங்களனைத்துக்கும் கடலாய் இருப்பவனே! என்றபடி. 'ஸம்ஸாரிகளின் நெஞ்சை ஈர்ப்பதற்கு உபாயமாக ஸௌந்தர்யம் சொல்லப்பட்டது' என்று ஸுதர்சனப₄ட்டர்.

இக்குணங்களையுடையவனாய் இருப்பதின் பலனைச் சொல்லுகிறார்: (அநாலோசித விஶேஷ-அஶேஷ லோக ஶரண்ய) **விஶேஷம்** என்றது பிறப்பு ஒழுக்கம் அறிவு முதலான குணங்கள் ஆகியவற்றைக் குறிக்கிறது. இந்த விசேஷங்களில் ஏற்றத்தாழ்வு பாராமல் சேதனர் அனைவர்க்கும் உபாயமாகப் பற்றத்தக்கவனே! என்று கருத்து. **"லோகஸ்து பு₄வநே ஜநே"** [அமர-3-3-2] [லோகஶப்₃த₃ம் உலகத்தையும் மனிதர்களையும் குறிக்கும்] என்கிற அமரகோசத்தின்படி **'லோக'** சப்தம் இங்கு ஜீவர்களைக் குறிக்கிறது.

(ப்ரணதார்த்திஹர) இப்படி அவனையே உபாயமாக உறுதி கொண்ட அடியார்களுடைய வருத்தத்தைப் போக்குகிறவனே! "தமக்கு இத்தகைய உறுதியை விளைத்த காஞ்சீவரதராஜப் பெருமானைக் கருத்தில் கொண்டு அவருடைய திருநாமமான இது இங்கு அனுஸந்திக்கப்பட்டது" என்று ஸுதர்சனப₄ட்டர்.

ஆஶ்ரித வாத்ஸல்யைகஜலதே₄! அநவரதவிதி₃தநிகி₂லபூ₄த

मभिप्रेत्य एवमुक्तम् । तस्मिन् विशेषेण आविर्भूतं स्वस्मिन् विशेषतः कार्यकरञ्च गुणमाह आश्रितेति । उपायत्वौपयिकगुणेषु वात्सल्यगुणो हि स्वस्मिन् विशेषतः कार्यकरोऽभिमतः ॥

तथापि त्वय्यपि किञ्चित्कारोऽवश्यमपेक्षित इति भगवदाशयं बुद्ध्वाऽऽह अनवरतेति । तव सार्वज्ञं न कतिपयविषयं, नापि

''அப்பெருமானிடம் சிறப்பாக வெளிப்படுவதும், தம்மிடம் சிறப்பாகச் செயல்பட்டதுமான வாத்ஸல்ய குணத்தை அடுத்தபடி மீண்டும் அருளிச்செய்கிறார். உபாயத்வத்துக்கு உறுப்பான குணங்களில் 'வாத்ஸல்ய' குணமே தம்மிடம் சிறப்பாகச் செயல்பட்டது என்பது இவருடைய திருவுள்ளம்'' என்று ஸுதர்சனப₄ட்டர் அவதாரிகை.

(ஆஶ்ரிதவாத்ஸல்யைக ஜலதே₄) கீழ்ச் சொன்ன குணங்களையெல்லாம ஒரு தட்டில் வைத்தால், அவற்றையெல்லாம் விஞ்சியிருக்கும் எல்லையற்ற வாத்ஸல்யத்தை உடையவனே! ''நிகரில் புகழாய்'' [திருவாய் 6-10-10] என்று நம்மாழ்வாரும் இந்த குணத்தை ஒப்பற்றதாகச் சொன்னாரன்றோ! ஆக, இதுவரையில் எம்பெருமான் ஆஶ்ரயிக்கத்தக்கவன் என்பதற்கு உறுப்பான குணங்களைச் சொல்லி, அடியார்களுடைய வருத்தத்தைப் போக்குகிறவன் என்றும் சொல்லி, அதுக்குக் காரணமான வாத்ஸல்ய குணத்தைச் சொன்னார்.

''நான் வாத்ஸல்யமுடையவனானாலும் என்னை அடைவதற்கு நீயும் ஏதாவது செய்யவேண்டாமோ?'' என்று எம்பெருமான் திருவுள்ளமாகக் கூறுகிறார் மேலே—(அநவரத நிகி₂ல பூ₄த ஜாத யாத₂ாத்ம்ய) ஸத்தை பெற்றிருக்கும் எல்லாப் பொருள்களினுடைய உண்மை நிலையையும் எப்போதும் ஒருபடிப்பட அறிகின்றவனே! ''உன்னுடைய அறிவு ஒரு சிலரைப்பற்றியதன்று; அனைவரையும் பற்றியது. அத்துடன் எப்போதும் இருப்பது. அப்படியிருக்கும்போது, நான் எதுவும் செய்வதற்கு இயலாதவன் என்று நீ அறியவில்லையோ?'' என்று ஸுதர்சனப₄ட்டர் உரை.

**ஜ்ஞாத யாதா₂த்ம்ய! அஶேஷ சராசரபூ₄த நிகி₂ல நியமந நிரத! அஶேஷசித₃சித்₃வஸ்து ஶேஷிபூ₄த! நிகி₂ல ஜக₃தா₃தா₄ர!**

---

**कादाचित्कश्च । कथं ममाशक्तत्वमविदितमिति भावः । आनुकूल्याभावेऽपि प्रातिकूल्यनिवृत्तिरपेक्षितेति भगवदाशयं बुध्वाऽऽह अशेषेति ।**

---

நிமஜ்ஜதோ₂நந்த ப₄வார்ணவாந்தஶ்
சிராய மே கூலமிவாஸி லப்₃த₄: ।
த்வயாபி லப்₃த₄ம் ப₄க₃வந் இதா₃நீம்
அநுத்தமம் பாத்ரமித₃ம் த₃யாயா: ॥ [ஸ்தோ ரத்-24]

[(தே₃ஶத்தாலும், காலத்தாலும், வஸ்துவினாலும்) அளவற்ற எம்பிரானே! ஸம்ஸாரமாகிய கடலினுள்ளே நெடுநாள் அழுந்துகிற எனக்குக் கரைபோல் நீ கிடைத்தாய்; ப₄க₃வானே! உன்னாலும் இப்பொழுது (உன்) அருளுக்கு உயர்ந்த பாத்திரமாகிய இந்த வஸ்து (அடியேன்) அடையப்பட்டது.] என்கிறபடியே, "நான் கைம்முதலில்லாதவன் என்று உனக்குச் சொல்லவேண்டாவன்றோ" என்று கருத்து.

"உம்மிடம் அனுகூலச்செயல் ஒன்றும் இல்லாவிடினும் நீர் ப்ரதிகூலராயிருப்பதிலிருந்து நீங்கியிருக்க வேண்டாவோ?" என்று எம்பெருமான் திருவுள்ளமாகக் கூறுகிறார்—(அஶேஷ சராசரபூ₄த நிகி₂ல நியமந நிரத) "நான் ப்ரதிகூலனாயிருப்பதை நீக்குவதும் உன் பொறுப்பே என்று கருத்து" என்று ஸுதர்சனப₄ட்டர். "அசைவனவும் அசையாதனவுமான எல்லாப் பொருள்களுக்கும், எல்லாக் காலத்திலும், எல்லா நியமனங்களையும் செய்பவனே!" என்று பொருள். இத்தால், "உன்னால் நியமிக்க முடியாதது ஒன்று இருந்தாலன்றோ என் ப்ராதிகூல்யத்தினால் நான் இழக்கவேண்டியது. இந்த ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டிருக்கும் நானும் கட்டுப்படுத்தியிருக்கும் ப்ரக்ருதி கார்யமான ஶரீரமும் நீ இட்டவழக்கு. ஆகையால் ப்ரதிகூலனான என்னை அனுகூலனாக்குவதும் உன் பொறுப்பே" என்று கருத்து.

உம்மை ரக்ஷிக்க வேண்டியது அவசியமோ? எனில் — (அஶேஷ சித₃ சித₃ வஸ்து ஶேஷி பூ₄த) எல்லாச் சேதநா சேதனங்களுக்கும் நீ உடையவனாகையால் உடைமையான என் காரியம் உன் பேறாகச் செய்யவேண்டும் என்கை.

அகி2லஜக3த்ஸ்வாமிந் ! அஸ்மத்ஸ்வாமிந் !

---

तन्निवृत्तिरपि त्वदायत्तेति भावः। 'ननु किं भवद्रक्षणमवश्यकर्तव्यं' इति शङ्कायामाह अशेषचिदचिदिति। रक्ष्यापेक्षाऽपि त्वदधीनेत्याह निखिलेति। कस्यापेक्षया चिदचिद्वस्तुजातं धृतमिति भावः। नैसर्गिक-शेषत्वे सत्यपि जगतः स्वगुणैर्भूयः शेषत्वमापादितमित्याशयेनाह अखिलेति। यथा * "गुणैर्दास्यमुपागतः" इति। न केवलं सामान्येन शेषत्वं, किन्तु जन्मविशेषरुचिविशेषप्रदानादिभिर्मम एवमवस्थत्वं त्वयैवोपपादितमित्यभिप्रायेणाह अस्मत्स्वामिन्निति॥

---

ஆயினும் 'ரக்ஷிக்கப்படும் நீர் அபேக்ஷிக்க வேண்டாவோ?' என்று எம்பெருமான் திருவுள்ளமாக 'அந்த அபேக்ஷையை விளைப்பவனும் நீயே' என்கிறார் அடுத்தபடியாக— (நிகி2ல ஜக3த்3தா4ர) ப4க3வத்3 பா4க3வத விஷயங்களில் அபசாரங்களை இழைத்து வரும் மனிதர்களுக்குக்கூட ஆதாரமாய் இருப்பவனே! "யார் அபேக்ஷித்து நீ எல்லாவுலகங்களையும் தரித்துக் கொண்டிருக்கிறாய்?" என்று ஸுத3ர்சனப4ட்டர். இதனால் எனக்கு ஆதாரமாய் இருக்கும் நீயே என் குற்றங்களை நீக்கி அபேக்ஷையையும் விளைக்கவேண்டும் என்று கருத்து.

(அகி2ல ஜக3த்ஸ்வாமிந்) உலகிலுள்ள சேதனர் ஒவ்வொருவருக்கும் குற்றங்களைப் போக்கி, ஈடுபாட்டை உண்டாக்கித் திருவடிகளில் ஆட்கொள்ளுவதற்கு வேறு தலைவன் உண்டோ? "எல்லாவுலகும் இயற்கையாகவே உனக்கு அடிமைப்பட்டிருந்தபோதிலும், உலகை உன் குணங்களாலே மறுபடியும் அடிமைப்படுத்துகிறவனன்றோ நீ" என்று ஸுதர்சனப4ட்டர் உரை. "கு3ணைர்தா3ஸ்யம் உபாக3த:" [ரா-கி 4-12] ["குணங்களாலே அடிமைப்பட்டவன்" [பெருமானைக் குறித்து இளையபெருமான் சொன்னது] என்னும் ப்ரமாணத்தையும் காட்டுவர். (அஸ்மத் ஸ்வாமிந்) எல்லாவுலகுக்கும் ஸ்வாமியாயிருக்கையால் எனக்கும் ஸ்வாமியாய் இருப்பவன் என்று கருத்து. **"அகி2லஜக3த்ஸ்வாமிந்"**

ஸத்யகாம !

सत्यकाम — अकिञ्चनरक्षणं हि परिपूर्णकृत्यमिति भावः । तव

என்று ஸ்வாமியாய் இருக்கும் உறவைக் காட்டிற்று. "அஸ்மத் ஸ்வாமிந்" என்று அந்த உறவுக்குப் பொருத்தமாகத் தம்மை நியமிக்கும்படியைக் காட்டுகிறது. என்னை இவ்வளவு நெருக்கமாக ஆட் செய்யும்படி செய்தவன் நீயல்லவோ என்கிறார். "முந்தின பத₃த்தில் பொதுவாக உள்ள ஶேஷத்வம் காட்டப்பட்டது. இப்பதத்தில், உயர்ந்த குலத்தில் பிறப்பித்துத் தம்மை இந்த அளவுக்கு ஈடுபடுத்தியது முதலானவற்ருல் உன்னைச் சரணமடையும்படி செய்தவன் நீயே அல்லவோ என்னும் கருத்தைத் தெரிவிக்கிருர்" என்று ஸுத₃ர்சன ப₄ட்டர் உரை.

(ஸத்யகாம) இதே பதம் முதலில் கு₃ணசூர்ணையிலும், நடுவில் எட்டு திருநாமங்களில் ஒன்ருகவும் மறுபடியும் இங்கும் படிக்கப்படுகிறது. கு₃ண சூர்ணையில், அடியார்க்கு அனுபவிக்கத்தக்கதாகையாலே எம்பெருமானுக்கும் இனியதான கு₃ண விபூ₄திகளைச் சொல்லிற்று. நடுவில் "ஸத்யகாம" என்றது விளையாட்டின் பொருட்டு, ப்ரக்ருதி புருஷ காலங்களை விரும்பியிருக்கும் செல்வங்களாக உடையவன் என்பதற்காகச் சொல்லிற்று. இங்கு 'ஸத்யகாம' என்கிறது ஆஶ்ரயிக்கும்போது சரணாகதன் இட்டது கொண்டு வயிறு நிறைய வேண்டாதபடி எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெற்றவனாய் இருக்கையால் வந்த நிறைவை உடையவன் என்பதற்காகச் சொல்லிற்று. இதனால்

83. ந த₄ர்மநிஷ்டோऽஸ்மி ந சாத்மவேதீ₃
ந ப₄க்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே₃ ।
அகிஞ்சநோऽநந்யக₃திஶ் ஶரண்ய !
த்வத்பாத₃மூலம் ஶரணம் ப்ரபத்₃யே [ஸ்தோ-ர 22]

[ஶரணமடையத்தகுந்த எம்பிரானே! (அடியேன்) கர்மயோக₃த்தில் நிலைநின்றவன் அல்லேன்; ஜ்ஞாநயோக₃த்தில் நிலைநின்றவனும் அல்லேன்; உன் திருவடித் தாமரைகளில் பக்தியை உடையவனும் அல்லேன். ஒரு உபாயமுமற்றவனும் வேறு புகலற்றவனுமான அடியேன்

**ஸத்யஸங்கல்ப! ஸகலேதரவிலக்ஷண!**

---

**अनायाससाध्यमित्याह सत्यसङ्कल्पेति । सकलेतरविलक्षण - एवं भूतस्त्वं न रक्षसि चेत् कस्तव अन्येभ्योऽनीदृशेभ्यो विशेष इत्याशयः ॥**

---

உன் திருவடித் தாமரைகளை உபாயமாக நிச்சயிக்கிறேன்.] என்கிற படியே கைம்முதல் இல்லாதவனுன என் காரியம் நிறைவாளனுன உனக்கே பொறுப்பன்றோ? என்னும் திருவுள்ளத்தைத் தெரிவிக்கிறார்.

(ஸத்யஸங்கல்ப) என் காரியத்தை நிறைவேற்றுவது தடைபடாத ஸங்கல்பத்தையுடைய உனக்கு எளிதில் செய்யக் கூடியதன்றோ? முதலில் குண சூர்ணையில் "**ஸத்யஸங்கல்ப**" என்றது அபூர்வமான இனிய பொருள்களைத் தடை படாதபடி படைக்கவல்லவன் என்று காட்டுவதற்காக. நடுவில் எட்டு திருநாமங்களில் ஒன்றாக '**ஸத்ய ஸங்கல்ப**' என்றது உலகைப் படைப்பது முதலான விளையாட்டிற்குக் காரணமான ஸங்கல்பம் தடைபடாதது என்று காட்டுவதற்காக. இங்கு '**ஸத்யஸங்கல்ப**' என்று சொல்லுவது 'பிறரால் நிறைவேற்ற இயலாத காரியங்களைத் தன் ஸங்கல்ப மாத்திரத்திலேயே செய்யவல்லவன்' என்று காட்டுகைக்காக. இதனால் நித்ய ஸம்ஸாரியாய்ப்போந்த என்னையும் நித்ய ஸூரிகளோடு ஒரு வரிசையில் வைக்க நினைத்தால் செய்து முடிக்க வல்லவனன்றோ நீ என்கிறார்.

(ஸகலேதர விலக்ஷண) இத்தகைய நீ என்னை இப்படி ரக்ஷிக்க வில்லையென்றால், நீ மற்ற அனைவரைக் காட்டிலும் சிறப்புற்றவன் என்னும் பெருமை உனக்கு எப்படி ஸித்திக்கும்? என்று கருத்து. 'அடியார்க்கு அனுபவிக்கத் தக்கபடி ஸ்வரூபமும் குணங்களும் மற்ற அனைவரைக் காட்டிலும் சிறப்பாயிருக்கப் பெற்றவனே!' என்று பொருள். "சேதனருடைய ஜீவனம் சொல்லுகிறது" என்பர் பெரிய வாச்சான்பிள்ளை. ஜீவனமாவது "உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலை" [திருவாய் 6-7-1] எனப்படும் தாரக போஷக போக்யங்களாகும். "உன்னுடைய ஸ்வரூபத்தையும் குணங்களையும் நீ யாருக்காகப் பெற்றிருக்கிறாய்? உனக்காகவோ?" என்கிறார். நித்ய விபூதியில் உள்ள நித்ய முக்தர்கள் அனைவரும் அனுபவிப்பவர்களாய்,

அர்த்திகல்பக!

---

பிராட்டியும் பெருமானுமாகிற தம்பதிகள் அனுபவிக்கச் செய்பவருமாய் நடவா நிற்க, "நீ இவற்றை உனக்காகப் படைத்தாயோ?" என்கிறா ரன்றோ! இவரில்லாமல் நித்ய முக்தர்கள் அனைவரும் அனுபவித்தாலும், இவரைத் தவிர மற்றவர்கள் அனைவரையும் அவர்கள் (பெருமானும் பிராட்டியும்) அனுபவிக்கச் செய்தாலும் குறையாகவே இருக்குமன்றோ. இவரை அனுபவிக்கச் செய்தால்தான் அவனுடைய ரக்ஷகத்வம் நிறை வடையும். பூர்ணாநுபவம் பண்ண நினைப்பவர்களுக்கு ஒன்று குறைந் தாலும் பெரும் குறையாய்த் தோற்றுமன்றோ. ஆகையால், இவரோ டும் கூட அனுபவித்தால்தான் அனுபவிக்கும் நித்ய முக்தர்களுக்கும், அனுபவிப்பிக்கும் திவ்ய தம்பதிகளுக்கும் அனுபவம் நிறைவடையும்.

மற்றவர்களைக் காட்டிலும் சிறப்புற்றவன் என்று கூறும் முன் திருநாமத்திற்குக் காரணத்தைக் காட்டுகிறார் மேலே—(அர்த்திகல்பக) யாசிப்பவர்களுக்குக் கற்பகமரம் போலே வேண்டுவதையெல்லாம் தரு பவனே! என்று பொருள். யாசிப்பவர்களிடம் தலைதாழ்த்தித் தான் யாசித்துக் கொடுக்கிறவனுக்கு, யாசிக்கும் எனக்குக் கொடாதிருக்கை பொருந்துமோ? கற்பகமரம் யாசிப்பவர்களுக்குத் தூர நின்று தன்னைத் தவிர மற்ற சிலவற்றைக் கொடுத்து விடும். நீயோவென்றால், யாசிப் பவர்களையும் உண்டாக்கித் தானே யாசித்து எல்லாப் பலன்களையும் கொடுப்பதோடன்றி, அத்தகைய தன்னையும் கொடுக்கிறவனன்றோ என்று கருத்து.

"பற்பநாபன் உயர்வறவுயரும் பெருந்திறலோன் எற்பரன் என்னை யாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத்தந்த கற்பகம்" [திருவாய் 2-7-11] என்று சொல்லப்படுகிறதன்றோ. அக்கற்பகம் போலே நாரும் நரம்பு மாய் இராமல் 'எல்லையற்ற அழகுக்குக் கடலாய் இருப்பவனே!' என்று அழைக்கலாம்படி இருப்பவனன்றோ. "தான் யாசித்துக் கொடுப்ப தொழிய, தன்னை யாசித்தவர்களுக்குக் கொடுக்கலாகாது என்னும் நியமம் உண்டோ?" என்று கருத்து.

ஆபத்ஸக2!

---

अर्थि रूपक-कर्मधारयसमासः । यथा * "समेत्य प्रतिनन्द्य च" * "उदारास्सर्वे एवैते" इति च । अन्यथा तवेयं प्रथापि विहन्येतेति भावः । गजेन्द्रादीनामिव आपन्नत्वमेव रक्ष्यत्वे हेतुमाह

---

**அத2 மத்4யம கக்ஷ்யாயாம் ஸமாக3ச்ச2த் ஸுஹ்ருஜ்ஜனை: ।**
**ஸ ஸர்வானர்த்தி2னோ த்3ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்3ய ச ॥**

[ரா-அ 16-37]

[அந்த ஸ்ரீராமன் யாசிப்பவர்களைக் கண்டு (அவர்களை) எதிர்கொண்டு ஆனந்தப்படுத்திப் பிறகு நடுக்கட்டில் நண்பர்களுடன் சேர்ந்தார்.]

**உத3ாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞானீ த்வாத்மைவ மே மதம் ।**
**ஆஸ்தி2தஸ் ஸஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் க3திம் ॥**

[கீ3தை 7-18]

[இவர்கள் அனைவருமே வண்மை மிக்கவர்கள்; ஞானியோவெனில், (எனக்கு) த4ாரகனாகவேயிருப்பவன் (என்று) என் ஸித்தாந்தம். என்னோடு சேரவிரும்புகின்ற அவன் என்னையே ஒப்பற்ற ப்ராப்யமாகக் கொண்டுள்ளானன்றோ.] என்னும் இரு ப்ரமாணங்களையும் ஸுதர்சன பட்டர் இங்கு காட்டி, "நீ என்னை ரக்ஷிக்கவில்லையென்றால் உனது இந்தப்புகழ் போய்விடும்" என்று கருத்துரைத்தார்.

(ஆபத்ஸக2) ஆபத்து வந்தவுடன் அதைப்போக்கும் தோழனாய் அதாவது துணையாய் இருக்கை. காகாஸுரனுக்குப்போலே தாய் தந்தையரும் உறவினரும் தள்ளிக் கதவையடைக்கும் நிலையிலும்,

**ரகு4வர! யத3பூ4ஸ்த்வம் தாத்3ருசோ வாயஸஸ்ய**
**ப்ரணத இதி த3யாளுர் யச்ச சைத்3யஸ்ய க்ருஷ்ண! ।**
**ப்ரதிப4வமபராத்3து4ர் முக்3த4! ஸாயுஜ்யதோ3ऽபூ4:**
**வத3 கிமபத3மாக3ஸ்தஸ்ய தேऽஸ்தி க்ஷமாயா: ॥** [ஸ்தோ-ர 63]

ஸ்ரீமந்! நாராயண!

आपत्सखेति । उक्तहेत्वभावेऽपि मातरमपेक्ष्य रक्षितव्यमित्याह श्रीमन्निति । तया उपेक्षितोऽपि त्वामपेक्ष्य रक्षणीय इत्याह नारायणेति । संबन्धाभावेऽपि रक्षकान्तराभावात् रक्षणीयोऽहं, त्वं हि अगतीनां

[ரகு₄குலத்தில் மேலானவனான ராமனாக அவதரித்தவனே! அப்படிப் பட்ட (பெரும் பாவம் செய்த) காகாசுரன் விஷயத்தில், ஶரணாகதன் என்று நினைத்து அருளினாயன்றோ. தோ₃ஷங்களை அறியாத க்ருஷ் ணனே! ஜந்மந்தோறும் அபராத₄ம் செய்த சேதி₃குலத்தவனான ஶிஶு பாலனுக்கு மோக்ஷம் கொடுத்தருளினாயல்லவா. அப்படிப்பட்ட உன் னுடைய பொறுமையால் பொறுக்கத்தகாத பாபம் என்ன இருக்கிறது? அருளிச்செய்யவேணும்.] என்னும் ஸ்தோத்ர ரத்ன ஶ்லோகத்திலும், 45-ம் பக்கத்திலுள்ள 34-வது ப்ரமாணமான ஸ்ரீராமாயண ஶ்லோ கங்களிலும் சொன்னபடி எம்பெருமானே துணையென்று காட்டுகிறார். "கஜேந்திரன் முதலானார்க்குப்போலே ஆபத்தே ஹேதுவாக ரக்ஷிப்ப வன்" என்று காட்டுகிறார் ஸுதர்சனப₄ட்டர்.

(ஸ்ரீமந்) பெரிய பிராட்டியாரோடு கூடியிருப்பவனே! இப்படி யிருக்கும் உன்பெருமையைக் கணிசியாவிட்டாலும், புருஷகாரமாய் இருக்கும் பிராட்டியைப் பார்த்து ரக்ஷிக்கவேண்டும் என்று கருத்து. "முன் திருநாமத்தில் சொன்னபடி ஆபத்தாகிற ஹேது இல்லாவிடிலும் தாயான பிராட்டியைப் பார்த்து ரக்ஷிக்கவேண்டும்" என்பர் ஸுதர்சன ப₄ட்டர்.

(நாராயண) நர ஸமூஹங்களுக்கெல்லாம தா₄ரகனாய் வ்யாபக னாய், ப்ராப்யமாய், ப்ராபகமாய் இருப்பவனே! "பிராட்டியே உபே க்ஷித்தாலும் உன்னுடைய இப்பெருமையைப் பார்த்து ரக்ஷிக்கவேணும்" என்று கருத்துரைப்பர் ஸுதர்சனப₄ட்டர். "பிராட்டி

அஶரண்யஶரண்ய! அநந்யஶரண: த்வத்பாதா₃ர
விந்த₃யுக₃ளம் ஶரணம் அஹம் ப்ரபத்₃யே |

---

गतिरित्याह—अशरण्येति । ततः किं भवत इत्यत आह अनन्यशरण इति । स्वशब्देन प्रागुक्ताकारविशिष्टतया योग्यत्वमभिप्रेतम् । अवश्यकर्तव्यत्वाय पादग्रहणम् । अरविन्दशब्दश्च इह भोग्यत्वाय ।

---

புருஷகாரமாவதற்கு முன்பே படைக்கும்போதே வ்யாபகனும் த₄ாரக னும் இருந்து என் ஸத்தையை நோக்கினவன் அல்லவோ? இத்தகைய வன் என்னைக் காப்பாற்றியே தீரவேண்டும்'' என்று பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம்.

(அஶரண்ய ஶரண்ய) ''நாராயணனாயிருக்கையால் உண்டான உறவில்லாவிடிலும் வேறு புகலில்லாமல் இருக்கும் என் நிலையைப் பார்த்தாவது ரக்ஷிக்கவேண்டாவோ? கதியற்றவர்களுக்கெல்லாம் கதி யானவனன்றோ நீ'' என்று ஸுத₃ர்சனப₄ட்டர் உரை. ''இப்படியிருக் கும் உன்னாலும் கைவிடப்பட்டவர்களுக்கும் உன்னையொழிய வேறு க₃தியில்லாமையால் நீயே ரக்ஷகன்'' என்று கருத்துரைப்பர் பெரிய வாச்சான்பிள்ளை.

அப்படி ஒருவர் உண்டோ? எனில் — (அநந்ய ஶரணோऽஹம்) அப்படிப் புகலற்றவனாயிருப்பவன் நானே என்கிறார். ''பற்றிலார் பற்ற நின்றானே'' [திருவாய் 7-2-7] என்றார் நம்மாழ்வாரும்.

(த்வத் பாதா₃ரவிந்த₃யுக₃ளம் ஶரணம் ப்ரபத்₃யே) இப்படியிருக் கும் நான் மிக இனியதான தேவரீர் திருவடித் தாமரையிணையையே உபாயமாக உறுதிகொள்கின்றேன். இதற்கு ஸுத₃ர்சன ப₄ட்டர் உரை பின்வருமாறு :— ''த்வத்'' என்னும் சொல்லால் இதுவரையில் சொன்ன பெருமைகளையுடையவனாகையாலே ஶரணமடையத் தக்கவன் என்று காட்டுகிறது. ''பாத₃'' ஶப்₃த₃த்தாலே காலைப்பிடித்தால் தட்ட வொண்ணாது என்று காட்டுகிறது. தாமரையைக் குறிக்கும் ''அரவிந்த₃'' ஶப்₃த₃த்தாலே திருவடிகளுடைய இனிமை காட்டப்படு

அத்ர த்3வயம் ॥

---

युगलशब्देन द्विवचनाख्यानम् । * "अहमस्म्यपराधानामालयोऽकिञ्चनोऽगतिः" इत्यादिकमभिप्रेत्याह अहमिति । "प्रपद्ये" इत्यन्तेन पूर्वखण्डो व्याख्यातः ।

---

கிறது. "யுக3ள" ஶப்3த3த்தாலே த்3வயத்தில் "சரணௌ" என்னும் பத3த்திலுள்ள த்3விவசநம் (இருமை) காட்டப்படுகிறது. "அஹம்" ஶப்3த3த்தாலே,

அஹமஸ்ம்யபராத4நாமாலயோऽகிஞ்சநோऽக3தி: ।
த்வமேவோபாயபூ4தோ மே ப4வேதி ப்ரார்த்த2நாமதி: ॥
ஶரணாக3திரித்யுக்தா ஸா தே3வேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ॥
[அஹிர்-ஸம்ஹிதை 37-30]

["நான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாயிருக்கிறேன். (என்னை ரக்ஷித்துக்கொள்ள) ஓர் உபாயமுமற்றவனுயிருக்கிறேன்; (உன்னையொழிய) வேறு க3தியில்லாதவனாக இருக்கிறேன். நீயே எனக்கு உபாயமாக ஆவாயாக" என்று பிரார்த்தி2க்கும் பு3த்3தி4யே ஶரணாக3தி எனப்படுகிறது. அது இந்த ப4க3வான் விஷயத்தில் செய்யப்படட்டும்.] என்னும் ப்ரமாணம் உணர்த்தப்படுகிறது. ஆக இத்தால், "ப்ரபத்3யே" என்னுமளவாக த்3வயத்தின் பூர்வக2ண்ட3ம் விவரிக்கப்பட்டதாயிற்று.

இவ்விடத்தில் "த்3வயம்" அநுஸந்திக்கத்தக்கது என்பதை "அத்ரத்3வயம்" என்னும் வாக்யம் உணர்த்துகிறது. 5.

**ஆறுவது சூர்ணை அவதாரிகை :** எம்பெருமானை ஶரணமடைபவனுக்கு, அடையத் தக்கவனான எம்பெருமானிடம் அவனை அடைய வேண்டும் என்னும் ஆர்வமிகுதியாகிற ப்ராப்யருசியும், அவனே ப்ராபகம் (அடைவிப்பவன்) என்னும் உறுதியும் இருக்கவேண்டுமாகையாலே, அவை இரண்டும் விளைவதற்காக முதல் சூர்ணையிலே பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புகுந்தார். இரண்டு, மூன்று, நாலு சூர்ணைகளிலே பிராட்டியின் அருளாலே அவ்விரண்டையும் பெற்றதைக் கூறினார். ஐந்தாவது சூர்ணையில் ஆஶ்ரயிக்கப்படுபவன் யார் என்னும் கேள்வி

எழுகையாலே, "அவன் நாராயணனே" என்பதை விளக்கவேண்டி, "நார" ஶப்தத்தால் சொல்லப்படுகின்ற பொருள்களுக்கு இருப்பிடமான எம்பெருமானுடைய ஆத்ம ஸ்வரூபத்தை "அகிலஹேய" என்று தொடங்கும் வாக்கியத்தில் சொல்லி, அதற்குப்பின் "நார" ஶப்தத்தால் சொல்லப்படுகின்றவற்றை, "நிகில ஜகதுதய விபவ லயலீல" என்பது வரையுள்ள வாக்கியங்களால் சொல்லுவதன்மூலம் அவன் உபய விபூதிகளுக்கும் நாதனாய் இருப்பவன் என்பதைச் சொல்லி, அதற்குப் பின் உள்ள விளிகளாலே அவனே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் இருக்கிறான் என்று உறுதிகொண்டு, இப்படி மேன்மையையுடைய அவ்வெம்பெருமானை நம்மால் அணுகமுடியுமோ? என்னும் கேள்வி யெழுந்தவாறே, உயர்ந்தார் தாழ்ந்தார் என்னும் வேற்றுமையில்லாமல் அனைவரும் அணுகலாம்படியான ஶீலம் முதலான குணங்களை முன்னிட்டு, பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு ஶரணமடைந்து நின்றார். இனி, ஆறுவது சூர்ணையாலே, 'சரணம் புகுந்தது எலியெலும்பரான (வலிமையற்ற) நாமன்றோ!' என்று தம்மிடமே ஐயம்கொண்டு முன்னோர்கள் சரணம் புகுந்த முறையைப் பின்பற்றி ஶரணமடைகிறார். அதாவது—ஶரணமடையும்போது விடவேண்டியவற்றை முதலில்விட்டு, வகுத்த விஷயமான எம்பெருமானைப் பற்றவேண்டியிருக்கையாலே, அதை இதுவரையில் செய்யாமையாலே, அதனால் ஏதேனும் குறையுண்டாகுமோ? என்று பார்த்து, புராண புருஷர்கள் ஶரணமடைந்த முறையைக் காட்டும் இதிஹாஸ புராண வசனங்களை முன்னிட்டுக் கொண்டு சரணம் புகுகிறார்.

**வ்யா : (பிதரம் மாதரம்)** என்று தொடங்கும் **ஶ்லோகத்தின்** முதற்பாதியாலே விடவேண்டிய சேதனர்களையும், பின்பாதியாலே விடவேண்டிய அசேதனங்களையும் சொல்லுகிறது. இவை மற்ற உபாயங்களுக்குத் துணையாயிருப்பவையாய், தாமே பயனுமிருக்கையாலே, உபேயமாகவும் இருப்பவையாகையாலே, இவற்றுக்கு உபாயத்வத்திலும் உபேயத்வத்திலும் அந்வயம் உண்டு. இரண்டாவது **ஶ்லோகத்தில் (ஸர்வதர்மாம்ஶ்ச)** என்று மற்ற உபாயங்களான கர்மயோகம், ஜ்ஞானயோகம், **பக்தியோகம்** முதலானவற்றைச் சொல்லுகிறது. **(ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந்)** என்று மற்ற உபேயங்களாய் அசித்தின் அனுபவமாயிருக்கும் ஐஶ்வர்யத்தையும், கேவலாத்மாவின் அனுபவமாயிருக்கும் கைவல்யத்தையும் சொல்லுகிறது. (ஸங்த்

**6. பிதரம் மாதரம் தா₃ராந் புத்ராந் ப₃ந்தூ₄ந் ஸகீ₂ந் கு₃ரூந்**
**ரத்நாநி த₄நதா₄ந்யாநி க்ஷேத்ராணி ச க்₃ருஹாணி ச ||**

---

**६. अथ "अनन्यशरणः शरणमहं प्रपद्ये" इति शब्दानामर्थं विवृणोति पौराणिकवचनमुखेन पितरमित्यादिना । गुरुपर्यन्तं । साधनत्वमुक्तम् । दाराश्च दृष्टसाधनम् । रत्नादीनां उपेयत्वमुक्तम् ।**

---

யஜ்ய) என்று அவற்றை வாஸனையோடு விட்டமையைச் சொல்லுகிறது. **(ஸர்வ த₄ர்மாம்ஶ்ச ஸர்வ காமாம்ஶ்ச)** என்று இரண்டையும் ஒருபடிப்பட எடுத்து, விடச்சொல்லுகையாலே மற்ற உபேயங்கள் (பயன்கள்) நம் ஸ்வரூபத்தோடு முரண்படுவதுபோலே, மற்ற உபாயங்களும் நம் ஸ்வரூபத்தோடு முரண்படும் என்று காட்டுகிறது. மற்ற உபாயங்கள் ஸ்வரூபத்தை அழித்துவிடும் என்று சொல்லலாமோ? எனில்—கர்மம் ஜ்ஞானம் ப₄க்தி முதலான அவற்றைத் தாமே பயனாய் இருப்பனை என்னும் நினைவோடு கைக்கொள்ள வேண்டுமேயொழிய அவற்றைக் கொண்டு மோக்ஷத்தையே பெறுவதாய் இருந்தாலும், அவை ப₄ர்த்தாவின் போ₄க₃த்திற்குக் கூலி கேட்பதுபோலே ஸ்வரூபத்தை அழிக்கக் கூடியவையேயாகும். இவை ஸ்வரூபத்தை உய்விக்கக் கூடியவை என்று எம்பெருமானாலே கீ₃தை முதலான ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகின்றனவே எனில்—"இவன் ஸ்வயம் ப்ரயோஜனமான இவற்றை ஸாத₄னமாக்கியதுபோலே, தன்னைத் தவிர வேறொரு பயனை இவற்றால்பெற நினைக்காமல், நம்மையே பயனாகவாவது கொண்டானே" என்னும் நினைவாலே இவற்றை அவன் ஶாஸ்த்ரங்களில் உய்வுபாயமாகக் கூறினன்.

**"உதா₃ராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்"**
[கீ₃தை 7-18]

[இவர்கள் எல்லாரும் உதா₃ரமானவர்களே; ஜ்ஞானியோ எனக்கே ஆத்மா (தா₄ரகன்) என்று என் ஸித்தாந்தம்] என்று கீதையில் மற்ற பயன்களை விரும்புகிறவர்களையும் குறித்து வண்மைமிக்கவர்கள் என்று புகழும் எம்பெருமானுடைய இயல்வாலே, இந்த உபாயாந்தரங்கள் உய்வுபாயமாகச் சொல்லப்பட்டன. இரண்டாவது ஶ்லோகத்தின் பிற்

பாதியாலே, விடவேண்டிய இவற்றை விட்டபின்பு, பற்றப்படும் விஷயம் இன்னது என்று சொல்லப்படுகிறது. **(லோக விக்ராந்த சரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபோ₄)** ஸர்வேஶ்வரனே! உலகனைத்தையும் அளந்த உன்னுடைய திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுகிறேன் என்கிறது. **"லோக விக்ராந்த சரணௌ"** என்றதால், உயர்ந்தார் தாழ்ந்தார் என்னும் வேற்றுமை பாராமல் உலகனைத்தையும் அளக்கும்படியான ஶீல குணத்தையுடையவன் என்று உணர்த்தப்படுகிறது. "விபு₄" (ஸர்வேஶ்வரன்) என்னும் சொல்லாலே, வகுத்த ஸ்வாமி என்றும், ஜ்ஞானம் ஶக்தி முதலான குணங்கள் நிறைந்தவன் என்றும் உணர்த்தப்படுகிறது. **"லோகவிக்ராந்த" "விபு₄"** ஶப்₃த₃ங்கள் முறையே எளிமைக் குணங்களையும், மேன்மைக் குணங்களையும் காட்டுகின்றன என்று ஶ்ருதப்ரகாசிகாசார்யர் வ்யாக்யானம்.

இனி, இவ்விரு ஶ்லோகங்களும் விரிவாக விளக்கப்படுகின்றன. **(பிதரம் மாதரம்)**

**மாத்ருதே₃வோ ப₄வ । பித்ருதே₃வோ ப₄வ ।**
**ஆசார்யதே₃வோ ப₄வ । அதிதி₂தே₃வோ ப₄வ ॥**

**[தை-ஶிக்ஷா 11-2]**

[தாயை தெய்வமாகக்கொள்; தந்தையை தெய்வமாகக்கொள்; ஆசாரியனை தெய்வமாகக்கொள்; அதிதியை தெய்வமாகக்கொள்.] என்று ஈஶ்வரனைப்போலே தாய் தந்தையரை மதித்து நடக்கவேண்டும் என்று வேதம் கூறுகையாலே, இத்தாய் தந்தையர் எம்பெருமானை உபாஸிப்பவர்களுக்குக் கர்மயோகம் ஜ்ஞானயோகம் முதலானவற்றுக்குத் துணை புரிபவர்கள் என்று விளங்குகிறது. அத்துடன் இவர்களைப் பிரிவது பொறுக்கவொண்ணாததாய் இருக்கையாலே, இவர்கள் ஸ்வயம் ப்ரயோஜனமான உபேயமாகவும் இருக்கிறார்கள் என்று விளங்குகிறது. **(தா₃ராந்)** மனைவியும் இவனோடு கூட இருந்து த₄ர்மங்களை அனுஷ்டிப்பவளாகையாலே, மற்ற உபாயங்களுக்குத் துணைபுரிபவளாய், இவனுடைய உகப்புக்குப் பாத்திரமாய் இருப்பவளாகையாலே உபேயமாகவும் இருக்கிறாள். **(புத்ராந்) "புந்நாம்னோ நரகாத் த்ராயத இதி புத்ர:"** [**"புத்"** என்னும் நரகத்தை அடைவதிலிருந்து காப்பாற்றுகிறவனாகையாலே புத்திரன் எனப்படுகிறான்.] என்கிறபடியே, புத்திரன் இல்லாதவன் **"புத்"** என்னும் நரகத்தை அடையவேண்டிவரும்; அதற்கு உறுப்பான பாபத்திலிருந்து தந்தையை விடுவிக்கையாலே

ஸர்வத₄ர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச
ஸாக்ஷராந் |
லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தே₅வ்ரஜம் விபோ₄||

---

आमुष्मिकसाधनं साध्यश्चाह सर्वेति । अक्षरशब्देन केवलात्मनि पर्यवसानम् । लोकविक्रान्तविष्णुशब्दौ सौलभ्यपरत्वपरौ ॥

---

புத்திரனும் மற்ற உபாயங்களுக்குத் துணை புரிகிறான். அத்துடன் அவனைப் பிரிவது பொறுக்கவொண்ணாததாயிருக்கையாலே உபேயமாகவும் இருக்கிறான். (ப₃ந்து₄ந்) உறவினர்களாகிய பந்துக்கள் இவன் பிறந்த குடிக்குப் பழி வரும்படி நடக்காமல் உபதேசம் முதலானவற்றாலே இவனைத் திருத்தி நல்வழியில் நடத்துகிறவர்களாகையாலே, மற்ற உபாயங்களுக்குத் துணைபுரிபவராயிருப்பர். இன்னாரை உறவினராகக் கொண்டு பிறந்திருப்பவன் என்று பெருமை கொள்ளுகையாலே, உபேயமாகவும் இருப்பர். (ஸகீ₂ந்) தோழனும் இவனுக்கு ஹிதத்தைச் செய்கிறானாய், நல்வழியில் நடத்துபவனாகையாலே மற்ற உபாயங்களுக்குத் துணை புரிபவனாய் இருப்பான். மனத்துக்கு இனியவனாகையாலே உபேயமாகவும் இருப்பான். (கு₃ரூந்) ஆசார்யர்கள் எம்பெருமானை அடைவதாகிற உபேயத்தைக் குறித்து, மற்ற உபாயங்களை உபதேசித்தும், மற்ற பயன்களாகிற உபேயங்களைக் குறித்து, மற்ற உபாயங்களை உபதேசித்தும், இப்படி இருவகைகளிலும் மற்ற உபாயங்களுக்குத் துணை புரிபவர்களாய், இவனை நல்வழி நடத்துபவர்களாகையாலே, உபேயமாகவும் இருப்பர். (ரத்நாநி த₄நதா₄ந்யாநி க்ஷேத்ராணி ச) ரத்னம், தனம், தான்யம், வயல்கள் ஆகியவை மற்ற உபாயங்களுக்கு வேண்டிய பணம் முதலானவற்றை அளிப்பதன் மூலம் உதவி புரிகின்றன. அவற்றை விற்று அப்பணத்தைக் கொண்டு இன்பத்தை அடையலாமாகையாலே உபேயமாகவும் இருப்பவை. (க்₃ருஹாணி ச) வீடுகளும் முற்கூறிய அனைத்துக்கும் இருப்பிடமாயிருந்து ரக்ஷிக்கையாலே மற்ற உபாயங்களுக்குத் துணைபுரிகின்றன. மாடமாளிகையாகக் கட்டி ஆனந்தமடையக் கூடியதாகையாலே உபேயமாகவும் இருக்கின்றன.

இனி, மறுமையில் அடையும் பயன்களையும் அவற்றுக்குரிய ஸாதனங்களையும் கூறி இவையனைத்தையும் கைவிட்டதைச் சொல்லுகிறது இரண்டாவது ச்லோகத்தின் முற்பாதியாலே — **(ஸர்வதர்மாம்ச்ச)** "**தர்ம**" சப்தத்தாலே கர்மயோகம், ஜ்ஞானயோகம் முதலான உபாயங்களைச் சொல்லுகிறது. "**ஸர்வ**" சப்தத்தாலே அவற்றை அனுஷ்டிக்கத் தகுதியை விளக்கும் ஸந்த்யாவந்தனம் முதலானவற்றைச் சொல்லுகிறது. **(ஸர்வகாமாம்ச்ச)** என்று இவ்வுலகில் அனுபவிக்கப்படும் புத்ரன் பசு அன்னம் முதலான இனிய பொருள்களையும், மறுமையில் அனுபவிக்கப்படும் ஸ்வர்க்கம், சிவலோகம், பிரம்மலோகம் முதலான விரும்பப்படும் பொருள்களையும் சொல்லுகிறது. **(ஸாக்ஷராங்)** என்று "அசித்தின் அனுபவமான ஐச்வர்யத்திலும் சேராமல், ஈச்வரனை அனுபவிப்பதான மேலான மோக்ஷத்திலும் சேராமல் "சித்"தின் அனுபவத்தோடு முடிந்துபோகும் தாழ்ந்ததான கைவல்யானுபவத்தைச் சொல்லுகிறது. "**அக்ஷரசப்தேந கேவலாத்மநி பர்யவஸாநம்**" [அக்ஷர சப்தத்தாலே கேவலாத்மானுபவத்தில் முடிந்துவிடும் கைவல்யத்தைச் சொல்லுகிறது] என்று ச்ருதப்ரகாசிகாசார்யர் வ்யாக்யானம் செய்தார். இது, "விரஜைக்கு அப்பால் பரமபதமாகிற நகரத்திற்கு முன்னால் உள்ள ஒரு ஸ்தானத்தில் அனுபவிக்கப்படும் தாழ்ந்த மோக்ஷம்" என்பது பூர்வாசார்யர்களின் திருவுள்ளம். "இது லீலா விபூதியிலேயே அனுபவிக்கப்படும் ஐச்வர்யங்களில் ஒன்றே. இதற்குப்பின் பரமமோக்ஷத்தை அடையலாம்" என்று தேசிகன் திருவுள்ளம். **(ஸந்த்யஜ்ய)** 'ஸ்வரூபத்துக்குத் தகாத இந்த உபாய உபேயங்களை இவ்வளவு நாள் பற்றியிருந்தோமே!' என்னும் லஜ்ஜையோடு கூட இவற்றை அடியோடு விடவேண்டும் என்று காட்டுகிறது.

**(லோகவிக்ராந்த சரணௌ)** என்னும் ச்லோகத்தின் பிற்பாதியாலே, பற்றுகிற எம்பெருமானின் திருவடிகளைச் சொல்லுகிறது. உயர்ந்தார் தாழ்ந்தார் என்னும் வேற்றுமை பாராமல் உலகனைத்தையும் அளந்த திருவடிகளாகையாலே ஸௌசீல்யகுணம் சொல்லப்படுகிறது. உறங்குகிற குழந்தையைத் தாய் முதுகிலே அணைத்துக் கொண்டு கிடப்பதுபோலே, தானறிந்த உறவே காரணமாக விடமாட்டாமல், தன்னை வேண்டாதவர்கள் தலையிலும் திருவடிகளை வைக்கை

யாலே வாத்ஸல்யகுணம் சொல்லுகிறது. திரிவிக்ரமனாக அவதரித்துக் கண் முன்னே நின்று காரியம் செய்கையாலே, ஸௌலப்₄யம் (எளிமை) சொல்லப்படுகிறது. **(தே)** என்று வகுத்த தலைவனாயிருப்ப வன் என்று ஸ்வாமித்வம் சொல்லுகிறது. **(விபோ₄)** என்கையாலே ப்ரபுவாயிருக்கும் தன்மையைச் சொல்லுகிறது. அதாவது—ஜ்ஞானம், ஶக்தி, ப₃லம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ் முதலான குணங்களால் நிறைந்திருப்பவன் என்று பொருள். கீதா சரம ஶ்லோகத்தில் உத்த ரார்த்தத்தில் உள்ள **"அஹம்"** ஶப்₃த₃த்தின் பொருள் இங்கு அனு ஸந்தி₄க்கப்படுகிறது. த்வயத்திலுள்ள **"நாராயண"** ஶப்₃த₃த்தின் பொருளும் இப்பதத்தில் சொல்லப்படுகிறது. **"தே"** என்னும் பதத் தில் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை நிரூபித்துத்தரும் லக்ஷ்மீதேவி யாகிற பெரிய பிராட்டியின் ஸம்பந்தமும் அனுஸந்திக்கத்தக்கது. இதனால் பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டே சரண மடைய வேண்டுமென்று உணர்த்தப்படுகிறது. **(சரணௌ)** என்று திருவடிகளைச் சொல்லுகையாலே, எம்பெருமானுடைய தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹம் உணர்த்தப்படுகிறது. **(ஶரணம்)** என்கையாலே, எம்பெரு மானுக்கும் அவனுடைய திருவடிகளுக்கும் உள்ள உபாயத்வம் உணர்த் தப்படுகிறது. **(அவ்ரஜம்)** 'உறுதி பூண்டேன்' என்று பொருள். ஆக, ஐந்தாவது சூர்ணையின் இறுதியில் **"அநந்ய ஶரண: .....ஶரணம் அஹம் ப்ரபத்₃யே"** [வேறு புகலற்றவனாய் உன்னுடைய திருவடித் தாமரையிணையை **ஶரணமடைகிறேன்**] என்று அனுஸந்தி₄த்ததை புராண வாக்யத்தாலே விவரித்தார். இவ்விரண்டு ஶ்லோகங்களாலே விட வேண்டியவற்றைவிட்டு, பற்ற வேண்டியவற்றைப் பற்றி நின்றாராயிற்று.

**ஏழாவது சூர்ணை அவதாரிகை :—** முன் சூர்ணையில் தாய், தந்தை முதலானவர்களை விடச்சொன்னார். அப்படியானால் அவர்களால் விளை யக்கூடிய பயன்களையெல்லாம் இழக்கவேண்டி வருமோ? எனில்— அனைவர்க்கும் எல்லா உறவுமாய் இருந்து ரக்ஷிக்கும் எம்பெருமானைப் பற்றியவர்களுக்கு எதையும் இழக்கவேண்டியதில்லை. ஆகையாலே கீழ் விட்டவையெல்லாம் எம்பெருமானே என்கிறார்.

7. த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ ப₃ந்து₄ஶ்ச கு₃ருஸ் த்வமேவ |

---

வ்யா :— (த்வமேவ மாதாச) பிறந்த பின்பு நன்மை செய்யும் தந்தையைப் போலல்லாமல் கர்ப்பத்தில் விழும் போதிலிருந்தே ரக்ஷிக்கிறவளன்றோ தாய். அத்தகைய தாயும் நீயே. "தாயிருக்கும் வண்ணமே உம்மைத் தன் வயிற்றிலிருத்தி உய்யக் கொண்டான்" [பெரிய திரு 11-6-6] என்கிறபடியே ஸ்ருஷ்டி காலத்திற்கு முன்பே படைப்பதற்கு உறுப்பாக இவன் அழிந்து விடாதபடி தாய்போலே தன் வயிற்றில் வைத்துக் காப்பாற்றியதை இத்தொடரால் நினைக்கிறார். (பிதா த்வமேவ) தாய்க்கும் முன்னதாக இவன் பிறப்பதற்கு முயற்சி மேற்கொள்ளுபவன் தந்தையன்றோ.

88. ஜிதந்தே புண்ட₃ரீகாக்ஷ! நமஸ்தே விஶ்வபா₄வந! |
நமஸ்தேஸ்து ஹ்ருஷீகேஶ! மஹாபுருஷ! பூர்வஜ! ||

[ஜிதந்தே-1]

[செந்தாமரைக்கண்ணு! உன்னால் (இவ்வாத்ம வஸ்து) ஜயிக்கப்பட்டது; (இது) என்னுடையதல்லவே; உன்னுடையதாயிற்றே; உலகெல்லாம் உண்டாக்கினவனே! இந்திரியங்களை நியமிப்பவனே! கொடுப்பதில் சிறந்தவனே! முற்பாடனாய்ப் பிறப்பவனே! (இவ்வாத்மவஸ்து) எனக்கானதை தவிர்ந்து உனக்கே ஆகவேணும்.] என்கிற ஜிதந்தே ஶ்லோகத்தில் "பூர்வஜ" (முற்பாடனாகப் பிறப்பவனே) என்று கூறியதை நினைக்கிறார். இவ்விரண்டு தொடராலும் சொல்லப்பட்ட அர்த்தத்தை, "பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ" [பெரிய திருவ-5] என்று நம்மாழ்வார் விளக்கினர். "மற்றை யாராவாரும் நீ பேசில்" [பெரிய திருவ 5] என்பதை மேல்தொடர்கள் காட்டுகின்றன. (த்வமேவ ப₃ந்து₄ஶ்ச) உறவினரும் நீயே. உறவினராயிருப்பவர்கள் இவன் வழி கெட்டுப்போகாதபடி உபதேசம் முதலானவற்றாலே திருத்தி நல்ல வழியில் நடக்கச் செய்பவர்களன்றோ. அப்படியே நான் முறைகெட்டு நடக்காதபடி எனக்கு அந்தர்யாமியாய் இருந்து நியமித்து நல்ல வழியில் நடத்தும் உறவினனும் நீயே. (கு₃ருஸ்த்வமேவ) கு₃ருவாகிற ஆசார்யனும் நீயே.

89. கு₃ஶப்₃த₃ஸ் த்வந்த₄கார: ஸ்யாத் ருஶப்₃த₃ஸ் தந்நிரோத₄க: |
அந்த₄கார நிரோதி₄த்வாத் கு₃ருரித்யபி₄தீ₄யதே ||

த்வமேவ வித்3யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தே3வதே3வ ॥

---

७ शरणशब्दं विवृणोति त्वमेवेति। पितादिकार्यरक्षणस्य अस्मिन्नेव पुष्कलत्वादयमेव बन्धुः, न तु पित्रादय इत्यभिप्रायेण त्वमेवेत्यावृत्तिः ॥

---

['கு3'ஶப்3த3ம் அந்த4காரம் என்னும் பொருளையுடையது. 'ரு'ஶப்3த3ம் அதைத் தடுப்பது; அந்த4காரத்தைத் தடுப்பவராகையால் ஆசாரியன் கு3ருவெனப்படுகிறார்.] எனகிறபடியே "இருள் தருமா ஞாலம்" [திருவாய் 10-6-1] என்று சொல்லப்படும் இவ்வுலகில் விளையும் அஜ்ஞானங்கள் அனைத்தையும் நீக்கி, "தெளி விசும்பு" [திருவாய் 9-7-5] என்று சொல்லப்படும் தெளிவை விளைக்கும் திருநாட்டை இவன் அடையும்படி செய்கையாலே, எனக்கு அறியாத பொருள்களையெல்லாம் அறிவித்த ஆசார்யனும் நீயே என்கிறார். "அறியாதன அறிவித்த அத்தா" [திருவாய் 2 3-2] என்றாரன்றோ நம்மாழ்வாரும். ஆசார்ய பரம்பரையில் முதல் ஆசார்யனாய் இருப்பவனன்றோ எம்பெருமான்.

90. லக்ஷ்மீநாத2ஸமாரம்ப4ாம் நாத2யாமுநமத்4யமாம் ।
அஸ்மதா3சார்யபர்யந்தாம் வந்தே3 கு3ருபரம்பராம் ॥
[கூரத்தாழ்வான் அருளிய தனியன்]

[ஸ்ரீமந்நாராயணனுடன் தொடங்குவதும், நாத2யாமுநர்களை நடுவாகக் கொண்டதும், நம்முடைய ஆசாரியருடன் முடிவதுமான கு3ருபரம்பரையை வணங்குகிறேன்] என்று சொல்லப்படுகிறதன்றோ. "இசைவித்து என்னை உன் தாளிணைக்கீழ் இருத்தும் அம்மானே!" [திருவாய் 5-8-9] என்கிறபடியே, முதன் முதலில் தன்னிடம் ருசியை விளைக்கும் முதல் ஆசார்யனாயிருப்பவன் எம்பெருமானேயன்றோ. (த்வமேவ வித்3யா) ஆசார்யன் உபதேசித்த ஜ்ஞானமும் நீயே. "நாவினுள் நின்று மலரும் ஞானக் கலைகளுக்கெல்லாம் ஆவியும் ஆக்கையும் தானே" [திருவாய் 1-9-8] என்று ஆழ்வார் அருளியபடியே ஜ்ஞானத்தினுடைய ஸத்தை (உத்பத்தி), ஸ்தி2தி (தொடர்ச்சி), ப்ரவ்ருத்தி (செயல்பாடுகள்) ஆகிய அனைத்தும் எம்பெருமானுக்கு வசப்

பட்டதாகையாலும், ஜ்ஞானத்தால் அறியப்படுபவன் அவனாகையாலும், "ஜ்ஞானமும் நீயே" என்கிறார். **(த்₃ரவிணம் த்வமேவ)** த்₃ரவிணம் எனப்படுவது த்ரவ்யமாகும். இவ்வுலகில் திரவியம் இவ்வுலக அநுப வங்களுக்கு உதவி புரிவது என்பது ப்ரஸித்தம். இங்கு ப₄க₃வதநு ப₄வத்திற்கு உதவிபுரியும் பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்திகளை இந்த "த்₃ரவிண" ஶப்₃த₃ம் குறிக்கிறது என்று கொள்ளலாம். அப்படியல் லாமல், ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்னத்தில் 30-வது ஶ்லோகத்தில், "**த₄நம் மதீ₃யம் தவ பாத₃பங்கஜம்**" என்று, ப்ராப்ய ப்ராபகங்கள் இரண்டுமாயிருக்கைகயயிட்டு எம்பெருமானின் திருவடித் தாமரைகளை "**த₄நம்**" என்று குறிப்பிட்டதுபோலே, இங்கும் 'ப்ராப்ய ப்ராபகங்கள் இரண்டும் நீயே' என்று குறிப்பதாகவும் கொள்ளலாம். **(த்வமேவ ஸர்வம்)** இதுவரையில் சொல்லப்பட்டவற்றைத் தவிர மற்றும் பல நன்மை பயக்கும் பொருள்கள் எல்லாமே நீதான் என்கிறார். **(மம தே₃வதே₃வ)** அனைத்தையும்விட்டு உன்னையே பற்றின எனக்கு, விட் டவை அனைத்தும் "அயர்வறும் அமரர்கள் அதிபதி" [திருவாய் 1-1-1] என்று சொல்லப்பட்ட நித்ய ஸூரி நாதனாகிற நீயே ஆவாய்.

ஏழாவது சூர்ணையின் ஸந்தர்பனப₄ட்டரின் வ்யாக்யானம் பின் வருமாறு :— இந்த சூர்ணையாலே ஐந்தாவது சூர்ணையில் உள்ள "**ஶரணம்**" என்னும் பதத்தை விவரிக்கிறார். தாய் தந்தை முதலான வர்கள் செய்யும் ரக்ஷணம் இவனிடமே நிறைந்திருக்கையாலே, இவனே எல்லா உறவுமாகிறான்; தாய் தந்தை முதலானோர் ஆக மாட்டார் கள் என்னும் கருத்தாலே "**ஏவ**"காரத்தைத் திருப்பித் திருப்பிச் சொல்லு கிறார். 7.

**எட்டாவது சூர்ணை அவதாரிகை :—** "இப்படி, எல்லாமாயிருப்பது உமக்கு ஒருவருக்கு மட்டுமோ?" என்று எம்பெருமான் திருவுள்ள மாக "எனக்கு மட்டுமன்று; எல்லா உலகங்களிலும் வாழும் எல்லா ஜீவர்களுக்கும் எல்லாவிதமான உறவு முறையாகவும் இருப்பவன் அனை வரிலும் மேம்பட்ட நீயே" என்கிறார்.

**வ்யா :—** **(பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய)** எல்லா உலகங் களிலும் உண்டான அசைவனவும் அசையாதனவுமான எல்லாப் பொருள்களையும் உண்டாக்கினவனே! **(த்வமஸ்ய பூஜ்யஶ்ச)** ஆகை யாலே, இந்த எல்லாப் பொருள்களுக்கும் பூஜிக்கத் தக்கவனும

8. பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யஶ்ச ச குருர் கரீயாந் |
ந த்வத்ஸமோஸ்த்யப்₄யதி₄க: குதோऽந்யோ
லோகத்ரயேப்யப்ரதிமப்ரப₄ாவ! ॥

---

८. न परं मम, सर्वलोकस्य चेत्याह पितासीति। रक्षकत्वे समाभ्यधिकराहित्यमुक्तम्। सौलभ्ये वा अप्रतिमप्रभावेति परत्वस्योक्तिः।

---

ஆகின்றவனும் நீயே அல்லவா? (குருர் கரீயாந்) சிறந்தவனான ஆசார்யனும் நீயே. "பூஜ்யஶ்ச" என்று சொன்னது, அனைவர்க்கும் தந்தையாயிருக்கையாலே, பூஜிக்கத் தக்கவனாயிருக்கிறான் என்னுமளவில் நிற்கும். இங்கு ஆசார்யனும் நீயே என்றதால்

91. உத்பாத₃கப்₃ரஹ்மபித்ரோர் க₃ரீயாந் ப்₃ரஹ்மத₃: பிதா

[பிறப்பித்த தந்தைக்கும் ப்₃ரஹ்மோபதே₃ஶம் செய்த தந்தைக்குமிடையே ப்₃ரஹ்மோபதே₃ஶம் செய்த தந்தை சிறந்தவன்.] என்கிறபடியே, பூஜிக்கத் தக்கவனாயிருக்கையின் எல்லை நிலத்தைச் சொல்லுகிறது. (ந த்வத் ஸமோஸ்த்யப்₄யதி₄க: குதோऽந்ய:)

92. பித்ருமாத்ரு ஸுதப்₄ராத்ரு தா₃ரமித்ராத₃யோऽபி வா।
ஏகைகப₂லலாப₄ாய ஸர்வலாப₄ாய கேஶவ: ॥

[தாய், தந்தை, மக்கள், உடன்பிறந்தோர், மனைவி, நண்பன் முதலிய அனைவரும் ஒவ்வொரு ப₂லனை அடைவதன் பொருட்டு ஆவர். கேஶவனோவென்னில் எல்லாப் ப₂லன்களை அடைவதன் பொருட்டு ஆவான்.] என்கிறபடியே, நீயே எல்லாப் பயன்களையும் சேதனரை அடைவிப்பதற்கு வல்லவனாகையாலே, உன்னைத் தவிர்ந்த மற்ற எல்லாப் பொருள்களிலும், உன்னையொத்த ஒருவர் இல்லை என்று ஆனபின்பு, உனக்குமேம்பட்டவர் இல்லையென்று சொல்லவும் வேண்டுமோ? "ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா" [திருவாய் 2-3-2] என்று நம்மாழ்வாரும் அருளினாரன்றோ. (லோகத்ரயேऽபி அப்ரதிமப்ரப₄ாவ) ஆகையாலே ப₃த்₃த₄ர் முக்தர் நித்யர் என்னும் மூவகைப்பட்ட மற்ற எல்லாச் சேத

ணரைக் காட்டிலும் ஒப்பற்ற பெருமையுடையவன் நீயே. **"லோகத்ர யம்"** என்னும் ஶப்தம் அர்த்த ஸ்வாரஸ்யத்தைக் கருதி மூவகைப் பட்ட சேதனர்கள் என்று பொருள்படுகிறது. ஸுதர்சனபட்டர் இந்த ஶ்லோகத்தின் பிற்பாதிக்கு, "ரக்ஷகனுயிருப்பதில் ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவன்" என்பதையோ, "ஸௌலப்யத்தில் ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவன்" என்பதையோ காட்டுகிறது என்றும், **"அப்ரதிமப்ர பாவ"** என்று பரத்வத்தைக் காட்டுகிறது என்றும் பொருள் கொண்டார். **8.**

**ஒன்பதாவது சூர்ணை அவதாரிகை:—** ஒன்பதாவது சூர்ணை யாலே கீழ் ஐந்தாவது சூர்ணையில் ஶரணம் புகுந்ததற்கு மன்னிப்பு வேண்டுகிறார். யாருடைய நெஞ்சாலே நோக்கி இப்படி மன்னிப்பு வேண்டுகிறார்? என்றால், தம் நெஞ்சாலே நோக்கி மன்னிப்பு வேண்டுகிறார். அதாவது—அநாதிகாலமாக, குற்றங்களைப் பண்ணி நிறைத்துக்கொண்டவன் இன்று வந்து ஈடுபாடு உள்ளதுபோல் ஶர ணம் புகுந்தாலும், 143-ம் பக்கத்திலுள்ள 79-வது ப்ரமாணத்தின் படியும், 144-ம் பக்கத்திலுள்ள 81-வது ப்ரமாணத்தின்படியும் எம் பெருமானுடைய எதிரிகளையும் கைக்கொள்ளும் இயல்பைப் பார்த்தால் ஶரணமடைந்த இவனைக் கைக்கொள்ளுவதற்கு எக்குறையுமில்லை. ஆனாலும், பதிவ்ரதையாயிருந்த மனைவி ஒருத்தி நீண்டநாள் பரபுருஷர் களோடு தொடர்புகொண்டிருந்து, பின்பு கணவன் பழிக்கு பயப்படுப வன் என்பதையே பற்றுசாகக்கொண்டு, "என்னை ரக்ஷிக்கவேணும்" என்று அவன் முன்னே வந்து நின்றால், முன்னே வருகையே குற்ற மாய், அதற்குமேலே 'என்னை ரக்ஷிக்க வேணும்" என்று சொல்லுவது குற்றத்திற்கு மேலெல்லையாய் இருப்பதாய், பெண்மையை அழிப்பதாய் இருக்கக் கூடியதன்றோ! அப்படியே இந்தச் சேதனனும், வேறொரு வருக்கும் ஆகாதபடி எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டவனாய் இருந்தபோதிலும், கண்டவிடமெல்லாம் திரிந்து, பெரும்பெருத்த குற்றங்களைச் செய்து, லஜ்ஜையில்லாமல் இன்று வந்து ஶரணம் புகு வது, குற்றத்திற்கு மேலெல்லையாய், இவனுடைய ஸ்வரூபத்தை அழிப்பதாய் இருக்குமன்றோ! ஆனால் ஶரணம் புகுவதும் குற்றத்திற்கு மேலெல்லையாய் இருப்பது எனில், இவர் ஶரணம் புகுவானேன்.

9. தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதா4ய காயம்
ப்ரஸாத3யே த்வாமஹமீஶ மீட்3யம் ।
பிதேவ புத்ரஸ்ய ஸகே2வ ஸக்2யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தே3வ! ஸோடு4ம் ॥

---

९. प्रपत्तिं विवृणोति तस्मादिति । ईशमीड्यम् * "न तस्येशे कश्चन तस्य नाम महद्यशः" इतिवत् । पित्रादयस्तत्सम्बन्धाद् क्षमन्ते; अतः सर्वविधबन्धुत्वात् त्वया क्षन्तव्यमित्यर्थः । प्रार्थनापर्यन्तमहाविश्वासः प्रपत्तिः । महाविश्वासपूर्विका प्रार्थना वा ॥

---

அதற்கு மன்னிப்பு வேண்டுவானேன்? எனில் — 45-வது பக்கத்தி உள்ள 34-வது ப்ரமாணத்தில் சொன்னபடி காகாஸுரனைப்போலே, இவனை ரக்ஷிக்கக் கூடியவர் வேறு எவருமே இல்லாமையாலே, இவன் ஶரணம் புகவும் வேணும். தன்னுடைய பழைய நடத்தையைப் பார்த்தவுடன், ஶரணம் புகுந்த இதுவும் குற்றமாயிருந்து கொண்டு பயத்தை விளைக்கையாலே அதற்கு மன்னிப்பு வேண்டவும் வேண்டும். ஸ்தோத்ர ரத்னத்தில் ஆளவந்தாரும், 52-ம் ஶ்லோகத்தில், **"அஹம் அத்3யைவ மயா ஸமர்ப்பித:"** [இந்த ஆத்ம வஸ்து உன் திருவடித் தாமரைகளில் இக்கணத்திலேயே என்னால் ஸமர்ப்பிக்கப்பட்டது] என்று ஆத்ம ஸமர்ப்பணம் செய்து, அடுத்த ஶ்லோகத்தில், "எல்லாம் உன்னுடைய பொருளாயிருக்க, உனக்கு நான் எதை ஸமர்ப்பிப்பேன்" என்று அந்த ஆத்ம ஸமர்ப்பணத்திற்கு அனுதாபத்தைத் தெரிவித்ததையொட்டி, இவரும் இங்கு ஶரணம் புகுந்ததற்கு அனுதாபத்தைத் தெரிவிக்கிறார்.

வ்யா :— (தஸ்மாத்) "த்வமேவ" என்று தொடங்கும் ஏழா வது சூர்ணையிலும் "பிதாஸி" என்று தொடங்கும் எட்டாவது சூர்ணை யிலும் சொல்லப்பட்டபடியே நீயே சேதனர்க்கு எல்லா வகைப்பட்ட உறவினரும் ஆகையாலே என்று பொருள். செய்த குற்றத்தைப் பொறுக்கவேண்டுமென்றால் எல்லா வகைப்பட்ட உறவினனும் ஆக வேண்டுமென்று இதிலிருந்து தோற்றுகிறது. அதிலும், கணவன் என் பது போன்ற ஒரே உறவாய் ஒருவழிப்பட்டு இருக்குமானால் குற்றம் குற்றமாகவே முடிந்து விடலாம். அப்படியல்லாமல் எல்லா வகைப் பட்ட உறவும் உண்டாயிருக்கையாலே, இவனுக்கும் செய்யத்தகாத குற்றமில்லை. அவனுக்கும் பொறுக்க முடியாத குற்றமில்லை என்று விளங்குகிறது. (ப்ரணம்ய) வணங்கி. இது மனத்தால் செய்யப் படும் வணக்கத்தைக் காட்டுகிறது. (ப்ரணிதா₄ய காயம்) உடலாலே தண்டனிட்டு. இது உடலால் செய்யப்படும் வணக்கத்தைக் காட்டு கிறது. இரண்டு வகையான வணக்கத்தையும் சொல்லுகையாலே வாயால் செய்யப்படும் வணக்கம் தன்னடையே தேறுகிறது. ஆக, மனம், வாக்கு, மெய் என்னும் முக்கரணங்களாலும் சரணம் புகுந்த படியைச் சொல்லிற்று. (ப்ரஸாத₃யே) உகப்பிப்பதற்காக சரணம் புகுந்தேன் என்றபடி. யாரை எனில் — (ஈஶம் ஈட்₃யம் த்வாம்) எனக்கு ஸ்வாமியுமாய் துதிக்கத் தக்கவனுமாய் இருக்கும் உன்னை. உகப்பிப்பது யார்? எனில்—(அஹம்) உன்னையொழிய வேறு எவர்க் கும் உரியவனல்லாத அடிமையாயிருந்தும், கணக்கற்ற குற்றங்களைப் பண்ணிப் போந்து இங்கு வந்து சரணம் புகுந்த நான். "ஈஶன்" என் னும் பதத்தாலே உடையவன் என்று காட்டுகிறார். "ஈட்₃யன்" என் றது துதிக்கத் தக்கவன் என்றபடி. "ஈஶன்" என்று உடையவன் என்கையாலே, உடைமையாகிற என்னை மன்னிக்கப் புகுந்தால், அதை எவராலும் தடுக்க முடியாது என்று காட்டுகிறது. "ஈட்₃யன்" (துதிக்கத் தக்கவன்) என்கையாலே துதிக்கத்தக்க விஷயத்தில் அநாதி காலமாக வெறுப்புக்கொண்டிருந்தேன் என்று தம்முடைய குறை தோன்றும்படி கூறுகிறார். அவன் இவனுடைய குற்றத்தைப் பொறுப் பதற்குக் காரணம் சொல்லுகிறார் மேல் மூன்று தொடர்களாலே (பிதேவ புத்ரஸ்ய) புத்ரன் பண்ணின குற்றத்தைப் பிதா பொறுக்குமா போலே, "பிதா த்வமேவ" [7] எனப்பட்ட நீ என் குற்றத்தைப்

பொறுக்கவேணும். **(ஸகேவ ஸக்யு:)** தோழன் செய்த குற்றத்தை அவனுடைய தோழன் பொறுப்பதுபோலே எனக்குத் தோழனான நீ என்னுடைய குற்றத்தைப் பொறுக்கவேணும். **(ப்ரிய: ப்ரியாயா:)** இனிய மனைவியுடைய குற்றத்தை இனிய கணவன் பொறுப்பதுபோலே என் பர்த்தாவான நீயும், பர்த்ரு பார்யா ஸம்பந்தத்தையுடைய என்னுடைய குற்றத்தைப் பொறுக்கவேணும். **''ப்ரியாயா: அர்ஹஸி''** என்னுமிடத்தில் சந்தி வந்திருப்பது ஆர்ஷம் என்று கொண்டார் பெரிய வாச்சான்பிள்ளை. கீதா ஶ்லோகமான [11-44] இதற்கு பாஷ்யமிடும் போது, **''ப்ரிய: ப்ரியாய மே''** என்று ஆர்ஷமாகக் கொள்ளாமல் உரையிட்டிருக்கும்போது ஆர்ஷமாகக் கொண்டு பெரியவாச்சான்பிள்ளை உரையிட்டிருப்பது சரியல்ல என்று சிலர் உரைப்பர். இங்கு இதற்கு முன் உள்ள ஶ்லோகங்களில், **''பிதரம் மாதரம்''** என்றும், **''த்வமேவ மாதாச''** என்றும், இவர் தமக்கு எம்பெருமான் எல்லா வகைப்பட்ட உறவினனுமாய் இருப்பவன் என்று அனுஸந்தித்திருக்கையாலே, **''தஸ்மாத் ப்ரணம்ய''** என்னும் இந்த ஶ்லோகத்திலும், பித்ரு புத்ர மித்ர ஸம்பந்தத்துடன் பதி பத்நீ ஸம்பந்தத்தையும் அனுஸந்திப்பது ஸ்வரஸமாய் இருக்குமாகையாலும் நாயக நாயகீ பாவத்திலேயே ஊன்றியிருந்த ஆழ்வார்கள் வழி வந்த எம்பெருமானார் திருவுள்ளத்திற்குப் பொருந்தியிருக்குமாகையாலும் அப்படி வ்யாக்யானம் செய்யப்பட்டது. மேலே சொன்ன ப்ரகரண ஸ்வாரஸ்யம் கீதையிலில்லையாகையாலும், **''ஹே க்ருஷ்ண ஹே யாதவ''** என்னும் அர்ஜுனன் நாயக நாயகீ பாவமுடையவன் அல்லனாகையாலும் எம்பெருமானார் வேறுவிதமாக பாஷ்யமிட்டார். ஆகையால் விரோதமில்லை. **(ஸோடும்)** பொறுக்கைக்கு எல்லா விதமான உறவினனுமாய் இருக்கையாலே. **(தேவ அர்ஹஸி)** தேவரீரும் என்னுடைய குற்றத்தைப் பொறுப்பதற்கு உரியவர்.

ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் இந்த சூர்ணையை ப்ரபத்தியை விவரணம் செய்வதாகப் பொருள் கொண்டார். **''ஈஶம் ஈட்யம்''** என்பதற்கு **''ந தஸ்யேஶே கஶ்சந தஸ்ய நாம மஹத்யஶ:''** [தை-நா 1-9] [அந்தப் பரமாத்மாவை நியமிப்பவன் எவனுமில்லை. அவனுடைய புகழ் மிகப் பெரியது.] **என்னும்** உபநிஷத் வாக்கியத்தை ப்ரமாணமாகக் காட்டினார். ''தந்தை முதலானோர் தங்களுடைய உறவாலேயன்றோ (பிள்ளை முதலானோரை) மன்னிக்கிறார்கள். எல்லாவிதமான உறவு

மாயிருக்கையாலே நீ என்னை மன்னிக்கவேண்டும் என்று பொருள்'' என்று ஶ்லோகத்தின் திரண்ட பொருளையும் காட்டினார். ''(நீயே உபாய மாவாயாக என்னும்) ப்ரார்த்தனையில் முடியும் மஹாவிஶ்வாஸம் ப்ர பத்தி என்றோ மஹாவிஶ்வாஸத்துடன் கூடிய முற்கூறிய ப்ரார்த் தனை ப்ரபத்தி என்றோ கூறலாம்'' என்று ப்ரபத்திக்கு இரண்டு வித மாக லக்ஷணம் உரைத்தார்.

ஸ்ரீவேதாந்த தேசிகர் உரை:- **''ப்ரணம்ய ப்ரணிதா₄ய காயம்''** என்றது ஐந்தாவது சூர்ணையில் **''ப்ரபத்₃யே''** என்று செய்யப்பட்ட ப்ரபத்தி யின் விவரணம். மிகுந்த வணக்கத்தைக் காட்டுவது. ப்ரகரணத்தை யொட்டி ப்ரபத்தி ரூபமாக ஆகிறது. **''ப்ரணம்ய ப்ரஸாத₃யே''** என்றது ப்ரபத்தியாகிற எம்பெருமானை உகப்பிக்கும் உபாயத்தை அனுஷ்டிக்கிறேன் என்று பொருள்படும். ''ப₄க்தியைப்போலே ப்ரபத்தி யும் எம்பெருமானை உகப்பிக்கும் ஸாதனமாகும்'' என்று இச் சூர்ணை யின் திரண்ட பொருளைக் கூறினார். **''(அர்ஹஸி தே₃வ ஸோடு₄ம்)''** என்று மன்னிப்பை வேண்டியது, அடுத்த சூர்ணையில் விரிவாகக் காட்டப் போகும் பாபங்களிலிருந்து மன்னிப்பை இங்கு சுருக்கமாகச் சொன்னபடி'' என்றும் கூறினர். இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை யின் வ்யாக்யானமும் தேசிகனின் விவரணமும் அவரவர் ஸம்ப்ரதாயத் திற்கேற்ப வேறுபடுகிறது. 9.

**பத்தாவது சூர்ணை அவதாரிகை :—** ஆக முதல் சூர்ணையாலே, ப்ராப்யமான கைங்கர்யத்தில் ருசியும், எம்பெருமானே உபாயம் என் னும் உறுதியும் உண்டாவதற்காக, பிராட்டியின் திருவடிகளிலே ஶர ணம் புகுந்தார். 2, 3, 4 சூர்ணைகளாலே பிராட்டி அருளாலே அவற் றைப் பெற்றார். அதற்குப் பிறகு உள்ள சூர்ணைகளாலே, எம்பெரு மானை ஆஶ்ரயிப்பதற்கு உறுப்பாக உப₄ய விபூ₄திக்கும் நாதனுயிருக் கும் பெருமையைச் சொல்லி, அதற்குப் பிறகு எம்பெருமானை ஆஶ்ர யிப்பதற்குத் துணை புரியும் ஶீலம் முதலான குணங்களை முன்னிட்டுக் கொண்டு பிராட்டி புருஷகாரமாகத் தாம் ஶரணம் புகுந்து, அதற்குப் பிறகு பூர்வர்களுடைய ப்ரக்ரியையாலே ஶரணம் புகுந்து, அதற்குப் பின் கீழே விட்ட ப்ராப்ய ப்ராபகங்களெல்லாம் எம்பெருமானே என்று பற்றி, அதற்குப்பின் 'இது எனக்கு மட்டுமன்று. எல்லாச் சேதனர்க் கும் ஒக்கும்' என்று கூறி, ஒன்பதாவது சூர்ணையில், தாம் செய்த ப்ர

अथ उत्तरखण्डं विवृण्वन् इष्टप्राप्तेरनिष्टनिवृत्तिपूर्वकत्वरूपार्थक्रमात् प्रथमं नमश्शब्दार्थमाह मन इत्यादिना। अनादिकालप्रवृत्त-

---

ப்த்திக்கு மன்னிப்பு வேண்டினார். ஆக, இவ்வளவால் த்₃வயத்தின் பூர்வ கண்டத்தின் அர்த்தத்தை அநுஸந்திப்பவராய் நின்றார். இனி ப்ராப்யத்தைப் பிரார்த்திக்கும் உத்தர கண்டத்தின் அர்த்தத்தை அநுஸந்திக்கிறார். 'ப்ராப்யம்' என்பது இஷ்ட ப்ராப்தி (விரும்பியதான கைங்கர்யத்தின் லாபம்), அநிஷ்ட நிவ்ருத்தி (விலக்கத்தக்கவையான பாபங்கள் முதலானவை நீங்குதல்) என்று இருவகைப்படும். அவற்றில் அநிஷ்டமாகிற பாபங்கள் முதலானவை நீங்கினாலல்லது, இஷ்டமான கைங்கர்யத்தின் லாபம் கிடைக்காதாகையாலே, முதலில் அநிஷ்ட நிவ்ருத்தியைக் கூறும் (உத்தர கண்டத்தில்) "நம:" ஶப்தத்தின் பொருளை அருளிச்செய்கிறார். அந்த "நம:" ஶப்₃த₃த்திற்கு "ஶரீரத்தையே ஆத்மாவாக நினைக்கும் தேஹாத்மாபிமானம் தொடக்கமாக, கைங்கர்யம் தன்னுடைய ஆனந்தத்திற்கு உறுப்பு என்று நினைக்கும் எண்ணம் ஈறாக இடையிலுள்ள தடைகளை முழுவதும் போக்கித் தரவேணும்" என்றல்லவோ பொருள் சொல்லுவது வழக்கம். அந்தத் தடை நீங்குதலும், எல்லாக் கர்மங்களும் நீங்கினாலல்லவோ உண்டாகும். ஆகையால் தம்முடைய கர்மங்கள் நீங்கவேண்டும் என்பதை முதலில் இந்தப் பத்தாவது சூர்ணையாலே பிரார்த்திக்கிறார். நம்மாழ்வார் "பொய்ந் நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும், இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை" [திருவிருத்தம்-1] என்று அவித்₃யையாகிற அஜ்ஞானம் நீங்ுவதை முதலில் அருளிச்செய்தார். அவித்யா, கர்ம, வாஸநா, ருசி, ப்ரக்ருதி ஸம்பந்தம் என்கிற ரீதியிலே கர்மத்திற்குக் காரணம் அஜ்ஞானமாகையாலும் அஜ்ஞானத்திற்குக் காரணம் தே₃ஹ ஸம்பந்தமாகையாலும் கர்மம் நீங்குவதை முதலில் பிரார்த்திக்கிறார் இவர். ஆழ்வார் தாம் அனுபவித்ததை அருளிச் செய்கையாலே தேஹாத்மாபிமானமாகிற அஜ்ஞானத்தின் மூலம் 'நான்' 'எனது' என்னும் எண்ணம் ஏற்பட்டுத் துன்பம் விளைகிறதாகையாலே அஜ்ஞானத்தை முதலில் அருளிச்செய்தார். இவரும் தாம் அனுபவித்ததைச் சொன்னபோதிலும் இந்தத் தரிசனத்திற்குக் கர்மத்தின் முக்கியத்துவத்தைச் சொல்ல வேண்டியதொரு நிர்பந்தம் உண்டாகையாலே, இந்தக் கர்மத்தை நிலை நிறுத்துவதற்காகவும், மாயாவாதிகள் 'அவித்₃யா நிவ்ருத்தியே

## 10. மநோவாக்காயைரநாதி₃காலப்ரவ்ருத்தாநந்தாக்ருத்ய கரண—க்ருத்யாகரண—

---

स्वमानन्त्ये हेतुः। प्रयमानन्तशब्दः सामान्यापराधविशेषणम्। सामान्या-

---

மோக்ஷம்' என்று அஜ்ஞானத்தையே முக்கியமாகச் சொல்லுகையாலே அதைத் தள்ளுவதற்காகவும், இவர் கர்மம் நீங்குதலை முதலில் அருளிச்செய்கிறார். நம்மாழ்வார் ஒன்றுக்கொன்று காரணமாயிருக்கும் மூன்றை அருளிச்செய்தார். இவர் ஒன்றுக்கொன்று கார்யமாயிருக்கும் கர்மம் தொடங்கி அருளிச்செய்கிறார்.

**வ்யா :—** (**மநோவாக்காயை:**) கர்மம் மனம் மொழி மெய் ஆகிய முக்கரணங்களாலும் செய்யப்படுவதாகையாலே அந்த முக்கரணங்களையும் காட்டுகிறார். அந்த முக்கரணங்களும் எம்பெருமானை அடைவதற்கும் அவனை இழந்து துன்பப்படுவதற்கும் காரணமாயிருக்கும்.

**93. மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் ப₃ந்த₄மோக்ஷயோ: ।**
**ப₃ந்தா₄ய விஷயாஸங்கி₃ முக்த்யை நிர்விஷயம் மந: ॥**
**[வி-பு 6-7-28]**

[மனிதர்களுக்கு ஸம்ஸாரத்திற்கும் மோக்ஷத்திற்கும் மனம்தான் காரணம். ஶப்₃தா₃தி₃ விஷயங்களில் ஈடுபட்ட மனம் ஸம்ஸார ஹேதுவாகிறது. விஷயங்களில் பற்றற்ற மனம் முக்திஹேதுவாகிறது.] என்று சொல்லப்பட்டதன்றோ. (**அநாதி₃கால ப்ரவ்ருத்த**) இந்தக் கர்மங்கள் அநாதிகாலமாகப் பண்ணிப் போந்தவை என்றபடி. (**அநந்த**) இவை அளவற்றவையாகவும் இருக்கும் என்கை. 'அநாதிகாலமாகப் பண்ணிப் போந்தவையாகையாலே அளவற்றவையாயிருக்கும்' என்று ஸுதர்சனபட்டர். (அக்ருத்ய கரண) ஶாஸ்த்ரங்களில் விலக்கப்பட்ட செயல்களைச் செய்வது. (க்ருத்யாகரண) ஶாஸ்த்ரங்களில் செய்யும்படி கூறியவற்றைச் செய்யாமலிருப்பது. இவையிரண்டும் ஸாமான்யமான அபசாரங்கள். அடுத்த மூன்று பதங்களாலே விசேஷாபசாரங்களைக் கூறுகிறார். (**ப₄க₃வத₃பசார**) எம்பெருமானைக் குறித்துச் செய்யப்படும் குற்றங்கள். (**பா₄க₃வதாபசார**) அவனடியார்

**ப₄க₃வத₃பசார—பா₄க₃வதாபசார—அஸஹ்யாபசாரரூப—நாநாவித₄ாநந்தாபசாராந்**

---

**पराधमुक्त्वा विशेषापराधमाह भगवदिति। भगवदपचारः शिशु-पालादिकृतः। भागवतापचारस्तु भागवतविषये अर्थादिनिमित्तान्तरेण कृतः। भागवतापचारो भगवदपचारः, भगवदपचारो भागवतापचार इति। भागवतभक्तविषयापचारः असह्यापचारः। आचार्यविषया-पराधो वा। भागवते अभागवतत्वनिमित्तापराधो वा। अर्चावतार-**

---

களைக் குறித்துச் செய்யப்படும் குற்றங்கள். ப₄க₃வத₃பசாரத்திற்கு சிசுபாலன் முதலானோர் செய்த அபசாரங்கள் உதாரணங்கள். பா₄க₃வதாபசாரமாவது — அடியார்கள் விஷயத்தில் பொருள் முதலானவை காரணமாக அவர்களுக்குத் தீங்கிழைப்பது. இரணியன் செய்தது பா₄க₃வதாபசாரம். "பா₄க₃வதர்களிடம் செய்யும் அபசாரமே எம்பெருமானுக்கு மிகவும் சீற்றத்தை விளைக்குமாகையாலே அதையே ப₄க₃வத₃பசாரம் என்றும் கொள்ளலாம். ப₄க₃வானிடம் இழைக்கும் குற்றங்கள் பா₄க₃வதர்களுக்கு மிகவும் வேதனையளிக்குமாகையாலே அதையே பா₄க₃வதாபசாரம் என்றும் கொள்ளலாம்" என்று ஸுத₃ர்சனபட்டர். **(அஸஹ்யாபசார)** ஒரு காரணமுமில்லாமல் ப₄க₃வத்₃ பா₄க₃வதர்கள் விஷயங்களில் குற்றமிழைப்பது பொறுக்கவொண்ணாததாகையாலே அது அஸஹ்யாபசாரம். "பா₄க₃வதர்களுடைய ப₄க்தர்கள் விஷயத்தில் இழைக்கப்படும் குற்றம் அஸஹ்யாபசாரம் என்றோ, ஆசார்யன் விஷயத்தில் இழைக்கப்படும் குற்றம் அஸஹ்யாபசாரம் என்றோ, ஒரு பா₄க₃வதரை பா₄க₃வதர் அல்லாதவரைப் போலே நடத்துவது அஸஹ்யாபசாரம் என்றோ, அர்ச்சாவதாரத்தைச் செம்பு கல் முதலானவற்றால் செய்யப்பட்டதாக நினைப்பது அஸஹ்யாபசாரம் என்றோ கொள்ளலாம்" என்று ஸுத₃ர்சனபட்டர். **(நாநாவித₄)** இவ்வண்ணமாக அபசாரங்கள் பலவிதமாய் இருக்கின்றன என்று கருத்து. "ஒவ்வொரு அபசாரத்திலும் உட்பிரிவுகளைக் குறிப்பது நாநாவித₄ ஸப்₃த₃ம்" என்பர் ஸுத₃ர்சனப₄ட்டர். **(அநந்தாபசாராந்)** பலவகைப்பட்டிருக்கும் இந்த அபசாரங்கள் ஒவ்வொன்றும் அளவற்றவையாய் இருக்கும்; இப்

**ஆரப்3த4 கார்யாங் அநாரப்3த4 கார்யாங் க்ருதாங் க்ரியமாணாங் கரிஷ்யமாணாம்ஶ்ச ஸர்வாங்**

---

विग्रहस्य अवैलक्षण्यप्रतिपत्तिर्वा । एकैकस्यावान्तरभिदापरो नानाविध-
शब्दः । सर्वशब्दः अपराधव्यक्तिकार्त्स्न्यपरः । कर्मणा वैदिक-

---

படிப்பட்ட இந்த அபசாரங்களும் எண்ணிறந்தவையாய் உள்ளன என்று காட்டுகிறது. இப்படியன்றோ இந்த அபசாரங்கள் பெருப் பெருத்தனவாய் உள்ளன.

**94. யத்3 ப்3ரஹ்மகல்பநியுதாநுப4வேऽப்யநாஶ்யம்**
**தத் கில்பி3ஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே4 ।**
**[ஸ்ரீவைகுண்ட2ஸ்தவம்-60]**

[யாதொரு **பாபம்,** **பல்லாயிரம்** ப்3ரஹ்மகல்பங்கள் அனுப4வித்தாலும் அழியாதோ, அந்தப் பாபத்தை இந்த ஜந்து இங்கு அரை க்ஷண நேரத்தில் செய்கிறான்.] என்று நூறாயிரம் ப்3ரஹ்ம கல்பங்களில் அனுபவித்தாலும் அனுபவித்து முடிக்கவொண்ணாத பாபத்தையன்றோ இச்சேதனன் ஓர் அரைக்கணத்திலே செய்கிறான். **(ஆரப்3த4கார் யாங்)** இவற்றில் ஒரு பகுதி பலன் கொடுக்கத் தொடங்கி விடுகிறது. இவையே ப்ராரப்3த4 கர்மம் எனப்படும். **(அநாரப்3த4கார்யாங்)** வலிமை மிக்க கர்மங்களால் தடுக்கப்பட்டிருக்கையால், பலன் கொடுக்கத் தொடங்காதவையாய் ப்ராரப்3த4 கர்மங்கள் முடிந்த பிறகு பலன் கொடுக்க இருப்பவை. **(க்ருதாங் க்ரியமாணாங் கரிஷ்யமாணாம்ஶ்ச)** 'இறந்த காலத்தில் செய்யப்பட்டவை, நிகழ் காலத்தில் செய்யப்படுபவை, வருங்காலத்தில் செய்யப்போகின்றவை' என்று முக்காலத்திலும் உள்ள கர்மங்களைச் சொல்லுகிறது. **(ஸர்வாங்)** இப்படிச் சிலவற்றைச் சொன்னேனேயொழிய என்னால் சொல்லி முடிக்க முடியாத எல்லாப் பாபங்களையும் என்று பொருள். **"ஸர்வ"** ஶப்3த3ம் பல வகைப்பட்ட ஶக்தியையுடைய எல்லாக் கர்மங்களையும் குறிக்கிறது. "சில கர்மங்கள் வைதிக கர்மங்களைச் செய்வதற்குத் தகுதியின்மையை விளைக்கும் ஶக்தியையுடையவை. சில கர்மங்கள் இவனுக்குத் துன்பத்தை விளைக்கும் ஶக்தியையுடையவை. சில கர்மங்கள் இவனுக்கு

அஶேஷத: க்ஷமஸ்வ ||

---

कर्मनिर्वर्तापादनशक्तिः, प्रत्यवायकरत्वशक्तिः, वासनाजनकत्वशक्तिश्चास्ति। तत्र अन्यतमशक्तिमात्रं क्षमाविषयो माभूदिति अशेषत इत्युक्तम्।

---

வாஸனையை உண்டாக்கும் ஶக்தியையுடையவை. இவற்றில் ஒவ்வொரு சக்தியை மாத்திரம் பொறுத்தால் போதாது. அனைத்தையும் பொறுக்கவேணும்'' என்று 'அஶேஷத:' ஶப்தத்திற்குக் கருத்துரைப்பார் ஸுதர்சன பட்டர். **(அஶேஷத: க்ஷமஸ்வ)** இவற்றை வாஸனையோடு கூடப் பொறுத்தருளவேணும் என்று கருத்து.

செய்யத்தகாததைச் செய்வதாகிற **'அக்ருத்யகரணம்'** செய்ய வேண்டியதைச் செய்யாமல் விடுகையாகிற **''க்ருத்யாகரணம்''** ஆகிய ஸாமான்ய அபசாரங்கள் இரண்டிலும் முறையே

**95. வித்₃வேஷோऽதிக்ரமே த₃ண்ட₃பூ₄யஸ்த்வம்**

[ஞானியாயிருப்பவன் விதியை மீறினால் அவனுக்குத் த₃ண்ட₃னை அதி₄கமாகும்.]

**96. ஶக்தஸ்யாதீவ தோ₃ஷவத்**

[சக்தியுள்ளவன் சாஸ்திரவிதி₄யை அநுஷ்டி₂யாதிருந்தானாகில் தோ₃ஷம் அதி₄கமாகும்.] என்று தெரிந்தே செய்தாலும் சக்தியுடையவனாயிருந்து செய்யாதிருந்தாலும் தோ₃ஷம் அதிகமாயிருக்கும். ப₄க₃வதபசாரமாவது :—எம்பெருமானுடைய அமுதுபடி சாத்துப்படிக்கு உரியவற்றைத் தான் வாங்கிப் பயன்படுத்துதல், பிறர்க்குக் கொடுத்தல், அதைப் பெற்றுப் பயன் படுத்துவாரிடத்தில் யாசித்தோ, யாசிக்காமலோ பெற்றுப் பயன்படுத்துதல். எம்பெருமானுடைய அவதாரங்களில் நம்மைப் போன்ற ஒரு மனிதன் அல்லது விலங்கு என்று எண்ணுதல், அர்ச்சாவதாரத்தை உலோகம் அல்லது கல் என்று எண்ணுதல், எம்பெருமானை மற்ற தேவதைகளோடு ஒத்தவன் என்று நினைத்தல், அவனுக்குச் சொந்தமான பொருள்களைத் தன்னுடையதாக நினைத்தல். இவையெல்லாம் செய்யத் தகாதவற்றைச் செய்தலாகிற **அக்ருத்யகரணங்களில்** சேர்ந்தவையானாலும் இவை கொடிய பாபங்களாகையாலே இந்த ப₄க₃வத₃பசாரங்களைத் தனியே எடுத்தார்.

பு₂ாக₃வதாபசாரமாவது—அர்த்த₂ம் (பொருள்), காமம் இவற்றில் ஈடு பட்டு காரணமாக ஸ்ரீவைஷ்ணவர்களோடு விவாதம் செய்வது, பிறப்பு ஒழுக்கம் அறிவு முதலானவற்றையிட்டு அவர்களைத் தாழ்வாக நினைக்கை, கூன் குருடு செவிடு முதலான ஊனமுற்ற பாகவதர்களை, அந்த ஊனம் காரணமாக இகழ்ந்து பேசுதல் முதலானவை. அஸஹ்யாபசாரமாவது—எம்பெருமானுக்கோ அவன் அடியார்களுக்கோ பெருமையைக் கண்டால் அதைப் பொறுக்கமுடியாமல் முட்டிக் கொள்ளுதல், தூக்கிட்டுக்கொள்ளுதல் முதலானவற்றைச் செய்கை. 'ஸ்ரீவைஷ்ணவன்' என்பதே காரணமாக, அவர்களிடம் வெறுப்புக் கொள்ளுதல் முதலானவை. பிள்ளை என்னும் அன்பு இருந்தபோதி லும் **நாராயண** நாமத்தைச் சொன்னான் என்பதே காரணமாக நெருப் பில் போடுவது, மலையிலிருந்து தள்ளுவது, பாம்புகளைக் கொண்டு கடிக்கவைப்பது, யானைக் காலால் இடறுவது, கல்லைக் கட்டிக் கடலில் போடுவது ஆகிய தீங்குகளை இரணியன் பரம பாகவதனான பிரகலா தன் விஷயத்தில் செய்தானன்றோ. சிசுபாலன் முதலானோர் எம்பெரு மானைக் குறித்துக் கேட்டார் செவிசுடும் கீழ்மை வசவுகளை வைதது, ப₄க₃வதபசாரத்தில் சேரும். இராவணன் முதலானோர் பிராட்டி போல் வார் விஷயத்தில் செய்தது பு₄ாக₃வதாபசாரத்தில் சேரும். இரணியன் முதலானோர் ஸ்ரீப்ரஹ்லாதன் முதலானோர் விஷயத்தில் செய்தது அஸஹ்ய யாபசாரத்தில் சேரும். 10.

**பதினொன்றாவது சூர்ணை அவதாரிகை :** பத்தாவது சூர்ணையில், "பொல்லாவொழுக்கும்" [திருவிருத்தம்-1] என்று சொல்லப்பட்ட விப ரீதாசாரங்களை **'அக்ருத்யகரணம்'** என்று எடுத்து, 'அவற்றைப் பொறுத்தருளவேணும்' என்று பிரார்த்தித்தார். இங்கு அவற்றுக்கும் காரணமான விபரீதமான ஆசாரங்களால் உண்டான குற்றங்களைப் பொறுத்தருளவேணும் என்கிறார். கீழ்ச்சொல்லப்பட்டவற்றோடு **புநருக்தி** (கூறியது கூறல்) என்னும் குற்றம் வராதோ? எனில்— அங்கு **அக்ருத்ய கரணம்** என்று ஶாஸ்த்ரங்களில் விலக்கப்பட்ட வற்றைச் செய்கையும், **'க்ருத்யாகரணம்'** என்று விதிக்கப்பட்டவற் றைச் செய்யாதொழிகையுமாகிற விபரீதாசாரங்களைச் சொல்லிற்று. இவை தவிர வேதாந்தங்களில் சொல்லப்பட்ட விஷயங்களில் அறி வின்மையால் வரக்கூடிய சில விபரீதமான ஆசாரங்கள் உண்டு.

**11. அநாதி₃காலப்ரவ்ருத்தம் விபரீதஜ்ஞாநம் ஆத்மவிஷயம் க்ருத்ஸ்ந ஜக₃த்₃விஷயஞ்ச விபரீத**

**११: अथ मोक्षविरोधिपुण्यपापरूपं क्षामयति अनादीति। आत्मनो जगतश्च स्वातन्त्र्यधीः, देवतान्तरशेषत्वधीः, भगवच्छेषवस्तुनि स्वशेषत्वधीश्च विपरीतज्ञानम् ॥**

அவற்றை இந்தச் சூர்ணையில் சொல்லுகிறார். ஆகையாலே புநருக்தி தோ₃ஷம் இல்லை.

"மோக்ஷத்திற்குத் தடையாயிருக்கும் புண்யங்களும் பாபங்களுமான விரோதிகளைக் குறித்து மன்னிப்பு வேண்டுகிறார்" என்பது ஸுதர்சனபட்டரின் அவதாரிகை.

வ்யா :— **(அநாதி₃கால ப்ரவ்ருத்தம்)** இந்த அறிவுகேடும், ஒழுக்கக்கேடும் அநாதிகாலமாகத் தொடர்ந்து வருபவை என்று கருத்து. **(விபரீத ஜ்ஞாநம்)** "தானும் இவ்வுலகும் எம்பெருமானுக்குக் கட்டுப்பட்டவை அல்ல; சுதந்திரமானவை என்று நினைக்கை; மற்றொரு தெய்வத்திற்கு அடிமைப்பட்டவை என்று நினைக்கை, எம்பெருமானுக்கு உரியவையான பொருள்களைத் தனக்கு உரியவை என்று நினைக்கை ஆகியவை விபரீத ஜ்ஞானம்" என்று ஸுதர்சனபட்டர். இந்த விபரீதஜ்ஞானம் ஸ்வரூபத்தோடு இயல்பாய் இருப்பதன்று. ஆனால் ஏதோ ஒருநாள் வந்து சேர்ந்ததோ? எனில்: அப்படியும் சொல்லமுடியாது. அநாதிகாலமாக ஆத்மாவைச் சேர்ந்திருக்கிறது என்றே சொல்லலாம். இது அநாதிகாலமாக ஆத்மாவில் இருப்பதைப் பார்த்தால் ஸ்வரூபத்தில் இயல்பாக இருப்பதோ என்று ஐயுறலாம் படி இருக்கிறது. எம்பெருமானுடைய அருளாலே மோக்ஷமடையும் போது இந்த விபரீத ஜ்ஞானம் முதலானவை நீங்குவதைக் காண்கையாலே இவை ஆத்மாவில் வந்து சேர்ந்தவையே என்று அறிகின்றோம். விபரீத ஜ்ஞானமாவது:- ஒன்றை மற்றொன்றாக நினைக்கை. அதாவது— கயிற்றைப் பாம்பாக நினைக்கையும், சிப்பியை வெள்ளியாக நினைக்கையும் விபரீத ஜ்ஞாநம். இந்த விபரீத ஜ்ஞாநம் எதைப் பற்றியது எனில்— **(ஆத்ம விஷயம் க்ருத்ஸ்ந ஜக₃த்₃விஷயஞ்ச)** ஆத்மாவைப்

**வ்ருத்தஞ்ச அசேஷ விஷயம் அத்3யாபி வர்த்தமாநம்**

---

**पुण्यञ्च स्वातन्त्र्यधीमूलत्वात् भ्रान्तिमूलम्। भगवद्भागवत-देवतान्तरभजनरूपं स्वार्थं स्वपुत्राद्यर्थञ्च यत्पुण्यं तत्—अशेषविषयं विपरीतवृत्तमित्युच्यते। आचार्यसेवादिना शास्त्रजन्यज्ञाने संपन्नेऽपि वासनावशादनुवर्तमानमित्यभिप्रायेणोक्तं अद्यापि वर्तमानमिति॥**

---

பற்றியும் உலகம் முழுவதைப் பற்றியும் இருப்பது என்றபடி. ஆத்மாவைப் பற்றிய விபரீத ஜ்ஞானமாவது—தேஹத்தையே ஆத்மா என்று நினைக்கை. உலகத்தைப் பற்றிய விபரீத ஜ்ஞானமாவது—தேவர், திர்யக் (விலங்குகளும் பறவைகளும்), மனிதர், தாவரங்கள் ஆகிய சரீரங்களையே அந்தந்த ஆத்மாக்களாக நினைக்கை. **(விபரீத வ்ருத்தம் ச)** விபரீத வ்ருத்தமாவது—முரண்பட்ட அநுஷ்டானம். உலகத்தைப் பற்றிய விபரீத வ்ருத்தமாவது—தனக்கு ஒருவன் ஒரு தீங்கு செய்தால் அது தன் கர்மத்தால் விளைந்தது என்றும், அந்தந்தக் கர்மங்களை யொட்டி எம்பெருமான் இந்தத் தீங்குகளை நடத்தி வைக்கிறான் என்றும் நினைக்காமல், அந்தத் தீங்கைச் செய்த சேதனனை ஸ்வாதந்த்ரனாக எண்ணி 'அவன் செய்தான்' என்று நினைத்து அவனுக்குத் தீங்கு செய்தல். தன்னைப் பற்றிய விபரீத வ்ருத்தமாவது—எம்பெருமானுக்கு அடிமைப்பட்ட தன்னை ஸ்வதந்த்ரன் என்று எண்ணித் தான் செயல்புரிகை. **(அசேஷ விஷயம்)** "செல்வம் முதலான இவ்வுலகப் பயன்களை விரும்புகை" என்று பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம். அசேஷ விஷயமான விபரீத வ்ருத்தமாவது—"தனக்காகவும் தன் பிள்ளை முதலானவர்களுக்காகவும் எம்பெருமானையும் அவன் அடியார்களையும் மற்ற தெய்வங்களையும் துதிக்கையாகிற புண்ணியச்செயலாகும். ஆத்மா ஸ்வதந்த்ரமானது என்னும் அறிவினால் விளைவதாகையாலே புண்யமும் மயக்கத்தால் விளைவதே ஆகும்" என்று ஸுதர்சனபட்டர் வ்யாக்யானம். **(அத்3யாபி வர்த்தமாநம்)** "இப்படி ஸர்வ விஷயமாகவும் முற்காலத்தில் செய்தவற்றோடு இப்போது செய்தவற்றைக் கூட்டுகிறார்" என்று பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம். "ஆசார்ய ஸேவை முதலானவற்றால் சாஸ்த்ரங்களில் சொல்லிய அறிவைப்பெற்ற பின்பும் வாஸனையினாலே ஏற்கனவே இருந்த விபரீத ஜ்ஞாநமும் விப

**வர்த்திஷ்யமாணம் ச ஸர்வம் க்ஷமஸ்வ ||**

ரீத வ்ருத்தமும் தொடர்கின்றன" என்னும் திருவுள்ளத்தாலே 'அத்₃யாபி வர்த்தமானம்' என்பதாக ஸுதர்சன பட்டர் வ்யாக்யானம். **(வர்த்திஷ்யமாணஞ்ச)** மேலே செய்யப்போகிறவற்றையும் கூட்டுகிறார். **(ஸர்வம் க்ஷமஸ்வ)** அறிவற்றவனாகையாலே இவையனைத்தையும் என்னால் முழுவதும் அறியவும் முடியாது. எல்லாம் அறிந்த தேவரீரே, அறிந்த எல்லாவற்றையும் பொறுத்தருளவேணும் என்று கருத்து. **11.**

**பன்னிரண்டாவது சூர்ணை அவதாரிகை :—** கீழ்ச் சூர்ணைகளில் கர்மங்களையும் அதற்குக் காரணமான அஜ்ஞானத்தையும் சொல்லி, அவற்றை நீக்கவேண்டும் என்றார். இந்த அஜ்ஞானத்துக்குக் காரணமான தே₃ஹ ஸம்பந்தத்தைப் போக்கியருளவேணும் என்று இச்சூர்ணையில் அருளிச்செய்கிறார். முன் இரண்டு சூர்ணைகளிலும் **"க்ஷமஸ்வ"** (மன்னிக்கவேண்டும்) என்றார். இங்கு **"தாரய"** (கடத்தி அருளவேண்டும்) என்கிறார். இப்படி வேண்டுவதற்குக் கருத்து என்னவெனில்— இவன் செய்த செயல்களாகிற கர்மங்களாலும், அஜ்ஞானத்தாலும் எம்பெருமானுக்கு ஓர் நிக்₃ரஹம் (கோபம்) விளைந்து அவன் திருவுள்ளத்திலே தங்கியிருக்கிறது. அவற்றை அவன் மன்னித்தால் அவை போய்விடும். தே₃ஹ ஸம்ப₃ந்த₄த்திற்குக் காரணமான இந்த அசித்து நித்யமானதாகையாலே அதற்கு அழிவு என்பது இல்லை. அதிலிருந்து இந்த ஆத்மா நீங்கிப் போவதே உள்ளது. ஆகையால் **"தாரய"** (கடத்தியருள வேண்டும்) என்கிறார். ஈஶ்வரனுடைய செல்வமான அசித்தை அழிக்கவேண்டுமென்று இவர் கருதமாட்டார். இதிலிருந்து தன்னை எடுக்கவேண்டும் என்றேயன்றோ இவர் வேண்டுகின்றார். "பிரித்தருளவேணும்" அல்லது 'விடுவித்தருளவேணும்" என்று அருளிச்செய்யாமல் கடத்தியருளவேணும் என்று சொன்னதற்குக் கருத்து பின்வருமாறு :—தேஹத்தையும் ஆத்மாவையும் பிரித்தல் அல்லது விடுவித்தல் செய்வது அவற்றின் ஸ்வரூபம் வெளிப்படையாகத் தெரிந்தாலே முடியும். ஸ்வரூபம் அழிந்ததென்றே சொல்லும்படியாய் தேஹமாகவே கிடக்கையாலே, 'அதிலிருந்து எடுக்க வேணும்' என்கிறார். பாலும் நீரும் ஒன்றாகக் கலந்தால் 'பாலிது நீரிது' என்று பிரித்துக்காண முடியவில்லை. ஆனால் ஒரு அன்னப்

12. மதீ₃யாநாதி₃கர்ம ப்ரவாஹப்ரவ்ருத்தாம், ப₄க₃வத் ஸ்வரூபதிரோத₄ாநகரீம், விபரீத ஜ்ஞாந

---

१२. अथ प्रकृतिः — मदीयेति । बीजाङ्कुरन्यायादनादित्वा !

---

பறவை ஸாரமான பாலைப்பருகி அஸாரமான நீரைக் கழித்துவிடுகிறது. அதைப்போலவே 'ஸர்வ ஶக்தியான எம்பெருமான் பிரித்தால் பிரிக்க லாம். இல்லாவிடில் ஸ்வரூபம் அழிந்தே போய்விடும்' என்று சொல் லும்படியாக வல்லவோ உள்ளது.

97. தை₃வீ ஹ்யேஷா கு₃ணமயீ மம மாயா து₃ரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥
[கீ₃தை 7-14]

[தே₃வனுகிற என்னால் நிர்மிக்கப்பட்டதும், முக்குணங்களை உடையது மான இந்த என்னுடைய மாயை தாண்ட அரிதானது. என்னையே எவர்கள் ஶரணமடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டு கிறார்கள்.] என்று "என்னுடைய மாயையாகிற ப்ரக்ருதி (அசித்து) ஒருவராலும் கடக்கவொண்ணாதது" என்றும், "அதை என்னையே பற்றிக் கடக்கவேணும்" என்றும் நீயே அருளிச் செய்கையாலே நீயே கடத்தியருளவேணும் என்கிறார்.

வ்யா :— (அநாதி₃ கர்ம ப்ரவாஹ ப்ரவ்ருத்தாம்) அநாதி₃ காலமாகப் பண்ணிப்போந்த கர்ம பரம்பரையாலே உண்டானது இந்த ப்ரக்ருதி ஸம்பந்தம் என்று கருத்து. (மதீ₃ய) இந்த ஸம்பந்தம் பிறர் உண்டாக்கியதும் அல்ல. எம்பெருமானுடைய அருளாலே வந்தது மல்ல. என்னாலேயே விளைத்துக் கொள்ளப்பட்டது என்று கருத்து. விதை முதலில் உண்டாயிற்றா? முளை முதலில் தோன்றியதா? என் பதை நிர்ணயிக்க அரிதாயிருப்பதால் இவையிரண்டுமே அநாதி கால மாகத் தொடர்ந்து வருபவையே என்று கொள்வதை பீ₃ஜாங்குர ந்யா யம் என்பர். அதுபோல் கர்மமும், தே₃ஹ ஸம்பந்தமும் எது முந்தி யது என்று சொல்ல முடியாமல் தொடர்ந்து வருபவை என்பர் ஸுதர் சன ப₄ட்டர். இந்த தே₃ஹ ஸம்பந்தம் விளைக்கும் செயல் என்ன வெனில்—(ப₄க₃வத் ஸ்வரூபதிரோத₄ாநகரீம்) ஆத்ம ஸ்வரூபத்

* "गुणमायासमावृतः" इत्यस्यार्थमाह भगवत्स्वरूपेति ॥

---

திற்குத் தங்க ஸ்வாமியான தேவரீருடைய ஸ்வரூபத்தை அந்த ஆத்மா வுக்கு மறைக்கையே இது செய்யும் செயல் என்றபடி. ப₄க₃வத் ஸ்வரூபத்தை இது எப்படி மறைக்கமுடியும்? எனில்—திருவின் நாய கனாய், புருஷோத்தமனாய் எல்லாக் கல்யாண குணங்களுக்கும் உறை விடமாய் இருப்பவனாய், "அயர்வறும் அமரர்கள்" [திருவாய் 1-1-1] எனப்படும் நித்ய ஸூரிகளுக்குத் தலைவனாய், ப்ரக்ருதி மண்டலம், பரமபத₃ம் எனப்படும் உப₄ய விபூ₄திச் செல்வத்துக்கும் தலைவனா யன்றோ ஸர்வேஶ்வரன் இருக்கிறன். இப்படியிருக்க, வேத₃ ஶாஸ்த் ரங்களுக்கு அவப்பொருள் கூறும் ஒவ்வொரு மதத்தவரைக்கொண்டு இதை மாற்றிக் கூறச்செய்வது பிறர்க்கு இந்த ஸ்வரூபத்தை மறையும் படி செய்வதேயாகும். அதாவது—மாயாவாதி₃களான அத்₃வைதிகள் "எந்த விஶேஷமும் (பே₄த₃மும்) இல்லாததாய், அறிவுமாத்திரமாய் இருக்கும் ப்₃ரஹ்மம் ஒன்றே உண்மை. மற்றவையனைத்தும் பொய்" என்று கூறுகிறார்கள். பே₄தா₃பே₄த₃வாதி₃களான யாதவப்ரகாசர் முதலானோர் "சித் அசித் ஈஶ்வரன் என்னும் மூன்று தத்துவங்களும் உண்டு. அதில் சித்தும் அசித்தும் ஈஶ்வரனுக்கு வசப்பட்டிருப்பவை யாய் ஈஶ்வரன் அவற்றுக்குத் தலைவனாய் இருப்பவன் என்பது சரியல்ல; மூன்று தத்துவங்களும் ஒரே த்₃ரவ்யத்தின் பரிணாமம்" என்று கூறு கிறார்கள். ஸாங்க்₂யர்களும் வைஶேஷிகர்களும், "கர்மம் பண்ணு வதற்கு ஒரு ஜீவன் இருக்கிறான் என்பதும், அதன் ப₂லனை அனுப விப்பதற்கு அந்தக் கர்மம் உள்ளது என்பதும் ஏற்கத் தக்கதே. ஈஶ் வரன் என்கிற தத்துவம் செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லாமை யால் தேவையற்றது" என்று கூறுகிறார்கள். இப்படியெல்லாம் ஈஶ்வர ஸ்வரூபத்தைச் சேதனர்களுக்கு மறையும்படி செய்கிறது ப்ரக்ருதி ஸம்பந்தம் என்று கருத்து. **"கு₃ணமாயாஸமாவ்ருத:"** [ஜிதந்தே 1-3] [முக்குண மயமான மாயை எனப்படும் ப்ரக்ருதியாலே மறைக்கப்பட்டவன் ஸர்வேஶ்வரன்] என்னும் ஜிதந்தா ஶ்லோகப் பகுதியை ப்ரமாணமாக எடுப்பர் ஸுத₃ர்சனப₄ட்டர். **(விபரீத ஜ்ஞாந ஜநகம்)** இப்படி எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை மறைப்பதோடல் லாமல் விபரீதமான ஜ்ஞானத்தையும் உண்டாக்குகிறது ப்ரக்ருதி ஸம்

**ஜநநீம், ஸ்வ விஷயாயாஶ்ச போ4க்3யபு3த்தே4ர் ஜநநீம், தே3ஹேந்த்3ரியத்வேந போ4க்3யத்வேந ஸூக்ஷ்மரூபேண சாவஸ்தி2தாம், தை3வீம், கு3ணமயீம்,**

---

**विपरीतज्ञानं — देहे अहंधीः। भोग्यभोगोपकरणरूपत्वमाह देहेत्यादिना। दैवीं-स्वलीलार्थाम्। "दासभूतं माम्" इति संबन्धः।**

---

பந்தம் என்று கருத்து. விபரீத ஜ்ஞானமாவது—ஆத்மாவல்லாத தான தேஹத்தில் ஆத்மா என்னும் நினைவு. ஆக ப4க3வத் ஸ்வரூபத்தை மறைப்பதோடல்லாமல் ஆத்மாவுக்கு அவனுடைய ஸ்வரூபத்தையும் மறைத்து விட்டது என்று கருத்து. கடைசியில் தேஹம் ஒன்றே உள்ளது என்று நினைக்கிறான். தே3ஹம் காட்டிய வழியிலேயே செல்கிறானாகையாலே தன்னரசு நாடாய் ஆகிவிட்டது. (**ஸ்வ விஷயாயாஶ்ச போ4க்3ய பு3த்3தே4ர் ஜநநீம்**) தன்னரசு நாடாய் விட்டபடியால் வன்முறையாளர்களே அரசு செலுத்தும் நிலை வந்து விட்டது. அதாவது—ப்ரக்ருதி தன்னிடமிருந்து விளையும் ஶப்3த3ாதி3 விஷயங்களே இனிமையானவை என்னும் எண்ணத்தை இந்தச் சேதனனுக்கு உண்டாக்கி விடுகிறது என்று கருத்து. (**தே3ஹேந்த்3ரியத்வேந போ4க்3யத்வேந ஸூக்ஷ்மரூபேண ச அவஸ்தி2தாம்**) ஶப்3த3ாதி3 விஷயங்களை அனுபவிப்பதற்கு இடமான இவ்வுடலாகவும், இந்த அனுபவத்திற்குத் துணைபுரியும் இந்திரியங்களாகவும், அனுபவிக்கப்படும் ஶப்3த3ாதி3 விஷயங்களாகவும் இவையனைத்துக்கும் மூலகாரணமான ஸூக்ஷ்ம ப்ரக்ருதி ரூபமாகவும் இப்படி நாலு வகைப்பட்ட பரிணாமங்களை உடையதாய் இருப்பது இந்த மூலப்ரக்ருதி என்று கருத்து. (**தை3வீம்**) தே3வனான உம்முடைய விளையாட்டுக்குக் கருவியாயிருப்பது இந்த மூலப்ரக்ருதி என்று கருத்து. "**தி3வு க்ரீடா3**" என்னும் தா4துவிலிருந்து உண்டானதாகையாலே "தே3வ" ஶப்3த3ம் உலகனைத்தையும் படைத்து அளித்து, **அழிப்பதை** விளையாட்டாகக் கொண்டவன் என்று பொருள்படுகிறது. (**கு3ணமயீம்**) ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்கள் நிறைந்தது மூலப்ரக்ருதி

**மாயாம், தா₃ஸபூ₄தம் "ஶரணாக₃தோஸ்மி தவாஸ்மி தா₃ஸ:" இதி வக்தாரம் மாம் தாரய ||**

---

என்றபடி. அதாவது — மூலப்ரக்ருதி இந்த மூன்று குணங்களையும் உடையதாயிருக்கும். அதில் சேதனர்கள் கர்மானுகு₃ணமாகப் பெற்ற ஶரீரங்களில் சில தமோகுணத்தை அதிகமாகக் கொண்டதாயும், சில ரஜோகுணத்தை அதிகமாகக் கொண்டதாயும், சில ஸத்வ குணத்தை அதிகமாகக் கொண்டதாயும் இருக்கும். **(மாயாம்)** "**மாயா**" ஶப்₃த₃ம் ஆச்சர்யத்தையுடைய பொருள்களைக் குறித்து ஶாஸ்த்ரங்களில் வழங்கப்படுகிறது. மூல ப்ரக்ருதியும் ஆச்சர்யமான காரியங்களை விளைக்கையாலும், ஆச்சர்யமான பரிணாமங்களையுடையதா கையாலும், "**மாயா**" என்னும் சொல்லால் சொல்லப்படுகிறது. இது ஆச்சர்யமாய் இருப்பது எதனால்? என்றால் ப்ரக்ருதியிலிருந்து உண்டான ஐந்து பூதங்களும் அது ஒன்றிலிருந்தே தோன்றியவையாய் இருந்த போதிலும், ஒவ்வொன்றும் வெவ்வேறு விதமாகவும் இனிய போ₄க்₃யப் பொருள்களாகவும், போகத்திற்குக் கருவிகளாகவும், போக ஸ்தானங் களாகவும் பரிணமித்திருப்பவையாகவும் இருப்பதால் பலநிறம்கொண்ட வஸ்திரம்போலே ஆச்சர்யமாய் இருக்கின்றது என்றபடி — **(மாம்தாரய)** இப்படிப்பட்ட ப்ரக்ருதியில் அகப்பட்டிருக்கும் என்னை இதைக்கடக்கும் படி செய்தருளவேணும் என்கிறார்.

"நாம் இதிலிருந்து உம்மை எடுத்து விடுவதற்குக் காரணமாக நீர் செய்து வைத்தது ஏதேனும் உண்டோ? எதைக்கொண்டு என்னை இதிலிருந்து எடுத்துவிடச் சொல்கிறீர்" என்று பெரியபெருமாள் திருவுள்ளமாக, "என்னிடம் ஓர் கைம்முதல் உண்டாய்ச் சொல்லுகிறே னல்லேன். அநாதி₃ காலமாகத் தீவினைகளைச் செய்து போந்தேனே யாகிலும், தே₃ஹமே ஆத்மா என்று நினைப்பவனாய் இருந்தேனேயாகி லும் ஶப்₃தா₃தி₃ விஷயங்களிலேயே ஈடுபட்டவனாய்ப் போந்தேனேயா கிலும், இப்போது என் ஸ்வரூபத்தை ஆராய்ந்தவுடன் வேறொருவர்க் காகாமல், உனக்கே அடிமைப்பட்டிருப்பது அது என்னும் காரணத் தால் சொல்லுகிறேன்" என்கிறார் **(தா₃ஸபூ₄தம்)** என்று.

**"शरणागतोऽस्मि, तवास्मि" इति पूर्वोत्तरखण्डार्थः । वक्तारं * "भव शरणमितीरयन्ति" इति ह्युच्यते ॥**

---

"அது எல்லாச் சேதனர்க்கும் பொதுவன்றோ. ஆனபின்பு நாம் உம்மை விடுவிக்கலாம்படி உம்மிடம் ஏதேனும் ஒரு சிறப்பு இருக்க வேண்டுமே" என்று பெரிய பெருமாள் திருவுள்ளமாகக் கூறுகிறார்— (**ஶரணாக₃தோऽஸ்மி தவாஸ்மி தா₃ஸ இதி வக்தாரம்**) "நான் உன்னைச் சரணமடைந்தவனாய் இருக்கிறேன்" என்றும், "உனக்கே யானவனாய் இருக்கிறேன்" என்றும், "உனக்கு அடிமை" என்றும் சொன்னேன். அதாவது—"தேவரீரே உபாயம்" என்றும், "உபேயம்" என்றும், நான் வேறெவர்க்குமாகாமல் தேவரீருக்கே அடிமை" என்றும் சொன்னேன். (**வக்தாரம் மாம்**) இப்படிப்பட்ட சொல்லைச் சொன்ன என்னை. (**தாரய**) இந்தச் சொல்லை மாத்திரமே என்னிட முள்ள சிறப்பாகக்கொண்டு என்னை ப்ரக்ருதியிலிருந்து தாண்டுவித் தருளவேணும் என்று கருத்து. "**ஶரணாக₃தோऽஸ்மி தவாஸ்மி**" என்னும் இரு தொடர்களும் முறையே த்₃வயத்தின் முதல் பாதி இரண் டாவது பாதியின் பொருளைச் சொல்லுபவை என்பர் ஸுத₃ர்சன ப₄ட்டர். (**வக்தாரம்**) என்னுமிடத்திற்கு,

> "ப₄வ ஶரணம் இதீரயந்தி யேவை
> த்யஜ ப₄ட தூ₃ரதரேண தாநபாபாந்" [வி-பு 3-7-33]

[தூதனே! "எம்பெருமானே நீயே எனக்குத் தஞ்சமாக வேணும்" என்னும் வார்த்தையை எவர்கள் சொல்லுகிறார்களோ அதனாலேயே பாபங்கள் நீங்கப்பெற்ற அவர்களை விட்டு வெகுதூரம் விலகிச் செல் வாய்] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் யமன் சொன்ன வார்த்தையை ப்ரமாணமாக் எடுப்பர் ஸுத₃ர்சனபட்டர். "வெறும் வார்த்தையே என்னிடமுள்ளது" என்கையால் 'ஶரணாக₃தி உபாயமாகாது; அதி₄ காரி விஶேஷணமேயாகும்' என்று உணர்த்தப்படுகிறது. 12.

**பதின்மூன்றாவது சூர்ணை அவதாரிகை :** பத்து முதல் பன்னிரண் டாவது சூர்ணை ஈறாக த்₃வயத்தின் உத்தரகண்டத்தின் "நமஸ்" ஶப் தா₃ர்த்த₂ம் விவரிக்கப்பட்டது. நமஸ் ஶப்₃த₃த்திற்கு விரோதிகள் நீங்

**१३. अथ चतुर्थ्यर्थमिष्टप्राप्तिं प्रार्थयते तेषामित्यादिना । परभक्तिस्थाने प्रपदनं । परज्ञानपरमभक्ती देहसंबन्धवेलायामुपासकस्य उपायकोटिनिविष्टे । प्रपन्नस्य तु ते उभयकोटिघटिते । अतः परज्ञानं प्रार्थितं तेषामित्यादिना ॥**

---

கப் பெறுவதன்றோ பொருள். கைவல்ய நிஷ்ட னுக்கு விரோதி₄கள் நீங்கப் பெறுவதே போதும். ஆத்மாநுப₄வரூபமான கைவல்யமோக்ஷம் ஸித்தித்து விடும். இவருக்கு அதுமாத்திரம் போதாது. மேலான புருஷார்த்த₂மான கைங்கர்யம் கிடைத்தலாகிற பரமமோக்ஷம் இவருக்கு வேண்டும். இந்தக் கைங்கர்யத்துக்கு உதவுவதாய், கைங்கர்யத்தைப் போலே ஆதரிக்கத்தக்கதாய், சென்று சேரும் பரமபதத்திலும் தொடருவதான பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை வேண்டுவதற்காக, அதற்கு முன் விளையும் வேறு பயன் கருதாத பக்திரூபமான அறிவை ஸ்ரீ கீதோபநிஷத்தைத் திருவாய் மலர்ந்தருளிய கண்ணன் அருளிச்செய்த மூன்று ஶ்லோகங்களாலே பிரார்த்திக்கிறார்.

"த்₃வயத்தின் உத்தர கண்டத்தில் சதுர்த்தியால் (நாலாவது வேற்றுமையால்) சொல்லப்படும் இஷ்ட ப்ராப்தியை வேண்டுகிறார் **'தேஷாம்'** என்று தொடங்கி" என்பது ஸுதர்சனபட்டரின் அவதாரிகை. இதை மேலும் அவர் பின்வருமாறு விளக்குகிறார். "உபாஸகனுக்கு உபாயமாயிருக்கும் பரப₄க்தி ஸ்தானத்தில் ப்ரபன்னனுக்கு ப்ரபத்தி அமைகிறது. உபாஸகனுக்கு அந்தப் பரப₄க்திக்குப் பின் விளையும் பரஜ்ஞான பரமப₄க்திகள் அவன் தே₃ஹத்தோடு கூடியிருக்கும்போதே உபாயமாய் அமைகின்றன. ப்ரபத்தியை உபாயமாக நினைக்கும் ப்ரபன்னனுக்கு (அதாவது ஸ்வக₃தஸ்வீகார நிஷ்ட₂னுக்கு) அவை உபாயமாகவும் அமைகின்றன. ப்ரபத்தியில் உபாய புத்தியைக் கொள்ளாமல் எம்பெருமானையே உபாயமாகப் பற்றும் பரக₃த ஸ்வீகார நிஷ்ட₂னுக்கு அவை ஸ்வயம் ப்ரயோஜனமாகவே அமைகின்றன. இவர் அத்தகையவராகையால் **'தேஷாம்'** என்று தொடங்கும் மூன்று கீ₃தா ஶ்லோகங்களாலும் பரஜ்ஞானத்தைப் பிரார்த்திக்கிறார்" என்று.

**வ்யா: (தேஷாம்)**

**13. தேஷாம் ஜ்ஞாநீ நித்ய யுக்த ஏகப₄க்திர் விஶிஷ்யதே |
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த₂ மஹம் ஸ ச மம
ப்ரிய: ||**

---

**98. சதுர்விதா₄ ப₄ஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோऽர்ஜுந।
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தா₂ர்த்தீ₂ ஜ்ஞாநீ ச ப₄ரதர்ஷப₄॥
[கீ₃தை 7-13]**

[அர்ஜுநா! புண்யஶாலிகளான நான்கு வகைப்பட்ட ஜனங்கள் என்னிடம் ப₄க்திசெய்கிறார்கள். அவர்களாவார்,—(செல்வத்தையிழந்து) வருந்துமவன், (புதிய) செல்வத்தை விரும்புமவன், ஆத்மஸ்வரூபத்தை அடைய விரும்புமவன், ப₄க₃வானையே அடையவிரும்பும் ஞானி என்பவர்கள்.] என்று சொல்லப்பட்ட ஐஶ்வர்யத்தை விரும்புகிறவன், கைவல்ய மோக்ஷத்தை விரும்புகிறவன், எம்பெருமானுடைய திருவடிகளில் கைங்கர்யத்தை விரும்புகிறவன் ஆகிய மூவரிலும், (ஜ்ஞாநீ) ஜ்ஞாநியானவன். (விஶிஷ்யதே) சிறப்புடையவனாகச் சொல்லப்படுகிறான்; அவனுக்குப் பெருமை என்னவெனில் — (நித்யயுக்த: ஏகப₄க்தி:) இவ்விரண்டுமன்றோ அவனுக்குள்ள பெருமை. நித்யயுக்தனாகையாவது - ஒரு பயனுக்காக என்னைப்பற்றி நின்று, அது கிடைத்தவுடன் அகன்றுவிடாமல் என்னையே எப்போதும் பயனாகக் கொண்டிருக்கை. ஏகப₄க்தியாயிருக்கையாவது—மற்றொரு பயனிலும் விருப்பத்தை வைத்து அந்த விருப்பத்தின் மிகுதியாலே அப்பயன் கிடைப்பதற்காக என்னிடமும் விருப்பத்தைக் கொள்ளாமல், என்னையே பயனாகக் கொண்டவனாகையாலே தன் விருப்பத்துக்கு என் ஒருவனையே விஷயமாகக் கொள்ளுகை. (ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த₂ம் அஹம்) **ஜ்ஞாநிந: அஹம் அத்யர்த்த₂ம் ப்ரியோ ஹி।** ஜ்ஞாநிக்கு நான் வார்த்தைகளால் விளக்கமுடியாத அளவுக்கு இனியவனாய் இருப்பவனன்றோ. என்னிடம் அவனுக்குள்ள அன்பு ஒரு பாசுரமிட்டுவிளக்கவொண்ணாதது என்று கருத்து. "அத்யர்த்த₂ம்" என்ற சொல்லில் "அர்த்த₂" ஶப்₃த₃ம் வார்த்தையால் விளக்குவதைக் குறிக்கிறது. (ஸ ச மம ப்ரிய:) அவனும் எனக்கு இனியவனாய் இருப்பவன்.

"தன்னிடம் அவனுக்குள்ள அன்பை வார்த்தையால் விளக்கவொண்ணாதது என்று சொல்லிவிட்டு, அவனிடத்தில் தனக்கு உள்ள அன்பை ஏன் குறைவாகச் சொல்லுகிறான்

**உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் |**
**ஆஸ்தித: ஸஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம் ||**

---

எம்பெருமான்? பக்தனுடைய அன்புக்குக் குறைந்ததோ பரமனுடைய அன்பு? எனில்—அணுஸ்வரூபனாய் இருக்கும் பக்தனுடைய அன்பின் மிகுதியைப் பார்க்கும்போது விபுஸ்வரூபனாய் இருக்கும் தன்னுடைய அன்பு குறைவானது என்பது எம்பெருமான் திருவுள்ளம்; ஒரு சிறிய குளப்படியில் தேங்கியிருக்கும் நீர் கலங்கும் அளவுக்குக் கடலில் உள்ள நீர் கலங்க முடியாதே. ஆகையால், "அவனுடைய அன்புக்கு என் அன்பு நேர் நிற்க மாட்டாதது" என்று அருளிச்செய்கிறான் அவனிடம் தனக்குள்ள வாத்ஸல்ய மிகுதியாலே. இப்படியல்லாமல், "எல்லாம் வல்லவனை என்னாலும் போக்கமுடியாத அஸ்தாநே பய ஸங்கையை (எம்பெருமானுக்கு என்ன தீங்கு வருகிறதோ? என்னும் பயத்தை) விளைப்பதாகையாலே பக்தனுடைய அன்பே மிகுந்தது" என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றுவதாகவும் கொள்ளலாம். "**பயாநாமபஹாரி**" [வி.பு. 1-17-36] [பக்தர்களுடைய பயங்களை யெல்லாம போக்குபவன்] என்று சொல்லப்பட்ட என்னாலும் போக்க முடியாத பயத்தை விளைத்து எனக்கு மங்களாஸாஸநம் செய்யும்படி செய்வதன்றோ பக்தனுடைய அன்பு. எம்பெருமான் பெரியாழ்வாருடைய இந்த பயத்தை நீக்குவதற்காகத் தன் "மல்லாண்ட திண் தோள்" "மணிவண்ணா உயிருக்கும் அழகு" முதலானவற்றைக் காட்டின போதும், அவையே மேலும் அவருக்கு பயத்தை விளைக்கும்படியாயன்றோ அவருடைய அன்பு இருந்தது. அத்தகைய பக்தர்களுடைய அன்பே தன்னுடைய அன்பிலும் மிக்கது என்று இங்கு எம்பெருமான் குறிப்பிடுகிறான்.

(உதாராஸ் ஸர்வ ஏவைதே) எந்தச் சேதனர்கள் ஏதாவதொரு பலனை விரும்பும்போது அவற்றை மற்ற தெய்வங்களிடமோ அல்லது மற்ற மனிதர்களிடமோ வேண்டாது என்னிடமே வேண்டுகிறார்களோ, அவர்கள் ஐஸ்வர்யார்த்தியாக இருந்தாலும், கைவல்யார்த்தியாக

இருந்தாலும், யதுகூவச்சரணார்த்தியாக இருந்தாலும் அவர்கள் அனைவருமே என்னுடைய வண்மைக் குணத்தை விளங்கச் செய்கிறார்களாகையாலே எனக்குப் பெருமையளிக்கும் வண்மைமிக்கவர்களே. (ஜ்ஞாநீ து) அவர்களுக்குள்ளே என் திருவடிகளில் கைங்கர்யத்தை விரும்பும் ஞானியானவன் சிறப்புற்று விளங்குகிறான். அவனுக்குச் சிறப்பு என்ன? எனில்—(ஆத்மைவ) ஞானியானவன் எனக்கே ஆத்மாவாய் இருப்பவன். அதாவது என்னையே தரிக்கச் செய்பவன் என்று கருத்து. 'எனக்கு ஆத்மாவாகவே இருப்பவன்' என்னும் ஏகாரத்தாலே, "ஒரு காலத்தில் எனக்கு இவன் தாரகனாய், வேறொரு காலத்தில் மற்றொன்று தார்ரகமாய் இருப்பதில்லை; எல்லாக் காலத்திலும் இவனே எனக்கு தாரகன்" என்று உணர்த்தப்படுகிறது. இதற்குமேல் ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. "தன் ஸ்வரூபத்தைப் பற்றி உள்ளபடி அறிந்த சேதனன் ஒருவன் 'உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்' [திருவாய் 6-7-1] என்கிறபடியே தாரகம், போஷகம், போக்யம் ஆகிய அனைத்தும் எம்பெருமானே என்று நினைத்திருப்பது தக்கது. அப்படியிருக்கும்போது இங்கு சேதனன் தனக்கு தாரகன் என்று எம்பெருமான் சொல்லுவது நேர்மாறாய் உள்ளதன்றோ" என்பது அவ்வாக்ஷேபம். அதற்கு பதில் கூறுகிறான்—(மே மதம்) என் நினைவு; அவன் என்னையே தனக்கு தாரகனாய் நினைத்தாலும் நான் அவனையே எனக்கு தாரகனாக நினைத்திருக்கிறேன் என்றபடி. இதற்குக் காரணத்தை ஶ்லோகத்தின் பிற்பாதியாலே கூறுகிறான். "**அநுத்தமாம் கதிம் மாமேவ யுக்தாத்மா ஆஸ்திதஸ் ஸஹி**" என்று கூட்டிப் பிற்பாதிக்குப் பொருள்கொள்ள வேண்டும். தன்னையொழிந்தவற்றில் தனக்கு மேலாய் இருப்பதொன்று இல்லாமல் இருக்கப்பெற்ற மேலான ப்ராப்யமான என்னையே கூடி நிற்பவனாய், இவ்வண்ணமே தியானம் பண்ணுகிறவனன்றோ அவன் என்றபடி. "**அநுத்தமாம் கதிம்**" என்றது தனக்கு மேலானது இல்லாத பரம ப்ராப்யனான என்னை என்று பொருள்படும். "**யுக்தாத்மா**" என்றது 'கூடினவன்' என்று பொருள்படும். "**ஆஸ்தித:**"

**பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம்
ப்ரபத்யதே ।**

---

என்றது 'தியானம் செய்பவன்' என்று பொருள்படும். மற்றவர்களைப் போலல்லாமல் இவன் என்னையே மேலான ப்ராப்யமாக எப்போதும் நினைத்திருக்கிறானாகையாலே, கிடைத்தற்கரிய இத்தகைய ஞானி யொருவன் எனக்குக் கிடைத்தால், அவனையே எனக்கு தாரகனாக நான் நினைக்கிறேன் என்று கருத்து.

(பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே) (பஹூநாம் ஜந்மநாமந்தே) என்னையே பக்தியோகத்தாலே ஆராதிக்கும் பல ஜன்மங்கள் கழிந்தபின், இறுதியானதொரு பிறப்பில் எவனொருவன் என்னைச் சரணமடைகிறானோ. ஶ்லோகத்தில் பிற்பாதியில் "ஸ:" (அவன்) என்று இருப்பதால், இங்கு "ய:" (எவன்) என்னும் பதத்தைக் கூட்டிக்கொள்ளவேணும். "அந்தே" என்னும் பதத்தால் இதற்குப் பிறகு இவனுக்கு ஜன்மம் கிடையாது என்று உணர்த்தப்படுகிறது. 'இப்படி பக்தி நிஷ்டனாய் இருந்தவனுக்கு, ப்ராரப்த கர்மத்தின் இறுதியிலேயே மோக்ஷம் விளையும்' என்று ஶாஸ்த்ரங்களில் கூறியிருக்க, இவனுக்கு இதுவே இறுதியான பிறப்பு என்று கூறுவது எப்படி? என்னும் கேள்விக்கு மேலே பதில் கூறுகிறான்—(ஜ்ஞாநவாந்) இதுவரையில் என்னை ஸித்தோபாயமாகவும் பக்தியை ஸாத்யோபாயமாகவும் நினைத்து வந்த அந்த ஜ்ஞாநி பக்தி ஸ்வயம் ப்ரயோஜனம் என்றும் உணர்ந்து விடுகிறானாகையாலே, "நான் ஒருவனே உபாயம்" என்னும் ஜ்ஞானம் உண்டாகிறது. அதனால் இவன் செய்வது என்ன? எனில்—(மாம் வாஸுதேவஸ் ஸர்வமிதி ப்ரபத்யதே) வாஸுதேவனே எல்லாம் என்று என்னைப் பற்றுகிறான், அதாவது உறுதி கொள்கிறான்.

**99. மாதா பிதா ப்ராதா நிவாஸஶ் ஶரணம் ஸுஹ்ருத்
கதிர் நாராயண:** **[ஸுபாலோபநிஷத்-16]**

[நாராயணன் தாயாகவும், தந்தையாகவும், தன்னுடன் பிறந்தவனாகவும், தங்குமிடமாகவும், மோக்ஷோபாயமாகவும், நண்பனாகவும், மோக்ஷத்தில் அடையப்படுபவனாகவுமிருப்பவன்.] என்று ஸுபாலோபநிஷத்தும்,

**வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:॥**

---

**"சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும்**
**மேலாத் தாய்தந்தையும் அவரே இனியாவாரே"**
[திருவாய் 5-1-9]

**"உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம்**
**கண்ணன் எம்பெருமான் என்றென்றே கண்கள் நீர்மல்கி"**
[திருவாய் 6-7-1]

என்று நம்மாழ்வாரும் கூறியபடியே, இவனால் கைவிடப்பட்ட உபாய உபேயங்கள் அனைத்தும் கண்ணனே என்று உறுதி கொள்கிறான் என்று கருத்து.

"**வாஸுதேவஸ் ஸர்வம் இதி மாம் ப்ரபத்யதே**" என்னும் தொடருக்கு "**வாஸுதேவ** ஏவ **மம பரம ப்ராப்யம்** ப்ராபகம் **ச, அந்யதபி யந்மனோரத**வர்த்தி, ஸ ஏவ **மம தத்ஸர்வமிதி** மாம் ப்ரபத்யதே" ["வாஸுதேவனே எனக்குப் பரம ப்ராப்யமும், ப்ராபகமும், உண்ணும் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும், சேலேய் கண்ணியரும், பெருஞ்செல்வமும், நன் மக்களும், மேலாத் தாய் தந்தையும் முதலான ஆசைப்படும் பொருள் எல்லாமும்" என்று என்னை எல்லாமாகப் **பற்றுகிறான்**] என்று கீதா பாஷ்யத்தில் பாஷ்யகாரர் பொருளுரைத்திருப்பது இங்கு அனுஸந்திக்கத்தக்கது. இதிலிருந்து பக்தியை ஸாத்யோபாயமாகக் கொண்டிருந்த **உபாஸகன்** அதை ஸ்வயம் ப்ரயோஜனமாகவும், எம்பெருமான் ஒருவனையே உபாயமாகவும் கருதும் ப்ரபன்னனாக மாறிவிடுகிறான் என்றும், அதனாலேயே அவனுக்கு இந்த ஜன்மம் இறுதியானதாய் அமைகிறது என்றும் விளங்குகிறது. இனி ச்லோகத்தின் கடைசிப் பாதத்தாலே இவனுடைய பெருமையைக் கூறுகிறான் எம்பெருமான். (ஸ மஹாத்மா) அவன் மிகப் பெரியவன். அவனையொத்தவர் எவருமே இல்லை. நாமும் அவனுக்கு ஒப்பாகமாட்டோம். 'இது புகழுரைபோல் தோன்றுகிறதே' எனில்—வெறும் புகழ்ச்சி அல்ல, உண்மையே ஆகும். இதற்குக் காரணம் என்ன? எனில் — நமக்கு ஸம்ஸார பாபமாகிற கலக்கம்

## இதி ஶ்லோகத்ரயோதி₃த ஜ்ஞாநிநம் மாம் குருஷ்வ ॥

இல்லாமலிருக்கையாலே நாம் ஜீவனோடு உள்ள ஸம்பந்தத்தை உணர்ந்திருப்பது இயற்கையே; அப்படியல்லாமல் ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டுக் கலங்கியிருக்கிறவன் நமக்கும் தனக்கும் உள்ள ஸம்பந்தத்தை உணர்ந்திருக்கையாலே அவனுக்கு நாமும் ஏப்பல்லோம் என்கிறான். (ஸுது₃ர்லப₄:) நமக்கும் அவன் மிகவும் கிடைத்தற்கரியவன். இப்படிப்பட்ட ஒருவன் இன்றுவரை இந்த ஸம்ஸார மண்டலத்திலும் பரமபதத்திலும் இல்லை என்கிறான். நாமும் ஆசைப்பட்டேயோம் இத்தனையல்லது, அவனை நமக்கும்கூடக் கிடையாது காண்! என்கிறான். அதாவது "தெளிவிசும்பு" [திருவாய் 9-7-5] என்கிறபடியே, தெளிவுபடுத்துவதையே இயல்வாகக் கொண்டதாயிருப்பது பரமபதம். "இருள்தருமா ஞாலம்" [திருவாய் 10-6-1] என்கிறபடியே, பரமபதத்திலுள்ளவர்கள் இங்கே வந்தாலும் அவர்களையும் கலங்கச்செய்வதையே இயல்வாகக் கொண்டது இவ்வுலகம் என்று கருத்து. கண்ணன் தன் காலம் வரையில் இத்தகைய ஞானி கிடைக்காமலிருந்த குறை தீரவே நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்களுக்குத் தன் நிர்ஹேதுக க்ருபையாலே மயர்வற மதிநலம் அருளி இத்தகையவர்களாக்கி அவதரிக்கச் செய்தான் என்பது குறிக்கொள்ளத்தக்கது. கீதையின் ஏழாம் அத்தியாயம் 17, 18, 19-வது ஶ்லோகங்களாக அமைந்திருக்கும் இந்த மூன்று ஶ்லோகங்களும் நம்முடைய கீதா வ்யாக்யானத்தில் மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளது இங்கு அனுஸந்திக்கத்தக்கது. (இதி ஶ்லோகத்ரயோதி₃த ஜ்ஞாநிநம் மாம் குருஷ்வ) இப்படி இந்த மூன்று ஶ்லோகங்களிலும் சொல்லப்பட்ட ஜ்ஞானத்தையுடையவனாம்படி என்னைப் பண்ணியருளவேண்டும். முதல் ஶ்லோகத்தாலே "அவன் எனக்கு மிக இனியவன்" என்றான். இரண்டாவது ஶ்லோகத்தாலே, "அவன் என்னையே தரிக்கச்செய்பவன்" என்றான். மூன்றாவது ஶ்லோகத்தாலே "எனக்கு மிக இனியவனாகவும், என்னையே த₄ரிக்கச் செய்பவனாகவும், என்னையே எல்லாமாகக் கொண்டவனாகவும் உள்ள ஒருவன் இருந்தாலன்றோ நான் அவனைப்பற்றிப் பேசுவதில் பயனுளளது. அப்படிப்பட்ட ஒருவன் இல்லையே?" என்று வருந்துகிறான். இந்த வருத்தம்தீர, ஆழ்வார்களை உண்டாக்கினதுபோலே உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே என்னையும் ஆக்கியருளவேணும் என்கிறார் எம்பெருமானார். 13.

**14. *புருஷஸ் ஸ பர: பார்த்த₂! ப₄க்த்யா லப்₄யஸ் த்வநந்யயா, ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய:, மத்₃ப₄க்திம் லப₄தே பராம் — இதி ஸ்தா₂நத்ரயோதி₃த பரப₄க்தி யுக்தம் மாம் குருஷ்வ ||**

---

**१४. अथ परमभक्तिप्रार्थनं "पुरुषः स परः" इत्यादिना। व्यवहितत्वात् स्थानत्रयेत्युक्तं, न तु श्लोकत्रयेति ॥**

---

**பதினாலாவது சூர்ணை அவதாரிகை :—** முன் சூர்ணையில் பர ப₄க்தி பரஜ்ஞாந பரம ப₄க்திகளுக்கு முன் விளையும் ப₄க்தி ரூபமான அறிவை வேண்டினர். இங்கு அந்த ப₄க்திக்குப் பின் விளைபவையாய், கைங்கர்யத்துக்கு முன் வேண்டியவையான பரப₄க்தி பரஜ்ஞாந பரம ப₄க்திகளை வேண்டுகிறார். சென்ற சூர்ணையில் 'பரஜ்ஞாநத்தை வேண்டினர்' என்று அருளிய ஸுதர்சனப₄ட்டர், இந்தச் சூர்ணையில் 'பரம ப₄க்தியை வேண்டுகிறார்' என்று அவதாரிகையிட்டார்.

வ்யா :— இம்மூன்றில் பரஜ்ஞாந பரமப₄க்திகள் பரப₄க்தி உண்டானவுடன் அதனால் உண்டாகின்றவையாகையாலே, இந்தப் பர ப₄க்தியையே ப₄க₃வத்₃ கீ₃தையில், "புருஷஸ் ஸ பர:பார்த்த₂ ப₄க்த்யா லப்₄யஸ் த்வநந்யயா" [கீதை 8-22] என்று எட்டாம் அத்தியாயத்திலும், "ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய:" [கீதை 11-54] என்று பதினோராம் அத்தியாயத்திலும், "மத்₃ப₄க்திம் லப₄தே பராம்" [கீதை 18-54] என்று பதினெட்டாம் அத்தியாயத்திலும் முக்கியமாக ஸ்ரீ கீ₃தோபநிஷதா₃சார்யன் அருளிச்செய்தபடி பரப₄க்தி விளையப்பெற்றவனாக என்னைப் பண்ணியருள வேணும் என்கிறார். **(இதி ஸ்தா₂நத்ரயோதி₃த பரப₄க்தி யுக்தம் மாம் குருஷ்வ)** இப்படி மூன்று இடங்களிலும் கீதாசார்யனால் அருளிச்செய்யப்பட்ட பரப₄க்தியோடு கூடியவனாக என்னைச் செய்தருளவேண்டும். "ஒவ்வொன்றும் வெவ்வேறு அத்தியாயங்களில் இருக்கையாலே **'ஶ்லோகத்ரய'** என்று அருளாமல் **'ஸ்தா₂நத்ரய'** என்று அருளினர்" என்று ஸுதர்சனப₄ட்டர் அருளிச் செய்தார்.

**15. பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்த்யேக ஸ்வப₄ாவம் மாம் குருஷ்வ ||**

---

**१५ अथ बन्धनिवृत्तेरनन्तरभाविनीः परभक्तिपरज्ञानपरमभक्तीः प्रार्थयते परभक्तीति ॥ अत एव हि एकस्वभावमित्युक्तम् । पूर्ववदर्थः ॥**

---

**பதினைந்தாவது சூர்ணை அவதாரிகை :** இனி, "ஸம்ஸாரபந்தம் கழிந்தபின்பு விளையும் பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்திகளை இச்சூர்ணையாலே விளக்குகிறார். அதனாலேயே இவற்றையே ஸ்வபாவமாகக் கொண்டவனாக என்னை ஆக்கவேணும் என்று பிரார்த்திக்கிறார்" என்று ஸுதர்சனபட்டரின் அவதாரிகை. பெரியவாச்சான்பிள்ளை, "இவை மூன்றும் எனக்கு யாவதா₃த்ம ப₄ாவியாக உண்டாகவேணும் என்கிறார்" என்று அருளுகையாலே, "இனி வரும் காலமெல்லாம் இவை மூன்றையும் இயல்வாகக் கொண்டவனாக என்னை ஆக்கியருளவேணும் என்று பிரார்த்திக்கிறார்" என்று அவதாரிகையிடுகிறார். "இங்கு பரப₄க்த்யாதி₃களை அபேக்ஷிக்கிறது கைங்கர்ய உபகரணதயாவல்லது நிரபேக்ஷோபாய ஸ்வீகாரம் பண்ணினவராகையாலே உபாயதயா அல்ல" என்று பெரியவாச்சான்பிள்ளை அருளியிருக்கையாலே, பன்னிரண்டாவது சூர்ணையின் வ்யாக்யானத்தில் '**இதி வக்தாரம் மாம் தாரய**" என்றவிடத்திற்கு "இதில் ஸ்வாமி எம்பெருமானார் தன்னை ரக்ஷித்தருளவேண்டும் என்று எம்பெருமானை ப்ரார்த்திக்க அவனும் இதற்கு உரிய காரணம் ஏதாவது உண்டா? என்று கேட்க, ஸ்வாமி எம்பெருமானாரும் கடைசியில் தக்கதொரு (காரணம்?) காட்ட, அதுவே காரணமாகக் கொண்டு எம்பெருமான் ஸ்வாமி எம்பெருமானாரை ரக்ஷித்தருள்கிறான் என்பதால் நிர்ஹேதுகமாக எம்பெருமான் ரக்ஷிக்கமாட்டான்—காரணமின்றி எம்பெருமான் ரக்ஷிக்கமாட்டான் காரணம் கொண்டுதான் ரக்ஷிப்பான் எம்பெருமான் என்ற ஸித்தாந்தம் ஸ்தாபிக்கப்பட்டதாகிறது இங்கு என்பதை நல்லோர் அறிய வேண்டும். இதுவரை பெரியவாச்சான் பிள்ளை அருளிய உரையில் உள்ள விஷயங்கள் விளக்கப்பட்டன" என்று சிலர் உரைக்கும் அவப்பொருள் தள்ளப்பட்டது. 'அதிகாரி விசேஷணம் (தகுதி) பார்த்து எம்பெருமான் ரக்ஷிக்கிறானேயொழிய இவனிடமுள்ள கைம்முதலாகிற உபாயத்தைப் பார்த்து ரக்ஷிப்பதில்லை' என்று பெரியவாச்

சான் பிள்ளை தம் க்ரந்தங்களில் பலவிடங்களில் கூறியிருக்கும்போது அவருடைய ஸ்ரீ ஸூக்திகளுக்கு அவப்பொருளுரைப்பது நல்லோர்கள் செய்யக் கூடியது அல்ல. "நிரபேக்ஷ உபாயம்" (சேதனன் கையில் எந்த உபாயத்தையும் எதிர்பாராத உபாயம்) என்று எம்பெருமானைக் குறிப்பிட்டிருக்கையாலே இந்தக் காரண வாதம் கணநேரமும் நிலை நிற்காது.

வ்யா :— (பர₁பக்தி பரஜ்ஞாந பரம ப₄க்த்யேக ஸ்வப₄ாவம் மாம் குருஷ்வ) சென்ற சூர்ணையில் வேண்டப்பட்ட பரப₄க்தியும், அந்தப் பரபக்தியினுல் விளையும் பரஜ்ஞானமும், அந்தப் பரஜ் ஞானத்தால் விளையும் பரமப₄க்தியும் எனக்கு இயல்வாக வேணும் என்று வேண்டுகிருர். அதாவது—ஆத்மா உள்ள வரையில் இவை மூன்றுமே எனக்கு இயல்வாயிருக்கவேண்டும் என்று பிரார்த்திக்கிருர். "பரமபதத்தில் அனுபவம் பரமப₄க்தியினுல் விளைவதாயிருக்க அதுவே போதாதோ? 'பரப₄க்தியும் பரஜ்ஞாநமும் ஆத்மா உள்ளவரையில் எனக்கு இயல்வாயிருக்கவேணும்' என்று பிரார்த்திக்கிருரே; இதற்குக் காரணம் என்ன?" என்னும் கேள்வியெழுகிறது. "பரமபதத்தில் ஒருநாள் அனுபவித்த அம்சமே நாள்தோறும் அனுபவிக்கப்படுகிறதாகில் அந்தப் பரமப₄க்தியே போதும். அனுபவிப்பவனுடைய விடாய் நித்யமாயிருக்கையாலே அவ்வனுபவமும் நித்யமாய் இருப்பதிலும் குறையில்லை. எதுபோலே? எனில்— இவ்வுலகில் நாம் நாள்தோறும் சோற்றையே அனுபவிக்கும்போது அதில் ஒரு நாளைக்கு ஒருநாள் சுவை வேறுபடாமலிருந்தபோதும் நம் வேட்கையாலே அது என்றும் அனுபவிக்கப்படுவதுபோலே பரமபதத்தில் பரமப₄க்தியால் விளையும் அனுபவமும் எப்போதும் அனுபவிக்கப்படுகிறது என்று கொள்ளலாம். ஆனுல் இவ்வுலகில் அனுபவிக்கப்படும் சோறு போன்றதன்று ப₄க₃வத்₃விஷயம். பரமபதத்திலுள்ளார் அனைவரும் எப்போதும் அனுபவித்தாலும் அனுபவிக்கப்பட்ட அம்சம் மிகக் குறைவானதாய், அனுபவிக்கப்பட வேண்டிய அம்சமே மிகுதியாய் இருக்கும்படியான அளவிடவொண்ணுமை பகவத் விஷயத்துக்கு உண்டாகையாலே அனுபவிக்கவேண்டிய அம்சம், அபூர்வமாகவே (ஏற்கனவே அனுபவிக்கப்படாததாகவே) இருக்கும். எம்பெருமான் அதையும் அனுபவிக்கச் செய்வதற்காக, அந்த அபூர்வமான அம்சத்தை இவனுக்குக் காட்டுவான். அப்போது கண்டபோதே அதில் ஈடுபடுகையாகிற பரப₄க்தி இவனுக்கு உண்டாகும். அதற்குப் பிறகு, இவனுடைய அறிவு அதில் செயல்படுகிறதா

16. பரபக்தி பரஜ்ஞாந பரம பக்தி க்ருத பரிபூர்ணாநவரத நித்ய விஶததமாநந்ய ப்ரயோஜநாநவதிகாதிஶய

१६. अथ भगवदनुभवजनितप्रीतिकारितकैङ्कर्याणि प्रार्थयते परेति। पूर्ववदर्थः। शेषैकरतिरूपशब्दो बहुव्रीहिः॥

கையாலே பரஜ்ஞானமும் உண்டாகும். அதற்குப் பின்பு அதைப் பெருவிடில் உயிர் தரிக்க முடியாது என்னும் நிலை பிறக்கையடுல் பரம பக்தியும் உண்டாகும். இவ்வண்ணமாக, தினந்தோறும் அனுபவிக்கப் படாத அம்சத்தில் இவை மூன்றும் உண்டாகையாலே, இந்தப் பர பக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை நான் எப்போதும் இயல்வாகப் பெற வேணும்'' என்று இவர் வேண்டக் குறையில்லை. 15.

**பதினாறுவது சூர்ணை அவதாரிகை :** இனி ''பதினாறுவது சூர்ணையில், எம்பெருமானை அனுபவிப்பதால் உண்டாகும் ஆனந்தத்தையும் அதனால் விளையும் கைங்கர்யங்களையும் வேண்டுகிறார்'' என்று ஸுதர்சனபட்டர் அவதாரிகை. பரபக்தி முதலானவற்றால் உண்டாகும் கைங்கர்யத்தின் ஸ்வரூபத்தை ''பாரமார்த்திக'' என்று தொடங்கும் இரண்டாம் சூர்ணையிலேயே விரிவாக அருளிச் செய்திருக்க, இந்தச் சூர்ணையிலும் கூறுவது புநருக்தி (கூறியது கூறல்) அன்றோ? எனில்—அந்த இரண்டாம் சூர்ணையில், கைங்கர்யத்தில் எனக்கு ருசியை உண்டாக்க வேண்டும் என்று பிராட்டி திருவடிகளிலே ஶரணம் புக நினைத்து, எத்தகைய கைங்கர்யத்தில் தமக்கு ருசியைத் தர வேண்டும் என்று பிரார்த்திப்பதற்காகக் கைங்கர்ய ஸ்வரூபத்தை விரிவாக அருளிச்செய்தார். இந்தச் சூர்ணையில் அந்த ருசியை முன்னிட்டுக்கொண்டு, பெரிய பெருமாள் திருவடிகளிலே ஶரணம் புகுந்து அந்தக் கைங்கர்யத்தையே வேண்டுகிறாராகையாலே, அதனுடைய ஸ்வரூபத்தை மறுபடி கூறுவது புநருக்தியாகாது. மேலும், பிறர்க்கு உபதேசிப்பதற்காக இப்படிக் கைங்கர்ய ஸ்வரூபத்தை மறுபடியும் அருளிச்செய்கிறாராகையாலே இந்தப் புநருக்தி குற்றமாகாது. இதைக் குணமென்றே கொள்ளலாம்.

**ப்ரிய ப₄க₃வத₃நுப₄வோऽஹம் தத₂ாவித₄ ப₄க₃வத₃நுப₄வ ஜநிதாநவதி₄காதிஶய ப்ரீதிகாரிதாஶேஷாவஸ்தோ₂சிதாஶேஷ ஶேஷதைகரதிரூப நித்ய கிங்கரோ ப₄வாநி ||**

---

வ்யா: **(பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்தி க்ருத)** இந்தப் பர ப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்திகளால் விளைவதான. **(பரிபூர்ண)** அதாவது—ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதிகள் ஆகிய அனைத்தையும் ஒரு படிப்பட அனுபவிக்கை; **(அநவரத)** இடைவிடாமலிருக்கை. அதாவது இந்த அனுபவத்தினிடையே வேறு விஷயங்கள் கலக்காதிருக்கை. **(நித்ய)** நித்யமான ஆத்மா உள்ள போதெல்லாம் இருக்கை. **(விஶத₃தம)** இந்த அனுபவம் பரம பக்தியினால் விளைவதாய் இருக்கை; பரப₄க்திதசையில் அனுபவம் **விஶத₃ம்** (தெளிவாயிருப்பது), பரஜ்ஞாந தசையில் அனுபவம் **விஶத₃தரம்** (மிகத்தெளிவாயிருப்பது), பரமப₄க்தி தசையில் அனுபவம் **விஶத₃தமம்** (மிகமிகத் தெளிவாயிருப்பது) எனத் தக்கது. **(அநந்ய ப்ரயோஜந)** இவ்வனுபவத்தால் பிறக்கும் ஆனந்த₃மும் தேவையில்லை, அந்த ஆனந்தத்தால் உண்டாகும் கைங்கர்யமும் தேவையில்லை என்னும்படி இவ்வனுபவம் தானே சுவை மிக்கதாய் இருக்கை. **(அநவதி₄காதிஶயப்ரிய ப₄க₃வத₃நுப₄வோऽஹம்)** எல்லையற்ற சிறப்பையுடையதான ஆனந்தத்தால் அனுபவிக்கப்படுவதான ப₄க₃வத₃நுப₄வத்தை உடையவனான நான். **(தத₂ாவித₄ ப₄க₃வத₃நுப₄வ ஜநித ப்ரீதி)** அப்படிப்பட்ட ப₄க₃வத₃நுப₄வத்தாலே பிறப்பதாய் எல்லையற்ற சிறப்பையுடையதான ப்ரீதி அதாவது—ஆனந்தம். **(காரித அஶேஷாவஸ்தோ₂சித)** இப்படிப்பட்ட ஆனந்தத்தால் உண்டானதாய் எல்லா நிலைகளிலும் அனுகூலமாய் இருக்கிற. **(அஶேஷ ஶேஷதைகரதிரூப)** ஶேஷபூ₄தன் செய்யவேண்டியதான எல்லாக் கைங்கர்யங்களிலுமே 'அபி₄நிவேசம்' என்னும் பேரார்வத்தையே வடிவாக உடையனாய்க் கொண்டு. **(நித்யகிங்கரோ ப₄வாநி)** என்றுமே செய்யப்படும் கைங்கர்யத்தைப் பெற்று அனுபவிக்கப்பெறுவேன் ஆகவேணும். இப்படியல்லாமல், 'நித்ய' ஶப்₃த₃மும் மறுபடியும் திரும்பிப் போதலில்லாத பரம பத₃த்தைச் சொல்லுவதாகக் கொண்டு, "அந்த நித்ய விபூ₄தியில் கைங்கர்யம் செய்யக் கடவேன்" என்று சொல்லுவதாகவும் கொள்ளலாம். 'கைங்கர்யத்தைப்பெற்று அனுபவிக்கப் பெறுவேனாக வேணும்' என்று கருத்து.

**17. ஏவம்பூ₄த மத் கைங்கர்ய ப்ராப்த்யுபாயதயாऽவ க்லுப்த ஸமஸ்த வஸ்து விஹீநோபி,**

---

**१७. अथ भगवद्वचः — एवमित्यादि ; वक्ष्यमाणचरम-श्लोकप्रथमपदार्थमाह एवंभूतेति । अवक्लृप्तं — विदितम्. समस्त-**

---

**பதினேழாவது சூர்ணை** அவதாரிகை: இதுவரையில் த்₃வயம் முழுவதும் விவரிக்கப்பட்டதாயிற்று. அப்படியானால் மேல் சூர்ணைகள எதற்காக அவதரித்தன? என்னும் கேள்வியெழுகிறது. அதற்கு பதில் பின்வருமாறு:— இப்படி, "உபாயமும் உபேயமும் எம்பெருமானே" என்று உறுதி பூண்ட இந்த அதி₄காரி விஷயத்தில் "நின் கடைத்தலை இருந்து வாழும் சோம்பரை யுகத்தி போலும் சூழ்புனல் அரங்கத்தானே" [திருமாலை 37] என்கிறபடியே, பெரிய பெருமாள் தமக்குண்டான அன்பின் மிகுதியாலே, கீழ்ச்சூர்ணைகளில் இவர் சொன்னவற்றை விரிவாகத் திருப்பிச் சொல்லி, "உமக்கு என் அருளாலே அனைத்தும் குறைவற உண்டாகும்" என்று அருளிச்செய்து, இவருடைய நெஞ்சத்தை உகப்படையச் செய்கிறார். "இப்படிப் பெரிய பெருமாள் அருளிச் செய்தாரென்று நாங்கள் விஶ்வஸித்திருக்கும்படி (நம்பியிருக்கும்படி) எங்ஙனே? என்று எம்பார் கேட்டருள, 'எனக்குப் பெரிய பெருமாள் தம்முடைய ஸௌலப்₄யாதி₃ கு₃ணங்களைக் கரதலாமலகமாகக் (கையிலங்கு நெல்லிக் கனியாகக்) காட்டித் தந்தார். அங்கு திருவுள்ளமாகாதது என் வாயால் புறப்படாதே. அவர் சொல்லுவிக்கச் சொன்ன வார்த்தையாகையாலே, அவர் அருளிச் செய்த வார்த்தையென்று விஶ்வஸிக்கத் (நம்புவதற்குத்) தட்டில்லை' என்று உடையவர் அருளிச்செய்தார்"—என்னும் ஐதிஹ்யம் பெரியவாச்சான் பிள்ளையால் இங்கு எடுக்கப்பட்டது.

வ்யா :— (ஏவம் பூ₄தமத் கைங்கர்ய ப்ராப்தி) முன் சூர்ணையில் சொல்லப்பட்ட என்னுடைய கைங்கர்யத்தைப் பெறுவதற்கு. (உபாயதயா அவக்லுப்த) உபாயமாக வேதாந்தங்களிலும், கீ₃தோபநிஷத்திலும் சொல்லப்பட்ட கர்ம ஜ்ஞாந ப₄க்திகள் உமக்கு இல்லையேயாகிலும். (ஸமஸ்தவஸ்து விஹீநோऽபி) இவ்வுபாஸனத்திற்கு அங்கமான ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபங்களைப் பற்றிய உண்மையறிவு, அதற்குக்

**அநந்த தத்3விரோதி4 பாபாக்ராந்தோऽபி, அநந்த மத்3பசார**

---

**वस्तुशब्देन कर्मज्ञानभक्तियोगाः, तदनुगुणाः अमानित्वादिगुणाश्च विवक्षिताः। विहीन इति — त्यागः अनुदित इति भावः। परिशब्दार्थमभिप्रयन्नाह अनन्तेति। विरोधिभूयस्तया कालान्तरेऽपि तन्नैराश्य हि तदर्थः॥**

---

காரணமான, தத்தம் வர்ணம் ஆஶ்ரமத்திற்குரிய ஒழுக்கம், இவை எல்லாவற்றுக்கும் காரணமான **'அமாநித்வம்' 'அத3ம்பி4த்வம்'** முதலான (கீதை 13-ம் அத்தியாயம் ஏழு முதல் பன்னிரண்டு வரையில் உள்ள ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட) குணங்கள் ஆகியவை அனைத்தும் உமக்கு இல்லையேயாகிலும்; "22-வது சூர்ணையில் எடுக்கப்படும் கீ3தா சரம ஶ்லோகத்தில் முதலிலுள்ள, **'ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய'** என்னும் பதங்களில் **'ஸர்வத4ர்ம'** ஶப்3த3ார்த்த2மும் **'த்யாக3'** ஶப்3த3ார்த்த2மும் இதுவரையில் விவரிக்கப்பட்டன. அடுத்து **'அநந்த'** என்று தொடங்கும் மூன்று பத3ங்களாலும், **'பரி'** ஶப்3த3ார்த்தம் விவரிக்கப்படுகிறது. தடைகள் மிக்கிருக்கையால் வருங்காலத்திலும் இந்த ஸாதனங்கள் கைகூடமுடியாது என்பதல்லவோ **'பரி'** ஶப்3த3ார்த்த2ம்" என்று ஶ்ருத3ர்சனப4ட்டர் வ்யாக்யானம். **(அநந்த தத்3 விரோதி4 பாபாக்ராந்தோऽபி)** அந்த உபாயங்கள் இல்லாமலிருப்பதோடன்றியில், இந்த ஸாதனங்கள் வருங்காலத்திலும் விளையமுடியாதபடி அவற்றுக்குத் தடையான கணக்கற்ற பாபங்களாலே நெருக்குண்டு இருந்தீரேயாகிலும். **(அநந்த மத்3பசாரயுக்தோऽபி)** முன் பதத்தால் சொல்லப்பட்ட விரோதி4 பாபங்கள் மாத்திரமன்றிக்கே, நம் விஷயத்தில் செய்த கணக்கற்ற அபசாரத்தோடே கூடியிருந்தீரேயாகிலும். இங்கு ப4க3வத3பசாரமும் அடுத்த தொடர்களில் பா4க3வதாபசாரமும் அஸஹ்யாபசாரமும் தனியாக எடுக்கப்படுகின்றன. முந்தின தொடரில் 'விரோதி4பாபம்' என்று எடுக்கப்பட்டது என்ன? எனில் — அவையாவன :— **'க்ருத்ய அகரணம்'** (ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருப்பவற்றைச் செய்யாமலிருப்பது) **'அக்ருத்ய கரணம்'** (ஶாஸ்த்ரங்களுக்கு முரணான காரி

**யுக்தோऽபி, அநந்த மதீ₃யாபசாரயுக்தோऽபி, அநந்தாஸஹ்யாபசாரயுக்தோऽபி, ஏதத்கார்யகாரண பூ₄தாநாதி₃ விபரீதாஹங்கார-**

---

யங்களைச் செய்வது) ஆகியன அந்த விரோதி பாபம் எனப்பட்டது. அவையும் எம்பெருமானுடைய ஆணையான சாஸ்த்ரங்களை மீறுவதாய் இருக்கையால் ப₄க₃வத₃பசாரத்திலேயே சேருமாகிலும், மேலே ப₄க₃வானிடமும் பாகவதர்களிடமும் செய்யப்படும் அபசாரங்கள் மிகக் கொடியவையாகையாலே, அவற்றைத் தனியாகச் சொல்லி, அக்ருத்ய கரண க்ருத்யாகரணங்களை முதலில் பாப சப்₃த₃த்தாலே சொன்னார். **(அநந்த மதீ₃யாபசாரயுக்தோऽபி)** என் விஷயத்தில் அபசாரம் செய்ததோடல்லாமல் என்னால் 'நம்மவர்கள்' என்று அபிமானிக்கப்படுபவர்கள் விஷயத்தில் உண்டான அளவற்ற அபசாரத்தோடு கூடியிருந்தீராகிலும். **(அநந்த அஸஹ்யாபசாரயுக்தோऽபி)** ப₄க₃வத்₃ விஷயத்திலும், பா₄க₃வத விஷயத்திலும் ஒரு காரணமும இல்லாமல் செய்யப்படும் கணக்கற்ற அஸஹ்யாபசாரங்களோடு கூடியிருந்தீரேயாகிலும். **(ஏதத் கார்ய காரணபூ₄த அநாதி₃ விபரீத அஹங்கார)** இதுவரை சொல்லப்பட்ட நாலுவகைப் பாபங்களால் உண்டாவதாய், அந்தப் பாபங்களை மேலும் மேலும் உண்டாக்குவதாய் இருக்கும் அநாதிகாலமாகவுள்ள விபரீதாஹங்காரம். விபரீத அஹங்காரமாவது— தானல்லாத தேஹத்திலே தான் என்னும நினைவைக் கொள்ளுதல். இப்படி நினைக்கைக்குக் காரணம் முற்கூறிய பாபங்களாகையாலே இந்த அஹங்காரம் பாபத்தினால் விளைவதாகவும் இருககும். இந்தப் பாபங்களுக்குக் காரணம் தேஹத்தையே ஆத்மாவாக நினைக்கும் அஹங்காரமாகையாலே இது மேன்மேலும் விளையும் பாபங்களுக்குக் காரணமாகவும் இருக்கும். "அஹம்" (நான்) என்று சொல்லப்படும் பொருள் ஜ்ஞானத்தையும் ஆனந்தத்தையுமே வடிவாகக் கொண்டதாய், அறிவற்ற அசித்தைக் (தேஹத்தைச்) காட்டிலும் வேறாய் மேற்பட்டதாயிருக்க, துன்பத்தை விளைப்பதாய், தானே ப்ரகாசிக்காத ஜட₃மாய், எப்போதும் மாறிக்கொண்டே இருப்பதான அசித்தையே ஆத்மா என்னும் நினைவைக் கொளளுவது பாபங்களால் விளைவதாய், மேலும் மேலும் பாபங்களை விளைப்பதாய் இருக்குமன்றோ.

விமூட₄ாத்ம ஸ்வப₄ாவோபி, ஏதது₃ப₄ய கார்ய காரண

---

एतदिति — बीजाङ्कुरन्यात् कार्यकारणभावः ।

*"अथात अहङ्कारादेशः" [छान्दो ७-२५-१] इत्युक्ताहङ्कारव्यावृत्त्यर्थः विपरीताहङ्कारशब्दः ।

विमूढात्मस्वभावः - तिरोहितशेषभावः । उभयशब्दः पापाज्ञानपरः।

---

"விதையும் முளையும் ஒன்றுக்கொன்று கார்ய காரணமாயிருக்கை யாகிற பீ₃ஜாங்குர ந்யாயத்தாலே, விபரீதாஹங்காரமும், பாபங்களும் ஒன்றுக்கொன்று கார்ய காரணமாகின்றன" என்பர் ஸுதர்சனபட்டர். இந்த விபரீத அஹங்காரத்தால் விளையும் தாழ்வு ஏதெனில் (**விமூட₄ாத்ம ஸ்வப₄ாவோऽபி**) இப்படிப்பட்ட விபரீதாஹங்காரத்தாலே மறைக்கப்பட்ட ஆத்மாவினுடைய ப₄க₃வச் சேஷத்வ ஸ்வரூபத்தை உடையிராய் இருந்தீரேயாகிலும்; இங்கு '**ஆத்ம ஸ்வப₄ாவம்**' என்று சேஷத்வத்தைச் சொல்லி அது மறைவுண்டது என்று சொல்லப்பட்டது. ஸ்வரூபத்தை நிரூபிக்கும் ஸ்வப₄ாவம் ஸ்வரூபம் என்றே சொல்லப்படுகிறது. மற்ற தன்மைகள் ஸ்வப₄ாவம் எனப்படுகின்றன. சேஷத்வம் ஆத்மாவுக்கு அத்தகைய அந்தரங்க ஸ்வரூபமாய் இருக்க அதை ஸ்வப₄ாவம் என்று என் கூறுகிறார்? எனில்—சேஷத்வம் ஸாமான்யமான ஸ்வபாவமாயிராமல் அந்தரங்கமான ஸ்வரூபமாகவே உள்ளது. இவனுடைய ஆத்மா எம்பெருமானுடைய உடைமையாயிருக்கையாலே இந்த சேஷத்வ ஸ்வரூபத்தை இவனால் அழிக்க முடியாது. சேஷத்வம் ஸ்வரூபமானாலும் "நான் சேஷபூ₄தன்" என்று இருக்கவேண்டியது சேதனனுடைய ஸ்வப₄ாவம் (இயல்பு) ஆகும். அந்த இயல்பைக் கைவிட்டு, "நான் ஸ்வதந்த்ரன்" என்னும் நினைவை விபரீதாஹங்காரம் விளைத்து விட்டதாகையாலே, 'சேஷத்வ ஸ்வரூபம் மறையப் பெற்றிருக்கையையே இயல்வாக உடையீராய் இருந்தீரேயாகிலும், என்னும் அர்த்தத்திலே ஸ்வப₄ாவ ஶப்₃த₃த்தை வழங்குகிறார். (**ஏதது₃ப₄யகார்ய காரணபூ₄த அநாதி₃ விபரீத**

**பூ₄தாநாதி₃ விபரீத வாஸநா ஸம்ப₃த்₃தே₄ாऽபி, ஏதத₃நுகு₃ண ப்ரக்ருதி விஶேஷ ஸம்ப₃த்₃தே₄ாऽபி, ஏதந்**

---

**வாஸநா ஸம்ப₃த்₃தே₄ாऽபி)** முற்கூறப்பட்ட நாலுவகைப்பட்ட பாபங்களுக்கும், விபரீதாஹங்காரத்திற்கும் கார்யமாய், அதாவது அவற்ருல் விளைவதாய், காரணமாய், அதாவது மேலும் மேலும் அவற்றை விளைப்பதாயிருக்கும் விபரீத வாஸனையாலே அநாதி₃ காலமாகக் கட்டுண்டு இருந்தீரேயாகிலும். பாபத்திலும் அஹங்காரத்திலும் பழகிப் போந்த வழக்கத்தாலே விளைவது வாஸனை. அதனுல் இது பாபத்தாலும் அஹங்காரத்தாலும் உண்டாவதாயும் இருக்கும். இதுவே மேலும் மேலும் பாபத்திலும் அஹங்காரத்திலும் மூட்டுகின்றதாயிருக்கையாலே அவற்றுக்குக் காரணமாகவும் இருக்கும். மனிதர்களிடம் பழகுவது நல்லோர்களிடம் பழகும்போது ஸத்ஸஹவாஸம் என்றும், தீயவர்களிடம் பழகும்போது து₃ஸ்ஸஹவாஸம் என்றும் பெயர்பெறும். வாஸனையும அது போலவே, நல்ல விஷயங்களில் வாஸனை என்றும், தீய விஷயங்களில் வாஸனை (து₃ர்வாஸனை) என்றும் இரு வகைப்படும். அவற்றில் இங்கு து₃ர்வாஸனையாலே கட்டுண்டிருந்தீரேயாகிலும் என்கிருர். **(ஏதத₃நுகு₃ண ப்ரக்ருதி விஶேஷ ஸம்ப₃த்₃தே₄ாऽபி)** முற்கூறியது அனைத்தையும் விளைப்பதான தீய ப்ரக்ருதியால் நன்கு பிணைக்கப் பட்டிருந்தீரேயாகிலும். இங்கு **'ப்ரக்ருதி'** என்று ஶரீரத்தைச் சொல்லுகிறது. நித்ய முக்தர்களுக்கு சுத்த ஸத்வ மயமான ஶரீரம் இருக்குமாகையாலே, அது ஸத் ப்ரக்ருதியாய் இருக்கும். இவ்வுலகில் உள்ளவர்களுக்கு ரஜஸ் தமஸ்ஸுக்கள் கலந்த ஶரீரமாகையாலே, அது து₃ஷ்ப்ரக்ருதியாய் இருக்கும். அதையே ப்ரக்ருதி விஶேஷம் என்கிருர். **'ப₃த்₃தே₄ாऽபி'** என்று சொல்லாமல், **''ஸம்ப₃த்₃தே₄ாऽபி''** என்று சொன்னதால் எல்லாம் வல்லவனை எம்பெருமானே பிரிக்கப்பார்த்தாலும், பிரிக்க அரிதாம்படி ப்ராக்ருத ஶரீரத்தோடு இந்த ஜீவன் கட்டுண்டிருக்கிருன் என்று காட்டுகிருர். **(ஏதந்மூல ஆத்₄யாத்மிக ஆதி₄பௌ₄திக ஆதி₄தை₃விக)** இந்த தேஹ ஸம்பந்தம் காரணமாக வருகிற மூவகைப்பட்ட தாபங்கள் இவை. ஆத்₄யாத்மிகமாவது— **''ஆத்₄யாத்மிகோऽபி த்₃விவித₄: ஶாரீரோ மாநஸஸ்ததா₂''** [வி. பு.

மூலாத்₄யாத்மிக ஆதி₄பௌ₄ளதிக ஆதி₄தை₃விக

6-5-2] [ ஆத்யாத்மிகமானது — ஶரீரத்திலுண்டாவது (வியாதி), என்றும் மநஸ்ஸிலுண்டாவது (ஆதி₄) என்றும் இருவகைப்படும். இவற்றில் ஆதி₄ எனப்படுவது மனநோய்; வ்யாதி₄ எனப்படுவது உடல்நோய்] ஆதி₄யாகிற மனநோயாவது :—

> காம க்ரோத₄ ப₄ய த்₃வேஷ லோப₄மோஹ விஷாத₃ஜ: ।
> ஶோகாऽஸூயாவமாநேர்ஷ்யா மாத்ஸர்யாதி₃ மயஸ்தத₂ா ॥
> [வி. பு. 6-5-5]

[காமம், கோபம், பயம், த்வேஷம், பேராசை, துன்பம் ஆகியவற்றினுல் உண்டாகும் கவலை, அஸூயை, அவமானம், பொருமை, மாத்ஸர்யம் முதலானவையாக மநஸ்ஸில் உண்டாகும் தாபமும் பலபடிப்பட்டிருக்கிறது] எனப்படுபவை. வ்யாதி₄யாவது :—

> ஶிரோரோக₃ ப்ரதிஶ்யாய ஜ்வரஶூல ப₄க₃ந்த₄ரை: ।
> கு₃ல்மார்ஶ ஶ்வயது₂ ஶ்வாஸச்ச₂ர்த்₃யாதி₃பி₄ரநேகத₄ா ॥
> தத₂ாக்ஷிரோக₃ாதிஸார குஷ்ட₂ாங்க₃ாமய ஸம்ஜ்ஞிதை: ।
> [வி. பு. 6-5-2,3]

[தலைவலி, ப்ரதிஶ்யாயம் (பீநஸம்), ஜ்வரம், ஶூலம், ப₄க₃ந்த₄ரம், கு₃ல்மார்ஶம், ஶ்வயது (ஶோப₂ம்), ஶ்வாஸச் ச₂ர்த்தி₃ முதலான பலவகைப்பட்டது. அப்படியே கண்நோய், அதிஸாரம், குஷ்ட₂ம் அங்க₃வ்யாதி₄ என்னும் பல பெயர்களுடன் வ்யாதியானது வேறுபடுகிறது] எனப்படுபவை. ஆதி₄பௌ₄ளதிகமாவது :—

> பஶுபக்ஷி மநுஷ்யாத்₃யை: பிஶாசோரக₃ராக்ஷஸை: ।
> ஸரீஸ்ருபாத்₃யைஶ்ச ந்ருணும் ஜாயந்தே சாதி₄பௌ₄ளதிகா: ॥
> [வி.பு. 6-5-7]

[பிராணிகள், பக்ஷிகள், மநுஷ்யர்கள் முதலியவற்றலும், பிசாசம், பாம்புகள், ராக்ஷஸர்கள் முதலியவற்றலும், ஊர்வன முதலியவற்றலும் மனிதர்களுக்கு ஆதி₄பௌ₄ளதிகமான தாபம் உண்டாகிறது] என்பவை. ஆதி₄தை₃விகமாவது :—

**ஸுக₂து₃:க்க₂ தத்₃தே₄து ததி₃தரோபேக்ஷணீய விஷயா நுப₄வ ஜ்ஞாந ஸங்கோசரூப-**

---

**सुखदुःखतद्धेतुशब्देन अभोग्यविषया विवक्षिताः। ज्ञानस्य**

---

ஶீதோ₃ஷ்ண வாத வர்ஷாம்பு₃ வைத்₃யுதாதி₃ ஸமுத்₃ப₄வ:
தாபோ த்₃விஜவரஶ்ரேஷ்டை₂: கத்₂யதே சாதி₄தை₃விக: ॥
[வி. பு. 6-5-8]

[குளிர், வெப்பம், காற்று, மழை, ஜலம், மின்னல் முதலானவற்றால் உண்டாகும் தாபம் ஆதி₄தை₃விகம் என்று ப்₃ராஹ்மண ஶ்ரேஷ்டர்களால் சொல்லப்படுகிறது] என்பவை. **(ஸுக₂ து₃:க்க₂ தத்₃தே₄து)** முற்கூறிய மூன்று வகைப்பட்ட தாபங்களால் விளையும் மூன்று வகைப் பட்ட இன்ப துன்பங்களாகவும் அதற்குக் காரணமாகவும் இருந் துள்ளவை.

இப்படி மூன்று வகைப்பட்ட இன்ப துன்பங்களாகவும் அவற்றுக் குக் காரணமாகவும் இருந்துள்ளவை எவை? இன்ப துன்பங்கள் விஷ யத்தைப் பற்றியன்றோ உண்டாகும்? அதற்கு விஷயம் எது? எனில்— (ததி₃தரோபேக்ஷணீய விஷய) தனக்கும் பிறர்க்கும் பொருட்படுத்தத் தகாதவர்களான (உபேக்ஷணீயர்களான) நடுவிலிருப்பவர்களுக்கும் (மத்₄யஸ்த₂ர்களுக்கும்) உண்டாகின்றவையான காமம் கோபம் முத லான விஷயங்களினுடைய. இதை அடுத்துள்ள அநுப₄வம் என்ப தோடு கூட்டிப் பொருள் கொள்ளவேணும். தனக்குக் காமம் நிறை வேறினால் இன்பத்திற்குக் காரணமாகவும், நிறைவேறாவிட்டால் துன் பத்திற்குக் காரணமாகவும், தனக்குக் கோபம் எதிரியைத் துன்புறுத் தும்போது இன்பத்திற்குக் காரணமாகவும், அதுவே எதிரியை ஒன்றும் செய்ய முடியாவிட்டால் துன்பத்திற்குக் காரணமாகவும் இருக்கும். தன்னைக் காட்டிலும் பிறரான **'இதரர்'** அனுகூலர் என்றும் ப்ரதி கூலர் என்றும் இருவகைப்படுவர். அவர்களில் அனுகூலர்க்குக் காமம் நிறைவேறப்பெற்றால் இன்பத்திற்குக் காரணமாகவும், நிறை வேறாவிடில் துன்பத்துக்குக் காரணமாயும் இருக்கும். ப்ரதிகூலர்க் குக் காமம் நிறைவேறினால் துன்பத்திற்குக் காரணமாகவும் நிறைவேறா விட்டால் இன்பத்திற்குக் காரணமாகவும் இருக்கும். பொருட்படுத்தத்

**மச்சரணாரவிந்த3 யுகளைகாந்திகாத்யந்திக பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்தி விக்4ந ப்ரதிஹதோऽபி,**

---

**सङ्कोचः आत्मपरमात्मविषये, विषयानुभवरूपः ज्ञानसङ्कोचरूपश्च विघ्नः।**

---

தகாத நடுவிலிருப்பவர்களுடைய காமம் கோபம் ஆகியவை நிறைவேறுவதாலோ நிறைவேருததாலோ ஏற்படும் இன்ப துன்பங்கள் பொருட்படுத்தத்தகாதவையாயிருக்கும். மேலும் வியாதி முதலானவற்றில் பெரிய வியாதி துன்பத்திற்குக் காரணமாயும் அதை ஒப்பிடும் போது சிறிய வியாதி இன்பத்திற்குக் காரணமாயும் இருக்கும். ஒருவனுக்கு ராஜதண்டனை ஏற்படும்போது அவன் நோயாளி என்னும் காரணத்தால் விட்டுப் போந்தால் அந்த நோயே இன்பத்திற்குக் காரணமாயிருக்கும். (விஷயாநுப4வ ஜ்ஞாந ஸங்கோசரூப) இப்படித் தன்னைப் பற்றியதாயும், பிறரைப் பற்றியதாயும், பொருட்படுத்தத் தகாத உபேக்ஷணீயாரைப் பற்றியதாயும் இருந்துள்ள விஷயங்களின் அநுபவமானது தன்னுடைய ஜ்ஞானத்தைச் சுருங்கச் செய்வதாயிருக்கும். ஆகையாலே, இந்த சுருங்கிய ஜ்ஞானத்திஞல் உண்டாகக் கூடிய பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்திகளுக்கு விஷயாநுப4வம் இடையூருய் இருக்கும். அதனை அருளிச் செய்கிருர் :— (**மச்சரணாரவிந்த3 யுக3ளைகாந்திக ஆத்யந்திக பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்தி விக்4ந ப்ரதி ஹதோऽபி**) இவை ஜ்ஞாநத்தைச் சுருங்க வைப்பதாகையாலே பரப4க்தி முதலானவற்றுக்கு முன்னுலுண்டாகும் வேறு பயன் கருதாத ப4க்தி ரூபமான அறிவையும் சுருங்க வைக்குமாகையாலே அதிலிருந்து உண்டாகும் பரப4க்தி பரஜ்ஞாநம் பரமப4க்தி ஆகியவற்றுக்கு இடையூருயிருக்கும் என்றும் கொள்ளலாம். "மிக இனியதான என் திருவடித் தாமரையிணையில் என்றும் இருப்பதாய் ஒருபடிப்பட்டிருப்பதான பரப4க்தி முதலானவற்றுக்கு இடையூருய் இருந்துள்ள விஷயாநுப4வத்தாலே அழிந்திருந்தீரேயாகிலும்" என்று பொருள். ப்ரதிஹதமாகையாவது—அழிகை. அதாவது—ஆத்மா நசித்து விட்டதோ என்று சொல்லும்படியான நிலையை அடைகை. இதன் திரண்ட பொருள் பின்வருமாறு :— "ப4க்திரூபமான அறிவுக்கும் அதஞல் விளையும் பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்திகளுக்கும் ஶப்3த3ாதி3 விஷயாநுப4வமும் ஜ்ஞாந ஸங்கோசமும் இடையூறுகளாகின்றன. இவ்விரண்டும் ஆத்'

**யேந கேநாபி ப்ரகாரேண**

---

**येन केनापि प्रकारेणेति -- आर्तया दृप्तया वेति भावः ।**

---

யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்று மூன்று வகைப் பட்ட தாபங்களையும் அவற்றால் ஏற்படும் இன்ப துன்பங்களையும் விளைக் கின்றன. இவையெல்லாமே தேஹ ஸம்பந்தத்தால் உண்டானவை. இந்த தேஹ ஸம்பந்தத்துக்குக் காரணம் விபரீதவாஸனை. அதற்குக் காரணம் விபரீதாஹங்காரம். அதற்குக் காரணம அக்ருத்யகரணம், க்ருத்யாகரணம், பகவதபசாரம், பாகவதாபசாரம், அஸஹ்யாப சாரம் ஆகிய அபசாரங்கள். இவற்றோடு கூடியிருந்தீரேயாகிலும்" என்று இதுவரை சொல்லப்பட்டதாயிற்று. **(யேந கேநாபி ப்ரகா ரேண)** ஏதேனுமொருவகையாலே. அதாவது — மனப்பூர்வமாகச் சொன்னாலும் சரி, மனம் ஒத்துழைக்காமலே வாயால் மட்டும் சொன்னா லும் சரி. ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பு, பகவத்ப்ராப்தியில் த்வரை ஆகியவற்றையுடைய ஆர்த்தராயிருந்து சொன்னாலும் சரி. இவையில் லாத த்ருப்தராயிருந்து சொன்னாலும் சரி. பொருளுணர்ந்து சொன்னா லும் சரி. பொருளை உணராமலே சொன்னாலும் சரி. இதில் எப்படிச் சொல்லவேண்டும் என்று ஒரு நிர்ப்பந்தம் இல்லை. பின் வேண்டுவது ஏன்? எனில் —(த்வயவக்தா) மந்த்ர ரத்னமான த்வய மஹா மந்த் ரத்தைச் சொல்லவேண்டும் என்னும் இவ்வளவே உள்ளது. மற்ற மந்த்ரங்களைச் சொல்லிப் பயனில்லை. அர்த்த பூர்த்தியுள்ளவையாய் மோக்ஷ ஸாதனமாயிருக்கும் திருவஷ்டாக்ஷரம் (ஓம் நமோ நாராய ணாய), திரு த்வாதசாக்ஷரம் (ஓம் நமோ பகவதே வாஸுதேவாய), ஷடக்ஷரம் (ஓம் நமோ விஷ்ணவே) என்னும் மூன்று வ்யாபக மந்த் ரங்களைச் சொன்னாலும் பயனில்லை.

"வ்யாபகாந்தரங்களாக வொண்ணாது. அதொழிந்தாலும் திரு மந்த்ரமுமாகவொண்ணாது. த்வயத்திலேயாய்த்து இளைப்பாற வேண்டு வது. அது தன்னிலும் பூர்வகண்டாநுஸந்தானமும் அமையாது. உத்தரகண்டாநுஸந்தானமும் அமையாது. உபயமும் (இரண்டும்) ஆகவேணும். எதுக்காகவென்னில் — பூர்வகண்டமாத்ரம் அநுஸந்தித்

**த்3வயவக்தா த்வம் கேவலம் மதீ3யயைவ த3யயா நிஶ்ஶேஷ விநஷ்ட ஸஹேதுக மச்சரணாரவிந்த யுக3ளை காந்திகாத்யந்திக பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்தி விக்4ந:**

---

**केवलशब्दः आकाङ्क्षितानुतापनिवृत्त्यर्थः । एवकारः कृपायाः पुष्कलकारणत्वपरः । तत्र हेतुः मदीयत्वम् ।**

---

தீராகில் அதில் சொன்ன ஶரண வரணம் ஸர்வ ஸாத4ாரணம் (அனைவருக்கும் பொது). ஆகையாலே, 'உமக்குப் புருஷார்த்த2மேதோ?' என்ன வேண்டி வரும். உத்தரக2ண்ட3மாத்ரம் அநுஸந்தித்தீராகில், அதில் சொன்ன ப்ராப்யம் (கைங்கர்யம்) ஸாத4நாந்தர ஸாதாரணம் (ப4க்தி முதலான உபாயங்களாலும் அடையத் தக்கது) ஆகையாலே உமக்கு ஸாதநம் ஏதோ என்ன வேண்டிவரும். இக்குறைகளெல்லாம் தீரவேண்டியிருந்தீரேயாகில், த்3வயத்திலேயாய்த்து இழிப்பாற வேண்டுவது'' என்று பெரியவாச்சான்பிள்ளை அருளியது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. **(த்3வய வக்தா த்வம்)** இப்படி த்3வயத்தை வாயாலே அநுஸந்தித்த நீர்.

இனி இந்த த்3வய உச்சாரணத்தாலே விளையும் பயனைக் கூறுகிறார் சூர்ணையின் எஞ்சிய பகுதியாலே. **(கேவலம் மதீ3யயைவ த3யயா)** என்னுடையதேயான கருணை ஒன்றினாலேயே. **''கேவல ஶப்3த3ம்** முற்கூறிய அபசாரங்களுக்கு ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட அனுதாபம் கூடத் தேவையில்லை என்று காட்டுகிறது. 'ஏவ' காரம் கருணையே நீர்பெறும் பயனுக்கு நிறைவான காரணம் என்று காட்டுகிறது. (த்3வய வசனம் வ்யாஜமாத்ரம்) என்று கருத்து. அப்படி அது நிறைவான காரணமாயிருப்பதற்குக் காரணம் என்னுடைய க்ருபையாய் இருப்பதேயாகும்'' என்று ஸுதர்சனப4ட்டர் உரை. அந்த க்ருபை செய்யும் காரியம் என்ன? எனில் — கூறுகிறார். **(நிஶ்ஶேஷ விநஷ்ட ஸஹேதுக)** த்3வயாநுஸந்தானமே காரணமாக இருகரையும் அழியப் பெருகின என் கருணை ஒன்றாலேயே காரணங்களோடும் கூடிய முற்கூறிய இடையூறுகள் அனைத்தும் அடியோடு அழிகின்றன. அழிகின்றவற்றை அடுத்த தொடர் விளக்குகிறது — **(மச்சரணாரவிந்த3 யுக3ள ஐகாந்திக ஆத்யந்திக பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்தீ விக்4ந:)** மிக இனியதான என் திருவடித் தாமரையிணையிலே என்றும் உள்ளதாய் ஒரு

**மத்ப்ரஸாத₃ லப்₃த₄ மச்சரணாரவிந்த₃ யுக₃ளைகாந்திகாத்யந்திக பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்தி:, மத்ப்ரஸாத₃ாதே₃வ ஸாக்ஷாத க்ருத யதா₂வஸ்தி₂த மத் ஸ்வரூப ரூப கு₃ண விபூ₄தி லீலோபகரண விஸ்தார:,**

---

படிப்பட்டதாய் நடக்கும் பரப₄க்தி பரஜ்ஞாந பரம பக்திகளுக்குத் தடைகளான முற்கூறியவை அழியப்பெற்றவராய் என்று கருத்து. இப்படி இடையூறுகள் அழிந்தவுடன் பரப₄க்தி முதலானவை தாமே உண்டாகிவிடுமோ? எனில் — (மத்₃ப்ரஸாத₃ லப்₃த₄) விரோதிகள் கழிந்த பின்பும் பரப₄க்தி பரஜ்ஞாநம் பரமப₄க்தி முதலானவை என்னுடைய கருணையாலேயே உண்டாகும் என்கிறார். அவற்றை விவரிக்கிறார் அடுத்தபடியாக—(மச்சரணாரவிந்த₃ யுக₃ள ஐகாந்திகாத்யந்திக பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்தி:) முற்கூறியபடி என் திருவடித் தாமரையிணையிலே நித்யமாய் ஒருபடிப்பட்டதான பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்திகளை உடையீராய். த்₃வய வசனத்தை வ்யாஜமாகக்கொண்டு என் கருணையாலே நான் அருளும் பேறு இதுவன்றோ என்கிறார். இதுமட்டுமல்ல, இன்னமும் உண்டு என்கிறார் மேலே. (மத் ப்ரஸாத₃ாதே₃வ ஸாக்ஷாத்க்ருத யதா₂வஸ்தி₂த மத் ஸ்வரூபரூபகு₃ண விபூ₄தி லீலோபகரண விஸ்தார:) அதற்கு மேலே வேறொரு துணையை எதிர்பாராத என் கருணையாலே நேரே காணப்பட்டதாய், உள்ளபடி இருந்துள்ள என்னுடைய ஸ்வரூபமென்ன, ரூபமென்ன, குணமென்ன, நித்ய விபூ₄தியாகிற உயர்ந்த உலகமென்ன, லீலைக்கு (விளையாட்டுக்கு) உறுப்பாயிருக்கும் இந்த விபூ₄தியென்ன இவற்றின் பரப்பையுடையவராய். விஸ்தார ஶப்₃த₃ம் ஸ்வரூபரூப குண விபூ₄திகள் மிகப் பரந்திருப்பவை என்று காட்டுகிறது; "ஸ்வரூபம் முதலானவற்றின் ஒரு பகுதியை மாத்திரம் இவர் அநுபவிக்கப்பெறுவதில்லை. முழுவதையும் அநுபவிக்கிறார் என்று விஸ்தார ஶப்₃த₃ம் காட்டுகிறது" என்று ஸுதர்சனபட்டர் உரை. ப்ரஸாத₃ாதே₃வ என்கிற ஏவகாரத்தாலே, இவர் ஸ்வரூபம் முதலானவற்றை நேரே காணும்போது எம்பெருமானுடைய அருள் தவிர வேறு துணை வேண்டியதில்லை என்று காட்டப்பெறுகிறது. அருளுக்குத் துணையாக ஒன்றுமே இல்லாமலிருக்க 'ஏவ' காரத்தாலே மற்றவற்றை வேறுபடுத்தவேண்டுமோ? எனில்— அருளைச்செய்யும் எம்பெருமானும் வேண்டியதில்லை. அருளே இதைச் செய்யும் என்று கருத்து.

அபரோக்ஷஸித்3த4 மந்நியாம்யதா மத்3த3ாஸ்யைக ஸ்வப4ாவாத்மஸ்வரூப:,

---

क. चित्स्वरूपाद्यनुभवव्युदासाय विस्तारशब्दः।

एवं नारायणशब्दार्थानुभव उक्तः। तदन्तर्गतजीवस्वरूपा-विर्भावमाह अपरोक्षेति।

---

"யத2ாவஸ்தி2த" என்று உள்ளபடி காண்பதைச் சொல்லுகிறது. உள்ளபடியல்லாமலும் காண்பதுண்டோ? எனில்—

104. ஸைஷா ப4ார்க்க3வீ வாருணீ வித்3யா।
பரமே வ்யோமந் ப்ரதிஷ்டி2தா। [தை-ப்4ருகு3-6]

[வருணனால் ப்4ருகுவுக்குச் சொல்லப்பட்ட இந்த வித்3யை பரமபத3த்தில் நிலைநிற்கிறது.] என்று உபநிஷத்திலே கா3ர்க்கி3வித்3யை என்றொரு வித்3யை உண்டு. அதில் உள்ளபடியல்லாமல் காண்பதும் விளக்கப்பட்டது. அப்படியல்லாமல் உள்ளபடி காண்கை, "உன் முயற்சியாலே வருந்திக் காண்கையே உள்ளபடியல்லாமல் காண்பது. என் அருளாலே காண்கையாலே உள்ளபடி இவற்றைக் காணக் குறையில்லை" என்னும் கருத்தாலே சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

"இதுவரையில், நாராயண ஶப்3த3த்தின் பொருள் விளக்கப்பட்டது. அந்த நாராயண ஶப்3த3த்தின் பகுதியான 'நார' ஶப்3த3த்தின் பொருளான ஜீவ ஸ்வரூபம் மோக்ஷ நிலையில் விரிவடைவதைக் கூறுகிறார் அடுத்தபடியாக" என்று ஸுத3ர்சனப4ட்டர் மேலுக்கு அவதாரிகையிடுகிறார். **(அபரோக்ஷஸித்3த4 மந்நியாம்யதா மத்3த3ாஸ்யைக ஸ்வப4ாவ ஆத்ம ஸ்வரூப:)** அபரோக்ஷ ஸித்3த4மாகையாவது:— ஶ்ரவணம் (கேட்டல்), மநநம் (சிந்தித்தல்) முதலானவற்றால் பெறும் அறிவாயிராமல் நேரே காண்பதாலுண்டாகும் அறிவாயிருக்கை. அப்படி நேரே காண்பதுதான் எதை? எனில்—**(மந்நியாம்யதா மத்3த3ாஸ்யைக ஸ்வரூப ஆத்ம ஸ்வரூப:)** என்னால் நியமிக்கப்படுபவனாய் இருக்கையையும், என்னுடைய அடிமையாய் இருக்கையையுமே இயல்

மதே₃காநுப₄வ:,

---

व्याप्तिधारणा च नियमनान्तर्गते। * "प्रशासने गार्गि * "अन्तः प्रविष्टः" इति श्रुतेः। अतः पृथगनुक्तिः। एतेन स्वाधीनप्रवृत्तित्वाद्य- शेषभ्रमव्युदासः फलितः। आत्माभिमानानुगुणपुरुषार्थानुभवमाह मदेकेति। एकशब्देन अनुभाव्यान्तरव्युदासः।

---

வாகக் கொண்ட உம்முடைய ஆத்ம ஸ்வரூபத்தை நேரே காணப் பெறுவீர் என்கிறார். "வ்யாப்தியும் த₄ரித்து நிற்கையும் நியமன ஶப்₃ த₃த்தில் அடங்கியவை" என்று ஸு₂தர்சனப₄ட்டர் உரை. இதற்கு ப்ரமாணமாக "ப்ரஶாஸநே கா₃ர்கி₃" [ப்₃ருஹ 5-8-9] [கார்க்கி₃! பரமாத்மாவின் நியமனத்தாலேயே அனைத்தும் தரித்து நிற்கிறது.] "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [தை ஆரண் யக 3-11-2] [ஸர்வாந்தர்யாமியான பரமாத்மா ஜீவர்கள் அனைவரை யும் உள் நுழைந்து நியமிக்கிறார்] என்னும் உபநிஷத் வாக்யங்களை எடுக்கிறார் ஸு₂தர்சனபட்டர். "இதனால் ஜீவன் தனக்குத்தானே செயல் படுகிறான் முதலான மயக்கங்கள் தவிர்க்கப்படுகின்றன" என்றும் அவர் உரையிட்டார். ஆத்ம ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் பிறந்தால் அந்த ஆத்மா எம்பெருமானாலேயே நியமிக்கப்படுகிறது என்பதும், அவனுக்கே அடிமைப்பட்டது என்பதும் தன்னடையே வெளிப்படு மன்றோ. "மத்₃த₃ஏஸ்யைக என்கிறவிடத்தில், ஏவகாரப் பொருளை யுடைய ஏக ஶப்₃த₃ம் திருவஷ்டாக்ஷரத்தின் முதல் பதமான ப்ரண வத்தில் முதல் அக்ஷரமான அகாரத்தின் மேலே ஏறிக்கழிந்திருக்கும் நாலாம் வேற்றுமைக்கு மேலேயுள்ள ஏகாரப் பொருளையுடைய உகா ரம் போலேயிருக்கிறது" என்பர் பெரியவாச்சான் பிள்ளை.

(மதே₃காநுப₄வ:) இப்படி ஆத்ம ஸ்வரூபத்தை நேரே கண்டால் அந்த ஆத்மாவைப் பற்றிய அநுப₄வமும் ஏற்பட்டே தீரும். தன் ஆத்மாவைத் தெளிவாகக் கண்டால், தன் ஸ்வரூபத்திலுள்ள ஜ்ஞாநா நந்தங்களோடு நில்லாமல் ஸ்வரூபத்தைப் பற்றிய உண்மையறிவும் உண்டாகுமன்றோ. ஸ்வரூபத்தைப் பற்றிய உண்மையறிவாவது— தன் ஆத்மாவிலிருக்கும் எம்பெருமானுக்கே மிகவும் அடிமைப்பட்டி

ருக்கை முதலானவற்றை அறிகையன்றோ. ஆகையாலே, கைவல்ய மோக்ஷத்திற்போல் தன் ஆத்மாவைப் பற்றிய அநுபவமேயாயிராமல் என்னைப் பற்றிய அநுபவத்தையே உடையவராய் இருப்பீர் என்று கருத்து. ஏகாரப் பொருளையுடைய 'ஏக' ஶப்தத்தாலே தன் ஆனந்தத்துக்கு உறுப்பாக அநுபவிக்கும் ஸ்வார்த்த மோக்ஷத்தைப் பெற்றவனை விலக்குகிறது. தன் ஆனந்தத்துக்காகத் தன்னை அனுபவிக்கும் கைவல்யாநுபவத்திற்கும், தன ஆனந்தத்திற்காக ஈஶ்வரனை அனுபவிக்கும் பகவதநுபவத்திற்கும் இரண்டுமே தாழ்ந்த மோக்ஷம் என்னும் அம்சத்தில் வேற்றுமையில்லை, இதனால் தேறிய பொருள் பின்வருமாறு :— தன் ஸ்வரூபத்தைக் காணும் போது "எனக்கு ஶேஷி" என்று கைங்கர்யம் கொள்பவனாக அவனைக் காணமுற்பட்டால், அந்தக் கைங்கர்யத்தால் விளையும் ஆனந்தம் தனக்கு உத்தேச்யமாகி விடும். "அவனுக்கு ஶேஷம்" என்று கைங்கர்யம் செய்பவனாகத் தன்னைக் காண முற்பட்டால் இந்தக் கைங்கர்யத்தால் எம்பெருமானுக்கு விளையும் ஆனந்தமே உத்தேச்யமாகிவிடும். இவ்விஷயத்தில் ப்ரமாணம்

70. ஏதத் ஸாம கா₃யந்நாஸ்தே। ஹா வுஹா வுஹா வு।
அஹமந்நமஹமந்நமஹமந்நம்। அஹமந்நாதோ₃ऽஹமந்நாதோ₃ऽஹமந்நாத₃:॥ [தை-ப்₄ருகு₃ 10-6]

[முக்தாத்மா (பரமாத்மாவையடைந்து) இந்த ஸாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிறான்,— ஹா வுஹா வுஹா வு: நான் (பரமாத்மாவுக்கு) அன்னமாயிருப்பவன்; அன்னமாயிருப்பவன்; அன்னமாயிருப்பவன். நான் (பரமாத்மாவின் உகப்பாகிற) அன்னத்தை பு₄ஜிப்பவன்; அன்னத்தை பு₄ஜிப்பவன்; அன்னத்தை பு₄ஜிப்பவன்.] என்னும் உபநிஷத் வாக்யமாகும். இவ்வாக்கியத்தில் "அன்னம்போல் பரமாத்மாவுக்கு இனியவனான ஜீவனைக் கண்டு பரமாத்மாவுக்கு விளையும் உகப்பே ஜீவனுக்கு உத்தேச்யம்" என்று விளக்குவதற்காக முதலில் "அஹமந்நம்" [நான் அன்னம்போல் (பரமனுக்கு) இனியவன்] என்று சொல்லப்பட்டது. ஆனால், "அசித்தான அன்னத்திற்கு அறிவு கிடையாதாகையாலே அதைப்போல் இவனும் ஆனந்தம் இல்லாதவனாய் இருக்கக்கூடாது. அப்படியிருந்தால் பரமாத்மாவுக்கு உகப்பு விளையாது" என்று காட்டுவதற்காக, அடுத்தபடி "அஹமந்நாத₃:"

மத்₃தா₃ஸ்யைக ப்ரிய:, பரிபூர்ணுநவரத நித்ய

---

विरूपमत्वनुभवसाम्यव्युदासायाह मद्दास्यैकेति । एकशब्देन स्वरूपाननुरूपत्वात्स्वार्थस्य अपुमर्थत्वमभिप्रेतम् ॥

---

[நான் பரமாத்மாவின் உகப்பாகிற அன்னத்தை உண்பவன்] என்று சொல்லப்பட்டது. சேதனன் அறிவுடையவனுகையாலே, கைங்கர்யம் செய்யும்போது அவனுக்கு உகப்பு இல்லையென்று சொல்லமுடியாது. அந்த உகப்பு இல்லையெனில் அது இவனுக்கும் பயனுகாது. பரமனுக்கும் இன்பம் உண்டாகாது. சேதனனுடைய (ஜீவனுடைய) உகப்பு பரமனுடைய உகப்புக்கு உறுப்பாய் இருக்கவேண்டும் என்று கருத்து. (**மத்₃தா₃ஸ்யைகப்ரிய:**) எனக்குக் கைங்கர்யம் செய்வதிலேயே இன்பம் காண்பவராய். எம்பெருமானை அனுபவித்தால் அந்த அனுபவத்தோடு நிற்கும்படியிராது. "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" [திருவாய் 3-3-1] என்னும் பாட்டிலே நம்மாழ்வார் இனிவரும் எல்லாக் காலத்திலும் அவனேடு கூடியிருக்கவேண்டும் என்று சொன்னபோது, கூடியிருந்து செய்யவேண்டுவது என்ன? என்னும் கேள்வியெழுந்தவளவில் "வழுவில்லாமல் அனுபவிக்கவேண்டும்" என்று சொல்லாமல், "வழுவில்லாமல் அடிமை செய்யவேண்டும்" என்றன்றே பிரார்த்தித்தார். எம்பெருமான் ஆழ்வாருக்கு மோக்ஷம் கொடுக்கவர "எம்மாவீட்டுத்திறமும் செப்பம் நின் செம்மா பாதபற்புத் தலை சேர்த்து" [திருவாய் 2-9-1] என்று, "என் ஆனந்தத்துக்கு உறுப்பாகக் கொடுத்தால் அது எவ்வளவு பெரிய மோக்ஷமாயிருந்தாலும் எனக்கு வேண்டாம்" என்று கூறி, "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" [திருவாய் 2-9-4] என்று "அவனுடைய ஆனந்தத்துக்கு உறுப்பான மோக்ஷமேதான் விரும்புவது" என்று ஆழ்வார் அருளிச்செய்தாரன்றே. "**மதே₃கானுப₄வ:**" என்று சொன்னபின் "**மத்₃தா₃ஸ்யைகப்ரிய:**" என்று சொல்லுவதால், எம்பெருமானை அனுபவிப்பதால் உண்டாகும் ஆனந்தத்தால் விளைவதே கைங்கர்யம் என்று தேறுகிறது. இங்குள்ள **ஏக** ஶப்₃த₃த்தாலும் தன் ஆனந்தத்திற்கு உறுப்பாகப் பண்ணப்படும் கைங்கர்யம விலக்கப்படுகிறது. த்₃வயத்தின் உத்தர க₂ண்ட₃த்தின் இறுதியிலுள்ள "**நம**"ஶ்ஶப்₃த₃ம் தன் ஆனந்தத்திற்கு உறுப்பாகக் கைங்கர்யம் செய்வதைக் கழித்ததன்றே. (**பரிபூர்ணுநவரத நித்யவிஶத₃தம**

**விஶத3தமாநந்யப்ரயோஜநாநவதி4காதிஶய ப்ரிய மத3நுப4வஸ் த்வம் தத2ாவித4 மத3நுப4வ ஜநிதாநவதி4காதிஶய ப்ரீதிகாரிதா ஶேஷாவஸ்தே2ாசிதா-ஶேஷ ஶேஷதைகரதிரூப நித்ய கிங்கரோ ப4வ ||**

---

**அநந்ய ப்ரயோஜந அநவதி4காதிஶய ப்ரிய மத3நுப4வஸ்த்வம்)** நிறைந்ததாய், சணமும் இடைவிடாதே நித்யமாய், நேரே காண்பதுபோலே மிகத் தெளிவானதாய், வேறு பயன் கருதாததாய், 'பிரமன் முதலான தேவர்களின் பெருமையும் ஒன்றல்ல' என்று சொல்லும்படி மிகச்சிறந்த ஆனந்தத்தை விளைப்பதான என்னுடைய அநுபவத்தையே உடையவராகிறீர் என்று கருத்து. **(தத2ாவித4 மத3நுப4வஜநித அநவதி4காதிஶய ப்ரீதிகாரித)** அப்படிப்பட்ட என்னுடைய அனுபவத்தாலுண்டான எல்லையற்ற மேன்மையையுடைய ப்ரீதியினாலே செய்விக்கப்பட்ட. இது அடுத்தபடி சொல்லப்படும் கைங்கர்யத்துக்கு விஶேஷணமாகிறது. **(அஶேஷாவஸ்தே2ாசித அஶேஷ ஶேஷதைகரதிரூப நித்ய கிங்கரோ ப4வ)** எல்லா நிலைகளிலும் அனுகூலமாய், எல்லா அடிமைகளிலும் உண்டான பேரார்வத்தையே வடிவாக உடையீராய்க்கொண்டு, ஆத்மாவுள்ள வரையில், அதாவது எப்போதுமே அனுபவிக்கத்தக்க கைங்கர்யத்தைப் பெற்று அனுபவிக்கக் கடவீர்.

**பதினெட்டாவது சூர்ணை வ்யாக்யானம் : (ஏவம்பூ4தோऽஸி)** நீர் இப்படிப்பட்டவராக ஆகிவிட்டீர். "என்னை அடைவதற்கு உபாயமாகச் சொல்லப்பட்ட உபாஸனத்திற்கு அங்கமாய் இருக்கும் வர்ணாஶ்ரமத்திற்குத்தக்க ஒழுக்கம் முதலானவை இல்லாதவராய் இருந்தீரேயாகிலும், அந்த அங்கத்துக்குத் தடையான அளவற்ற பாவங்களோடு கூடியிருந்தீரேயாகிலும், என் விஷயமான அளவற்ற அபசாரத்தையுடையீராயிருந்தீரேயாகிலும், என் அடியார்கள் விஷயமான அளவற்ற அபசாரத்தையுடையீராய் இருந்தீரேயாகிலும், அளவற்ற அஸஹ்யாபசாரத்தை உடையீராயிருந்தீரேயாகிலும், இதற்குக் காரணமாய் அநாதி காலமாய் உண்டான விபரீத அஹங்காரத்தால் மறைக்கப்பட்ட ஆத்ம ஸ்வரூபத்தை உடையீராயிருந்தீரேயாகிலும், இவ்விரண்டுக்கும் காரணமான அநாதி3 விபரீத வாஸனையால் நெருக்குண்டிருந்தீரேயாகிலும், இதற்குக் காரணமான ப்ரக்ருதி

18. ஏவம்பூ₄தோஸி ॥

१८. तत्कदेत्यत्राह एवंभूतोऽसीति। कदेति त्वरा तव यदा स्यात्, तदा त्वमीदृगवस्थोऽसि, अहं हि तव महालम्ब इत्यर्थः।

ஸம்பந்தத்தோடு கூடியிருந்தீரேயாகிலும், இதற்குக் காரணமான ஆத்₄யாத்மிகம் முதலான தாபங்களால் விளைந்த இன்ப துன்பங்கள், இவற்றுக்குக் காரணமான பலவிதமான விஷயானுபவங்கள, இவற்றினுடைய அனுபவத்தாலுண்டான எம்பெருமானைப் பற்றிய அறிவில்லாமையாகிற (பரபக்தி முதலானவற்றுக்குத்) தடைகளாலே கிட்டத்தட்ட ஆத்மநாசம் அடைந்தவராய் இருந்தீரேயாகிலும், ஏதேனும் ஒருவகையாலே த்₃வயாநுஸந்த₄ானம் பண்ணுவீரானால், வேறு துணையை எதிர்பாராத என்னுடைய கருணையாலே என் திருவடிகளைப் பற்றிய பரப₄க்தி முதலானவற்றுக்குத் தடையாய் இருப்பவையெல்லாம் காரணங்களோடு அடியோடு அழியப்பெற்று, என் திருவடிகளிலேயே பரப₄க்தி முதலானவை உண்டாகப்பெற்று, என்னுடைய ஸ்வரூபம் முதலானவை முழுவதையும் உள்ளபடி நேரே காணப்பெற்று, என்னால் நியமிக்கப்பெறுகை முதலானவற்றையே இயல்வாகவுடைய ஆத்மாவையும் நேரே கண்டு, என்னையே அனுபவிப்பவராய், என் அடிமையிலேயே இனிமை காண்பவராய், ப₄க₃வத₃நுப₄வத்தையே எல்லா அன்புக்கும் இலக்காக்கி, அப்படிப்பட்ட ப₄க₃வத₃நுப₄வத்திலுண்டான எல்லையற்ற ப்ரீதியாலே செய்விக்கப்பட்ட, எல்லா நிலைகளுக்கும் உசிதமான, எல்லாவிதமான, கைங்கர்யமே வாழ்க்கை முறையாகக்கொண்டவராய் ஆகக் கடவீர்'' என்று பெரியபெருமாள் அருளிச்செய்தவுடன், இவையனைத்துக்கும் காரணம் என்ன? என்று ஆராய்ந்தார். ''த்₃வயவக்தா'' என்று த்வயத்தை வாயாலே சொன்னதே காரணமாய் இருந்தது. இது எப்படி நிகழ்ந்தது? என்று வியப்புற்று வினவினர். (ஏவம்பூ₄தோஸி) இப்படி ஆனவராக நீர் ஆகிவிட்டீர் என்கிறார் பெரியபெருமாள்.

## 19. ஆத்₄யாத்மிகாதி₄பௌ₄திகாதி₄தை₃விக து₃:க்க₃-விக்₄நக₃ந்த₄ ரஹிதஸ்த்வம்

---

१९ शरीरपातावधिकाल्पकालः एवं विनोदेन नेय इत्याह आध्यात्मिकेति । दुःखरूपो विघ्नः ।

---

**பத்தொன்பதாவது சூர்ணை அவதாரிகை :** சென்ற சூர்ணையில் **ஏவம்பூ₄தோऽஸி** [நீர் இப்படிப்பட்டவராய் ஏற்கனவே இருக்கிறீர்] என்றதால், "த்₃வயத்தை உச்சரித்ததால் மாத்திரம் எல்லாம் உமக்கு உண்டாகக்கடவது என்று நான் சொல்லி உமக்கு உண்டாகவேண்டும்படியோ இருக்கிறது? ஏற்கனவே உமக்குக் குறைவற எல்லாம் உண்டாகியன்றோ இருக்கிறது. இந்த சரீரத்தோடே பரமபதத்திலுள்ளவர்களைப்போலே நமக்கு அடிமை செய்யும் பெருமையைப் பெற்றிருக்கிறீரே நீர்" என்று பெரிய பெருமாள் திருவுள்ளமாக, அதற்கு எம்பெருமானார், "மூவகைத் தாபங்களையும் விளைக்கும் ப்ராக்ருத ஶரீர ஸம்பந்தம் எனக்கு உள்ளது. இந்த ஶரீரம் எப்போது முடியப் போகிறது என்பதையும் அடியேன் அறிகின்றிலேன். இந்த ஶரீரத்தோடே இருக்கும் காலத்தில் எப்படிப் பொழுது போக்குவது என்பதையும் அறிகின்றிலேன். அதுவரை எங்கே வாழ்வது என்பதையும் அறிகின்றிலேன். இப்படியிருக்கும்போது 'எல்லாம் உமக்குக் குறைவற ஏற்கனவே உண்டாகியிருக்கிறது' என்று (சென்ற சூர்ணையில்) நீர் அருளிச்செய்தது என் உகப்புக்காகச் சொன்ன வாக்கியம் போலே உள்ளது" என்று எம்பெருமானார் பதிலுரைக்க, "உமக்கு இவ்விஷயங்களில் ஐயமிருந்ததால் இவைகளை நாம் நடத்தும் வழிகளைக் கேளீர்" என்கிறார் பெரியபெருமாள்.

வ்யா :— (ஆத்₄யாத்மிக ஆதி₄பௌ₄திக ஆதி₄தை₃விகது₃:க்க₃ விக்₄நக₃ந்த₄ரஹித:) ஆத்₄யாத்மிகம் ஆதி₄பௌ₄திகம் ஆதி₄தை₃விகம் என்னும் மூன்று வகைப்பட்ட தாபங்களால் வரும் துன்பங்களாகிற இடையூறுகளின் வாஸனையும் இல்லாதவராய். இந்த ஶரீரத்தோடே இருக்கும்போதே மூவகைப்பட்ட தாபங்களால் வரும் துன்பத்தின் வாஸனையும் இல்லாமல் வாழ முடியுமோ? எனில்—**(த்வம்)** நீரல்லீரோ? இவ்வுலகில் மற்ற அனைவரைக் காட்டிலும் சிறப்புற்றவரான நீர் அப்

**த்₃வயம் அர்த்த₂ாநுஸந்த₄ாநேந ஸஹ ஸதை₃வம் வக்தா**

படி வாழ்வதற்கு என்ன குறை? நீர் ஏற்கனவே அப்படி ஆகியிருக்கி றீர் என்று நான் சொல்லும்படியான பெருமையுடையரல்லீரோ நீர். அதாவது—"எம்பெருமானை அடையும் காலம் நெருங்கி வருகிறது. நம்முடைய கர்மம் அழிந்து வருகிறது. கர்மம் கழியக்கழியப் பேறு அருகில் வந்து விட்டது' என்று இந்த ஶரீரம் முடிந்தவுடன் பெறு கிற பேற்றை நினைத்து, தாபத்ரயங்களால் வரும் துன்பங்களைப் பொருட்படுத்தாமல் வாழ்வீர்" என்று கருத்து. இப்போது துன்புறு வது எதைப்போலே என்றால்—மறுநாள் பட்டாபிஷேகம் செய்து கொண்டு அரசனாகப் பேறு பெறவிருக்கிறவன் அதற்கு முதல் நாள் அபிஷேகத்திற்கு உறுப்பாக உபவாஸம் (பட்டினி) இருந்து துன்புறு வது போன்றது என்று கருத்து. 'அப்படியேயானாலும் இந்த ஶரீரத் தோடே இருக்கும் சில நாட்களுக்கு நான் பொழுது போக்குவது எப் படி?' என்று எம்பெருமானார் திருவுள்ளமாக அருளிச்செய்கிறார் (**த்₃வயம் அர்த்த₂ாநுஸந்த₄ாநேந ஸஹ**) த்₃வய மஹா மந்திரத்தின் பொருளை அநுஸந்தித்துக்கொண்டு அதுவே பொது போக்காக இருப் பீர். "நாட்டாரோடு இயல்வொழிந்து" [திருவாய் 10-6-2] என்று இந்த ஸம்ஸாரத்திலுள்ள மற்றவரைக் காட்டிலும் சிறப்புற்றவனாய், கைங் கர்ய ப்ரார்த்தனையே செய்பவனாகையாலே, கைங்கர்யம் கைக்கெட் டும் தூரத்தில் இருக்கப் பெற்றவனாய், "நாரணனை நண்ணினம்" [திருவாய் 10-6-2] என்கிறபடியே எம்பெருமானிடம் தன்னுடைய பொறுப்பை ஒப்படைத்திருக்கும் அதி₄காரிக்கு த்₃வயத்தின் அர்த் த₂த்தை அநுஸந்திப்பதன்றோ போது போக்குத் துணையாயிருக்கும். பதினேழாவது சூர்ணையில் "**யேந கேநாऽபீ ப்ரகாரேண த்₃வய வக்தா**" என்று ஏதாவதொரு வகையில் த்₃வயத்தைச் சொல்லுபவர் என்று இவரைப் பற்றி அருளிச்செய்தார். இங்கு "**த்₃வயம் அர்த் த₂ாநுஸந்த₄ாநேந ஸஹ ஸதை₃வம் வக்தா**" என்று த்₃வயத்தை அர்த்த₂த்தோடு அநுஸந்தித்துக்கொண்டு எப்போதும் இருக்கவேண்டும் என்று இவரைப் பற்றியே கூறுகிறார். இந்த வேறுபாட்டுக்குக் கருத்து என்ன? எனில்- எம்பெருமான் இவருக்கு அருள்புரிவதற்கு அவனு டைய கருணையே உபாயமாகையாலே, அந்நிலையில் த்₃வயத்தை வாயால் சொன்னால் போதும் என்றும், போது போக்கும்போது த்₃வயத்தின் அர்த்த₂த்தையும் அநுஸந்திக்கவேண்டும் என்றும் இவ் விரண்டு தொடர்களும் காட்டுகின்றன.

तत्र सङ्ग्रहित्वे हेतुमाह द्वयमिति । सदैवमिति — क्षणमात्रं द्वयार्थानुसन्धानाभावे सति तापत्रयस्यावकाशः स्यात् । अत एव निरन्तरानुसन्धानेन तद्विरहः कार्यं इति भावः । उपायत्वे द्वयोक्तिरेवालमिति कृत्वा "वक्तारं मां तारय" इत्युक्तम् । अत्र तु अर्थानुसन्धानं भोगरूपत्वेनोक्तम् ।

---

**(ஸதை₃வம் வக்தா)** எப்போதும் இப்படிச் சொல்லுபவராய். **(ஏவம் வக்தா) 'ஏவம் வக்தா'** என்றது இப்படி அர்த்தா₂நுஸந்தா₄நத்தோடு த்₃வயத்தைச் சொல்லுவதைக் குறிக்கிறது. அதாவது— கீழே ஐந்தாவது சூர்ணையில் தாம் ஒரு வகையால் ஶரணம் புகுந்தார். ஆறாவது சூர்ணை தொடங்கி முன்புள்ளார் ஶரணம் புகுந்த வகையிலும், இதிஹாஸ புராண ப்ரக்ரியையாலுமாக மூன்று வகையாகச் சரணம் புகுந்தார். இங்கு பூர்வர்கள் சரணம் புகுந்த வகையிலும், இதிஹாஸ புராண ப்ரக்ரியையிலும் அல்லாமல், இந்த க₃த்₃யத்தில் சொன்ன படியே த்₃வய மந்த்ரத்தைக் கொண்டு ஶரணம் புகுவதைக் கூறுகிறார். இப்படிப் பலமுறை ஶரணமடையலாமோ? எனில்—இப்படி ஒருமுறை யல்லாமல் பலமுறை ஶரணம் புகுந்தாலும் எம்பெருமானையே தஞ்சமாக அடைவதொழிய வேறு புகலில்லையே இவருக்கு. இப்படிப் பல முறை சரணம் புகுவதும் அவனுடைய அருள் கிடைப்பதற்காகவன்றோ. உபாயமாக இருக்கும் அந்த அருள் த்₃வய மந்த்ரத்தைச் சொல்லிச் சரணமடையும் இதிலே கிடைக்கையாலே, "இப்படி த்₃வயத்தைச் சொல்லுபவராய்" என்கிறார். **(வக்தா)** மனத்தாலே அநுஸந்தித்து ஶரணம் புகவேண்டும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை. நம்முடைய அநுபவம் வழிந்து நம்முடைய வாயாலே சொன்னாலும் போதும் என்கிறார். அப்படியல்லாமல், **"ஏவம் வக்தா த்₃வயம் அர்த்தா₂நுஸந்தா₄நேந ஸஹ"** என்று கூட்டி, "இந்த க₃த்₃யத்தை அநுஸந்தித்தீரேயாகில், த்₃வயத்தின் அர்த்த₂த்தையும் அநுஸந்தித்தவர் ஆகிறீர். க₃த்₃யத்தின் பொருளும் த்₃வயத்தின் பொருளும் ஒன்றாகவன்றோ இருக்கிறது" என்றும் பொருள் கொள்ளலாம். ஆனால் ஒருமுறை அநுஸந்தித்தால் போதுமோ? எனில்—**(ஸதா₃)** எப்போதும் அநுஸந்திக்கவேண்டும். எப்போதும் அநுஸந்திக்க வேண்டிய அவசியம் என்ன? எனில்—

**யாவச்சரீரபாதம்**

---

மற்ற உபாயங்களும், மற்ற உபேயங்களும் நிறைந்து கிடக்கும் இவ்வுலக வாழ்க்கையில், அவை நெஞ்சில் புகுந்து விடாமைக்காக, எப்போதும் இதை அநுஸந்திக்க வேண்டும் என்கிறது. இப்படியல்லாமல், **"ஸதா"** என்பதற்குப் பின்வருமாறு வேறொரு கருத்தும் உரைக்கலாம்:— "இந்த அதிகாரிக்கு ப்ரக்ருதியின் தொடர்பும், எம்பெருமானுடைய தொடர்பும் இரண்டும் கலந்திருக்கையாலே, ப்ரக்ருதியின் தொடர்பு ஶப்தாதி விஷயங்களிலே மூட்டும். எம்பெருமானுடைய தொடர்பு ஸ்வரூபத்துக்குப் பொருத்தமான கைங்கர்யத்திலே மூட்டும். இப்படியிருக்கும்போது இவர் ஶப்தாதி விஷயங்களுக்கு அஞ்சி பகவத் விஷயத்தைப் பற்றினவரா கையாலே, ஶப்தாதி விஷயங்களிலே பற்றற்றவர் ஆகிவிட்டார். கைங்கர்யமோவென்றால் பரமபதம் சென்றபின்பு கிடைப்பதாகையாலே, மிகவும் தூரத்திலிருந்தது. இனி, இங்கிருக்கும் நாளுக்கு த்வயத்தை அர்த்தத்துடன் அனுஸந்திப்பதே போது போக்காக இருக்கையால், இங்கிருக்கும் நாள் முழுவதும் அநுஸந்திக்கவேண்டும்" என்று கூறுவதாகவும் கொள்ளலாம்.

ஆனாலும், இங்கிருக்கும் காலத்திற்கு எல்லை எது? என்னும் கேள்வியெழ, **(யாவச்சரீரபாதம்)** என்கிறார். அதாவது— "இந்த ஶரீரம் விழும் வரையில்" என்று பொருள். இவர் பக்தி போன்ற மற்றொரு உபாயத்தைப் பற்றி நின்று, அது எப்போது முடியும்? என்று கேட்பவருமல்லர். அல்லது அந்த உபாஸனம் முடிந்தபிறகு,

> **106. ப்ராயஶ: பாபகாரித்வாத் ம்ருத்யோருத்விஜதே ஜந: ।**
> **க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்॥**
>
> **[இதிஹாஸஸமுச்சயம் 7-38]**

[பெரும்பாலும், பாபம் செய்பவனாயிருப்பதாலேயே மனிதன் மரணத்தைக் கண்டு பயப்படுகிறான். செய்யவேண்டியதைச் செய்தவர்கள் மரணத்தை இனியவனான விருந்தாளியைப்போலே எதிர்பார்க்கிறார்கள்.] என்று முடிவுக் காலத்தை எதிர்பார்த்திருக்க வேண்டும்படியான கர்மத்தின் இறுதிக் காலத்தைப் பற்றி ஐயமுற்றுக் கேட்பவருமல்லர். இவருக்கு மற்ற உபாயங்களில் தொடர்பில்லை. அதில்லாமல் இருப்

அத்ரைவ ஸ்ரீரங்கே3 ஸுக2மாஸ்ஸ்வ ॥

"अत्रैव" इत्युपलक्षणम् । भगवदभिमानतदीयसम्बन्धवद्देशो-ष्वित्यर्थः । यावच्छरीरपातमिति-कियानयं काल इति भावः ॥

பவர்களுக்கு எப்போது இறுதிக்காலம் என்று ஐயமுறவேண்டாதபடி பரமாசார்யரான நம்மாழ்வார் "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" [திருவாய் 9-10-5] என்று மரணமாகும் காலத்தையே இறுதிக்காலமாக நிர்ணயித்திருக்கிறார். அப்படியிருக்கும்போது, இறுதிக் காலம் எது? என்னும் இவருடைய கேள்விக்குக் கருத்தென்ன? எனில்—எம்பெருமானை விரைவில் அடையவேண்டும் என்னும் வேகத்தாலும், "எந்நாள் யான் உன்னை இனி வந்து கூடுவனே" [திருவாய் 3-2-1] "கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ?" [திருவாய் 6-9-9] என்கிறபடியே காலம் நெடுகித் தோற்றுகையாலும், இவர் பற்றிய உபாயமாகிற எம்பெருமான் எக்குறையுமில்லாமையாலே காலதாமதம் செய்யக் கூடியவனல்லாமையாலும் இப்படிக் கேட்கிறார். "நமக்கு ருசியும் உண்டாயிருந்தது; பற்றிய உபாயமும் குறையற்றதாயிருந்தது. இப்படியிருந்தும் நாம் இங்கு இருப்பதற்குக் காரணம் எம்பெருமானுடைய நினைவேயாய் இருக்கவேண்டும்" என்று எண்ணி அவனையே நிர்ப்பந்தித்துக் கேட்கிறார்; (அதற்கு நம்பெருமாள் பதிலருளிச்செய்கிறார்—(யாவச்சரீரபாதம்) "இச்சரீரம் இருக்கும் வரையிலேயே காலதாமதம். உபாஸகனுக்குப் போலே ப்ராரப்3த4 கர்மம் முடியும் வரையில் பல பிறப்புக்கள் காலதாமதம் இல்லை. இந்தப் பிறப்புக்குரிய கர்மம் முடியும் வரையிலேயே பார்த்திருக்கவேண்டும். அதுவும் நாளுக்கு நாள் குறைந்தே வருகிறது. ஆகையால் அல்ப காலமே எஞ்சி உள்ளது" என்று பெரியபெருமாள் பதில் சொல்ல, அதற்கு எம்பெருமானார், "ஆயினும் 'இருள்தருமா ஞாலம்' [திருவாய் 10-6-1] எனப்படும் இவ்வுலகில் இருப்பது எனக்குப் பொறுக்கவொண்ணாததாய் உள்ளது. சிலகாலம் இருக்கும்படி திருவுள்ளம் பற்றிய தேவரீரே நான் இருக்கவேண்டிய இடத்தையும் அருளிச்செய்ய வேண்டும்" என்று கேட்க, பெரியபெருமாள் பதில் அருளுகிறார். **(அத்ரைவ ஸ்ரீரங்கே3ஸுக2மாஸ்ஸ்வ)** எப்போதும் என்னைப் பற்றிய அநுப4வ கைங்கர்யங்கள் நடந்து செல்லுகையாலே ஸம்ஸார மண்ட3

**20.** ஶரீரபாதஸமயே து கேவலம் மதீ₃யயைவ த₃யயா அதிப்ரபு₃த்₃த₄:

---

२०. शरीरेति । केवलं — मय्यकिञ्चित्करेऽपीति भावः । दययैवेति — एवकारः पुष्कलत्वद्योतकः । अतिप्रबुद्धः — जीवद्दशायां प्रबोधः अन्धतमस्स्थानीय इति भावः । परमात्मनि विश्रमानन्तरं भाव्ययं प्रबोधः । ततः प्राक्तनं स्मरणं अन्तिमं उपासकानामपेक्षितम् । प्रपन्नं तु काष्ठपाषाणसन्निभं भगवानेव स्मरति । स्वस्मिन् विश्रमानन्तरं प्रबोधश्च जनयति । * "तेन प्रद्योतेनैष आत्मा निष्क्रामति" इति हि श्रूयते । अतस्तदा बोधसिद्धिः ।

---

லத்திலும் சேராமல், துன்பங்கள் தொடர்ந்து வருகையாலே நித்ய விபூ₄தியாகிற பரமபதத்திலும் சேராமல், இரண்டிலும் வேறுபட்டதாய் மூன்றும் விபூ₄தி என்னலாம்படியிருக்கும் திருவரங்கம் பெரிய கோயிலிலே இனிது வாழ்வீராக. இந்த லீலாவிபூதியிலுள்ள ஸம்ஸாரிகளோடும், நித்ய விபூ₄தியிலுள்ள நித்ய முக்தர்களோடும் சேராமல் இருவரிலும் வேறுபட்டிருக்கும் உமக்குப் பொருத்தமான வாழ்விடம் இத்திருவரங்கமேயன்றோ. விரோதியான இவ்வுடம்போடே கூடியிருந்த போதிலும், என்னை அநுப₄விக்கும் பேறு பெற்ற உமக்கு இந்த இரண்டு விபூ₄தியிலுள்ளவர்களும் ஒப்பாகமாட்டார்கள். அதுபோலவே பரமபதத்தையும் பொருட்படுத்தாமல் நாம் நிரந்தரவாஸம் செய்யும் இத்திருவரங்கத்திற்கு உப₄யவிபூ₄தியும் ஒப்பாகமாட்டாது. (ஸுகம் மாஸ்ஸ்வ) ஏறக்குறைய முக்தரோடு ஒத்தவராகையாலே, நீர் இனிது வாழத் தட்டில்லையன்றோ. "**அத்ரைவ ஸ்ரீரங்கே₃** என்று திருவரங்கத்தைச் சொன்னது எம்பெருமான் உகந்தருளின நிலங்களுக்கும், அவனடியார்களோடு தொடர்புடைய தேசங்களுக்கும் உபலக்ஷணம்" என்று ஸுதர்சனப₄ட்டர் வ்யாக்யானம்.

**இருபதாவது சூர்ணை அவதாரிகை :—** "ஏவம் பூ₄தோ஽ஸி" என்னும் பதினெட்டாவது சூர்ணையிலும், "**ஆத்₄யாத்மிக**" என்று தொடங்கும் பத்தொன்பதாவது சூர்ணையிலும் இந்த சரீரத்தை விட்ட

பிறகு பெறும் பேற்றையும், இங்கு இருக்கும் நாள் போது போக்கும் முறையையும் அருளிச்செய்தார். இனிவரும் சூர்ணைகளாலே இந்த அதி₄காரிக்கு சரீரம் விடும்போது அந்திமஸ்ம்ருதி எனப்படும் மரண சமயத்தில் தன்னை (எம்பெருமானை) நினைத்தலையும் எதிர்பாராமல் தான் செய்யும் சிறப்புக்களை அருளிச்செய்கிறார்.

வ்யா :— **(ஶரீரபாத ஸமயே து கேவலம் மதீ₃யயைவ த₃யயா அதிப்ரபு₃த்₃த₄:)** இச்சரீரம் விழும்போது மற்றுள்ளாரைக்காட்டிலும் உமக்கு நான் செய்வதொரு சிறப்புண்டு. அதுதான் ஏது? என்னில்— **(அதிப்ரபு₃த்₃த₄:)** மரணத்திற்கு முன்னால் ஆரோக்யமாயிருக்கும் நிலையைக் காட்டிலும், சிறந்த ஜ்ஞானமுடையவர் ஆவீர். அதற்குக் காரணம் என்ன? எனில் **(கேவலம் மதீ₃யயைவ த₃யயா)** 'கேவல' ஶப₃த₃ம் இந்த ஜ்ஞானச் சிறப்புக்குக் கர்மம் முதலாக இடைபாடு ஒன்றுமில்லை என்று காட்டுகிறது என்றும், "த₃யயா ஏவ" என்னும் ஏவகாரம் இந்தக் கருணையின் நிறைவைக் காட்டுகிறது என்றும், "அதிப்ரபு₃த்₃த₄:" என்னும் பதம் உயிர் வாழும்போது இருந்த அறிவு இந்தச் சிறந்த அறிவோடு ஒப்பிடும்போது காரிருளை ஒக்கும் என்றும் ஸுத₃ர்சனபட்டர் உரையிட்டார். மேலும், "இந்த ஜ்ஞானச் சிறப்பு மரணகாலத்தில் ஜீவாத்மா பரமாத்மாவுடன் சேர்ந்த பிறகு விளைவது; அதற்கு முன்பே உபாஸனத்தின் இறுதியில் உபாஸகர்களுக்கு அவசியமான அந்திமஸ்ம்ருதி விளைகிறது. அந்த நிலையில் கல்லையும் கட்டையையும் போலே இருக்கும் ப்ரபன்னனை வராஹ சரம ஶ்லோகத்தில் சொன்னது போலே எம்பெருமானே நினைக்கிறான். தன்னிடம் ஜீவன் சேர்ந்தபிறகு இந்த ஜ்ஞானச் சிறப்பையும், அவனுக்கு உண்டாக்குகிறான். **'தேந ப்ரத்₃யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி'** [ப்₃ருஹ 6-4-2] [அந்த உபாஸக ஜீவனுடைய இருப்பிடமான ஹ்ருத₃யமானது, எதிரில் நாடீ₃ த்₃வாரமிருக்குமிடத்தில் இருள் நீங்கி உடனே பிரகாசிக்கின்றது. இவ்வண்ணமாக எம்பெருமானுடைய அருளால் ஒளிவிடும் த்₃வாரத்தைக்கண்டு ப்₃ரஹ்ம ஜ்ஞானியானவன் மிக நுண்ணியதாயிருக்கும் நாடிகளின் மத்தியில் நூற்றொராவதான அந்த ஸுஷும்னா நாடீ₃யை அறிந்து அதன் வழியாகத் தானே வெளிக் கிளம்புகிறான்.] என்றல்லவோ உபநிஷத்₃ வாக்யம் ஓதுகிறது. ஆகையால் பரமாத்மாவோடு சேர்ந்த பிறகேயன்றோ ஜ்ஞானச் சிறப்பு உண்டாகிறது" என்றும் உரையிட்டார். (கேவலம்)

**மாமேவாவலோகயந் அப்ரச்யுத பூர்வ ஸம்ஸ்கார மனோரத$_2$:,**

---

**मां — स्वरूपरूपगुणविभवान्वितम् । एवेति विषयान्तरकालुष्य-विरह उक्तः । अवलोकयन् — साक्षात्कुर्वन् । अप्रच्युतेति — गुरूपदेशादिजन्यसंस्कारः, भगवत्प्राप्तीच्छा च अप्रच्युते यस्य स तथोक्तः ।**

---

இது உம்மிடத்தில் நாம் ஏற்கனவே செய்த கருணையால் வந்ததல்ல, அதைக் காட்டிலும் வேறுபட்டதாய் இப்போது உண்டானது. 'கர்ம யோகம் காரணமாக ஜ்ஞானயோகம் உண்டாகிறது. இந்த ஜ்ஞான யோகத்தால் ப$_4$க்தி உண்டாகிறது. அதிலிருந்து பரப$_4$க்தி உண்டாகிறது' என்னும் இடங்களிற்போலே ஒரு காரணத்தால் வந்ததல்ல இந்த ஜ்ஞானச் சிறப்பு. நிர்ஹேதுகமாக (ஒரு காரணமுமில்லாமல்) என்னுடைய கருணையாலேயே இப்போது உண்டாயிற்று. பதினேழாவது சூர்ணையில், **"கேவலம் மதீ$_3$யயைவ த$_3$யயா நிஸ்ஸேஷ விநஷ்ட ஸஹேதுக"** என்று சொல்லியிருக்கும்போது இங்கேயும் **"கேவலம் மதீ$_3$யயைவ த$_3$யயா அதி ப்ரபு$_3$த்$_3$த$_4$:"** என்று சொல்ல வேண்டுமோ? எனில்—அங்கு இவரைக் கடாக்ஷிக்கும்போது நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்ததைச் சொல்லிற்று. இங்கு கடாக்ஷித்த பின்பு மரணமடையும் சமயத்தில் ஜ்ஞானச் சிறப்பையளிப்பது நிர்ஹேதுகம் என்று சொல்லப்படுகிறது. "விஷயீகரிக்கும் த$_3$சையோடு, விஷயீகரித்த த$_3$சையோடு, விரோதி$_4$போக்கும் த$_3$சையோடு, அநுகூலங்களை உண்டாக்கும் த$_3$சையோடு வாசியற எல்லா தசைகளிலும் இவனுக்குப் பரிகரமாயுள்ளது வெறுமை; கார்யம் செய்கைக்கு அடி அவன் ப்ரஸாத$_3$மே என்றதாயிற்று" என்று பெரியவாச்சான்பிள்ளை இங்கு அருளியுள்ள ஸ்ரீஸூக்தி எம்பெருமானுடைய அருள் ஸஹேதுகம் என்பவர்களுடைய துர்வாதத்தை அடியோடு நிர்மூலமாக்குகிறது என்பது குறிக்கொள்ளத்தக்கது. "ப்ரபு$_3$த்$_3$த$_4$:" என்றாலே போதுமாயிருக்க, **"அதிப்ரபு$_3$த்$_3$த$_4$:"** என்றது 'இதற்கு முன்னிருந்த நிலைகளில் ஜ்ஞானத்தைக் காட்டிலும் இப்போதுள்ள நிலையிலுள்ள ஜ்ஞானத்திற்குச் சிறப்புண்டு' என்று தெரிவிப்பதற்காக. அந்தச் சிறப்பு என்ன? எனில்—**(மாமேவ அவலோகயந்)** என்னையே காண்பவராய்; இதுவே இதற்கு உள்ள சிறப்பு. முன்னிருந்த அறிவுகள் ஒரு பக்கம் சரீரத்தையும் ஒரு பக்கம் பகவத் விஷயத்தையும் ஆக இரண்டையும்

**ஜீர்ணமிவ வஸ்த்ரம் ஸுகேந இமாம் ப்ரக்ருதிம் ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபாம் விஸ்ருஜ்ய,**

அநுபவிப்பதாய் இருக்கும். இப்போது இவர் கையில் எதையும் எதிர்பாராமல், எம்பெருமானுடைய அருளே காரணமாக வந்த அறிவாகையாலே, அவன் ஒருவனையே அனுபவிப்பதாய் இருக்கும் என்று கருத்து. அதுக்குமேலே (**அப்ரச்யுத பூர்வ ஸம்ஸ்கார மநோரத:**) முன்னிருந்த ஸம்ஸ்காரத்திற்கு நழுவுதல் இல்லாத மநோரதத்தை (**பாரிப்பை**) உடையவராய். அதாவது—எம்பெருமானை ஆஶ்ரயித்து அதற்குப் பிறகு வேறு விஷயங்களில் ஈடுபட்டு மிகுந்த அபசாரங்களைப் பண்ணி மரணமடையும்காலம் வந்தவுடன், "நாமோ மரணமடையப்போகிறோம். நம்மைப்பற்றி எம்பெருமான் என்ன நினைத்திருக்கிறானே! நாம் அடுத்தபடி என்ன ஆகப்போகிறோமோ! இதற்கு நம்மால் செய்யக்கூடியது ஏதேனும் உண்டோ?" என்று கலங்காமல், எம்பெருமானுடைய அருளாலே பிறந்த ஆசார்ய ஸம்பந்தம், அந்த ஸம்பந்தத்தாலே பெற்ற உபதேசம், அதற்குப்பின் அதன் விளைவாக எம்பெருமானை ஆஶ்ரயித்தது, அப்படி ஆஶ்ரயித்ததற்குப் பின்பு எம்பெருமான் விஷயத்தில் உண்டான உறுதி, அதற்குப்பின் எம்பெருமான் விளைத்த பல பக்குவங்கள் ஆகியவற்றை அநுஸந்தித்துக்கொண்டு, "கீழ் நின்ற நிலை இது; மேலே விளையவேண்டிய பக்குவங்களையும் உண்டாக்கி எம்பெருமான் பேற்றையும் தருவதற்கு ஒரு குறையுமில்லை" என்ற ஸம்ஸ்காரத்திற்கு நழுவுதலில்லாத, உயர்ந்த மநோரதத்தை உடையவராய்க் கொண்டு என்று இத்தொடருக்குப் பொருள்.

(**ஜீர்ணமிவ வஸ்த்ரம் ஸுகேந இமாம் ப்ரக்ருதிம் ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபாம் விஸ்ருஜ்ய**) மூலப்ரக்ருதியின் விகாரமான ஸ்தூல சரீரத்தையும் ஸூக்ஷ்ம சரீரத்தையும், கிழிந்த வஸ்த்ரத்தைக் கைவிடுவதுபோலே ஸுகமாகக் கைவிட்டு; கிழிந்தாய் அழுக்கடைந்த வஸ்த்ரத்தைக் கைவிடும்போது, அருவருப்புடன் கைவிடுவது போலே, மாம்ஸம், ரத்தம் முதலானவற்றாலான இந்தச் சரீரத்தைக் கைவிடும்போது அருவருப்பு உண்டாகும் என்று ஜீர்ணவஸ்த்ரத்தை த்ருஷ்டாந்தமாகக் காட்டியதிலிருந்து தெரிகிறது. வஸ்த்ரத்துக்கும் உடம்புக்கும் உள்ள தொடர்பு போலவே ஆத்மாவுக்கும் உடம்புக்கும் உள்ள தொடர்பு நிலையில்லாதது. ஆகையால் 'ஸுகமாகக் கைவிட்டு' என்கிறார். அப்படியல்லாமல், "வஸ்த்ரத்திற்கும் உடலுக்கும் உள்ள

தத₃ாநீமேவ மத் ப்ரஸாத₃ லப்₄த₄

**तदानीमेव — प्रकृतिविमोकानन्तरमेव । उपरि पूर्ववत् ॥**

தொடர்பைக் காட்டிலும் தேஹத்தோடே ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பு வலிமையுள்ளதானாலும், என் அருளாலே கைவிடுகையாலே தலையிலிருந்து சுமையைத் தூக்கி எறிவதுபோலே அநாயாஸமாகக் கைவிட்டு'' என்றும் பொருள் கொள்ளலாம்.

இப்படி இந்த உடலோடு இருக்கும்போது பிறக்கும் பக்குவ நிலைகளை அருளிச் செய்தவுடன், "இந்தப் பக்குவநிலைகள் அனைவர்க்கும் உண்டாகுமோ? இந்த அளவுக்கு உம்முடைய கடாக்ஷத்திற்கு இலக்காகாதார் பேற்றை இழக்க வேண்டியது தானோ? இந்த அளவுக்குச் சிறப்புக்கள் உண்டானாலும் இதற்கு மேலும் அவசியம் வேண்டிய பக்குவநிலைகள் தேவையாயிருக்குமே? அவை எப்படி உண்டாகும்?'' என்று எம்பெருமானார் கேட்க, பதில் கூறுகிறார்—**(தத₃ாநீமேவ)** "இந்த உடல் விட்டவுடன் பரமப₄க்தி வரையிலுள்ள முன்பு இல்லாத பக்குவ நிலைகள் உண்டாகியிருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். ஆனால் அதனால் பேறு கிடைப்பதோ தடைபடுவதோ இல்லை. இவற்றில் சில உண்டாகியிருந்தால் அவை அனுபவத்திற்குப் பயன்படும். இல்லாவிட்டால் சரீரம் விட்டவுடன் க்ஷணநேரத்திலேயே இவையனைத்தையும் உடையவனாகிறான் ப்ரபந்நனாகிற இந்த அதி₄காரி'' என்பது பதிலின் ஸாரம். உபாஸகனுக்கு உபாஸனம் முடியும் சமயத்தில் ஒரு குறை வந்தாலும்

107. **ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாநுஷித்வா ஶாஶ்வதீ: ஸமா: ।**
**ஶுசீநாம் ஸ்ரீமதாம் கே₃ஹே யோக₃ப்₄ரஷ்டோऽபி₄ஜாயதே ॥**
**[கீ₃தை 6-41]**

[யோக₃த்திலிருந்து நழுவினவன் புண்ணியம் செய்தவர்களடையும் லோகங்களை அடைந்து பல வருடங்கள் வாழ்ந்து, ஶுத்₃த₄ர்களாய் தகுதியுள்ளவர்களாயிருப்பாருடைய வீட்டில் பிறக்கிறான்.] என்று கீதையில் சொன்னபடியே அடுத்த ஜன்மம் உண்டாகில் அதில் இந்த உபாஸனம் தொடரும். உபாஸனத்தின் நடுவில் ஒரு குறை வந்தால் அதனால் உபாஸனம் விட்டுப் போகவும் இடமுண்டு. அப்படியில்லாமல், உபாஸனம் இறுதிவரையில் நிறைவேறினாலும் ஶரீரம் விடும் சமயத்தில் அந்திமஸ்ம்ருதி இல்லையானால் மீண்டும் ஒரு பிறவி ஏற்பட்டு அதில் உபாஸனத்தைத் தொடரவேண்டும். உபாஸகனுக்கு இப்படியிருக்கும்போது, ப்ரபன்னனுக்கு மட்டும் இந்தச் சிறப்பு எப்படி உண்டாகிறது? எனில்—**(மத் ப்ரஸாத₃ லப்₄த₄)**

மச்சரணாரவிந்த₃ யுக₃ளைகாந்திகாத்யந்திக பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்தி க்ருத பரிபூர்ணாநவரத நித்ய விஶத₃தமாநந்ய ப்ரயோஜநாநவதி₄காதிஶய ப்ரிய மத₃நுப₄வ*(ஸ்த்வம் தத₂ாவித₄மத₃நுப₄வ) ஜநிதாநவதி₄காதிஶய ப்ரீதிகாரிதாஶேஷாவஸ்தோ₂சிதாஶேஷ ஶேஷதைக ரதிரூப நித்ய கிங்கரோ ப₄விஷ்யஸி ॥

என் அருளால் கிடைத்த; தன் முயற்சியால் ஸாத்₄யோபாயமாகிற பக்தி முதலானவற்றை நிறைவேற்ற வேண்டியிருப்பவனுக்கு, இவை யனைத்தும் அவன் முயற்சியாலேயே உண்டாக வேண்டி வரும். தன் முயற்சியைக் கைவிட்டு என்னை ஒருவனையே உபாயமாகக் கொண்டிருப்பவனுக்கு, என்னுடைய அருளாலே எல்லாப் பக்குவநிலை களையும் பெற்றவனாய், என்னை அடைவதாகிற பேற்றைப் பெறுகைக் கும் ஒரு குறைவில்லை என்கிறார். "தன் முயற்சியாலே என்னை அடைய நினைப்பவனுடைய காரியம் அவனாலேயே நிறைவேற்ற வேண்டியிருப்பதுபோலே, என்னிடம் உபாயத்வத்தை வைத்த இவனு டைய காரியம் எனக்கே பொறுப்பாகிறது. எவ்விடத்தில் உபாய பு₃த்₃தி₄ ஏற்படுகிறதோ அவ்விடத்திலேயே பலனை நிறைவேற்ற வேண் டிய பொறுப்பும் உள்ளது. ஆகையால் என்னிடமே உபாய பு₃த்₃தி₄யை வைத்தவனுக்கு புருஷார்த்த₂ம் கிடைப்பதற்கு ஒரு தடையில்லையே" என்று கருத்து. "என்னுடைய அருளாலே பெறுகிற பேறுகள் தான் எவை" எனில்—(**மச்சரணாரவிந்த₃ யுக₃ளைகாந்திக ஆத்யந்திக பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்தி**) என்னுடைய மிக இனிய திருவடித் தாமரைகளிலே வேறு பயன் கருதாததாய் நித்யமான பரப₄க்தி பரஜ் ஞாந பரமப₄க்திகள். (**க்ருத பரிபூர்ண அநவரத நித்ய விஶத₃தம அநந்ய ப்ரயோஜந அநவதி₄காதிஶய ப்ரிய மத₃நுப₄வ**) "முன்பு சொன்ன பரப₄க்தி முதலானவைகளால் உண்டானதாய், நிறைவான தாய், இடைவெளியில்லாததாய், நித்யமானதாய், மிகமிகத் தெளிவாயி ருப்பதாய், வேறு பயன் கருதாததாய், எல்லையற்ற மேன்மையுடைய ப்ரீதியாலே அனுபவிப்பதான என்னுடைய அனுபவமும். (**ஜநித அநவதி₄காதிஶய ப்ரீதிகாரித அஶேஷாவஸ்தோ₂சித அஶேஷ ஶேஷதைக ரதிரூப நித்ய கிங்கரோ ப₄விஷ்யஸி**) "அந்த அனு

* ( ) இவ்வடைப்பிலுள்ளது வ்யாக்யான பாடமன்று.

21. மா தே பூ₄த₃த்ர ஸம்ஶய: ॥

22. அந்ருதம் நோக்த பூர்வம் மே ந ச வக்ஷ்யே

---

२१. इदमाश्वासवाक्यमिति न संशयितव्यमित्याह मा ते भूदिति ॥

---

பவத்தாலே உண்டானதாய், எல்லையற்ற பெருமையுடையதான ப்ரீதியாலே விளைவதாய், எல்லா நிலைகளிலும் அனுகூலமாய் எல்லா அடிமைகளிலும் உண்டான பேரார்வத்தையே வடிவாகவுடையதாய், எக்காலத்திலும் முடிவடையாததான கைங்கர்யமும் உமக்கு உண்டாகக் கடவது'' என்று பெரிய பெருமாள் அருளிச்செய்கிறார். 20.

**இருபத்தோராவது சூர்ணை வ்யாக்யானம் :—** மறுபடியும் ஆராயும்போது, "பெறும் பேறு மிகப் பெரியதாய் இருந்தது. நம்முடைய முயற்சியைப் பார்த்தால் இல்லையென்றே சொல்லலாம்படி இருந்தது. செல்வம் முதலான மற்ற தாழ்ந்த பயன்களைப் பெறுவதற்குச் செய்யும் முயற்சிகளே மிகப் பெரியதாயிருக்க, மிகப்பெரிய பேறான இது ஒரு முயற்சியும் இல்லாமல் கிடைப்பதாக அருளிச்செய்வது பொருந்துமோ?'' என்று எம்பெருமானுக்குத் திருவுள்ளமாக, **(மா தே பூ₄த₃த்ர ஸம்ஶய:)** இந்த அர்த்தத்தில் உமக்கு ஐயம் உண்டாக வேண்டியதில்லை. மற்றவர்களுக்கு உண்டானாலும் உண்டாகலாம்; தனக்கென்று ஓர் உபாயத்தைக் கைக்கொள்ளாமல் என்னிடம் பொறுப்பை ஒப்படைத்த உமக்கு இப்பேற்றை அடைவதில் எந்த ஐயமும் வேண்டியதில்லை. இது நான் சொன்ன வார்த்தையாகையாலும் ஐயத்திற்கு இடமில்லை.

**இருபத்திரண்டாவது சூர்ணை வ்யாக்யானம் :—** உம்முடைய வார்த்தைக்குச் சிறப்பு என்ன? என்னும் கேள்வியெழ, **(அந்ருதம் நோக்தபூர்வம் மே நச வக்ஷ்யே கதா₃சந)** **(மே)** எனக்கு, **(உக்த பூர்வம்)** முன்பு சொன்ன வார்த்தைகளில், **(அந்ருதம் ந)** பொய்யானது ஒன்றுமில்லை. 'பொய் சொன்னதில்லை என்று இப்போதே சொல்லும் வார்த்தையோ?' எனில் 'பொய்யின் வாஸனையுமில்லை, பொய் சொல்லவே அறியோம்' என்றபடி. இனிமேல் பொய் சொல்லக்கூடுமோ? எனில் —**(ந ச வக்ஷ்யே கதா₃சந)** வாஸனையே இல்லை

கத₃ாசந, ராமோ த்₃விர் நாபி₄ப₄ாஷதே, ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே । அப₄யம் ஸர்வ-பூ₄தேப்₄யோ த₃த₃ாம்யேதத்₃ வ்ரதம் மம ॥ ஸர்வ

---

२२ अनृतस्यानुक्तत्वमाह अनृतमिति । उक्तस्य दृढत्वमाह रामो द्विरिति । न केवलं तव, अन्येषामपि मयोक्तमित्याह सकृदिति । अवतारद्वयेऽपि वचनद्वयम् ॥

---

என்றபின் மேலும் எப்படிப் பொய் சொல்லக்கூடும்! வருங்காலத்திலும் பொய் சொல்ல மாட்டோம் என்றருளிச் செய்ய; ஆகிலும், "கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன்" [அமலனாதி 10] என்கிறபடியே கண்ணனான உம்முடைய வார்த்தையாயிற்றே! எனில்—(ராமோ த்₃விர்நாபி₄ப₄ாஷதே) இது நான் சொல்லும் வார்த்தை மட்டுமல்ல, இரக்கத்தை முக்கியமாகக் கொண்ட ரிஷிகள் கோஷ்டியிலும், 'ராமன் இரண்டு வார்த்தை சொல்லமாட்டான்' என்பது பிரஸித்தமன்றோ. அப்படிச் சக்ரவர்த்தித் திருமகனாய் எங்கே அருளிச்செய்தீர்! என்ன—

"ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே ।
அப₄யம் ஸர்வ பூ₄தேப்₄யோ த₃த₃ாம்யேதத்₃ வ்ரதம் மம ॥

[ஒருமுறை சரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கே ஆகிறேன்' என்று யாசிப்பவன் பொருட்டும், எல்லா பூ₄தங்களிடமிருந்தும் நான் அப₄யமளிக்கிறேன். இது என் விரதம்.] என்று இராமாவதாரத்தில் நான் கடற்கரையில் சொன்ன வார்த்தையாக இதிஹாஸங்களில் தலைமை பெற்ற ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீவால்மீகி ப₄கவான் எழுதி வைத்தபடி கண்டீரே.

108. ஸ து மேத₄ாவிநௌ த்₃ருஷ்ட்வா வேதே₃ஷு பரிநிஷ்டி₂தௌ ।
வேதோ₃பப்₃ரும்ஹணார்த்தா₂ய தாவக்₃ராஹயத ப்ரபு₄:॥
[ரா-பா₃ 4-6]

**த₄ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வ பாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி
மா ஶுச:॥ இதி மயைவ ஹ்யுக்தம்॥**

---

[அந்த வால்மீகி ப₄க₃வான்—மேத₄ாவிகளாய், வேத₃ங்களில் தேர்ந்த வர்களான அவர்களைக்கண்டு, வேத₃த்தை விவரிப்பதற்காக அவர் களுக்கு (ராமாயணத்தைச்) சொல்லி வைத்தார்.] என்கிறபடியே இது வேதத்தை விளக்குவதற்காக அவதரித்த நூலன்றே.

109. **இதிஹாஸ புராணம் பஞ்சமம்** [சா₂ந். 7-2]

[இதிஹாஸ புராணங்கள் ஐந்தாவது வேத₃மாகும்.] என்று ஐந்தாவது வேதம் என்றே உபநிஷத்தில் படிக்கப்படுவதன்றோ—என்று பெரிய பெருமாள் அருளிச்செய்ய, 'இது மட்டுமோ? ஐந்தாம் வேதமான மஹா பாரதத்திலும் கிருஷ்ணவதாரத்தில் திருத்தேர்த் தட்டிலேயிருந்து நாம் சொல்லியிருக்கும் வார்த்தையாக வேத வியாஸ ப₄க₃வான் ஓதி வைத்திருப்பதைப் பாரீர்!' என்கிறார்.

**ஸர்வ த₄ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வ பாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:॥**

[மோக்ஷ ஸாத₄நமான எல்லா த₄ர்மங்களையும் வாஸனையோடு விட்டு, என்னை ஒருவனையே மோக்ஷோபாயமாகப் பற்றுவாய். நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்; வருந்தாதே] **(இதி மயைவ ஹி உக்தம்)** என்று இவ்வார்த்தை என்னாலேயே சொல்லப் பட்டதன்றோ. வேதத்தின் மூலமாகச் சொன்னதுமன்று. வைதிகர்கள் மூலமாகச் சொல்லப்பட்டதுமன்று. சரணமடையத் தக்கவனான என் னாலேயே சொல்லப்பட்டதன்றோ இவ்வார்த்தை.

**இருபத்து மூன்றுவது சூர்ணை வ்யாக்யானம் :— (அத:)** ஆகை யாலே. **(த்வம்)** என்னையே நம்பியிருக்கும் நீர். "செம்மையுடைய திரு வரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை" [நாச். திரு. **11-10]** என்று சொல்லப்பட்ட நம்முடைய மெய்ம்மைப் பெரு வார்த்தைகளைக் கேட்டு நம்மை நம்பியிருக்கும் மெய்யடியாரான நீர்.

23. அதஸ் த்வம் தவ தத்த்வதோ மத்ஜ்ஞாந தர்ஶந ப்ராப்திஷு நிஸ்ஸம்ஶயஸ் ஸுகமாஸ்ஸ்வ.

॥ இதி ஶரணாகதிகத்யம் ஸமாப்தம் ॥

---

२३. अतः भक्तिसाध्यं प्रपत्त्यैव लभ्यमिति निर्भरेण त्वया भवितव्यमित्याह अतस्त्वमिति । आचार्यतो लब्धं ज्ञानं यथा तत्त्वविषयमिति न संशयः, तथा भाविन्योर्दर्शनप्राप्त्योरपि निस्संशय इत्यर्थः ॥

इति श्रीहारीतकुलतिलकस्य श्रीरङ्गराजदिव्याज्ञालब्धश्रीवेदव्यास-
भट्टारकापरनामधेयस्य श्रीमत्सुदर्शनाचार्यस्य कृतिषु
श्रुतप्रकाशिकाभिधानं शरणागतिगद्यव्याख्यानं संपूर्णम् ॥

---

**(தவ)** உமக்கு. **(தத்த்வத:)** மெய்யாக உண்டான, **(மத்ஜ்ஞாந தர்ஶந ப்ராப்திஷு)** என்னைப் பற்றிய உண்மையறிவு, காட்சி, ப்ராப்தி (அடைதல்) ஆகியவற்றில்.

110. பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥
[கீதை 11-54]

[அர்ஜுநா! எதிரிகளை அழிப்பவனே! ஒரு பலனை எதிர்பாராத பக்தியினாலேயே இம்மாதிரியான நான், உண்மையாக அறிவதற்கும், பார்ப்பதற்கும், நுழைவதற்கும் தக்கவன்.] என்று கீதையில் பயன் கருதாத பக்தியினாலே இந்த ஜ்ஞாந தர்ஶந ப்ராப்திகள் விளைவதாகச் சொல்லப்பட்டிருப்பது காணத்தக்கது. **(நிஸ்ஸம்ஶயஸ் ஸுகமாஸ்ஸ்வ)** ஐயமற்றவராய் இனிது வாழ்வீராக.

பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யானத்தை அனுஸரித்து
ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தாஸனால் இயற்றப்பட்ட
**ஶரணாகதி கத்ய வ்யாக்யானம்**
நிறைவு பெற்றது.

॥ श्रीः ॥

श्रीमगवद्रामानुजमुनिभिरनुगृहीतं

॥ श्रीरङ्गगद्यम् ॥

## தனியன்

चिदचित्परतत्त्वानां तत्त्वयाथात्म्यवेदिने ।

रामानुजाय मुनये नमो मम गरीयसे ॥

*சித₃சித் பரதத்த்வாநாம் தத்வயாத₂ாத்ம்ய வேதி₃நே ।*

*ராமாநுஜாய முநயே நமோ மம க₃ரீயஸே ॥*

[சித் அசித் பரமாத்மா ஆகிய மூன்று தத்வங்களின் உண்மையை அறிந்தவராய் எனக்குச் சிறந்த ஆசார்யராய் உள்ள ராமாநுஜ முனிவருக்கு வணக்கம்]

---

குறிப்பு : சரணாகதி கத்யத்தின் தொடக்கத்திலுள்ள **"யோநித்ய"**, **"வந்தே வேதா₃ந்த"** என்னும் ஶ்லோகங்களைப் போலவே இந்த ஶ்லோகமும் ராமாநுஜருடைய பெருமையைக் கூறுவதாய் உள்ளது. இவை அவருடைய சிஷ்யர்கள் அருளிச்செய்தவையாயிருக்கலாம்.

# ஸ்ரீரங்க கத்யம்—வ்யாக்யானம்

## ப்ரவேஶ விவரணம்

இந்த ஸ்ரீரங்க க₃த்₃யத்தில் சொல்லப்படும் விஷயங்களாவன : (1) சேதனன் அடையவேண்டிய கைங்கர்யத்தை முதல் சூர்ணையால் பிரார்த்தித்தார். (2) இரண்டாவது சூர்ணையில் அந்தக் கைங்கர்யம் ஸித்திப்பதற்காகத் தன்னிடம் எந்தக் கைம்முதலும் இல்லையென்று காட்டிக்கொண்டு, தம்மிடமுள்ள குறைகளையும் விண்ணப்பித்துக்கொண்டு எம்பெருமானுடைய திருவடிகளையே உபாயமாகப் பற்றினர். (3), (4), (5) சூர்ணைகளில்'அடியேனுடைய பிரார்த்தனையை மட்டும் பற்றுகக்கொண்டு முற்கூறிய மிகச்சிறந்த அடிமையைத் தந்தருளவேண்டும' என்று மஹாவிஶ்வாஸத்துடன் கைங்கர்யத்தை மறுபடியும் பிரார்த்திக்கிறார்.

ஆறுவது ஏழாவது சூர்ணைகளாலே, 'இந்த மஹா விஶ்வாஸத்தையும், கருணை முதலான கல்யாண குணங்களாலே நிறைந்தவரான தேவரீரே தந்தருளவேணும்' என்று வேண்டி, 'வேறு எவர்க்குமாகாமல் தேவரீருக்கே அடிமைப்பட்ட இந்த ஆத்மவஸ்துவை ஸ்வரூபத்துக்குத் தக்க கைங்கர்யம் வரையில் பெற்றதாம்படி தேவரீரே பண்ணியருள வேணும்' என்று பெரிய பெருமாள் திருவடிகளிலே விண்ணப்பித்து இந்த க₃த்₃யத்தை நிறைவுபடுத்துகிறார்.

இப்படிச் சேதனனுக்குத் தகுதியைக் காட்டும் அதி₄காரி விஶேஷண மாயிருக்கும் இந்த ப்ரபத்தியை, மோக்ஷத்தை விரும்பிப்பற்றிய சேதனர்கள் அவர்களது சரீரம் விழும்வரை போதுபோக்கும் வழிகள் பல வகைப்பட்டிருக்கும்.

1. "வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" [நான் திருவ 63] என்கிறபடியே எம்பெருமான் உகந்தருளின திவ்ய தேசங்களிலே கைங்கர்யம் செய்து காலத்தைக் கழித்தல்.

2. "வேறாக ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தி யிருப்பார் தவம்" [நான் திருவ. 18] என்றும்,

111. **ஆராத₄நாநாம் ஸர்வேஷாம் விஷ்ணோராராத₄நம் பரம் ।**
**தஸ்மாத் பரதரம் ப்ரோக்தம் ததீ₃யாராத₄நம் பரம் ॥**

[எல்லா ஆராத₄நங்களுக்குள்ளும் விஷ்ணுவை ஆராதி₄ப்பது சிறந்ததாகும். அதிலும் வேறுபட்டதான அவனடியார்களை ஆராதி₄ப்பது அதிலும் மிகச்சிறந்ததாகச் சொல்லப்படுகிறது.] என்றும் சொல்லுகிறபடியே, முற்கூறிய தி₃வ்ய தே₃ஶங்களில் ஈடுபட்டிருக்கும் நெஞ்சுடைய ப₄க₃வத்₃ ப₄க்தர்களை ஆராதித்துக் கைங்கர்யம் செய்து காலத்தைக் கழித்தல்.

3. முற்கூறிய இரண்டும் செய்ய இயலாதவர்கள் "பாம்பணையான் சீர் கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ் துயரை என் நினைந்து போக்குவரிப்போது" [பெரிய திருவ-86] என்கிறபடியே, எம்பெருமானுடைய குணங்களை அனுபவித்துக் கொண்டு காலத்தைக் கழித்தல்.

## 1. ஸ்வாதீ₄ந த்ரிவித₄ சேதநாசேதந ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்தி பே₄த₃ம்,

4. எம்பெருமானிடம் அவ்வளவு ஈடுபடாதவர்கள். **"த்₃வய மர்த்த₂ாநுஸந்த₄ாநேந ஸஹ"** என்று ஶரணாக₃தி க₃த்₃யத்தில் அருளியபடியே த்₃வயத்தினுடைய பொருளை அநுஸந்தானம் செய்து கொண்டு காலத்தைக் கழித்தல் என்று நாலு வகைகளைக் காணலாம்.

இந்த நாலு வகைகளில் இறுதியாகச் சொல்லப்பட்டபடி, அர்த்த₂ாநுஸந்தானத்துடன் த்₃வயத்தைச் சொல்லிப் போது போக்க நினைத்து பெரிய க₃த்₃யமாகிய **"ஶரணாக₃தி க₃த்₃யத்தில்"** விரிவாக அநுஸந்தித்த அர்த்த₂த்தைக் கேட்பவர்களுக்கு எளிதில் அறியலாம்படியும், பெருமாளுக்குத் திருச்செவி சாத்த உரியதாகவும், அந்த த்₃வயத்தினுடைய அர்த்த₂த்தை மிக விரிவாக அல்லாமல் திருமுன்பே விண்ணப்பம் செய்யலாம்படி சுருக்கமாக அருளிச்செய்கிறார் இந்த ஸ்ரீரங்க₃ க₃த்₃யத்தில்.

**முதல் சூர்ணை அவதாரிகை :—** அதில் முதல் சூர்ணையில், மேலான புருஷார்த்த₂மாக நிர்ணயிக்கப்பட்ட கைங்கர்யத்தை வேண்டுகிறார். கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்பவன் நாராயணனன்றோ. அந்த **"நாராயண"** ஶப்₃த₃த்திற்கு அர்த்த₂ம் நித்யவிபூ₄தி, லீலா விபூ₄தி என்னும் இரண்டு செல்வங்களோடு சேர்ந்திருக்கையும், தாழ்வுகளுக்கு எதிர்த்தட்டாயிருக்கையும், எல்லாக் கல்யாண குணங்களுக்கும் கொள்கலமாக இருக்கையும் ஆகும். அதில் இரண்டு விபூ₄திகளோடும் சேர்ந்திருக்கையை முதலில் அருளிச் செய்கிறார்.

**வ்யா :— (ஸ்வாதீ₄ந த்ரிவித₄ சேதநாசேதந ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்தி பே₄த₃ம்)** நித்யர், முக்தர். ப₃த்₃த₄ர் என்று மூன்று வகைப்பட்ட சேதனர்கள். மற்றும் ஶுத்₃த₄ஸத்₃வம், மிஶ்ரஸத்வமாகிற மூலப் ப்ரக்ருதியும் அதன் கார்யங்களும், ஸத்வ ஶூந்யம் எனப்படும் முக்குணமற்ற காலம் என்று மூன்று வகைப்பட்ட அசேதனங்கள்; இவற்றுக்கு மூன்று வகைப்பட்ட வேறுபாடுகள் உண்டு. அவையாவன:— (1) ஸ்வரூப பே₄தம். (2) ஸ்தி₂தி பே₄த₃ம். (3) ப்ரவ்ருத்தி பே₄த₃ம்; இவ்வனைத்தையும் தனக்கு அதீ₄நமாய் உடையவனை—என்கிறார்.

மூன்று வகையான சேதனரில் **பத்₃த₄ர்** என்பவர் கர்மத்தாலும், அதனாலுண்டான தே₃ஹ ஸம்பந்தத்தாலும் கட்டுப்பட்டு இருப்பவர். **முக்தர்** என்பவர் இந்தக் கட்டிலிருந்து விடுபட்டவர். **நித்யர்** என்பவர் என்றுமே இந்தக் கட்டுப்பாடு இல்லாமல் ஸ்வரூப விளக்கம் பெற்றவராய் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருப்பவர். மூன்று வகைப்பட்ட அசேதனங்களில் நித்ய விபூ₄தியாகிற பரமபதத்தில் உள்ளது ஶுத்₃த₄ஸத்வம். இந்த ஸம்ஸார மண்டலத்திலிருப்பது ரஜஸ்தமஸ் என்னும் குணங்களோடு கூடிய மிஶ்ரஸத்வம். ஸ்ருஷ்டி முதலானவற்றுக்கு உதவி புரிவது முக்குணமுமற்ற காலம் என்னும் மூன்றாவது வகையான அசேதன தத்வம். இன்னும் சற்று விரிவாக நோக்கும்போது பத்₃த₄ர் எனப்படுபவர்கள் (தம்முடைய ஸ்வரூபத்தோடு சேர்ந்திருக்கும்) ஜ்ஞானம் சுருங்கியிருக்கப் பெற்ற ஸ்வரூபத்தையுடையவர்கள். அவர்கள் அனாதிகாலமாகச் செய்த புண்ய பாபங்களின் ப₂லமான இன்பதுன்பங்களின் அனுபவத்தாலே, ஸ்தி₂தி எனப்படும் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருப்பவர்கள். அது காரணமாக மறுபடியும் புண்ய பாபங்களாகிற கர்மத்தின் ப்ரவ்ருத்தியை (செயல்பாட்டை) உடையவராய் இருப்பவர்கள். முக்தர் எனப்படுபவர்கள் ஒரு காரணமில்லாமல் வெளிப்படும் எம்பெருமானுடைய அருளாலே, ஜ்ஞானச் சுருக்கத்துக்குக் காரணமான தேஹ ஸம்பந்தம் கர்மம் முதலானவை நீங்கப்பெற்று, அது காரணமாக ஸ்வரூப விளக்கம் பெற்றவர்களாய், கைங்கர்ய இன்பத்திலே ஸ்தி₂தியை (வாழ்வை) உடையவர்களாய், அதற்குப் பொருத்தமாக,

**112. ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதா**

**[தை. ஆந. 1-2]**

[முக்தன் எல்லாக் கல்யாண குணங்களையும், ஸர்வஜ்ஞனான ப்₃ரஹ்மத்துடன் கூட அனுபவிக்கிறான்.] என்கிறபடியே, எம்பெருமானுடைய குணங்களை அனுபவிப்பதாகிற ப்ரவ்ருத்தியையும்,

**113. யேந யேந த₄ாதா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி ।**
**தத்₃ யதா₂ தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம்**
**சா₂யா வா ஸத்வமநுக₃ச்சே₂த் ததா₂ப்ரகாரம் ॥**

**[பரமஸம்ஹிதை]**

[எப்படி இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று பசுவையும், நிழல் பிராணியையும் பின் தொடர்கின்றனவோ அப்படியே எப்படி எப்படிப் பரம்புருஷன் செல்கின்றானோ, அப்படி அப்படியே (முக்தனும்) கூடப்போகிறான்.] என்கிறபடியே, ஶரீரத்தால் செய்யப்படும் கைங்கர்ய ரூபமான ப்ரவ்ருத்தியையும், அதனால் களிப்புற்று, 126-வது பக்கத்திலுள்ள 70-வது ப்ரமாணத்தின்படி, வாயாலே செய்யப்படும் ஸாம கானமாகிற ப்ரவ்ருத்தியையும் உடையவர்களாயிருப்பார்கள். நித்யர் எனப்படுபவர்கள் யாரெனில். என்றுமே ஸம்ஸாரத்தின் வாஸனையும் தொடப்பெறாதவர்கள். முக்தரைப்போல் ஒருநாள் வந்து பரமபதத்தை அடைந்தவர்கள் அல்லர். இது இவர்களுடைய ஸ்வரூபம். அனாதிகாலமாக உள்ளதாய், மேல்வரும் அனந்த காலத்திலும் நீடிப்பதான கைங்கர்ய இன்பத்திலே ஸ்திதியை (வாழ்வை) உடையவர்கள். எப்பொழுதும் எம்பெருமானைக் கண்டு கொண்டிருக்கும் ப்ரவ்ருத்தியையும், எப்போதும் அவனுக்கு அஞ்ஜலி செய்துகொண்டு இருக்கும் ப்ரவ்ருத்தியையும், எப்போதும் எம்பெருமானைத் துதித்துக் கொண்டிருக்கும் ப்ரவ்ருத்தியையும் உடையவர்களாய் இருப்பவர்கள். அதனாலேயே இவர்களுக்கு நித்யர்கள் என்று பெயர் ஏற்பட்டது.

இனி, மூவகைப்பட்ட அசேதனங்களில் ப்ரக்ருதி தத்வம் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களையுடையதாய், எப்போதும் விகாரமடைந்து கொண்டேயிருப்பதை இயல்வாகக் கொண்டதாயிருக்கும் ஸ்வரூபத்தையுடையது. ஜீவர்களுடைய கர்மத்தையொட்டிப் பல தேஹங்களாகப் பரிணாமம் அடைகையாகிற ஸ்திதியை உடையது. இதன் ப்ரவ்ருத்தி பின்வருமாறு :— ஜீவர்களுக்குத் தம் ஸ்வரூபத்தைப் பற்றியும் பரமாத்ம ஸ்வரூபத்தைப் பற்றியும், புருஷார்த்த ஸ்வரூபத்தைப் பற்றியும், உபாய ஸ்வரூபத்தைப் பற்றியும், விரோதி, ஸ்வரூபத்தைப் பற்றியும், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள ஸம்பந்தத்தைப் பற்றியும் உண்மையறிவை மறைக்கை. நித்ய விபூதியிலுள்ள அசேதந த்ரவ்யம் ஐந்து உபநிஷத்துக்களாலானது. ரஜஸ் தமோ குணங்கள் கலக்காத ஶுத்த ஸத்வமயமாயிருப்பது. எப்போதும் ஒருபடிப்பட்டதாயிருப்பது. இது இதனுடைய ஸ்வரூபம். நித்ய முக்தர்களுடைய கைங்கர்யத்துக்கு வட்டில், படிக்கம் முதலானவையாக மாறுவது, எம்பெருமானுடைய ரக்ஷணச் செயலுக்கு உறுப்பாக வ்யூஹ விபவ ரூபங்களை உடையதாவது ஆகியவை இதனுடைய

**க்லேஶ கர்மாத்₃யஶேஷ தே₃ாஷாஸம்ஸ்ப்ருஷ்டம்,**

---

ஸ்தி₂தி. எல்லாவிடத்திலும் பிரகாசிப்பதே இதனுடைய ப்ரவ்ருத்தி. மூன்றுவது அசேதன த்₃ரவ்யமாகிற ஸத்வ ஶூந்யம் எனப்படும் காலம், ப்ராக்ருதிக்குள்ள மூக்குணங்களும் அற்றதாய் இருக்கும். ஒரு படிப்பட்டதாய் இருக்கும். இது இதனுடைய ஸ்வரூபம். நிமிஷம், காஷ்டை₂, முஹூர்த்தம் முதலான நிலைகளையுடையதாய்க் கொண்டு ப்ரக்ருதியிலிருந்து உண்டான பொருள்களையும், ப்ரக்ருதியோடு சேர்ந்த சேதனர்களையும் நடத்திச் செல்வது இதனுடைய ஸ்தி₂தியாகும். எல்லாப் பொருள்களுடைய உற்பத்தி அழிவு முதலானவற்றை ப்ரவ்ருத்திகளாக உடையதாயிருக்கும். இவ்வண்ணமாக மூவகைப்பட்ட சேதனர்களுடையவும், அசேதனங்களுடையவும் ஸத்தா ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளை எம்பெருமான் தனக்கு அதீ₄நமாய் உடையனுயிருக்கை யாவது,—அவற்றுக்கு அந்தர்யாமியாயிருந்து நியமிக்கை. ஆக, எல்லா சேதநாசேதநங்களுடைய ஸத்தா ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகள் ஈஶ்வரனுக்கு வசப்பட்டிருக்கையாலே, அந்தச் சேதநாசேதநங்கள் எம்பெருமானுக்கு ஶரீரமாய் இருப்பவை என்பதும், எம்பெருமான் அவற்றுக்கு ஆத்மாவாய் இருப்பவன் என்பதும் சொல்லப்பட்டது.

**(க்லேஶ கர்மாதி₃ அஶேஷ தே₃ாஷ அஸம்ஸ்ப்ருஷ்டம்)** சேதநாசேதநங்கள் இரண்டும் எம்பெருமானுக்கு ஶரீரமாய், எம்பெருமான் அவற்றை ஶரீரமாகக் கொண்டவனுய் இருந்தானுகில், ஶரீரத்தின் தொடர்பாலுண்டான குற்றம் அவற்றை ஶரீரமாகக் கொண்ட எம்பெருமானுக்கு வராதோ? எனில்—ஶரீரத்திலுள்ள தே₃ாஷங்களால் எம்பெருமான் தொடப்படாதவன் என்கிருர்.

**137. க்லேஶகர்மவிபாகாஶயைரபராம்ருஷ்ட: புருஷவிஶேஷ ஈஶ்வர:**

**[பாதஞ்ஜலஸூத்ரம் 1-24]**

[க்லேஶம், கர்மம், விபாகம், ஆஶயம் ஆகியவற்றுல் தொடப்படாதா ஒரு புருஷன் ஈஶ்வரனுவான்.] என்று பதஞ்ஜலியின் யோக₃ ஸூத்ரத்தில் இவ்விஷயம் சொல்லப்பட்டது. இவற்றில் க்லேஶமானது—

**114. அவித்₃யாஸ்மிதாபி₄நிவேஶராகத்₃வேஷா: பஞ்ச க்லேஶா: ।**

**[பாதஞ்ஜலயோக₃ஸூத்ரம் 2-3]**

**ஸ்வாபா₄விகாநவதி₄காதிஶய-**

---

[அவித்₃யை, அஹங்காரம், பேராசை, விருப்பம், கோபம் இவ்வைந் தும் க்லேஶங்கள்.] என்று யோக₃ ஸூத்ரத்தில் விளக்கப்பட்டது. இந்த க்லேஶங்களுக்குக் காரணமாகவும், இவற்றால் உண்டாகுமவை யாகவும் இருப்பவை புண்ய பாப ரூபமான கர்மங்கள். **(ஆதி₃) ஶப் த₃த்தாலே** யோக₃ ஸூத்ரம் **1-24-ல்** சொல்லப்பட்ட விபாகம், ஆஶ யம் என்னும் இரண்டும் சொல்லப்படுகின்றன. இந்த தோ₃ஷங் களாலே தொடப்படாதவன் எம்பெருமான் என்கிறார். விபாகமாவது— தே₃வர் முதலான ஜாதியிலே சேர்ந்திருக்கை, அவரவர் ஆயுள் முதலா னவை. ஆஶயமாவது—அந்தந்த ஜாதியை ஒட்டியிருக்கும் பல வகைப்பட்ட பு₃த்₃தி₄கள். **(அஶேஷ)** என்னும் பதத்தாலே அசித்தி லுள்ள பரிணாமங்கள் சேதனர்களிடமுள்ள துன்பம் அறிவின்மை முதலானவற்றை நினைக்கிறது. **(அஸம்ஸ்ப்ருஷ்டம்)** என்கையாலே இந்த தோஷங்களால் அநாதிகாலமாகவும், மேல்வரும் அநந்த காலத் திலும் தொடபபடாதவன் எம்பெருமான் என்று உணர்த்துகிறது.

**(ஸ்வாபா₄விக)** என்று தொடங்கும் அடுத்த தொடராலே, அனைவர்க் கும் பயன்படுபவையாகவும், அடியார்கள் விஷயத்தில் செயல்படுபவை யாகவும், அடியார்களுடைய பகைவர்கள் விஷயத்தில் செயல்படுபவை யாகவும் உள்ள மூன்று வகைப்பட்ட கு₃ணங்களைச் சொல்லுகிறது. **(ஸ்வாபா₄விக)** இந்த கு₃ணங்கள் ஸ்வாபா₄விகமாயிருக்கையாவது— நீருக்குக் குளிர்ச்சி போலவும், அக்னிக்கு வெபபம் போலவும் அந்தப் பொருள் உள்ள போதெல்லாம் அதன் இயல்வாயிருக்கை. **(அநவதி₄ காதிஶய)**

115. **உபர்யுபர்யப்₃ஜபு₄வோऽபி பூருஷாந்**
**ப்ரகல்ப்ய தே யே ஶதமித்யநுக்ரமாத் ।**
**கி₃ரஸ் த்வதே₃கைககு₃ணாவதீ₄ப்ஸயா**
**ஸதா₃ ஸ்தி₂தா நோத்₃யமதோऽதிஶேரதே ॥**
[ஸ்தோ. ர. 19]

[ப்ரஹ்மாக்களுக்கு மேலும் மேலும் "தே யே ஶதம்" என்று அடிக்கடி படிப்பதன்மூலம் ப்₃ரஹ்மாக்களைக் கற்பித்து, உன்னுடைய ஒவ்வொரு

**ஜ்ஞாநப₃லைஶ்வர்ய வீர்ய-**

---

கு₃ணத்தினுடையவும் எல்லையைக் காண்கையிலே இச்சை₂யாலே, எப்போதும் இருக்கின்றவையான வேத₂வாக்கியங்களானவை, ஆரம்ப₄ த₃ஶையைக் கடந்து மேல் செல்லவில்லை.] என்கிறபடியே, ஒவ்வொரு கு₃ணமும் எல்லையற்றதாய், வியப்பை விளைப்பதாய் இருக்கை. **(ஜ்ஞாந)**

**41. யோ வேத்தி யுக₃பத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா₃ ஸ்வத:।**
**தம் ப்ரணம்ய ஹரிம் ஶாஸ்த்ரம் ந்யாயதத்த்வம் ப்ரசக்ஷ்மஹே॥**
**[(நாதமுனிகளருளிய) ந்யாயதத்த்வம்]**

[எவனொருவன், எப்போதும் எல்லா வஸ்துக்களையும் ஒரே சமயத்தில் தானாகவே நேரில் அறிகிறானோ, அந்த **ஹரி**யை வணங்கி ந்யாய தத்வம் என்னும் கிரந்தத்தை இயற்றுகிறோம்.] என்கிறபடியே, எல் லாக் காலமும் எல்லாப் பொருள்களையும், ஒரே ஸமயத்திலே காண வல்ல திறனுடையதாய் இருப்பது எம்பெருமானுடைய ஜ்ஞானம். அதாவது—பல வேறுபாடுகளுடன் பொருள்களைப் படைக்கும்போது படைக்கப்பட்ட கணக்கற்ற ஆத்மாக்களுடைய ஸ்வரூப வேறுபாட்டை யும், அவரவர்க்குரிய கர்ம வேறுபாடுகளையும் காணவல்ல ஶக்தி. **(ப₃ல)** அதாவது—படைக்கப்பட்ட எல்லாப் பொருள்களையும் தன் ஸங்கல் பத்தில் ஆயிரத்தில் ஒரு பகுதியாலே தாங்கவல்ல த₄ரிக்கும் திறன். **(ஐஶ்வர்ய)** அதாவது—எல்லா ஆத்மாக்களையும் அவரவர் கர்மத்தை யொட்டி செயல்படச் செய்யும் நியமிக்கும் திறன். **(வீர்ய)** அதாவது— படைத்தல் முதலான எல்லாத் தொழில்களையும் செய்யும்போது விகார மடையாமல் விளையாட்டாகச் செய்யும் திறன்.

**116. யதா₂ ஸந்நிதி₄மாத்ரேண க₃ந்த₄: க்ஷோப₄ாய ஜாயதே।**
**மநஸோ நோபகர்த்ருத்வாத் ததா₂ऽஸௌ பரமேஶ்வர:॥**
**[வி. பு. 1-2-30]**

[தான் விகாரமடையாமலிருந்தபோதிலும், மணம் தான் அருகிலிருப்ப தன் மூலமே எப்படி மநஸ்ஸைக் கலக்குகின்றதோ, அப்படியே பர மேஶ்வரனும் தான் விகாரமடையாமல் பிற வஸ்துக்களை விகாரமடையச்

ஶக்தி தேஜஸ்-

செய்கிறான்.] என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்திலும் இது சொல்லப்பட்டது. (ஶக்தி) அதாவது—செயல்புரிய முற்படும் சேதனர்க்கு அதற்குரிய வல்லமையைக் கொடுத்துச் செயல்படவைக்கும் திறமை. பிறர் செய்ய முடியாதவற்றைச் செய்யவல்ல திறமை—அகடிதகடநா ஸாமர்த்யம் — என்றும் கொள்ளலாம். உலகமாகப் பரிணமித்து உலகுக்கு உபாதாந காரணமாகும் ஶக்தி என்றும் கொள்ளலாம். (தேஜ:) அதாவது — பிறரை அடக்கும் திறமை.

117. ஜ்யோதீம்ஷ்யாதித்யவத்ராஜந் குரூந் ப்ரச்சாதயந் ஶ்ரியா
[பார. உத். 94-45]

[ஸ்ரீக்ருஷ்ணபகவான், கௌரவர்களைத் தன் தேஜஸ்ஸாலே ஸூர்யன் மற்ற சோதிகளைப்போல மழுங்கச்செய்து கொண்டு (வந்தார்)] என்று மஹாபாரதத்திலும்,

42. ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நி: ।
தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ॥ [கடோப 2-5]

[அந்தப் பரமபுருஷனிடத்தில் ஸூர்யனும் பிரகாசிக்கிறதில்லை; சந்த்ர நக்ஷத்திரங்களும் பிரகாசிக்கிறதில்லை; மின்னல்களும் பிரகாசிக்கிறதில்லை; இந்த அக்னியைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? பிரகாசிக்கும்படியான அவனைப் பின்பற்றியே எல்லாம் பிரகாசிக்கின்றன; அவனுடைய ஒளியினாலே இவையெல்லாம் ஒளிவிடுகின்றன.] என்று கடோபநிஷத்திலும் இது விளக்கப்பட்டது. இந்த ஆறு குணங்களும் எல்லாப் பொருள்களுக்கும் பொதுவாகப் பயன்படும் குணங்கள்.

இப்படி மற்ற குணங்களைக் காட்டிலும் முக்யத்வம் பெற்ற முற்கூறிய ஆறு குணங்களையுடைய ஈஶ்வரனுக்கு, அடியார்களுக்கே பயன்

ஸௌஶீல்ய வாத்ஸல்ய-

படும் பன்னிரண்டு குணங்களைச் சொல்லுகிறது அடுத்தபடியாக.— (ஸௌஶீல்ய) ஶீலமாவது—

**43. மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்வம் ஶீலம்**

[ஶீலமென்பது, பெரியவன் தாழ்ந்தவர்களோடு நெருங்கிப் பழகும் தன்மை.] என்கிறபடியே பெரியவர் மிகத்தாழ்ந்தவரோடு ஒக்கப்பழகும் நீர்மை. ஸௌஶீல்யமாவது—அந்தப் பெருமை தன் திருவுள்ளத்திலும் இல்லாமலிருக்கை.

**44. அப்ரவீத் த்ரிதஶஶ்ரேஷ்டாந் ராமோ தர்மப்ருதாம் வர: ।**
**ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தஶரதாத்மஜம் ॥**

[ரா. யு. 120-11]

[“நான் என்னை மனுஷ்யனாகவும், தஶரதன் பிள்ளை ராமனாகவும் நினைக்கிறேன்” என்று தர்மவான்களில் மேலான ராமன் தேவஶ்ரேஷ்டர்களைக் குறித்துச் சொன்னான்.] என்று ராமனிடத்தில் இக்குணம் சிறந்து விளங்கியது. **(வாத்ஸல்ய)** அதாவது—அடியார்களிடமுள்ள குற்றங்களும் குணமெனத் தோற்றும்படியான அன்பு. இதன் விளைவாக அடியார்களுடைய குற்றத்தைத் தன் காரியமாகப் போக்கி, தன் குணங்களாலே அவர்களை தரிக்கச் செய்கிறான் என்கை. திருச்சந்த விருத்தத்தில் [111] சொன்னபடி செய்த குற்றம் நற்றமாகவே கொண்டு, பெரிய திருவந்தாதியில் [58] சொன்னபடி பாலே போல் சீர் எனப்படும் குணங்களாலே தரிக்கச் செய்கை. அதாவது— அன்றீன்ற கன்றினிடம் தாய்ப்பசு இக்குணத்தைக் காட்டுகையாலே இதற்கு ‘வாத்ஸல்யம்’ எனப்பெயர்.

**45. கோபாலத்வம் ஜுகுப்ஸிதம்**

[வெறுக்கத்தக்கதான இடைச்சாதியை பகவான் மேற்கொண்டான்.] என்று கிருஷ்ணவதாரத்தில் இக்குணம் மிக விளங்கியது. **(மார்த்தவ)** மென்மை. இது திருமேனியின் குணமாயிருந்த போதிலும் இங்கு ஆத்ம ஸ்வரூபத்தின் குணங்களோடு சேர்த்துப் படிக்கப்படுகையால்,

மார்த்தவார்ஜவ ஸௌஹார்த்த ஸாம்ய-

---

மனத்திலுள்ள மென்மையைக் காட்டுகிறது. அதாவது—அடியார்களைப் பிரிந்தால் பொறுக்கமாட்டாமல் இருத்தல்.

118. ஸம்ஸ்மராம்யஸ்ய வாக்யானி ப்ரியாணி மதுராணி ச।
ஹ்ருத்யாந்யம்ருதகல்பானி மந:ப்ரஹ்லாதநானி ச॥
[ரா. ஆ. 16-39]

[பிரியமாயும், இனியவையாயும், ஹ்ருதயத்திலிருந்து வெளிவருபவையாயும், அம்ருதம் போன்றவையாயும், மனத்தை உகப்பிப்பவையாயுமுள்ள இந்த பரதனுடைய வாக்கியங்களை நினைக்கிறேன்.] என்கிறபடியே பரதன் விஷயத்தில் ஸ்ரீராமபிரான் இக்குணத்தைக் காட்டினார்.

46. அநித்ரஸ் ஸததம் ராம: ஸுப்தோऽபி ச நரோத்தம:।
ஸீதேதி மதுராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபுத்யதே॥
[ரா. ஸு. 36-44]

[(ஸீதையைப் பிரிந்த) ராமன் எப்போதும் தூக்கமற்றவராகவே இருக்கிறார்; நரஶ்ரேஷ்டரான அவர் தூங்கினாலும் 'ஸீதே' என்னும் இனிய சொல்லை உச்சரித்துக் கொண்டே விழித்தெழுகிறார்.] (ஆர்ஜவ) நேர்மை. அதாவது—அடியார்களோடு கலக்கும் போது தன்னுடைய மனம் மொழி மெய் ஆகிய முக்கரணங்களும் ஒருபடிப்பட்டிருக்கை. அதாவது—அவர்கள் முக்கரணங்களும் ஒருபடிப்பட்டிராவிட்டாலும், அவர்கள் நேர்மையாக நடக்கும்படி தான் நேர்மையுடன் இருக்கை. (ஸௌஹார்த்த) அதாவது—நன்மையை விரும்புகிறவன் 'ஸுஹ்ருத்' எனப்படும் நண்பனாகிறான். அவனுடைய தன்மை 'ஸௌஹார்த்தம்' ஆகிறது. அடியார்கள் நேரிலிருக்கும்போதும், இல்லாதபோதும் ஒக்க அவர்களுக்கு எல்லா மங்களங்களையும் தேடித் தருகை. (ஸாம்ய) அதாவது—ஜாதி, குணம், ஒழுக்கம் முதலானவற்றின் ஏற்றத் தாழ்வுகளைப் பாராமல், அடியார்கள் தன்னிடம் ஈடுபடுவதே காரணமாக அவர்கள் தன்னை அடையும் விஷயத்தில் ஸமனாயிருக்கை.

காருண்ய

---

47. குஹேந ஸஹிதோ ராமோ லக்ஷ்மணேந ச ஸீதயா

[ரா. பா. 2-30]

[ராமபிரான் குஹனோடும், லக்ஷ்மணனோடும், சீதையோடும் கூடியவரானார்.]

48. ஶபர்யா பூஜித: ஸம்யக் ராமோ தஶரதாத்மஜ:

[ரா. பா. 2-58]

[தஶரதகுமாரனான ராமபிரான் ஶபரியாலே நன்கு பூஜிக்கப்பட்டான்.] என்று ஸ்ரீராமாயணத்தில் குஹன் விஷயத்திலும், ஶபரி விஷயத்திலும் இக்குணம் காட்டப்பட்டது. (காருண்ய) அதாவது—

49. ஸ்வார்த்த நிரபேக்ஷபரது:க்காஸஹிஷ்ணுத்வம்

[தனக்குப் பலனை எதிர்பாராமல், பிறர் துன்பம் பொறாமலிருத்தல் தயையாகும்.] என்று ஸ்ரீபாஷ்யம் முதலானவற்றில் இக்குணத்தின் லக்ஷணம் சொல்லப்பட்டது.

119. வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:க்கித: ।
உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி ॥

[ரா-அ 2-40]

[(ராமன்) மனுஷ்யர்களுடைய து:க்கங்களில், (அவர்களைக் காட்டிலும்) அதிகமாகத் துன்புறுகிறான். (அவர்களுடைய) எல்லா உத்ஸவங்களிலும் தந்தையைப்போல் ஆனந்தப்படுகிறான்.]

120. இயம் ஸா யத்க்ருதே ராமஶ் சதுர்ப்பி: பரிதப்யதே ।
காருண்யேநாந்ருஶம்ஸ்யேந ஶோகேந மதநேந ச ॥
ஸ்த்ரீ ப்ரணஷ்டேதி காருண்யாதாஶ்ரிதேத்யாந்ருஶம்ஸ்யத: ।
பத்நீ நஷ்டேதி ஶோகேந ப்ரியேதி மதநேந ச ॥

[ரா-ஸு 15-49&50]

மாதுர்ய

---

[எவளுக்காக ஸ்ரீராமபிரான் கருணை, இரக்கம், ஶோகம், காமம் என்னும் நான்கினாலும் வருந்துகிறாரோ அந்த ஸீதை இவளே. (ஸ்ரீராமபிரான்) 'ஒரு பெண்பிள்ளை அபஹரிக்கப்பட்டாளே' என்னும் கருணையினாலும், 'நம்மைச் சேர்ந்தவள் (அபஹரிக்கப்பட்டாளே)' என்னும் இரக்கத்தாலும், 'நம்முடைய மனைவி நஷ்டமாயினளே' என்னும் ஶோகத்தினாலும், 'நமக்கு இனியவள் (அபஹரிக்கப்பட்டனளே)' என்னும் காமத்தினாலும் (வருந்துகிறார்).] என்று ஸ்ரீராமாயணத்தில் இந்தக் குணத்தை மிகச் சிறப்பாகக் காட்டினான் ஸ்ரீராமபிரான். (மாதுர்ய) இனிமை. அதாவது—ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதிகள் (செல்வங்கள்) ஆகிய அனைத்தாலும் இனிமையளிப்பவனாய் இருக்கை. இவன் ஒருவனைக் கொல்ல முற்பட்டாலும் அவனுக்கும் இனிமை பயப்பவனாயிருக்கை.

51. ஏஹ்யேஹி புல்லாம்புஜ பத்ரநேத்ர
 நமோऽஸ்து தே தேவவராऽப்ரமேய ।
 ப்ரஸஹ்ய மாம் பாதய லோகநாத
 ரதோத்தமாத் பூதஶரண்ய ஸங்க்யே ॥
 [பார-பீஷ்மபர்வம் 59-98]

[மலர்ந்த தாமரையிதழ் போன்ற திருக்கண்களையுடையவனே! வாராய்! வாராய்! ஸர்வபூதங்களுக்கும் ஶரண்யனே! யுத்தத்தில், என்னை இந்தச் சிறந்த ரதத்திலிருந்து பலாத்கரித்து வீழ்த்துவாய். லோகநாதனே! தேவஶ்ரேஷ்டனே! அளத்தற்கரியாய்! உனக்கு நமஸ்காரம்.] என்று மஹாபாரதத்தில் பீஷ்மர் விஷயத்தில் இதைக் கண்டோம்.

52. அஸூர்யமிவ ஸூர்யேண நிவாதமிவ வாயுநா ।
 க்ருஷ்ணேந ஸமுபேதேந ஜஹ்ருஷே பாரதம் புரம் ॥

[ஸூர்யனற்றவிடத்தில் ஸூர்யன் உதித்தாற்போலவும், காற்றில்லா இடத்தில் காற்றடித்தாற்போலவும் க்ருஷ்ணன் வந்ததும் பாரதராஜதானி ஆநந்தித்தது.] என்று அனைவர்க்கும் இனிமையளிப்பவனாய் இருக்கை சொல்லப்பட்டது.

**கா₃ம்பீ₄ர்யௌதா₃ர்ய சாதுர்ய**

---

31. ஸர்வக₃ந்த₄ஸ் ஸர்வரஸ: [சா₂ந். 3-14-2]

[(பரமாத்மா) எல்லா க₃ந்த₄ங்களையுமுடையவன்; எல்லா ரஸங்களையு முடையவன்.] என்று உபநிஷத்திலும் இவன் இனிமையே வடிவெடுத் தவன் என்று சொல்லப்பட்டது. **(கா₃ம்பீ₄ர்ய)** அதாவது—அடியார் களுக்காக இவன் செய்ய நினைத்திருக்குமவை எவராலும் அளவிட வொண்ணாததாயிருக்கை. அதாவது—தான் கொடுக்கும் கொடையின் சீர்மையையும் கொள்ளுகிறவனுடைய சிறுமையையும் பாராமல் கொடுக்கை. எல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்யாதவனாயிருக்கை.

**53. ய ஆத்மதா₃ ப₃லதா₃:** **[யஜு—காட₂க 5-36]**

[எந்தப் பரமபுருஷன் தன்னையும் கொடுத்துத் தன்னை அனுப₄விக்கத் தக்க ப₃லத்தையும் கொடுக்கிறானோ.] என்று வேதமும் இக்குணத்தை விவரித்தது. ''உன்னடியார்க்கு என் செய்வனென்றே இருத்தி நீ'' [பெரிய திருவ 53] என்றார் ஆழ்வாரும். **(ஔதா₃ர்ய)** அதாவது— அடியார்களுடைய விருப்பங்களைத் தானே யாசித்துக் கொடுக்கை.

**54. அத₂ மத்₄யமகக்ஷ்யாயாம் ஸமாக₃ச்ச₂த் ஸுஹ்ருஜ்ஜனை: ।**
**ஸ ஸர்வாநர்த்தி₂நோ த்₃ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்₃ய ச ॥**
**[ரா-அ 16-27]**

[அந்த ஸ்ரீராமன் யாசிப்பவர்களைக் கண்டு, (அவர்களை) எதிர்கொண்டு, ஆநந்த₃ப்படுத்திப் பிறகு நடுக்கட்டில் நண்பர்களுடன் சேர்ந்தார்.] என்று **ஸ்ரீ**ராமாயணத்திலும்,

**55. உதா₃ராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்**
**[கீ₃தை 7-18]**

[இவர்கள் எல்லாரும் உதா₃ரமானவர்களே; ஜ்ஞாநியோ எனக்கே ஆத்மா (தா₄ரகன்) என்று என் ஸித்₃தா₄ந்தம்.] என்று கீதையிலும் இக்குணம் காட்டப்பட்டது. **(சாதுர்ய)** அதாவது—அடியார்களுடைய தோ₃ஷங்களைப் பிராட்டியும் அறியாதபடி மறைக்கும் திறமை அல்லது அடியார்கள் தன்னுடைய காக்கும் திறமையில் சந்தேஹம் கொண்டா லும் அந்த சந்தேகத்தைப்போக்கி ரக்ஷிக்கை.

ஸ்தை₂ர்ய

---

**56. உத்ஸ்மயித்வா மஹாபா₃ஹு: ப்ரேக்ஷ்ய சாஸ்தி₂ மஹாப₃ல:।**
**பாத₃ாங்கு₃ஷ்டே₂ந சிக்ஷேப ஸம்பூர்ணம் த₃ஶயோஜநம் ॥**

[ரா-பா₃ 1-65]

[மஹாப₃லரும் தடந்தோளருமான ராமபிரான் முறுவலித்துக்கொண்டு அந்த து₃ந்து₃பி₄யின் எலும்பைப் பார்த்து, பத்து யோஜனை தூரத்திற்கு அப்பால், அதைத் தன் கால் கட்டை விரலாலே தள்ளினுர்.]

**121. பி₃பே₃த₃ ச புநஸ் ஸாலாந் ஸப்தைகேந மஹேஷுணா।**
**கி₃ரிம் ரஸாதலம் சைவ ஜநயந் ப்ரத்யயம் ததா₃ ॥**

[ரா-பா₃ 1-66]

[(து₃ந்து₃பி₄யின் எலும்பை எறிந்த பிறகு) மறுபடியும் ஸுக்₃ரீவனுக்கு நம்பிக்கையுண்டாவதற்காக, ஏழு ஸால மரங்களையும், மலையையும், ரஸாதலத்தையும் ஒரு பெரிய அம்பினுலே பிளந்தான் ராமன்.] என்று ஸுக்ரீவன் விஷயத்தில் இக்குணத்தைக் காட்டியது ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டதன்றே. (ஸ்தை₂ர்ய) ஸ்திரத்தன்மை. அதாவது— ஆயிரம் இடையூறுகள் உண்டாஞலும், அடியார்களைக் காப்பேன் என்ற பெருமை அழிக்கவொண்ணுததாய் இருக்கை. ஸுக்ரீவன் முதலானுர் நேரே மாற்றுக் கருத்தைச் சொன்னபோதும்,

**57. மித்ரபா₄வேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத₂ஞ்சந।**
**தோ₃ஷோ யத்₃யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத₃க₃ர்ஹிதம் ॥**

[ரா-யு. 18 3]

[நண்பனுடைய பா₄வத்தோடு நெருங்கின இவ்விபீ₄ஷணனை ஒரு பொழுதும் கைவிடமாட்டேன். அவனிடம் தோ₃ஷமிருந்தாலும் இருக்கட்டுமே. நல்லோர்களுக்கு இவனை ஸ்வீகரிப்பது நிந்திக்கத்தக்கதல்ல.] என்று விபீஷணன் விஷயத்தில் இதைக் காட்டினுனன்றே ஸ்ரீராமபிரான். ஆக, இப்பன்னிரண்டு குணங்களும் அடியார்க்காக ஏற்பட்டவை.

## தை₄ர்ய ஶௌர்ய

அடுத்தபடியுள்ள மூன்று கு₃ணங்கள் அடியார்களுடைய பகைவர்களை விஷயமாகக் கொண்டது. **(தை₄ர்ய)** அதாவது—எதிரியை ஒரு பொருளாக நினைக்காதிருக்கை; இலங்கையில் ராவணனும் அவனது ஸேனைகளும் சிறிதும் அழிக்கப்படாமலிருக்க, அவனுடைய தம்பியான விபீஷணனை, கடலுக்கு இக்கரையிலேயே லங்கா ராஜ்யத்திற்கு அரசனாகப் பட்டாபிஷேகம் செய்து வைத்தானன்றோ ஸ்ரீராமபிரான்.

**122. அப்₃தி₄ம் ந தேரித₂ ந ஜிக்₃யித₂ ராக்ஷஸேந்த்₃ரம்**
**நைவாஸ்ய ஜிஜ்ஞித₂ யதா₂ ச ப₃லாப₃லம் த்வம் ।**
**நிஸ்ஸம்ஶயஸ் ஸபதி₃ தஸ்ய பதே₃ऽபி₄யஷிஞ்சஸ்**
**தஸ்யாநுஜம் கத₂மித₃ம் ஹி விபீ₄ஷணஞ்ச ॥**

**[அதிமாநுஷஸ்தவம்-24]**

[எம்பிரானே! நீ கடலையும் கடக்கவில்லை; ராக்ஷஸாதி₄பதியை ஜயிக்கவுமில்லை; அவனுடைய ப₃லாப₃லங்களைக் கூட அறியவில்லை; அப்படியிருக்கும்போது அவன் தம்பி விபீ₄ஷணனை உடனே எப்படி அவனுடைய ஸ்தா₂னத்தில் ஐயமின்றியே அபி₄ஷேகம் பண்ணிவைத்தாய்?] என்று இந்த குணத்தை அனுபவித்தாரன்றோ ஆழ்வான். இராமனுடைய மூலப₃லஸேனை கடல்போலே திரண்டு போர் புரிய வந்தபோது, ஸ்ரீராமபிரான் அதற்கு முன்னிருந்ததைக் காட்டிலும் வேறு எந்த வேறுபாடும் இல்லாமலிருந்ததை இந்த கு₃ணத்திற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். **(ஶௌர்ய)** அதாவது—எதிரியின் ஸேனையினுள்ளே புகும்போது, தன் ஸேனையில் புகுவதுபோலே இருக்கும் சூரத்தன்மை.

**59. சி₂ந்நம் பி₄ந்நம் ஶரைர் த₃க்₃த₄ம் ப்ரப₄க்₃நம் ஶஸ்த்ர பீடி₃தம்।**
**ப₃லம் ராமேண த₃த்₃ருஶூர் ந ராமம் ஶீக்₄ரகாரிணம் ॥**

**[ரா-யு 94-22]**

[ராக்ஷஸஸேனையானது அம்புகளால் வெட்டப்பட்டும், பிளக்கப்பட்டும், எரிக்கப்பட்டும், நன்கு உடைக்கப்பட்டும், துன்புறுத்தப்பட்டும் கிடப்பதை அனைவரும் கண்டனர். மிகவேக₃மாகக் காரியம் செய்யும்

ராமனைக் கண்டாரில்லை.] என்கிறபடியே, எதிரியின் ஸேனையைச் சிதறவடிக்கும் தன்மை என்றும் கொள்ளலாம். **(பராக்ரம)** பிறரை வெற்றி கொள்ளும் தன்மை. அதாவது — போர்க்களத்தில் கையும் வில்லுமாக வலம் வரும்போது ஸஞ்சரிக்கும் ஸஞ்சாரத்திலும் எதிரிகள் ஈடுபட்டு எதிரியென்று அறியாதபடி ஸஞ்சரிக்கை.

**123. ப்ரஹர்த்தாரம் ஶரீரேஷு ந தே பஶ்யந்தி ராகவம் ।**
**இந்த்ரியார்த்தேஷு திஷ்டந்தம் பூதாத்மாநமிவ ப்ரஜா: ॥**
**[ரா-யு 94-23]**

[தங்கள் ஶரீரத்திலே அடிக்கும் ராகவனை அந்த ராக்ஷஸர்கள் காண வில்லை. (எதுபோலவென்னில்:) இந்த்ரிய விஷயங்களை அநுபவிக்கும் பஞ்சபூதாத்மாவான ஜீவாத்மாவை மனிதர்கள் காணாததுபோலே.] என்று இவ்விஷயம் ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டது.

இனி, அடியார்கள் விஷயமாகவும், உபாய விஷயமாகவும், உபேய விஷயமாகவும் இருக்கும் நாலு குணங்கள் சொல்லப்படுகின்றன. **(ஸத்யகாம)** நித்யமான காமங்களையுடையவன் என்று பொருள். **"காம்யந்த இதிகாமா:"** [விரும்பப்படும் வஸ்துக்கள் **'காம'** ஶப்தத்தாலே சொல்லப்படுகின்றன] என்னும் வ்யுத்பத்தியாலே, அடியார்களால் அநுபவிக்கப்படும் குணங்களையும் விபூதிகளையும் **'காம'** ஶப்தம் சொல்லுகிறது. **(ஸத்யஸங்கல்ப)** அதாவது—அடியார்களுக்கு அவர்கள் என்றும் அநுபவித்திராத இனிய பொருள்களை ஸங்கல்ப மாத்ரத்தாலே உண்டாக்கி அவர்களை அநுபவிக்கச் செய்யும் விஷயத்தில் தடையற்றிருக்கை. பழுதாகாத ஸங்கல்பத்தையுடையவன் என்று பொருள். "காணவாராய் என்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து" [திருவாய் 8 5-2] என்று இவனைக் காண ஆசைப்படும் அடியார்களுக்கு தேவனாகவும் மனிதனாகவும் அவதாரம் செய்யும் ஸங்கல்பம் தடையற்றதாயிருக்கை என்றும் பொருள் கொள்ளலாம். **(க்ருதித்வ)** அதாவது—ஆஶ்ரிதர்களுக்குக் காரியம் செய்வதைத் தன் பேறாகக் கொள்ளுதல்.

க்ருதஜ்ஞதா த்₃யஸங்க்₃யேய

60. அபி₄ஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்₃ரம் விபீ₄ஷணம் ।
க்ருதக்ருத்யஸ்தத₂ா ராமோ விஜ்வர: ப்ரமுமோத₃ ஹ ॥

[ரா-பா₃ 1-85]

[லங்கையில் ராக்ஷஸ ராஜாவாக விபீ₄ஷணனை அபி₄ஷேகம் செய்து தன் காரியத்தைச் செய்து முடித்தவனான ராமன் அப்போதே கவலை நீங்கப்பெற்று ஸந்தோஷித்தான்.] என்கிறபடியே, விபீஷணன் காரியம் செய்தவுடன் தன் காரியம் செய்தாற் போலே உகந்தானன்றோ ஸ்ரீராமபிரான். அடியார்களின் காரியங்களைத் தான் ஏறிட்டுக் கொண்டு செய்கை என்றும் கொள்ளலாம். (க்ருதஜ்ஞதா) செய்த நன்மையை மறக்காமை. அதாவது— அடியார் ஒரு தடவை ஶரணம் (தஞ்சம்) என்று கூறிவிட்டால், அது கொண்டே அவர்கள் பிறகு செய்யும் குற்றங்களைக் கணிசியாமல் சரணம் பற்றியதையே நினைத்திருக்கை. அடியார்க்காகத் தான் செய்த நன்மைகளைக் கணிசியாமல் அவர்கள் செய்த அற்பமான அனுகூலச் செயல்களையே நினைத்திருக்கை என்றும் கொள்ளலாம். அடியார்களுக்கு எல்லாம் செய்தாலும், முதலில் "ஶரணம்" என்று சொன்ன வார்த்தையையே நினைத்துப் புண்பட்டிருக்கை என்றும் கொள்ளலாம். அடியார்களுக்குத் தான் எல்லாம் செய்தாலும், அதனை மறந்து அவர்கள் செய்த தீமைகளையும் கணிசியாமல், தான் செய்யவேண்டிய நன்மைகளையே நினைத்திருக்கை என்றும் கொள்ளலாம்.

62. தம் து மே ப்₄ராதரம் த்₃ரஷ்டும் ப₄ரதம் த்வரதே மந: ।
மாம் நிவர்த்தயிதும் யோऽஸௌ சித்ரகூடமுபாக₃த: ॥
ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா ॥

[ரா. யு. 124-19]

[என்னைத் திருப்பியழைத்துச்செல்ல எவனொருவன் சித்திர கூடத்திற்கு வந்தானோ, அந்த என்னுடைய தம்பியாகிய ப₄ரதனைப் பார்க்க என் மனம் விரைகிறது. தலையாலே யாசித்த அவனுடைய வார்த்தை என்னால் செய்யப்படவில்லையே.] என்று ப₄ரதன் விஷயத்தில் இக்குணம் காட்டப்பட்டது. (ஆதி₃) இக்குணங்களுக்கு ஒரு முடிவு இல்லாமையால் முதலான என்கிறார். (அஸங்க்₃யேய கல்யாண கு₃ண

**கல்யாண கு3ணக3ணௌக4 மஹார்ணவம்,**
**பரப்3ரஹ்மபூ4தம் புருஷோத்தமம்,**

---

**க3ணௌக4 மஹார்ணவம்)** என்னுடைய மனத்திற்குத் தோன்றிய சில கு3ணங்களைச் சொன்னேனேயொழிய, சொல்லாத கு3ணங்களுக்கு ஓர் எண்ணிக்கையில்லை. 'ஒரு பெருங்கடலில் உள்ள ஜல பரமாணுக்களுக்கு எண்ணிக்கையுண்டானால், எம்பெருமானுடைய கு3ணங்களுக்கும் எண்ணிக்கை உண்டாகலாம்'' என்னும் கருத்தை, **''மஹார்ணவ''** ஶப்3த3த்தாலே காட்டுகிறார். ஶரணாக3தி க3த்3யத்தில், ஐந்தாவது சூர்ணையில், **''கு3ணக3ணௌக4 மஹார்ணவ''** என்னுமிடத்தின் வ்யாக்யானத்தில் எடுக்கப்பட்ட 63, 64-வது ப்ரமாணங்கள் இங்கும் அநுஸந்திக்கத்தக்கவை.

**(பரப்3ரஹ்மபூ4தம் புருஷோத்தமம்)** **''பரப்3ரஹ்ம''** ஶப்3த3த்தாலும், **''புருஷோத்தம''** ஶப்3த3த்தாலும் வேதாந்தங்களிலே புகழ்பெற்றவன். **பரப்3ரஹ்மமாவது**— ப்3ருஹத்த்வம், ப்3ரும்ஹணத்வம் ஆகிய குணங்கள் இருக்கையால் ப்3ரஹ்ம ஶப்3த3த்தால் சொல்லப்படும் பரம்பொருள். **ப்3ருஹத்த்வமாவது**— மற்ற அனைவரைக் காட்டிலும் தான் பெரியவனாயிருக்கை. **ப்3ரும்ஹணத்வமாவது**—''தம்மையேயொக்க அருள்செய்வர்'' [பெரிய திரு. 11-3-5] என்றும்,

**124. இத3ம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாத4ர்ம்யமாக3தா: ।**
**ஸர்க்கே3(அ)பி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யத2ந்தி ச ॥**

**[கீ3தை 14-2]**

[இந்த ஞானத்தை அடைந்து, என்னைப்போல் ஆனவர்கள் ஸ்ருஷ்டி காலத்திலும் பிறப்பதில்லை; ப்ரளயகாலத்திலும் அழிவதில்லை.] என்றும் சொல்லுகிறபடியே. அடியார்களைத் தன்னைப்போலே பெரியவர்களாக்குகை. ''தன்னுகவே கொண்டு சன்மம் செய்யாமையும் கொள்ளுமே'' [திருவாய் 3-9-4] என்று நம்மாழ்வாரும் இதை அருளிச் செய்தார்.

ஸ்ரீரங்கஶாயிநம், அஸ்மத்ஸ்வாமிநம்,

---

புருஷோத்தமத்வமாவது—

28. த்₃வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச ।
க்ஷரஸ் ஸர்வாணி பூ₄தாநி கூடஸ்தோ₂ऽக்ஷர உச்யதே ॥
உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத்யுதா₃ஹ்ருத: ।
யோ லோகத்ரயமாவிஶ்ய பி₃ப₄ர்த்யவ்யய ஈஶ்வர: ॥
யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராத₃பி சோத்தம: ।
அதோऽஸ்மி லோகே வேதே₃ ச ப்ரதி₂த: புருஷோத்தம: ॥

[கீ₃தை 15-16, 17, 18]

[க்ஷரன் என்றும், அக்ஷரன் என்றும் லோகத்தில் புருஷர்கள் இருவித₄ மானவர்கள்; எல்லா பூ₄தங்களும் க்ஷரனாகும். கூடஸ்த₂னான முக்தாத்மா அக்ஷரனெனப்படுகிறான். எவனொருவன் மூவுலகங்களிலும் நுழைந்து அவற்றை த₄ரிப்பவனாகவும், குறைவற்றவனாகவும், நியமிப்பவனாகவு மிருக்கையால் பரமாத்மாவென்று சொல்லப்படுகிறானோ அந்தப் புருஷோத்தமன் (முன் சொல்லப்பட்ட புருஷர்களைக் காட்டிலும்) வேறுபட்டவன். நான் ஞானத்தில் ஏற்றத்தாழ்வுகளுள்ள க்ஷரபுருஷனை அதிக்ரமித்திருப்பதாலும், ஞானத்தில் ஏற்றத்தாழ்வுகளற்ற முக்த புருஷனைக் காட்டிலும் மேலானவனாயிருப்பதாலும், ஶ்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் புருஷோத்தமனென்று பிரஸித்₃தி₄பெற்றிருக்கிறேன்.] என்கிறபடியே, அனைவரிலும் மேம்பட்டவன் என்றும், "புரு-ப₃ஹு ஸநோதி-த₃தா₃தீதி புருஷ:" [புரு அதிகமாகை ஸநோதி— கொடுக்கிறானாகையாலே புருஷன் ஆகிறான்; (அவர்களில் சிறந்தவன் புருஷோத்தமன் எனப்படுகிறான்)] என்னும் வ்யுத்பத்தியாலே வேண்டுவோர் வேண்டுவனவெல்லாம் கொடுப்பவனாகையாலே மிகவும் வண்மைமிக்கவன் என்றும் சொல்லப்படுகை. (ஸ்ரீரங்க₃ ஶாயிநம்) முற்கூறியபடி என்றும் ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் முதலான ப்ரமாண க்ரந்தங்களில் கேட்டுப்போகும் நிலையில் இல்லாமல் கண்ணாலே கண்டு அநுபவிக்கலாம்படி திருவரங்கம் பெரிய கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற நீர்மையைச் சொல்லுகிறது. (அஸ்மத் ஸ்வாமிநம்) இப்பதத்தால், "கிடந்ததோர்

**ப்ரபு₃த்₃த₄ நித்ய நியாம்ய நித்யதா₃ஸ்யைகரஸாத்மஸ்வ பா₄வோऽஹம், தததே₃கானுப₄வ:, தததே₃கப்ரிய:, பரிபூர்ணம் ப₄க₃வந்தம் விஶத₃தமானுப₄வேந நிரந்தரமநுபூ₄ய**

---

கிடக்கை'' [திருமாலை 23] என்கிறபடியே, கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற அழகாலும், நீர்மையாலும், தன்னோடு எனக்குண்டான முறையை உணர்த்தினவன் என்று சொல்லப்படுகிறது.

126. **அஹமஸ்யாவரோ ப்₄ராதா கு₃ணைர் தா₃ஸ்யமுபாக₃த:** [ரா. கி. 4-12]

[நான் இவருடைய நினைவினால் (இவருக்குத்) தம்பி; (உண்மையில்) இவருடைய குணங்களால் அடிமைப்பட்டவன்.] என்று ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டதன்றோ.

இதுவரையில் கைங்கர்யத்தைக் கொள்பவனான எம்பெருமானைப் பற்றிச் சொன்னார். இனிமேல் கைங்கர்யம் செய்பவரான தம் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார். (**ப்ரபு₃த்₃த₄ நித்ய நியாம்ய நித்ய தா₃ஸ்யைக ரஸ ஆத்மஸ்வபா₄வோऽஹம்**) எப்போதும் எம்பெருமானால் நியமிக்கப்படுவதாய், எப்போதும் அடிமை செய்வதையே பேரானந்தமாகக் கொண்ட ஆத்ம ஸ்வபா₄வம் உள்ளபடி ப்ரகாஶிக்கப்பெற்ற நான். இதனால் தன்னை ஸ்வதந்த்ரனாக நினைக்கையும், ஶப்₃தா₃தி₃ விஷயங்களில் ஈடுபடுகையும் ஆத்மாவை இல்லாத பொருள்போல் ஆக்கிவிடுகிறது என்று உணர்த்தப்படுகிறது. (**தததே₃கானுப₄வ:**) ப₄க₃வத்₃ விஷயமொன்றே தன் அறிவுக்கு விஷயமாம் படியாய், மற்ற விஷயங்களைப் பொருட்படுத்தாதவனாய் இருப்பவன். (**தததே₃கப்ரிய:**) எம்பெருமானையே ப₄க்திக்கு விஷயமாக்கினவன். இதனால் ப₄க₃வத₃நுப₄வத்திற்குக் காரணமான பரப₄க்தி பரஜ்ஞான பரமப₄க்திகளை நினைக்கிறது. (**பரிபூர்ணம் ப₄க₃வந்தம் விஶத₃தமானுப₄வேந நிரந்தரமநுபூ₄ய**) ஜ்ஞானம் முதலான குணங்களால் குறைவற்றிருக்கிற எம்பெருமானைப் பரிபூர்ணமாக மிகமிகத் தெளிவான அனுபவத்தாலே இடைவிடாதே அனுபவித்து. பரிபூர்ணமான அனுபவமாவது—எம்பெருமானுடைய ஸ்வரூபம், ரூபம், கு₃ணம், விபூ₄திகளாகிற

**தத₃நுப₄வ ஜநிதாநவதி₄காதிஶய ப்ரீதிகாரிதாஶேஷா-வஸ்தோ₂சிதாஶேஷஶேஷதைகரதிரூப நித்யகிங்கரோ ப₄வாநி ||**

---

செல்வங்கள் அனைத்தும் அனுப₄வத்துக்கு விஷயமாயிருக்கை. விஶத₃ாநுப₄வமாகிறது—தெளிவான அனுபவம். அதாவது—ப்ரத்யக்ஷமாக அனுபவிப்பதை ஒத்திருக்கை. அதுதான் பரப₄க்தி நிலையில் அனுபவம். விஶத₃தராநுப₄வமாகிறது—மிகத்தெளிவான அனுபவம். அது பரஜ்ஞான நிலையில் அனுபவம். விஶத₃தமாநுப₄வமாகிறது—மிகமிகத் தெளிவான அனுபவம். அது பரமப₄க்தி நிலையில் அனுபவம். நிரந்தரமாக அனுபவிக்கையாவது—நடுநடுவில் மற்ற விஷயங்கள் கலக்காதிருக்கை. **(தத₃நுப₄வஜநித அநவதி₄காதிஶய ப்ரீதி காரித அஶேஷாவஸ்தோ₂சித அஶேஷ ஶேஷதைகரதிரூப நித்ய கிங்கரோ ப₄வாநி)** அவ்வநுப₄வத்தாலே உண்டான எல்லையற்ற மேன்மையையுடைய அன்பினாலே செய்விக்கப்படுவதாய், எல்லா நிலைகளிலும் உசிதமான, எல்லா அடிமைகளில் மாத்திரம் ஆசையே வடிவாக உடையதாய், ஆத்மாவுள்ளவரையில் நித்யமாக நடக்கும் கைங்கர்யத்தைச் செய்பவனாக வேண்டும். அநவதி₄காதிஶயமாகையாவது — நித்யமாயிருக்கும் கைங்கர்யத்துக்கு மூலமாயிருக்கை. முற்கூறிய பரப₄க்தி முதலானவற்றைக் காட்டிலும் விஞ்சியிருக்கை. அஶேஷாவஸ்தைகளாவன—அந்தப்புரம், திருமாமணி மண்டபம், பூஞ்சோலை, நீர் நிறைந்த குளம் முதலானவற்றில் நிலை என்றும் கொள்ளலாம். அல்லது பரம், வ்யூஹம், விப₄வம், அர்ச்சாவதாரம் முதலிய நிலைகள் என்றும் கொள்ளலாம். அஶேஷஶேஷதையாகிறது—

**"சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்**
**நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்**
**புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்**
**அணையாம் திருமாற்கு அரவு"** **[முதல் திருவ. 53]**

என்றும், இதே பொருளை அருளிச்செய்யும் ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்ன ஶ்லோகமான (ஶரணாக₃தி க₃த்யம் மூன்றாவது சூர்ணை வ்யாக்யானத்தில் எடுக்கப்பட்ட) 36-வது ப்ரமாணத்திலும்,

**2. ஸ்வாத்ம நித்ய நியாம்ய நித்ய தா₃ஸ்யை கரஸாத்ம ஸ்வபா₄வாநுஸந்தா₄ந பூர்வக ப₄க₃வத₃நவதி₄காதிஶய ஸ்வாம்யாத்₃யகி₂ல கு₃ணக₃ணாநுப₄வ**

---

128. கிம் சைநாம் ப்ரதிவக்ஷ்யாமி க்ருத்வா விப்ரியமீத்₃ருஶம்।
யதா₃ யதா₃ ஹி கௌஸல்யா தா₃ஸீவச்ச ஸகீ₂வ ச ॥
பா₄ர்யாவத் ப₄கி₃நீவச்ச மாத்ருவச்சோபதிஷ்ட₂தி ॥
[ரா. அ. 12-68]

[கௌஸல்யை தாஸியைப்போலும், ஸகியைப்போலும், மனைவியைப் போலும், ஸஹோத₃ரியைப்போலும், தாயைப் போலும் ஶுஶ்ருஷை செய்யும்போதெல்லாம், இப்படிப்பட்ட அநிஷ்டமான காரியத்தைச் செய்துவிட்டு அவளுக்கு என்ன பதில் சொல்லுவேன்?] என்று ஸ்ரீராமாயணத்திலும் சொல்லுகிறபடியே பலவகைப்பட்ட அடிமைகள்.

**இரண்டாவது சூர்ணை அவதாரிகை :** முதல் சூர்ணையில் ப்ராப்யத்தைப் பிரார்த்தித்தார். இந்தச் சூர்ணையில் தம்மை ரக்ஷிப்பதற்கு வேறொருவரில்லாமையாகிற அநந்யக₃தித்வம், ப்ராப்யத்தைப் பேறுவதற்குத் தம்மிடம் எந்தக் கைம்முதலும் இல்லாமையாகிற ஆகிஞ்சந்யம், தம்மிடமுள்ள குற்றங்கள் ஆகியவற்றை முன்னிட்டுக்கொண்டு திருவடிகளிலே ஶரணம் புகுகிறார்.

**வ்யா ;** தம் ஸ்வரூபத்தை அநுஸந்தித்த உகப்பாலும், ப₄க₃வத்₃ கு₃ணத்தை அனுபவித்த உகப்பாலும், கைங்கர்ய ஸ்வரூபத்தைப் பேசிய உகப்பாலும், **"ஸ்வாத்ம நித்ய நியாம்ய"** என்று தொடங்கி **"நித்யகைங்கர்ய"** என்னுமளவும் முதல் சூர்ணையில் சொன்ன அர்த்தங்களையே திருப்பிச் சொல்லுகிறார். பாரதந்த்ர்யச் சுவையாலே ஸ்வரூபத்தை அநுஸந்திப்பதும், எம்பெருமானுடைய சிறப்பாலே அவனுடைய குணங்களை அநுபவிப்பதும், இவ்விரண்டாலும் உண்டான உகப்பால் செய்விக்கப்பட்டதான கைங்கர்யமும் இவருக்கு மிகவும் இஷ்டமாயிருக்குமன்றோ, **(அநவதி₄காதிஶயஸ்வாம்ய)** எல்லையற்ற பெருமையையுடைய ஸ்வாமித்வம் என்று, கர்மம் காரணமாக வரும் ஸ்வாமித்வத்தை விலக்குகிறது. தாய் தந்தை முதலானோருடைய

**ஜநிதாநவதி₄காதிஶய ப்ரீதிகாரிதாஶேஷாவஸ்தோ₂சிதாஶேஷ ஶேஷதைக ரதிரூப நித்யகைங்கர்யப்ராப்த்யுபாய (பூ₄த) ப₄க்தி தது₃பாய ஸம்யக்₃ஜ்ஞாந தது₃பாய ஸமீசீநக்ரியா தத₃நுகு₃ண ஸாத்விகதாஸ்திக்யாதி₃ ஸமஸ்தாத்ம கு₃ணவிஹீந:,**

---

ஸ்வாமித்வம் ஒவ்வொரு ரக்ஷணத்துக்கே காரணமாய், ஒரு நாளிலே முடிந்து போகக்கூடியதாய் இருக்கும். அப்படியல்லாமல், இந்த **'ஸ்வாமித்வம்'** எல்லாவிதமான ரக்ஷணங்களுக்கும் காரணமாய், இயல்வானதானதாகவும் இருக்குமன்றோ. ஸ்வாமித்வத்தால் உண்டான குணங்களைக் கீழ்ச்சூர்ணையிலே அருளிச்செய்தார். இந்தக் குணங்களுக்குக் காரணமான ஸ்வாமித்வத்தை மற்ற எல்லா குணங்களையும் சொல்லும்போது முதலில் சொல்லுகிறார் இங்கு. **"நித்ய கைங்கர்ய"** என்பது வரையிலுள்ள மற்ற பதங்களுக்குச் சென்ற சூர்ணையிலேயே பொருள் விளக்கப்பட்டது. **(ப்ராப்த்யுபாய (பூ₄த) ப₄க்தி)** நித்ய கைங்கர்யத்தை அடைவதற்கு உபாயமாயிருக்கும் ப₄க்தியாவது பரப₄க்தி. **(தது₃பாய ஸம்யக்₃ஜ்ஞாந)** அந்தப் பரப₄க்திக்கு உபாயமான நல்ல ஜ்ஞாநம். அதாவது—ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபங்களை உள்ளபடி அறிவதாய் இடைவிடாமல் தியானிக்கும்படி முதிர்ச்சியடைந்த சிறந்த ஜ்ஞாநம். **(தது₃பாய ஸமீசீநக்ரியா)** அந்தப் பரஜ்ஞாநத்துக்கு உபாயமான நல்ல க்ரியை. அதாவது — கீதையில் சொல்லப்பட்டபடி, ஆத்மாவைப் பற்றிய உண்மையறிவை முன்னிட்டுக் கொண்டதாய், ப₂லம் ஸங்க₃ம், கர்த்ருத்வம் ஆகியவைகளைக் கைவிடுகையாகிற மூன்று விதமான பரித்யாக₃ங்களோடு கூடியதான கர்மயோகம். **(தத₃நுகு₃ணஸாத்விகதாஸ்திக்யாதி₃ ஸமஸ்தாத்ம கு₃ணவிஹீந:)** கீழ்ச்சொன்ன கர்ம யோகத்தை அனுஷ்டிப்பதற்கு வேண்டியவையாய், ஸத்வ கு₃ணத்தை முக்யமாகக் கொண்டவையாய்,

128A. ஶமோ த₃மஸ் தபஶ் ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।
ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்₃ராஹ்மம் கர்ம ஸ்வபா₄வஜம் ॥ [கீதை 18-42]

[வெளியிந்திரியங்களையும், மநஸ்ஸையும் (முறையே) அடக்குவதாகிற ஶமத₃மங்கள், காயக்லேஶ ரூபமான தவம், பரிஶுத்₃தி₄, பொறுமை,

**து₃ருத்தராநந்த தத்₃விபர்யய ஜ்ஞாந க்ரியாநுகு₃ணா-
நாதி₃ பாபவாஸநா மஹார்ணவாந்தர்நிமக்₃ந:,**

---

நேர்மை, ஞானம், விசேஷமான ஞானம், ஆஸ்திகத்தன்மை ஆகிய இவை ப்ராஹ்மணனுக்கு இயற்கையிலுள்ளவை.] என்கிறபடியே ஶமம் த₃மம் எனப்படும் புலனடக்கம் தொடங்கி ஆஸ்திக்யம் (ஆத்திகனாயிருக்கை) ஈறான குணங்களும், கீதை 13-வது அத்தியாயம், 7 முதல் 11 வரையிலுள்ள ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட **'அமாநித்வம்'** (உயர்ந்தோரை அவமதிக்காமை) முதலான குணங்களுமான அனைத்துக் குணங்களும் அற்றவனாயிருந்தபோதிலும். (**து₃ருத்தராநந்த தத்₃விபர்யய ஜ்ஞாநக்ரியாநுகு₃ண அநாதி₃பாபவாஸநா மஹார்ணவாந்தர் நிமக்₃ந:**) இதற்கு முந்திய தொடரில்,

**129. அஹமஸ்ம்யபராதா₄நாமாலயோऽகிஞ்சநோऽக₃தி: ।
த்வமேவோபாயபூ₄தோ மே ப₄வேதி ப்ரார்த்த₂நாமதி: ॥
ஶரணாக₃திரித்யுக்தா ஸா தே₃வேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ॥
[அஹிர்-ஸம்ஹிதை 37-30]**

["நான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாயிருக்கிறேன். (என்னை ரக்ஷித்துக்கொள்ள) ஓர் உபாயமுமற்றவனாயிருக்கிறேன்; (உன்னையொழிய) வேறு க₃தியில்லாதவனாக இருக்கிறேன். நீயே எனக்கு உபாயமாக ஆவாயாக" என்று ப்ரார்த்திக்கும் பு₃த்₃தி₄யே ஶரணாக₃தி எனப்படுகிறது. அது இந்த ப₄க₃வான் விஷயத்தில் செய்யப்படட்டும்.] என்று பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில் ஶரணாக₃தனுக்கு இருக்க வேண்டியதாகச் சொல்லப்பட்டதாய், தம்மிடம் நிறைந்திருப்பதான **'ஆகிஞ்சந்யம்'** எனப்படும் கைம்முதலில்லாமையைச் சொன்னார். இதற்குமேலே, அந்தப் பாஞ்சராத்ர வசனத்தில், "நான் குற்றங்களுக்கெல்லாம் ஓர் இருப்பிடமாயிருக்கிறேன்" என்று சொன்னபடியே, தன்னுடைய குற்றங்களை வெளியிடுகிறார். இதன் பொருளாவது :— கடக்கவரிதாய், எல்லையற்றதாய், கீழ்ச்சொன்ன கர்ம ஜ்ஞாநங்களுக்கு நேர்மாறாய் இருப்பதான தவறான அறிவு, தவறான ஒழுக்கம் ஆகியவையும், அவற்றினால் வினையும் அநாதியாய் இருக்கும் பாபவாஸனையுமாகிற பெருங்கடலில் அழுந்திக்கிடக்கிறவனை என்கை. பாபவாஸனை

**திலதைலவத் தாருவஹ்நிவத் துர்விவேச**
**த்ரிகுணக்ஷணக்ஷரண ஸ்வபாவ**

---

என்பதற்கு பாபத்தால் வந்த வாஸனையென்றோ பாபத்திற்குக் காரணமான வாஸனையென்றோ பொருள் கொள்ளலாம்.

**"திலதைலவத்"** என்று தொடங்கும் அடுத்த தொடராலே இந்தப் பாப வாஸனையாகிற கடலில் வீழ்வதற்குக் காரணமான ஶரீர ஸம்பந்தத்தால் தம் ஸ்வரூபம் மறைக்கப்பட்டிருக்கையைச் சொல்லுகிறார். **(திலதைலவத் தாருவஹ்நிவத் துர்விவேச)** எள்ளில் எண்ணெயும், அரணிக்கட்டையில் அக்னியும், அவற்றைப் பிரித்தறிவதற்கு வழியறிந்தவர்களாய் சக்தியுடையவர்களாய் இருப்பவர்களாலேயே பிரித்தறியக் கூடியவை. அதுபோலவே ஶரீரத்தையும் ஆத்மாவையும் பிரித்தறிவது அனைவராலும் கூடியதன்று. அவற்றைப் பிரித்தறிவதற்கு வழியறிந்தவர்களாய், சக்தியுடையவர்களாலேயே அதனைப் பிரித்தறிய முடியும். அதனாலேயே எள்ளில் எண்ணெய் போலவும், அரணிக் கட்டையில் அக்னிபோலவும் என்று இந்த இரு திருஷ்டாந்தங்களையும் கூறுகிறார். இந்த ஶரீராத்மாக்களைப் பற்றிய ஜ்ஞானத்தின் வாஸனையாலும் எம்பெருமானின் அருளாலேயுமே, சரீரத்தையும் ஆத்மாவையும் பிரித்தறியலாமேயொழிய, மற்றவர்களுக்குப் பிரித்தறிய இயலாதபடி ஶரீரத்தில் ஆத்மா அழுந்தி மறைக்கப்பட்டுக் கிடக்கிறது.

**130. தாருண்யக்நிர் யதா தைலம் திலே தத்வத் புமாநபி ।**
**ப்ரதாநேऽவஸ்திதோ வ்யாபீ சேதநாத்மாऽऽத்மவேதந: ॥**
**[வி. பு. 2-7-28**

[அறிவதையே ஸ்வரூபமாக உடையவனும், தனக்குத்தானே ப்ரகாஶிப்பவனுமான ஜீவன், அரணிக்கட்டையில் நெருப்புபோலவும், எள்ளினுள் எண்ணெய்போலவும் ப்ரக்ருதியினுள் மறைந்து நிற்கிறான்.] என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் சொல்லப்பட்டதன்றோ. **(த்ரிகுணக்ஷணக்ஷரணஸ்வபாவ)** ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களையும், க்ஷணந்தோறும் பரிணமமடைவதையும் இயல்வாக உடையதாய்,

**அசேதந ப்ரக்ருதி வ்யாப்தி ரூப து₃ரத்யய ப₄க₃வந் மாயா திரோஹித ஸ்வப்ரகாஶ:, அநாத்₃யவித்₃யா ஸஞ்சிதாநந்த அஶக்யவிஸ்ரம்ஸந கர்மபாஶ ப்ரக்₃ரதி₂த:,**

---

**(அசேதந ப்ரக்ருதி வ்யாப்திரூப)** தானே ப்ரகாசியாமலிருக்கையாகிற ஜட₃த் தன்மையை இயல்வாக உடையதாய், மூலப்ரக்ருதியிலே விட வொண்ணாத தொடர்பையுடையதாய். இம்மூன்று தொடர்களும் அடுத்து வரும், "ப₄க₃வந்மாயா" என்னும் தொடரோடு அந்வயிக்கின்றன. **(து₃ரத்யய ப₄க₃வந் மாயா திரோஹித ஸ்வப்ரகாஶ:)** ஶரணாக₃தி க₃த்₃ய வ்யாக்யானத்தில் பன்னிரண்டாவது சூர்ணையின் அவதாரிகை யில் எடுக்கப்பட்ட 97-வது ப்ரமாணமான கீ₃தாஶ்லோகத்தில் சொன்ன படி கடக்க அரியதாய், ஸர்வவல்லமையுடைய பரமாத்மாவாலே பிணைக்கப்பட்டதாய்,

113. மாயாந்து ப்ரக்ருதிம் வித்₃யாந்மாயிநந்து மஹேஶ்வரம் [ஶ்வே 4-10]

[ஆஶ்சர்யமான ஸ்ருஷ்டிக்கு ஹேதுவாயிருப்பதால் மாயை ப்ரக்ருதி என்றும், அந்த மாயையைத் தூண்டுபவனை மஹேஶ்வரனென்றும் அறியக்கடவன்.] என்கிறபடியே, "மாயா" என்று சொல்லப்படும் மூலப்ரக்ருதி விகாரமான ஶரீரத்தாலே, மறைக்கப்பட்ட தன்னுடைய ப்ரகாஶத்தையுடையவனாய். ஶரீரத்தாலே த₄ர்மபூ₄த ஜ்ஞாநச் சுருக்கம் பெற்று, தன்னுடைய ஶேஷத்வம் முதலானவற்றை அரிய இயலாமல் போய்விடுகிறது என்று கருத்து. **(அநாத்₂யவித்₃யா ஸஞ்சிதாநந்த அஶக்ய விஸ்ரம்ஸந கர்மபாஶ ப்ரக்₃ரதி₂த:)** அநாதி₂யான அஜ்ஞாநத்தாலே திரட்டப்பட்டதாய், என்னோடும் பிற ரோடும் வேற்றுமையில்லாமல் எவராலும் அவிழ்க்க இயலாததாய் இருக்கும் புண்யபாப ரூபமான கர்மமாயிருக்கும் கயிற்றாலே, "புற மறக்கட்டிக் கொண்டு இருவல்வினையார் குமைக்கும்" [திருவாய் 5-1-6] என்கிறபடியே கட்டுண்டவனாய். இதுவரையில் இந்தச் சூர்ணையின் வ்யாக்யானத்தில் சற்றுமுன் எடுக்கப்பட்ட 129-வது ப்ரமாணமான அஹிர்பு₃த்₄ந்ய ஸம்ஹிதா வசனத்தில் சொன்னபடி, "தாம் குறறங் களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவன்" என்னும் விஷயம் சொல் லப்பட்டதாயிற்று.

**அநாக₃தாநந்தகால ஸமீக்ஷயாபி அத்₃ருஷ்ட ஸந்தாரோ-பாய: நிகி₂ல ஜந்து ஜாத ஶரண்ய! ஸ்ரீமந்! நாராயண! தவ சரணாரவிந்த₃யுக₃ளம்**

---

(**பாபவாஸநா மஹார்ண வாந்தர் நிமக்₃ந:**) 'பாபவாஸனையா கிற பெரிய கடலினுள் மூழ்கியவன்' என்று முதலில் சொல்லி, (**ப₄க₃வந்மாயாதிரோஹித ஸ்வப்ரகாஶ:**) 'எம்பெருமானுடைய மாயையா கிற ஶரீரத்தாலே மறைக்கப்பட்ட தன் ப்ரகாசத்தையுடையவன்' என்று அடுத்தபடி சொல்லி, அடுத்தபடி (**கர்மபாஶப்ரக்₃ரதி₂த:**) 'கர்ம மாகிற கயிற்றாலே கட்டுண்டவன்' என்று கூறுகையாலே, பாப வாஸனையாலே தன் ஸ்வரூபம் மறைக்கப்படுகையாகிற அறிவின்மை உண்டாகிறது என்றும், அந்த அஜ்ஞானத்தாலே மேன்மேலும் கர்மம் உண்டாகிறது என்றும் சொல்லப்பட்டதாயிற்று.

(அநாக₃த அநந்த கால ஸமீக்ஷயாபி அத்₃ருஷ்ட ஸந்தாரோபாய: அஹம்) இக்காரணத்தாலேயே, மேல் வரப்போகின்ற எல்லையற்ற கால பரம்பரைகள் அனைத்திலும் ஆராய்ந்தாலும் இந்த ஸம்ஸாரக் கடலிலிருந்து விடுபடுவதற்கு உபாயம் காணமுடியாத நான். (**நிகி₂ல ஜந்து ஜாதஶரண்ய**) இவ்வண்ணமாக நன்மைகளில் ஒன்றுமில்லாமல், தீமைகளில் இல்லாதது இல்லாமல், வெறும் பிறப்பை மாத்திரம் உடையனவான எல்லா உயிர்களுக்கும் சரணமடையத் தகுந்தவனே! இதனால் எனக்கும் ஶரணமடையத் தகுந்தவன் என்று கருத்து. ஶரணாகதி க₃த்₃யத்திலும் ஐந்தாவது சூர்ணையில் "**அகி₂ல ஜக₃த் ஸ்வாமிந்**" என்றவுடன், "**அஸ்மத் ஸ்வாமிந்**" என்று குறிப்பிட்டாரன்றோ. (**ஸ்ரீமந்**) ஶரணாக₃தி க₃த்₃யத்தில் முதல் சூர்ணையின் அவதாரிகையில் எடுக்கப்பட்ட 9-வது ப்ரமாணத்தில் சொன்னபடி, என்னைத் தள்ளு வதற்கு இடமில்லாமல் அருகேயிருந்து ரக்ஷிக்கும் பெரிய பிராட்டியார் உண்டு என்கிறார். (**நாராயண**) நரஸமூஹம் அனைத்துக்கும் த₄ாரக ராய் இருப்பவனே! இந்த ஜந்து உன்னைப் பொருட்படுத்தாமலிருந்த காலத்திலும், என்னைத் தரித்து நின்று அழியாமல் காத்தவனல்லையோ? ஆக, அருகிலிருக்கும் பிராட்டியைப் பார்த்தாலும், தேவரீரைப் பார்த் தாலும் எவ்வழியாலும் என்னைக் காத்தே அருளவேண்டும் என்று கருத்து. (**தவ சரணாரவிந்த₃ யுக₃ளம்**) மிகச்சிறந்த கருணையை

**ஶரணமஹம் ப்ரபத்₃யே ||**

**3. ஏவமவஸ்தி₂தஸ்யாபி அர்த்தி₂த்வ மாத்ரேண பரம காருணிகோ ப₄க₃வாந்**

---

யுடைய தேவரீருடையதாய், அனைவர்க்கும் எளியதாய், ஒப்பற்ற இன்ப முடையதாய் ஒன்றுக்கொன்று ஒப்பாகுமேயொழிய எத்தனை தேடினு லும் வேறு உபமானம் இல்லாததாயிருக்கும் திருவடிகளை. **(ஶரணம் ப்ரபத்₃யே)** உபாயமாக உறுதி கொள்கிறேன். **''ப்ரபத்₃யே''** என்னும் பத₃ம் **'பத₃ க₃தௌ'** என்னும் **தா₄**துவிலிருந்து தோன்றியதாகையால் **'க₃தி'** (நடத்தல்) என்னும் பொருளையுடையதாலும் **''க₃தியைச்** சொல்லும் பதங்கள் அறிவையும் சொல்லும்'' என்னும் நியாயத்தாலே இங்கு உறுதியைக் காட்டுகிறது.

**மூன்ருவது சூர்ணை அவதாரிகை :—** எம்பெருமானை உபாய மாகப் பற்றியவுடன், ''அடியேன் பிரார்த்திப்பதைக் கொண்டே எனக்குக் கைங்கர்யத்தைத் தந்தருளவேணும்'' என்று மஹா விஶ்வா ஸத்தை முன்னிட்டுக் கொண்டு ப்ராப்யமான கைங்கர்யத்தைப் பிரார்த்திக்கிருர்.

**வ்யா : (ஏவம் அவஸ்தி₂தஸ்யாபி)** முன் இரண்டு சூர்ணை களில் சொன்னபடி நின்ற எனக்கும், அதாவது—முன் சூர்ணையில் எடுக்கப்பட்ட 129-வது ப்ரமாணமான அஹிர்புத்ந்ய ஸம்ஹிதா வாக் யத்தில் கூறியபடி குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவனுய், கைம்முதல் ஏதுமில்லாதவனுய் உன் திருவடிகளையே உபாயமாகப் பற்றின எனக்கும் என்றபடி. **(அர்த்தி₂த்வமாத்ரேண)** ப்ராப்யத் துக்குத் தடையாயிருக்கும் குற்றங்களில் தொடர்பில்லாதவனுகவும் அடியேன் இருக்கவில்லை. ப்ராப்யமான கைங்கர்யத்தில் 'அதைப் பெற்றே தீரவேணும்' என்ற வேகத்தையுடையவனுகவும் இருக்க வில்லை. ஆனுல் அதை வேண்டாதிராமல், வேண்டியதை மாத்திரமே கொண்டு. **(பரமகாருணிகோ ப₄க₃வாந்)** உலக வாழ்க்கையில் நான் படும் துன்பத்தைக் கண்டு, முதல் சூர்ணையின் வ்யாக்யானத்தில் எடுக்கப்பட்ட 119-வது ப்ரமாணமான ஸ்ரீராமாயண ஶ்லோகத்தில் சொன்னபடி, மிகவும் பொறுக்க முடியாத இயல்வையுடையவனுய்

**ஸ்வாநுபவ ப்ரீத்யா உபநீதைகாந்திகாத்யந்திக நித்ய கைங்கர்யைகரதிரூப நித்யதாஸ்யம் தாஸ்யதீதி விச்வாஸபூர்வகம் பகவந்தம் நித்ய கிங்கரதாம் ப்ரார்த்தயே ||**

---

ஜ்ஞாநம் சக்தி முதலான ஆறு குணங்களாலே பரிபூர்ணனுயிருக்கையாலே 'பகவான்' என்று பெயர் பெற்ற எம்பெருமான். இந்த இரண்டு பதங்களும் பிரார்த்திப்பதால் மாத்திரம் பரம புருஷார்த்தத்தை அளிப்பவன் எம்பெருமான் என்பதற்கு உறுப்பாகச் சொல்லப் பட்டது. அடுத்தபடி தான் விரும்பும் பரம புருஷார்த்தத்தைக் கூறுகிறார்—**(ஸ்வாநுபவ ப்ரீத்யா உபநீத ஐகாந்திக ஆத்யந்திக நித்ய கைங்கர்ய ரதிரூப)** தன்னை அனுபவிப்பதாலுண்டான உகப்பால் உண்டாக்கப்பட்டதாய், ஒரு படிப்பட்டதாய், முடிவில்லாமலிருக்கும் நித்ய கைங்கர்யத்தைப் பற்றிய ஆசையே வடிவாக உடையதான. **(நித்ய தாஸ்யம் தாஸ்யதீதி)** "நித்யமான என் ஆத்மா உள்ள வரையில் அடிமையைத் தந்தருள்வான்" என்கிற. **(விச்வாஸ பூர்வகம்)** மஹா விச்வாஸத்தை முன்னிட்டுக் கொண்டு. **(பகவந்தம் நித்ய கிங்கரதாம் ப்ரார்த்தயே)** மற்ற எல்லாக் கல்யாண குணங்களுக்கும் ஊற்றுவாயான ஜ்ஞாநம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்றும் ஆறு குணங்களும் தன்னை யடைந்து நிறம் பெறும்படி இருப்பவனுகையாலே 'பகவான்' எனப்படும் எம்பெருமானைக் குறித்து, நித்யமான கைங்கர்யத்தைப் பிரார்த்திக்கிறேன். '**தாஸ்யம்**', '**கிங்கரதை**' என்னும் இரண்டு சப்தங்களும் கைங்கர்யமாகிற ஒரே பொருளைச் சொல்லுகின்றன.

**நாலாவது, ஐந்தாவது சூர்ணைகள் அவதாரிகை :—** தம்முடைய பாசுரத்தாலே, ப்ராப்யமான கைங்கர்யத்தை வேண்டினுர் சென்ற சூர்ணையில். இதிஹாஸங்களில் காணப்படும் சான்றோர்கள் பிரார்த்தித்த பாசுரங்களைக் கொண்டு அதைப் பிரார்த்திக்கிருர் இவ்விரண்டு சூர்ணைகளில். எந்தப் பாசுரத்திற்கு எம்பெருமான் இரங்குவான் என்று அறியாதபடியால் தம்முடைய ப்ராப்யத்தில் த்வரையாலே இப்படிச் செய்கிருர்,

4. தவாநுபூ₄திஸம்பூ₄தப்ரீதிகாரித தா₃ஸதாம் |
தே₂ஹி மே க்ருபயா நாத₂! ந ஜாநே க₃திமந்யதா₂ ||

5. ஸர்வாவஸ்தோ₂சிதாஶேஷஶேஷதைகரதிஸ் தவ |
ப₄வேயம் புண்ட₃ரீகாக்ஷ த்வமேவைவம் குருஷ்வ மாம் ||

---

**நாலாவது சூர்ணை வ்யாக்யானம் :—** (**தவாநுபூ₄தி ஸம்பூ₄த ப்ரீதிகாரித தா₃ஸதாம் தே₂ஹி**) உன்னுடைய அநுப₄வத்தாலுண்டான உகப்பாலே செய்யப்படும் அடிமையின்பத்தைத் தந்தருள வேணும். (**மே**) இதில் 'ருசி' எனப்படும் ஈடுபாட்டுக்குமேல் இல்லாத எனக்கு. (**க்ருபயா நாத₂**) அடியேனுடைய துர்க்க₃தியைக் கண்டு இரங்கின இரக்கத்தாலும் அடியேனோடு உள்ள விடவொண்ணாத ஸம்பந்தத்தாலும் இதை தேவரீர் செய்தே தீரவேணும். (**நஜாநே க₃திம் அந்யதா₂**) தேவரீர் இரங்கிறலொழிய வேறொரு உபாயம் அறிகின்றிலேன்.

**ஐந்தாவது சூர்ணை வ்யாக்யானம் :—** (**ஸர்வாவஸ்தோ₂சிதா ஶேஷ ஶேஷதைக ரதிஸ்தவ**) இந்த அடிமைக்குக் காரணமான உகப்பும் எனக்கு உண்டாகும்படி தேவரீரே அருளவேணும் என்கிறார். "தேவரீர் திருவடிகளிலே எல்லா நிலைகளுக்கும் பொருத்தமான எல்லா விதமான அடிமைகளையே பற்றிய ஆர்வத்தை உடையேனாக வேணும்" என்று பொருள். (ப₄வேயம் புண்ட₃ரீகாக்ஷ) ஶரணாகதி கத்யம் ஏழாவது சூர்ணை வ்யாக்யானத்தில் எடுக்கப்பட்ட 88-வது ப்ரமாணமான "**ஜிதந்தே**" முதல் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டபடியே, ருசியை உண்டாக்கும் கடாக்ஷத்தாலேயே, இந்த ஆர்வத்தை உடையேனும்படி செய்தருளவேணும். (**த்வமேவைவம் குருஷ்வ மாம்**) என்னிடம் ஒரு கைம்முதலை எதிர்பாராமல், நான் விரும்பும் அனைத்துக்கும் தேவரீர் கையையே பார்த்திருக்கும் என்னை தேவரீரே இப்படிச் செய்தருளவேணும்.

**ஆறாவது சூர்ணை அவதாரிகை :—** "நாம் நீர் வேண்டுவதைத் தருவதற்கு ப்ராப்யத்தைப் பற்றிய உண்மையறிவும், அதில் ருசியும் உமக்கு உண்டோ?" என்று எம்பெருமான் திருவுள்ளமாக, "இப்பாசுரம் சொன்ன மாத்திரத்தையே கொண்டு, அதன் அர்த₂த்தில் என் மனம் உறுதியாக நிற்கும்படி தேவரீரே கடாக்ஷித்தருளவேணும்" என்கிறார்.

**6. ஏவம்பூ₄த தத்த்வயாதா₂த்ம்யாவபோ₃த₄தத்₃ச்சா₂ரஹிதஸ்யாபி ஏதது₃ச்சாரணமாத்ராவலம்ப₃நேந உச்யமாநார்த்த₂ பரமார்த்த₂ நிஷ்ட₂ம் மே மநஸ் த்வமேவ அத்₃யைவ காரய ||**

**7. அபாரகருணாம்பு₃தே₄! அநாலோசித விஶேஷ-அஶேஷ லோக ஶரண்ய!**

---

வ்யா : **(ஏவம் பூ₄த தத்த்வயாதா₂த்ம்ய அவபோ₃த₄ தத்₃ச்சா₂ரஹிதஸ்யாபி)** ஜீவஸ்வரூபம், பரஸ்வரூபம், பரமாத்மாவை அடைந்து பெறும் பலமான கைங்கர்யம் ஆகியவற்றினுடைய உண்மையறிவு இல்லாமலிருந்த போதிலும், அதில் விருப்பமும் இல்லாமலிருந்த போதிலும். **(ஏதது₃ச்சாரண மாத்ராவலம் ப₃நேந)** முற்கூறிய பாசுரத்தை உச்சரிப்பதையே பற்றுசாகக் கொண்டு. **(உச்யமாநார்த்த₂ பரமார்த்த₂ நிஷ்ட₂ம் மே மந:)** "நின்றவா நில்லா நெஞ்சு" [பெரிய திரு 1-1-4] என்று திருமங்கையாழ்வாராலும், 'ப்ரமாதி₂' [கீதை 6-34] என்று கீதையிலும் சொல்லப்பட்டபடியே, எந்த நன்மையும் இல்லாத என்னுடைய மனத்தை, இதுவரை சொல்லப்பட்ட அர்த்தத்திலே உண்மையாக நிலைநிற்கும்படி. **(த்வமேவ அத்₃யைவ காரய)** எந்தத் துணையையும் எதிர்பாராத உபாயமான தேவரீரே காலதாமதமில்லாமல் இப்போதே செய்தருளவேணும்.

**ஏழாவது சூர்ணை அவதாரிகை :—** இப்படித் தம்முடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்குக் காரணமான எம்பெருமானுடைய இயல்புகளை அருளிச் செய்கிறார்.

வ்யா : **(அபாரகருணாம்பு₃தே₄)** கரை கடந்த கருணைக்குக் கடல் போன்றவனே! கருணையாவது—பிறர் துன்பம் பொறுக்காமை. அது அளவிடவொண்ணாதிருக்கையாலே அதைக் கடலாகப் பேசுகிறார். இந்த கத்யத்தின் முதல் சூர்ணையில் எடுக்கப்பட்ட 119-வது ப்ரமாணமான ஸ்ரீராமாயண ஶ்லோகத்தில் சொல்லப்பட்டபடியே, "அடியார்கள் மட்டுமல்லாமல், எந்த மனிதன் துன்புற்றாலும் தானும் அவர்களைக் காட்டிலும் துன்புறுகை" இந்தக் கருணைக்கு "அபாரத்வம்" (கரை கடந்திருக்கை) ஆகிறது. இப்படிக் கரை கடந்திருக்கையாலே கருணையானது, என்னளவும் வெள்ளமிட்டு வந்தது என்கிறார். **(அநாலோசித விஶேஷ அஶேஷ லோக ஶரண்ய)** பிறப்பு, ஒழுக்கம்,

**ப்ரணதார்த்திஹர! ஆஶ்ரித வாத்ஸல்யைக மஹோததே! அநவரத விதித நிகில பூதஜாத யாதாத்ம்ய! ஸத்யகாம! ஸத்யஸங்கல்ப! ஆபத்ஸக! காகுத்ஸ்த!**

---

அறிவு ஆகியவற்றால் வரும் ஏற்றத்தாழ்வுகள் எதையும் பாராமல் உயிருடன் இருக்கும் எல்லா ஜீவர்களுக்கும் சரணம் பற்றத் தகுந்தவனே! இதனால் முதலில் சொல்லப்பட்ட கருணையால் விளைந்த "**ஸர்வலோக ஶரண்யத்வம்**" (அனைத்துலகுக்கும் சரணம் பற்றத் தக்கவனாயிருக்கை) சொல்லப்பட்டது. **(ப்ரணதார்த்திஹர)** முற்கூறிய கருணையையும், ஸர்வலோக ஶரண்யனாயிருக்கையையும் நினைத்துத் திருவடிகளில் தலை சாய்த்தவர்களின் துன்பங்களைப் போக்குகிறவனே! **(ஆஶ்ரித வாத்ஸல்யைக மஹோததே)** அன்றீன்ற கன்றினுடம்பில் அழுக்கைத் தனக்கு இனிய உணவாகக் கொண்டு நக்கிப் போக்கும் பசுவைப் போலே, அடியார்களுடைய குற்றங்களை மறைத்து மன்னிக்கையாகிற தன்மை, அதை அனுஸந்திப்பவர்களுக்கு அளவிடவொண்ணாததாயிருக்கும் பெருமையை உடையவனே! **(மஹோததே)** (பெருங்கடலே) என்று, முன் சொன்ன கருணைக் கடலைக் காட்டிலும் இது பெரியது என்று காட்டுகிறது. **(அநவரத விதித நிகில பூத ஜாத யாதாத்ம்ய)** எல்லா உயிர்க் கூட்டங்கள் பற்றிய உண்மையை உள்ளபடி எல்லாக் காலத்திலும் அறிந்தவனே! இதனால் இயல்வாக எல்லாம் அறிந்த தேவரீருக்கு நான் அறிவிக்கும்படியாக இருந்ததோ என்னுடைய தாழ்வு? என்று கருத்து. **(ஸத்யகாம)** எப்போதும் நிறைவேறப் பெற்ற விருப்பங்களையுடையவனே! இதனால் அடியார்களிடம் ஒன்றை எதிர்பாராமல் அவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றி வைக்கக் காரணமான "**அவாப்த ஸமஸ்த காமத்வம்**" (எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெற்றிருக்கை) சொல்லப்படுகிறது. **(ஸத்ய ஸங்கல்ப)** வீணாகாத ஸங்கல்பத்தையுடையவனே! அடியார்களுக்கு அபூர்வமான போகங்களை ஸங்கல்ப மாத்திரத்தாலே உண்டாக்கிக் கொடுக்கும்போது அந்த ஸங்கல்பம் வீணாகாதிருக்கையைச் சொல்லுகிறது. **(ஆபத்ஸக)** ஆபத்துக்களை நீக்கும் நண்பனே! அடியார்களுக்கு ஆபத்து உண்டானால் அப்போது துணையாயிருப்பவனே! என்றபடி. என்னால் வரும் ஆபத்தையும், பிறரால் வரும் ஆபத்தையும் நீக்கிக் காப்பாற்றும் தேவரீரே கைவிட்டாலும் தேவரீரையே துணையாகப் பற்றும்படி இருக்கை. 'ஜீவனால் வரும் ஆபத்துக்கும் நாமே துணை என்பதை எங்கே கண்டீர்?' என்ன — **(காகுத்ஸ்த)** ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்த ஸ்ரீராமனே! ககுத்ஸ்த வம்சத்தில் அவதரித்தவரான தேவரீர்

ஸ்ரீமந்! நாராயண! புருஷோத்தம!

ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி₄: ।
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க₃த: ॥
ஸ தம் நிபதிதம் பூ₄மௌ ஶரண்ய: ஶரணாக₃தம் ।
வதா₄ர்ஹமபி காகுத்ஸ்த₂: க்ருபயா பர்யபாலயத் ॥
[ரா-ஸு 38-34, 35]

[அந்தக் காகாஸுரன், தந்தையினாலும், (தாயினாலும்), மஹர்ஷிகளுடன் கூடிய தே₃வர்களாலும் கைவிடப்பட்டவனாய், மூன்று உலகங்களையும் சுற்றித்திரிந்து அந்த ராமனையே ஶரணமடைந்தான். ஶரணமடைந்தவனும், பூ₄மியில் விழுந்தவனுமான அவனை, கொல்லத்தகுந்தவனாயிருந்தபோதிலும், ஶரணமடையத் தகுந்தவனான ஸ்ரீராமபிரான் (தன்) அருளாலே காப்பாற்றினான்.] என்கிறபடியே, காகாஸுரனுக்கு அவனால் வந்த ஆபத்தைப் போக்கியதாகச் சொல்லப்பட்டது ருப்பதைக் காணலாமே என்கிறார். "ஸ்ரீமந்" ஸ்ரீதேவியோடு கூடியவனே! தேவரீர் கைவிட்டாலும் கைவிடாதபடி அருகிலிருந்து உம்மோடு சேரவிடும் பிராட்டியும் உண்டு என்று கருத்து. இதனால், "அருகிலிருக்கும் பிராட்டியைக் கருத்திற் கொண்டு என்னைக் காத்தருள வேண்டும்" என்கிறார். (நாராயண) நரஸமூஹம் முழுவதையும் காப்பவனே!

"தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்கு மேல்
என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார் என்பர் போலும்" [பெரியாழ். திரு. 4-9-2]

என்கிறபடியே, பிராட்டி குற்றங் கண்டாலும் அதை மறுத்துப்பேசிக் காப்பவரல்லவோ தேவரீர். இத்தால் நம் இருவருக்கும் உண்டான ரக்ஷ்ய ரக்ஷக ஸம்ப₃ந்தத்தைப் பார்த்து ரக்ஷித்தருளவேண்டும் என்கிறார். (புருஷோத்தம) "புருஸநோதி இதிபுருஷ:" [அதிகமாகக் கொடுக்கிறானாகையாலே புருஷன் எனப்படுகிறான்] என்று "புருஷ" ஶப்தம் அதிகமாகக் கொடுக்கும் 'உதா₃ர' கு₃ணத்தையுடையவன் என்று காட்டுகிறது. "புருஷோத்தம" ஶப்₃த₃ம் அவர்களில் மிகச் சிறந்தவன் என்று காட்டுகிறது. அதாவது — ஶரணாக₃தி க₃த்₃யம் ஐந்தாவது சூர்ணை வ்யாக்யானத்தில், "ஔதா₃ர்ய" ஶப்₃த₃த்தை

**ஸ்ரீரங்க₃நாத₂! மம நாத₂! நமோऽஸ்துதே॥**

**॥ இதி ஸ்ரீரங்க₃க₃த்₃யம் ஸமாப்தம் ॥**

---

விளக்கும் போது எடுக்கப்பட்ட 55-வது ப்ரமாணமான கீ₃தாஶ்லோகத்தில் சொன்னபடி, உன்னிடம் யாசித்துச் சில பொருள்களைப் பெறுகின்றவர்களையும் **'உதா₃ரர்'** (வண்மை மிக்கவர்) என்று கொண்டாடுபவரல்லவா தேவரீர். தேவரீருடைய அந்த **'ஔதா₃ர்ய'** (வண்மை) குணத்தைப் பார்த்து அடியேனைக் காத்தருளவேண்டும் என்கிறார். **(ஸ்ரீரங்க₃நாத₂)** திருவரங்கநாதனே! கீழே சொன்ன தேவரீருடைய குணங்கள் அனைத்தும் எப்போதுமே ஶ்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸம் முதலான க்₃ரந்த₂ங்களிலேயே கேட்டுப் போகலாம்படி இராமல், நேரே காணலாம்படியன்றே, தேவரீர் கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறது. **(மமநாத₂)** கோயிலிலே கண்வளர்ந்தருளுகிறது அடியேனுக்கு உம்மோடு உள்ள உறவை உணர்த்துவதற்காகவே என்கிறார். **(நமோऽஸ்துதே)** உறவையறிந்தவர்களுக்கு வேண்டுவதாய் ஸ்வரூபத்துக்குத் தகுந்ததாய், அனுகூலப்புக்கேயான கைங்கர்யமாகிற பரம புருஷார்த்தத்தை வேண்டி நிறைவுபடுத்துகிறார். அடியேன் பெறும் புருஷார்த்தம் என் உகப்புக்காக அல்ல, உன்னுடைய உகப்புக்காகவே ஆகவேண்டும்.

> **"தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே**
> **எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே"**
>
> [திருவாய் 2-9-4]

என்றும், "உனக்கே நாம் ஆட்செய்வோம்" [திருப்பாவை 29] என்றும் சொன்னபடியே, "உண்டிட்டாய் இனி உண்டொழியாய்" [திருவாய் 10-10-6] என்னும் பாசுரமும், அதன் ஈட்டில் "(நிரந்தரமாகப் புஜித்தாய். நீ தொடங்கின கார்யத்தையும் நடுவே குறை கிடக்க விடாதே விஷயீகரித்துவிடாய். (நீ ஆரம்பித்த கார்யத்தில் குறை கிடப்பதுண்டோ?) நீ இவ்வளவு புகுர நிறுத்துகைக்கு நான் ஸஹகரித்ததுண்டோ, உன் காரியத்துக்கு உன்னை வேண்டிக்கொள்ள வேணுமோ?" என்று நம்பிள்ளை அருளிச்செய்திருப்பதும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. 'இந்த ஆத்ம வஸ்து தேவரீருக்கே இனியதாய்த் தலைக்கட்ட வேணும்' என்று ஸ்ரீரங்க₃ க₃த்₃யத்தை நிறைவுபடுத்துகிறார்.

**ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய**

**ஸ்ரீரங்க₃ க₃த்₃ய வ்யாக்யான விவரணம் நிறைவுற்றது.**

श्रीः

श्रीभगवद्रामानुजमुनिभिरनुगृहीतं

॥ श्रीवैकुण्ठगद्यम् ॥

# ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யம்

**यामुनार्यसुधाम्भोधिमवगाह्य यथामति ।**
**आदाय भक्तियोगाख्यं रत्नं संदर्शयाम्यहम् ॥**

**யாமுநார்ய ஸுதா₄ம்பே₄ாதி₄ மவகா₃ஹ்ய யதா₂மதி |**
**ஆதா₃ய ப₄க்தி யோகா₃க்₂யம் ரத்நம் ஸந்த₃ர்ஶயாம்யஹம்||**

*[யாமுநாசார்யர் என்னும் ஆளவந்தாராகிய அமுதக் கடலில் மூழ்கி என் புத்திக்கு எட்டிய வரையில் பக்தி யோகமாகிற ரத்தினத்தை எடுத்து உலகிற்கு நான் காட்டுகிறேன்.]*

---

குறிப்பு : முன் இரண்டு கத்யங்களின் தொடக்க ஶ்லோகம் போலே இந்த ஶ்லோகம் தனியனல்ல. **"ஸந்த₃ர்ஶயாம்யஹம்"** [நான் காட்டுகிறேன்] என்று முடிவதால் இது ஸ்ரீபாஷ்யகாரருடைய ஶ்லோகமேயாகும். பெரியவாச்சான்பிள்ளை இதற்கு வ்யாக்யானம் செய்யாவிடினும், ஸ்ரீவேதாந்த தேசிகன் இதன் கருத்தை விவரித் திருக்கிறார். அதாவது—"இங்கு ப₄க்தியோக₃ம் என்று சொல்லப் பட்டது ஸ்வயம் ப்ரயோஜனமாக எம்பெருமானை அனுஸந்திக்கும் ப₄க்தியைப் பற்றியதேயாகும். இப்படிக்கொள்ளாவிட்டால் இந்த க₃த்₃யத்திலேயே மேலே, 'எம்பெருமானை அடைவதற்கு அவனுடைய திருவடித் தாமரையிணையில் ப்ரபத்தியைத் தவிர ஆயிரம் கல்பகோடி காலமானாலும் எனக்கு வேறு ஸாதநம் இல்லை என்று நினைப்பவனாய்' என்று அருளியிருப்பது முரண்படும்" என்று வேதாந்த தேசிகர் அருளி யிருக்கையால் இந்த ஶ்லோகம் ஸ்ரீப₄ாஷ்யகாரருடையதே ஆகும்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யம் — வ்யாக்யானம்

## ப்ரவேஶ விவரணம்

ஸ்ரீப₄ாஷ்யகாரர் முன்பே இரண்டு க₃த்₃யங்களை அருளியிருக்கும் போது மூன்றாவது க₃த்₃யத்தை அருளுவதற்குத் திருவுள்ளம் என்ன? எனில்—முதலிரண்டு க₃த்₃யங்களும் ஸ்ரீப₄ாஷ்யகாரர் தமக்குத் தாமே அனுஸந்திப்பதுபோல் அமைந்துள்ளன. "இப்படித் தம் திருவுள்ளக் கருத்தால் அறுதியிட்ட இந்த ஶரணாக₃தியாகிற அர்த்த₂ம், பனைமரத்தின் நிழல் அதன் அடிமரத்தோடு நிற்பதுபோலே தம் ஒருவரளவில் முடிந்து விடாமல், கற்பக மரத்தின் நிழல்போலே, அனைவருக்கும் உதவி செய்வதாக அமையவேண்டும். அவர்களும் உபாய உபேயங்களைப் பற்றிய அநுஷ்டானத்தை அடையவேண்டும்" என்று திருவுள்ளம் பற்றி, இந்த க₃த்₃யத்திலே பிறர்க்கு உபதேசம் செய்யத் தொடங்குகிறார். பெரிய க₃த்₃யமாகிற ஶரணாக₃தி க₃த்₃யத்தில் பொதுவாக எம்பெருமானைக் குறித்துத் தம்முடைய பிரார்த்தனையாக அருளிச்செய்தார். ஸ்ரீரங்க₃ க₃த்₃யத்தில், ஸௌலப்₄யத்திற்கு (எளிமைக்கு) எல்லை நிலமான பெரிய பெருமாளைக்குறித்து, அவரை முன்னிலைப்படுத்தித் தாம் பிரார்த்திப்பதாக அருளிச்செய்தார். இந்த ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யத்தில் மேன்மைக்கு எல்லை நிலமான ஸ்ரீவைகுண்ட₂நாத₂னைப்பற்றி, தன் அடியார்களைக் குறித்துச் செய்ய வேண்டியவைகளை உபதேசம் செய்கிறார்.

ஸ்ரீப₄ாஷ்யத்தில், ப₄க்தியை உபாயமாக நிர்ணயித்து, இந்த க₃த்₃யங்களில் ப்ரபத்தியை உபாயமாகச் சொல்லுவது முரண்படுகிறதே என்னும் கேள்வியெழுகிறது. ஸ்ரீப₄ாஷ்யத்தில் ப₄க்தியை உபாயமாக நிர்ணயம் செய்தது– உலகிலுள்ள வேதத்திற்குப் புறம்பான மதங்களைச் சேர்ந்தவர்களும், வேதத்திற்கு அவப்பொருள் கூறும் மதங்களைச் சேர்ந்தவர்களும், உபாயங்களைப் பற்றிப் பலவிதமாகப் பேசுகையாலே, ப்₃ரஹ்ம ஸூத்ரத்தை அநுஸரித்து 'வேதா₃ந்த ஸித்₃த₄மான உபாயம் எது' என்பதைக் காட்டுவதற்காகவே. அந்த மதங்களைச் சேர்ந்தவர்கள் சிலர் (ஶாஸ்த்ர விருத்₃த₄மான) ஸ்திரீ புருஷ ஸம்யோக₃ம், நிர்வாண ஸ்திரீ பூஜை முதலானவற்றை மோக்ஷத்திற்கு உபாயம் என்கிறார்கள். மற்றும் சிலர் 'சிவன்

முதலான தேவதைகளை உபாஸிப்பதே மோக்ஷத்திற்கு உபாயம்' என்கிறார்கள். பூர்வ மீமாம்ஸகர்கள், "தேவதைகள் தேவையில்லை. கர்மமே மோக்ஷோபாயம்" என்கிறார்கள். மாயாவாதி₃கள், "நிர்விசேஷமான அறிவாயிருக்கும் ப்ரஹ்மத்தைப் பற்றிய ஜ்ஞானமே மோக்ஷோபாயம்" என்கிறார்கள். இப்படிப் பலவாறு பேசும் வேத விரோதிகளையும், அவப்பொருள் கூறுபவர்களையும் தள்ளுவதற்காக, "நீங்கள் சொல்லுகிற ஶாஸ்த்ர வாக்யங்களுக்குப் பொருள் நீங்கள் சொல்லுகிறபடியல்ல; யுக்திகளைக்கொண்டும், ஸ்ம்ருதிகள் முதலான மற்ற ப்ரமாணங்களைக் கொண்டும் பார்க்கும்போது, 'கர்மயோகம் ஜ்ஞான யோகம் என்னும் அங்கங்களால் உபகாரம் பெற்ற ப₄க்தியே மோக்ஷத்திற்கு உபாயம்' என்று சொல்லுவதே உபநிஷத்துக்களில் மிகுதியாகக் காணப்படும் நிர்ணயம்" என்று ஸாதிக்க வேண்டுகையாலே, ப₄க்தி யோக₃த்தை உபாயமாகக் காட்டினார். தம் திருவுள்ளக் கருத்தான ப்ரபத்தியையும் ஆங்காங்கே உணர்த்தியிருந்த போதிலும், மிகுதியாகச் சொல்லப்பட்டிருக்கிற ப்₃ரஹ்ம வித்யைகளை முக்கியமாகக் கொண்டு அப்படி விளக்கியருளினார். இதைப் பார்த்த அறிவில் குறைந்தவர்கள் செயற்கரியதான உபாஸந ரூபமான பக்தி ஒன்றே மோக்ஷத்திற்கு உபாயம் என்று மயங்கி பயந்துவிடாமலிருப்பதற்காக, இந்த மூன்று க₃த்₃யங்களிலும் அவர்களுக்கும் உபாயமாயிருப்பது ப்ரபத்தியே என்று காட்டுகிறார். அதில் முதல் க₃த்₃யமான ஶரணாக₃தி க₃த்₃யத்தில் உபநிஷத்துக்களில் மிகுதியாகச் சொல்லப்பட்ட ப₄க்தி உண்டாவதற்கும், ப்₃ரஹ்ம ப்ராப்தியாகிற புருஷார்த்தம் உண்டாவதற்கும் இறுதியான உபாயம் ப்ரபத்தியே என்னும் விஷயத்தை விளக்கினார். ப₄க்தி நிறைவேறுவதற்கும் ப்ரப₄த்தியே வேணுமென்று ப்ரபத்தியின் பெருமையை இந்த க₃த்₃யத்தில் சொன்னதைக் கண்டு சிலர் 'ப்ரபத்தி ப₄க்திக்கு அங்க₃மாய், ப₄க்தியே முக்கிய உபாயமாகுமோ?' என்று ஐயமுறுவதற்கு இடமிருக்கிறது. அப்படிச் சந்தேகப் படாமலிருப்பதற்காக இரண்டாம் க₃த்₃யமான ஸ்ரீரங்க₃ க₃த்₃யத்தில் 'செயற்கெளிதாய் ஜீவாத்மாவின் அத்யந்த பரதந்த்ர ஸ்வரூபத்திற்குத் தக்கதாய். வேறு எதையும் அங்கமாக எதிர்பாராததாய், ஸ்வதந்த்ரமான ப்ரபத்தியே உபாயம்' என்னும் விஷயத்தை வெளியிட்டார். இனி, இப்படி உபாயத்தைப் பற்றிய நிர்ணயம் பிறந்த பின்பு, இந்த ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யத்தில், இந்த உபாயத்தினால் அடையப்படும் தேசமாகிற பரமபதத்தின் பெருமையையும், அந்த தேசத்தின் தலைவனாய்,

அனுபவிக்கத்தக்கவஞன ஸ்ரீவைகுண்ட₂ நாத₂னின் பெருமையையும் அவனே அனுபவிப்பதால் உண்டாகும் கைங்கர்யத்தையும், கேட்பவர் களுக்கு ஈடுபாடு உண்டாவதற்காக அருளிச்செய்து, "இந்த விஷயத் தில் ஈடுபாடு கொள்ளும் பேறுடையவர்கள் இந்த அரும்பயனைப்பெற்று வாழ்ந்திடுக" என்று முன் இரண்டு கத்யங்களில் விரிவாகச் சொல்லப் பட்ட உபாயத்தைச் சுருக்கமாகச் சொல்லி, அடையவேண்டிய உபே யத்தை விரிவாக அருளிச் செய்து தலைக்கட்டுகிறார்.

இந்த க₃த்₃யம் ஆறு சூர்ணையாயிருக்கும். அதில் முதல் சூர்ணை யாலே, சரணமடையத் தக்கவஞன பரமாத்மாவினுடைய ஸ்வரூபம், ரூபம், குணம், விபூ₄தி (செல்வம்) ஆகியவற்றின் சிறப்பையும், சரண மடையும் தான் சேஷத்வம் முதலிய தன்மைகளை உடையவனாயிருப் பதையும் அனுஸந்தித்து, "இப்படியிருக்கும் எனக்கு அந்தப் பரமாத் மாவைப் பெறுவதற்கு ப்ரபத்தியைத் தவிர எக்காலத்திலும் வேறு உபாயமில்லை" என்று உறுதி பூண்டு பரமாத்மாவின் நீர்மை எளிமை முதலான குணங்களையே தனக்குப் பற்றுக்கோடாகக் கொண்டு அவன் திருவடியிணையில் சரணம் புகவேண்டும் என்கிறார். இரண்டாம் சூர்ணை யிலே இப்படிச் சரணம் புகுவது பலனைப் பெறுவதற்கு ஒரு தரமே போதுமானதாக இருந்தபோதிலும், மனம் பற்ற விஷயங்களில் பட்டி மேயாமல் இருப்பதற்காகவும், தனக்குப் போது போவதற்காகவுமாக இந்த சரணாக₃தியை தினந்தோறும் அனுஸந்தானம் செய்யவேண்டும் என்கிறார். மூன்றாம் சூர்ணையிலே, இந்த சரணாக₃தி நிஷ்ட₂னுக்கு— பரமபதத்தை அடைவதற்காக அர்ச்சிராதி₃க₃தியாலே போய் ப்ரக்ருதி மண்ட₃லத்தைத் தாண்டும் முறையையும், மூலப்ரக்ருதியைக் கடந்து சென்ற பின்பு சென்றடையும் நித்ய விபூ₄தியாகிற பரமபதத்தின் பெருமையையும், அந்த தேசத்தினுடைய அமைப்பையும், அங்குள்ள அலங்காரங்களையும், அப்படி அலங்கரிக்கப்பட்ட அந்த தேசத்தில் உலகுடைய நாய்ச்சிமாரான ஸ்ரீபூமிநீளா தேவிகளும் தானுமாய் எழுந் தருளியிருக்கும் இருப்பையும், அவர்களாலே, திருவடிக் கைங்கர்யம் செய்யப் பெற்றிருக்கும் ஸ்ரீவைகுண்ட₂ நாத₂னையும், அந்த நாய்ச்சிமா ரால் அனுபவிக்கப்படும் அவனுடைய அவயவ அழகையும், அந்த அழ கிற்கும் சிறப்பையளிக்கும் தி₃வ்யாப₄ரணங்களுடைய பொருத்தத்தை யும், இவற்றை ரக்ஷிப்பதற்காக அமைந்த சங்கம் சக்ரம் முதலான தி₃வ்யாயுத₄ ஸமூஹத்தையும், இவையனைத்தையும் கண்டு அனுபவித்து

அந்த அனுபவத்தால் உண்டான உகப்பாலே பல வகைப்பட்ட திரு மேனிகளை எடுத்துக்கொண்டு அடிமை செய்யும் நித்ய ஸூரிகளின் திரளையும், அவர்களாலே எப்போதும் திருவடித் தாமரைகளில் கைங் கர்யம் செய்யப் பெற்றவனாய் எழுந்தருளியிருக்கும் இருப்பையும் அனுஸந்தித்து, "இவ்வரும் பேற்றை நாம் எப்போது பெறப்போகி றோம்" என்று மனோரதம் செய்து அம்மனோரதத்திற்குத் தக்கபடி எம் பெருமானை மனத்தாலே சென்று அணுகி, "பெருமானே! என்னாலே நித்யமான அடிமையைக் கொண்டருள வேண்டும்" என்று வேண்டித் தன் ஆத்மாவை அவன் திருவடிகளிலே ஸமர்ப்பிக்கவேண்டும் என்று உபதேசிக்கிறார். நாலாம் சூர்ணையில், இவன் வேண்டுதைற்குத் தக்கபடி அவனுடைய அங்கீகாரத்தைப் பெற்று அடிமையைப் பண்ணிக்கொண்டி ருக்கவேண்டும் என்கிறது. ஐந்தாம் சூர்ணையிலே, இப்பெரும் பயனை நெடுங்காலம் இழந்திருந்த குறைதீர, வேறு எதிலும் நெஞ்சை செலுத் தாமல் கண்கொட்டாமல் எம்பெருமானை எப்போதும் பார்த்து அனுப வித்துக் கொண்டு இருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. ஆறும் சூர்ணையிலே, பரமாத்மா இவனிடம் வார்த்தை சொல்லிக் குளிரக் கடாக்ஷித்துத் திருவடிகளைத் தலையிலே வைக்கையாலே "அடிசூடுமரசு" [பெருமாள் திரு. 10 7] என்கிறபடியே இவன் கைங்கர்ய ஸாம்ராஜ்யத் தைப் பெற்று அநாதிகாலமாகக் கர்மத்திற்கு வசப்பட்டிருந்த நிலையி லிருந்து விடுதலைபெற்று வானவர் நாட்டை ஆளபவர்களில் ஒருவனா யிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது.

**ப்ரவேச விவரணம் முற்றிற்று.**

**முதல் சூர்ணை அவதாரிகை :—** அதில் முதல் சூர்ணையிலே **"ஸ்வாதீந"** என்று தொடங்கி **"நாராயணம்"** என்றும் அளவாக பரமாத்மா மற்ற சேதநாசேதநங்களைக் காட்டிலும் சிறப்புற்ற ஸ்வ ரூபத்தையும், அந்த ஸ்வரூபத்துக்குத் தக்க குணங்களையும் உடைய வனாயிருப்பதைச் சொல்லுகிறது. மேல் பகுதியால் ப்ரவேசத்தில் கூறியபடி அவன் திருவடிகளில் சரணம் புகவேண்டும் என்கிறார்.

1. ஸ்வாதீ₄நத்ரிவித₄

---

வ்யா : (ஸ்வாதீ₄ந) இப்பதத்தில் சொல்லப்படும் மூவகைப் பட்ட சேதநாசேதநங்கள் இவனுக்கு வசப்பட்டிருக்கும் என்று கருத்து. இதனால் எம்பெருமானுக்கு வசப்பட்டிருக்கும் எல்லா நிலைகளையும் உடைய சேதநாசேதநங்களைப் போலல்லாமல் இவன் தன் செயல்களனைத்தும் தனக்கே வசப்பட்டிருக்கும் நிலைகளையுடையவனா யிருப்பவன் என்று சொல்லுகிறது.

133. ஸஸுராஸுரக₃ந்த₄ர்வம் ஸயக்ஷோரக₃ராக்ஷஸம் ॥
ஜக₃த்₃வஶே வர்த்ததேத₃ம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம் ॥
[ஸஹஸ்ரநாமாத்₄யாயம்]

[தே₃வர், அஸுரர், க₃ந்த₄ர்வர்களோடு கூடியதும், யக்ஷர், நாக₃ர், ராக்ஷஸர்களுடன் சேர்ந்ததும், அசையக் கூடியதும், அசையக்கூடாததும் சேர்ந்ததுமான இந்த உலகம் கிருஷ்ணனின் வசத்திலிருக்கிறது] என்கிறபடியே, தன்னைத் தவிர்ந்த எல்லாப் பொருள்களும் தானிட்ட வழக்காய் இருக்கும் என்று காட்டுகிறது. இப்படி இவனிட்ட வழக்காய் இருக்கும் பொருள்கள் எவை? எனில் – (த்ரிவித₄ சேதநாசேதந) ஸம்ஸாரத்தில் கட்டுண்டிருக்கும் ப₃த்₃த₄ர்கள், ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெற்ற முக்தர்கள், பிராட்டிமார் தொடக்கமான நித்யர்கள் ஆகிய மூன்று வகைப்பட்ட ஆத்மாக்களும், ப்ரக்ருதியின் விகாரமான லீலாவிபூ₄தி, சுத்த ஸத்வமான நித்ய விபூ₄தி, காலம் என்று மூன்று வகைப்பட்ட அசேதனங்களும் ஆகிய இவை. இவனுக்கு வசப்பட்டிருப்பது இவை மட்டுமோ? எனில் (ஸ்வரூப ஸ்தி₂தி ப்ரவ்ருத்தி பே₄த₃ம்) இவற்றினுடைய த₄ர்மி (தன்மைகளையுடைய) ஸ்வரூபமும், த₄ர்மங்களாகிற தன்மைகளும், இவற்றினுடைய வ்யாபாரங்களாகிற செயல்களும் இவனிட்ட வழக்கு என்கிறது. (ஸ்தி₂தி) நிலையான தன்மைகளைச் சொல்லுகிறது.

134. நித்யோ நித்யாநாம் சேதநஶ் சேதநாநாம்
ஏகோ ப₃ஹூநாம் யோ வித₃தா₄தி காமாந் ॥
[கட₂ 2-5-13; ஶ்வே 6-13]

## சேதநாசேதந ஸ்வரூப ஸ்தி₂தி

[நித்யர்களான பல ஜீவர்களுக்கு, நித்யனுன யாவனொருவ பரமசேதனன் விருப்பங்களை அளிக்கின்றானே.] என்று சேதனர்களின் தன்மைகளும்,

> 135. அசேதநா பரார்த்தா₂ ச நித்யா ஸததவிக்ரியா ।
> த்ரிகு₃ணா கர்மிணாம் க்ஷேத்ரம் ப்ரக்ருதே ரூபமுச்யதே॥
> [பரமஸம்ஹிதை 2]

[அறிவற்றதென்றும், பிறருக்காகவேயிருப்பதென்றும், ஸ்வரூபநாஶமற்றதென்றும், எப்போதும் மாறுபாடடைந்து கொண்டேயிருப்பதென்றும், ஸத்வரஜஸ்தமோ கு₃ணங்களை உடையதென்றும், கர்மங்களைச் செய்யும் ஜீவர்கள் அதையனுப₄விக்குமிடமாயிருப்பதென்றும் ப்ரக்ருதியின் ஸ்வரூபம் சொல்லப்படுகிறது.] என்று அசேதனங்களின் தன்மைகளும் நித்யமானவை என்று சொல்லப்பட்டதன்றோ. 'ஸ்வரூப' ஶப்₃த₃த்தாலே முதல் க்ஷணத்தின் இருப்பையும், 'ஸ்தி₂தி' ஶப்தத்தாலே இரண்டாவது தொடங்கி மேல் க்ஷணங்களின் இருப்பையும் சொல்லுவதுண்டு. சேதநாசேதநங்கள் நித்யமாகையாலே அந்தப் பொருள் இங்கு பொருந்தாது. 'ஸ்வரூப பே₄த₃ம்'— என்று— மாயாவாதிகள் கூறுவது போல் ஒரே ஆத்மாவல்ல; ஆத்மாக்கள் ஒவ்வொருவரும் தனித்தனி என்று காட்டுகிறது. சற்றுமுன் எடுத்த 134-வது ப்ரமாணத்திலும் பல ஜீவர்களை நியமிக்கும் ஒரே பரம சேதனனாய் இருப்பவன் எம்பெருமான் என்று குறிக்கப்பட்டதும,

> 136. நாநாத்மாநோ வ்யவஸ்தா₂த:
> [வைஶேஷிகஸூத்ரம் 3-2-20]

[ஸுக₂து₃:க்கா₂தி₃பே₄த₃ம் காணப்படுவதால் ஆத்மாக்கள் பலர் உள்ளனர் என்று ஸித்₃தி₄க்கிறது.] என்று வைஶேஷிக ஸூத்ரத்தில் ஆத்மாக்கள் வெவ்வேறு என்று நிரூபிக்கப்பட்டதும் இங்கு காணத்தக்கது. ஆகையால் இன்ப துன்பங்கள் வெவ்வேறாய் இருக்கையாலே ஆத்மாக்கள் பலவாயிருப்பதே 'ஸ்வரூபம்' என்றதாயிற்று. ஸ்வபா₄வபே₄த₃மாவது — இந்த ஆத்மாக்கள் அறிபவராயிருக்கை, செயல்படுபவராயிருக்கை, அனுப₄விப்பவராயிருக்கை, நித்யராயிருக்கை தாமே ப்ரகாசிப்பவராயிருக்கை, எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவரா

ப்ரவ்ருத்தி பே₄த₃ம்

---

யிருக்கை முதலான பல தன்மைகளை உடையவராயிருக்கையேயாகும். **ப்ரவ்ருத்தி பே₄த₃மாவது**—ஒவ்வொரு பொருளைப்பற்றி அறிதல், ஒவ்வொரு செயலைத் தொடங்க விரும்புதல், ஒவ்வொரு செயலைச் செய்தல் முதலானவை. அப்ராக்ருதமான அசேதனத்திற்கு **ஸ்வரூப பே₄த₃மாவது**—ப்ரக்ருதி, அதிலிருந்து தோன்றும் மஹான், அதிலிருந்து தோன்றும் அஹங்காரம், அதிலிருந்து தோன்றும் தந்மாத்ரைகள், பஞ்சபூ₄தங்கள், பதினொரு இந்திரியங்கள் என்னும் பேதங்களை உடையதாயிருக்கை. **'காலம்'** எனப்படும் அசேதனத்திற்கு **ஸ்வரூப பே₄த₃மாவது**—ஒன்றுக்கொன்று கார்ய காரணங்களாயிருக்கும் கலை, காஷ்டை₂, முஹூர்த்தம், பக்ஷம், மாஸம் முதலான பலவகைப்பட்ட நிலைகளையுடையதாயிருக்கை. **ப்ராக்ருதமான அசேதனத்திற்கு** ஸ்வ **பா₄வ பே₄த₃மாவது**—தானே ப்ரகாசிக்காத ஜட₃மாயிருக்கை, பரிணாமம் உடையதாயிருக்கை, நித்யமாயிருக்கை, பிறர்க்கேயாயிருக்கை, ஸத்வ ரஜஸ்தமோகு₃ணங்களுக்கு இருப்பிடமாயிருக்கை முதலானவை. காலம் என்னும் **அசேதனத்திற்கு** ப்ராக்ருதத்திற்குச் சொன்னவற்றில் ஸத்வ ரஜஸ்தமோ குணங்களுக்கு இருப்பிடமாயிருக்கை என்பது இல்லை. அதற்குப் பதிலாக இந்த முக்குணங்களும் இல்லாமலிருக்கையைக் கொள்ளவேண்டும். எல்லா அசேதனங்களுக்கும் **ப்ரவ்ருத்தி பே₄த₃மாவது**—செயல்களைத் தொடங்குவதாயிருக்கை, மண் குடத்திற்குப்போலே தனது கார்யப் பொருள்களுக்கு உபாதானமாயிருக்கை, ஆத்ம பரமாத்மாக்களை மறைப்பதாயிருக்கை, தானே பிரகாசியாதவையாயிருக்கை முதலானவை.

அரசர் முதலானவர்களுக்கும் தங்களுடைய அரண்மனை, குடை சாமரம் முதலான உபகரணங்கள், வேலைக்காரர்கள் முதலானவற்றினுடைய ஸ்வரூப ஸ்வபா₄வ வ்யாபாரங்கள் வசப்பட்டுத்தானே இருக்கின்றன? இது மாத்திரமோ? எனில்—அவர்களுக்கில்லாத மற்றொரு பெருமையும் எம்பெருமானுக்கு இருக்கிறது என்கிறது அடுத்த பத₃ம்.

**க்லேஶ கர்ம(விபாக)ாதி₃ அஶேஷ தோ₃ஷ—**
**அஸம்ஸ்ப்ருஷ்டம்,**

---

**(க்லேஶகர்ம[விபாக]த்₃யஶேஷ தோ₃ஷ அஸம்ஸ்ப்ருஷ்டம்)** அவர்களுக்கு **க்லேஶம்** (குறைகள்), புண்ய பாபங்களாகிற கர்மங்கள் முதலான குற்றங்கள் உண்டு. இவனுக்கு அவை இல்லை என்கிறது.

**137. க்லேஶகர்மவிபாகாஶயைரபராம்ருஷ்ட:**
**புருஷவிஶேஷ ஈஶ்வர: [பாதஞ்ஜலயோக₃ஸூத்ரம் 1-24]**

[க்லேஶம், கர்மம், விபாகம், ஆஶயம் ஆகியவற்றால் தொடப்படாதானொரு புருஷன் ஈஶ்வரனாவான்.] என்று பதஞ்ஜலியின் யோக₃ ஸூத்ரத்தில் சொன்னபடியே க்லேஶம், கர்மம், விபாகம், ஆஶயம் ஆகிய குற்றங்களால் தொடப்படாதவனாயிருப்பவனன்றோ ஸர்வேஶ்வரன். **(க்லேஶ)**

**114. அவித்₃யாஸ்மிதாபி₄நிவேஶராக₃த்₃வேஷா: பஞ்ச க்லேஶா:**
**[பாதஞ்ஜலயோக₃ஸூத்ரம் 2-3]**

[அவித்₃யை, அஹங்காரம், பேராசை, விருப்பம், கோபம் இவ்வைந்தும் க்லேஶங்கள்.] என்கிறபடியே அஜ்ஞானம், அஹங்காரம், பேராசை, ஶப்தாதி விஷயங்களில் விருப்பம், கோபம் ஆகியவை ஐந்து க்லேஶங்கள் எனப்படுகின்றன. (கர்ம) புண்ணியம், பாபம் ஆகிற இருவினைகளும கர்மமாகும். **(விபாக)** அதாவது—

**138. ஸதி மூலே தத்₃விபாகா ஜாத்யாயுர்போ₄கா₃:**
**[பாதஞ்ஜலயோக₃ஸூத்ரம் 2-13]**

[க்லேஶ ரூபமான காரணமிருக்கும்போது அதன் ப₂லமான ஜாதி, ஆயுஸ், போ₄க₃ம் என்பவையும் உண்டாகின்றன.] என்கிறபடியே க்லேஶத்தின் விளைவுகளான ஜாதி, ஆயுள், போ₄க₃ம் ஆகியவை விபாகமாகிறது. **(ஆதி₃)** ஶப்₃த₃ம் 'ஆஶயம்' என்று யோக₃ ஸூத்ரத்தில் [1-24] சொல்லப்பட்ட வாஸனையைச் சொல்லுகிறது,

**139. ஆஶயோ நாம வாஸநா**

ஸ்வாப₄ாவிக அநவதி₄காதிஶய ஜ்ஞாந ப₃ல—

[ஆஶயமென்பது வாஸனையாகும்.] என்று சொல்லப்படுகிறதன்றே. இத்தாழ்வுகளுக்கு உட்படாதவன் ஸர்வேஶ்வரன் என்று கருத்து. இங்கு க்லேஶம் முதலான நாலு தாழ்வுகளைச் சொன்னது எல்லாத் தாழ்வுகளுக்கும் உபலக்ஷணம்.

140. ஏவம்ப்ரகாரமமலம் நித்யம் வ்யாபகமக்ஷயம் ।
ஸமஸ்தஹேயரஹிதம் விஷ்ணவாக்₂யம் பரமம் பத₃ம் ॥
[வி. பு. 1-22-53]

[இப்படிப்பட்ட விஷ்ணுவின் பரமப்ராப்யமான ஸ்வரூபம், அழுக்கற்றதாயும், நித்யமாயும், ஸர்வவ்யாபியாயும், குறைவற்றதாயும், தாழ்வொன்றுமில்லாததாயுமிருக்கிறது.] என்னும் ஶ்லோகத்திலும் 17, 18 பக்கங்களில் உள்ள ஶ்லோகங்களிலும் விஷ்ணு புராணத்தில் பரமாத்மா எல்லாத் தாழ்வுகளுக்கும் எதிர்த்தட்டானவன் என்று சொல்லப்பட்டது இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது.

இப்படித் தாழ்வுகளுக்கெல்லாம் எதிர்த்தட்டாய் இருக்கை தவிர வேறு பெருமையில்லையோ? எனில்—"எல்லாக் கல்யாண கு₃ணங்களுக்கும் இருப்பிடமாயிருக்கும் பெருமையும் உண்டு" என்கிறார் அடுத்த பதத்தாலே—(ஸ்வாப₄ாவிகாநவதி₄காதிஶய ஜ்ஞாந ப₃லைஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜ:) அவனுடைய கல்யாண கு₃ணங்கள்

141. பராஸ்ய ஶக்திர் விவிதை₄வ ஶ்ரூயதே
ஸ்வாப₄ாவிகீ ஜ்ஞாநப₃லக்ரியா ச । [ஶ்வே 6]

[இந்தப் பரமாத்மாவுக்குப் பலபடிப்பட்டதும், மேலானதுமான ஶக்தியும், இயற்கையான ஞானமும், ப₃லமும், (ஸ்ருஷ்டித்தல் முதலிய) காரியங்களும் உண்டென்று அறியப்படுகிறது.]

142. த இமே ஸத்யா: காமா: [சாந். 8-3-1]

[அப்படிப்பட்ட இந்த ப₄க₃வத்₃கு₃ணங்கள் என்றுமிருப்பவை.] என்று உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டபடியே, ஒரு ஸாத₄னத்தை அனுஷ்

மத்ததாலேயோ ஒரு தேவதையின் அருளாலேயோ வந்தவையல்ல, ஒரு காலத்தில் அழிபவையுமல்ல, இயல்வானவை என்பதை ஸ்வாப₄ாவிக ஶப்₃த₃ம் காட்டுகிறது. இந்த குணங்கள் ப₄க₃வத் ஸ்வரூபம் உள்ள காலமெல்லாம் அதனோடு கூடியிருப்பவை என்று கருத்து. இப்படி இயல்வாயிருக்கும் இந்த குணங்கள் அளவுபட்டிருக்குமோ? எனில்— (**அநவதி₄காதிஶய**)

**143. யதோ வாசோ நிவர்த்தந்தே। அப்ராப்ய மநஸா ஸஹ।**
**ஆநந்த₃ம் ப்₃ரஹ்மணோ வித்₃வாந்। ந பி₃பே₄தி குதஶ்சநேதி॥**
**[தை. ஆ. 9-1]**

[எந்த ப்₃ரஹ்மத்தினிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்குகள், (அதை அளவிட்டறிய முடியாமல்) திரும்புகின்றனவோ, அந்தப் பரமாத்மாவின் ஆநந்த₃த்தை அறிந்தவன் எதனிடமும் ப₄யப்படமாட்டான்.] என்று உபநிஷத்திலும், "உயர்வறவுயர் நலம் உடையவன் யவனவன்" [திருவாய் 1-1-1] என்று தமிழ் வேதத்திலும் சொல்லுகிறபடியே, எல்லையற்ற பல கு₃ணங்களை உடையவனாயிருப்பவன் பரமாத்மா என்கிறது. "உள்ள குணங்களுக்கு எல்லையற்றிருந்தாலும் இல்லாத குணங்களும் சில உண்டாயிருக்குமோ! உள்ள குணங்கள் தான் எவை?" என்னும் கேள்வியெழ, கூறுகிறது— (**ஜ்ஞாந ப₃ல ஐஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜ: ப்ரப்₄ருதி அஸங்க்₂யேய கல்யாண கு₃ண க₃ணௌக₄ மஹார்ணவம்**) இந்த குணங்களில் **ஜ்ஞானமாவது**— 73-வது பக்கத்திலுள்ள நாத₂முனிகளின் ந்யாயதத்வ ஶ்லோகத்தின் படி, எல்லாக் காலத்திலும் எல்லாப் பொருள்களையும் நேரே காண்கை. ப₃லமாவது—

**144. ஸ தா₃தா₄ர ப்ருதி₂வீம் த்₃யாமுதேமாம் [தைத்-ஸம் 4-2]**

[அந்தப் பரமாத்மா இந்த பூ₄மியையும் தேவலோகத்தையும் த₄ரித்து நிற்கிறான்.] என்று வேதத்திலும்,

**145. அத₂வா ப₃ஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந।**
**விஷ்டப்₄யாஹமித₃ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்தி₂தோ ஜக₃த்॥**
**[கீ₃தை 10-42]**

[அர்ஜுநா! இந்த ஞானத்தைப் பற்றிப் பல சொல்லியென்? நான் இவ்வுலகமெல்லாவற்றையும் என் ஶக்தியில் ஒரு சிறு பகுதியாலே,

## ஐஸ்வர்ய வீர்ய ஶக்தி தேஜ:- ப்ரப்₄ருதி

த₄ரித்து நிற்கிறேன்.] என்று கீதையிலும் சொல்லியபடியே இரண்டு விபூ₄திகளையும் வருத்தமில்லாமல் த₄ரிக்கவல்ல மிடுக்கு. ஐஶ்வர்யமாவது—

146. க்ஷரம் ப்ரத₄ாநமம்ருதாக்ஷரம் ஹர:
க்ஷராத்மாநாவீஶதே தே₃வ ஏக: [ஶ்வே 1-10]

[க்ஷரமெனப்படுவது ப்ரக்ருதியே; அம்ருதமாகையால் அக்ஷரமெனப் படுபவன் ஜீவனே. ப்ரக்ருதி ஜீவர்களை ஒரு தே₃வன் நியமிக்கிருன்.] என்கிறபடியே மூவகைப்பட்ட சேதநாசேதநங்களையும் தன் ஒரே குடை நிழலின் கீழே அமுக்கி ஆளவல்ல நியமிக்கும் திறமை. வீர்யமாவது—

147. ந ஶ்ரமோ ந ச கே₂த₃ஸ் தே ஜக₃த்₃த₄ாரணஶாஸநே

[ஜக₃த்தை த₄ரிப்பதிலும், நியமிப்பதிலும் உமக்கு ஶ்ரமமுமில்லை; து₃:க்க₂முமில்லை.] என்கிறபடியே, உலகத்தைத் த₄ரிப்பதிலும் நியமிப்பதிலும் சரீரமுடைய மற்றவர்களுக்கு ஏற்படும் வருத்தங்கள் இவனுக்கு என்று மின்றியிலே இருக்கை. ஶக்தியாவது — இப்பத வ்யாக்யானத்தின் தொடக்கத்தில் எடுக்கப்பட்ட 141-வது ப்ரமாணமான உபநிஷத்₃ வாக்கியத்திலும்,

148. ந ஹி பாலநஸாமர்த்₂யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம் ।
ஸ்தி₂தௌ ஸ்தி₂தம் மஹாப்ராஜ்ஞ ப₄வத்யந்யஸ்ய கஸ்யசித் ॥ [வி. பு. 1-22-21]

[மஹாபு₃த்₃தி₄மானே! ரக்ஷணத்தில் நிலை நிற்கும் ஸர்வேஶ்வரனை ஹரியைத் தவிர வேறு எவனுக்கும் ரக்ஷிக்க ஸாமர்த்₂யம் கிடையாதன்றோ.] என்னும் விஷ்ணு புராண ஶ்லோகத்திலும்,

149. சேஷ்டா தஸ்யாப்ரமேயஸ்ய வ்யாபிநோऽவ்யாஹதாத்மிகா

[அளத்தற்கரிய ஸர்வவ்யாபியான அவனுடைய செயல் தடையற்றதாகும்.] என்னும் ப்ரமாணத்திலும் சொன்னபடி, தான் எடுத்துக் கொண்டதொரு செயலைத் தடைபடாதபடி முடிக்கவல்ல திறமை. தேஜஸ்ஸாவது—

150. ரகாராதீ₃நி நாமாநி ராமத்ரஸ்தஸ்ய ராவண ।
ரத்நாநி ச ரதா₂ஸ்சைவ த்ராஸம் ஸஞ்ஜநயந்தி மே ॥
[ரா. ஆ. 39-17]

[ராவணா! ராமனிடம் ப₄யந்த எனக்கு 'ர' என்னும் எழுத்தில் ஆரம்பிக்கும் ரத்நங்கள, ரத₂ங்கள் முதலிய நாமங்களும் ப₄யத்தை விளைக்கின்றன.] என்று ஸ்ரீராமாயணத்தில் மாரீசன் சொன்னபடி, இவன் செயல்படாமலிருக்கும்போதே இவன் பெயரைக் கேட்டவுடன் எதிரிகள் குடல் குழம்பும்படியான மதிப்பு. அப்படியல்லாமல், மிகுந்த முயற்சி செய்து செய்யவேண்டிய காரியங்களை, சிறு முயற்சியாலே செய்து முடிக்கும் வல்லமையைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். அப்படியுமல்லாமல்,

151. ந தஸ்யேஶே கஶ்சந தஸ்ய நாம மஹத்₃ யஶ: [தை நா. 1-9]

[அப்பரமாத்மாவை நியமிப்பவன் ஒருவனுமில்லை; அவன் ஒருவனுக்கே பெருங்கீர்த்தியுள்ளது.] என்று உபநிஷத்தில் சொல்லியபடியே வீர்யம் ஶக்தி முதலான குணங்களால் பிறக்கும் புகழை தேஜஶ் ஶப்₃த₃ம் சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

இந்த ஆறு குணங்கள்தானோ உள்ளது? எனில் (ப்ரப்₄ருதி) முதலான.

152. தவாநந்த கு₃ணஸ்யாபி ஷடே₃வ ப்ரத₂மே கு₃ணா: ।
யைஸ் த்வயேவ ஜக₃த் குக்ஷாவந்யேऽப்யந்தர் நிவேஶிதா: ॥

[ப₄க₃வானே! கணக்கற்ற கு₃ணங்களை உடையவராயிருந்த போதிலும் உமக்கு ஆறே கு₃ணங்கள முக்கியமானவைகள். தேவரீர் உலகத்தை வயிற்றில் வைத்துக்கொண்டிருப்பதுபோல், இக்கு₃ணங்கள் மற்ற குணங்களைத் தமக்குள் கொண்டிருக்கின்றனவன்றோ] என்கிறபடியே, முக்கியமான குணங்களாகையாலே இவை எடுத்துக் காட்டப்பட்டன. இவை தொடக்கமான குணங்கள் பலவும் உள என்கிறார். இப்படிப் பல குணங்கள் உண்டானாலும் எத்தனை என்று அவற்றுக்கு எண்ணிக்கை உண்டோ? எனில் – (அஸங்க்₂யேய)

அஸங்க்₂யேய கல்யாண கு₃ண க₃ணௌக₄

153. ஸங்க்₂யாதும் நைவ ஶக்யந்தே கு₃ணா தோ₃ஷாஶ்ச ஶார்ங்கி₃ண: ।
**ஆநந்த்யாத் ப்ரத₂மோ ராஶிரபா₄வாதே₃வ பஶ்சிம: ॥**

[ஶார்ங்க₃மென்னும் வில்லாண்டானுடைய கு₃ணங்களையும் தோஷங்களையும் எண்ணமுடியாது. முன்சொன்ன கு₃ணங்கள் கணக்கற்றிருப்பதால் எண்ணவொண்ணாதவை. பின் சொன்ன தோஷங்கள் இல்லாமையால் எண்ணமுடியாதவை.] என்னும் ப்ரமாணத்திலும், 98-ம் பக்கத்தில் எடுக்கப்பட்ட 64-வது ப்ரமாணத்திலும், இவனுடைய குணங்கள் எண்ண முடியாதவை என்று சொல்லப்பட்டதன்றோ. இப்படி எண்ணிறந்திருப்பது தாழ்ந்த குணங்களுடன் கூடியோ? எனில்— (கல்யாண) முன் எடுக்கப்பட்ட 153-வது ப்ரமாணத்திலும் 140-வது ப்ரமாணத்திலும், 73-ம் பக்கத்திலுள்ள விஷ்ணு புராண ஶ்லோகத்திலும்,

**154. ப₃ஹவோ ந்ருப கல்யாணகு₃ணா: புத்ரஸ்ய ஸந்தி தே** [ரா. அ. 2-25]

[அரசனே! உன் பிள்ளையான ராமனுக்குக் கல்யாண குணங்கள் பலவும் உள] என்னும் ஸ்ரீ ராமாயண ஶ்லோகத்திலும் சொல்லுகிறபடியே தாழ்ந்த குணங்கள் ஒன்றுமில்லாமல் கல்யாண குணங்கள் எண்ணிறந்தவையாய் இருக்கும். **(கல்யாண)** அவற்றுக்கு இருப்பிடமான அவனுக்கும், அவற்றை அனுபவிப்பவர்களுக்கும் மங்களத்தை அளிப்பவையாய், சுகத்தை அளிப்பவையாய் இருக்கும்.

**155. கல்யாணம் மங்க₃ளம் ஶுப₄ம்** [அமரம் 1-4-25]

[கல்யாணம் மங்க₃ளம் ஶுப₄ம் என்னுமிவை ஒரே பொருளை உடையவை.] என்று அமரகோசத்தில் படிக்கப்பட்டதன்றோ. உலகிலும் கூட்டம் கூடியிருக்கும் இடங்களில், "இங்கு என்ன கூட்டம். துக்கமோ? கல்யாணமோ?" என்று வழங்குகையாலே, துன்பத்திற்கு எதிர்த்தட்டான ஸுகத்தை **'கல்யாண'** ஶப்₃த₃த்தால் இங்கு சொல்லுகிறது. **(கு₃ண)** கேட்டவுடன் காதைப் பொத்திக் கொள்ள வேண்டும்படியிராமல், **"கு₃ண்யந்த இதிகு₃ணா:"** [திருப்பித்-

திருப்பிச் சொல்லி, அனுபவிக்கப்படுகையாலே குணங்கள் எனப்படு கின்றன.] என்கிற வ்யுத்பத்தியின் படியும், "ஈர்கின்ற குணங்களையு டையாய்" [திருவாய் 8-1 8] என்கிறதமிழ் வேதத்தின்படியும், 'ஆஹா ஆஹா' என்று பலமுறை திருப்பித் திருப்பிச் சொல்லும்படி இருப் பவை. இப்படி ஒரு சில குணங்கள் மாத்திரமோ எண்ணிக்கையும், எல்லையும் இல்லாமலிருப்பது? எனில்—(க₃ண)

**156. தம் த்₃ருஷ்ட்வா தே தத₃ா தே₃வா: ஶங்க₂சக்ரக₃த₃ாத₄ரம் ।**
**அபூர்வ ரூபஸம்ஸ்த₂ாநம் தேஜஸாம் ராஶிமூர்ஜிதம் ॥**
**[வி. பு. 1-9-67]**

[ஶங்க₂சக்ரக₃த₃ாத₄ரனுய், அபூர்வமான திருமேனி அமைப்பையுடைய வனுய், உறுதியானவனுய், தேஜோ ராஶியான அந்த ப₄க₃வானை அப்போது கண்டு தே₃வர்கள் (துதித்தனர்).] என்று ஸ்ரீவிஷ்ணு புராணத் திலும், "ஒண் சுடர்க்கற்றை" [திருவாய் 1-7-4] என்று அருளிச்செயலி லும் சொல்லுகிறபடியே, ஶூரத்தன்மையாகிய ஶௌர்யம், சாதுர்யம், ஸ்திரத்தன்மையாகிற ஸ்தை₂ர்யம், தீ₄ரத்தன்மையாகிற தை₄ர்யம் முத லான குணங்கள் அனைவர்க்கும் தலைவனுயிருக்கையாகிற ஸ்வாமித் வத்தோடு சேர்ந்தவை. அடக்கமாயிருக்கையாகிற ப₄வ்யதை, க்ருபை, குற்றங்களைப் பொறுக்கை, வருத்தங்களைப் பொறுக்கை, குற்றங்களை யும் குணமாக நினைக்கை, கைம்மாறு கருதாமை ஆகிய குணங்கள் ஸௌலப்₄யமாகிற எளிமையோடு சேர்ந்தவை. தன் பெருமையை உணராமை, பிறர் குற்றத்தைக் காணுமை, கபடமில்லாமல் இருக்கை முதலான குணங்கள் ஸௌஶீல்யமாகிற நீர்மையோடு சேர்ந்தவை. அடியார்களிடம் பக்ஷபாதம், குற்றத்தைக் குணமாகக் காணுகை, பதிலுதவியை எதிர்பாராமை (கைம்மாறு கருதாமை) முதலான குணங் கள் வாத்ஸல்ய குணத்தோடு சேர்ந்தவை. ப்ரியம் (இனிமை), மோத₃ம் (உகப்பு), ப்ரமோத₃ம் (பேருகப்பு), ஆனந்தம் முதலான குணங்கள் ஸந்தோஷ கு₃ணத்தோடு சேர்ந்தவை. இப்படி ஒவ்வொரு குணத்தோடு ஒட்டிக்கொண்டு கூட்டம் கூட்டமாக வரும் கு₃ணங் களுக்கு எல்லையில்லை என்கிறது. இத்தகைய குணங்கள் தான் தனித்தனியே பிரிந்தோ இருப்பது? எனில் - (ஓக₄) ஊரிலிருந்து வரும் வாய்க்கால், காட்டிலிருந்து வரும் வாய்க்கால், மலையிலிருந்து வரும் வாய்க்கால், ஏரிகள் உடைந்துவரும் வாய்க்கால் அனைத்தும் ஓரிடத் திலே கூடினுல், கங்கும் கரையும் அழிந்து கரை காணவொண்ணுமல்

**மஹார்ணவம்**

---

அலைமேல் அலையாக ஓர் வெள்ளமாக வருவது போலே எல்லாக் குணங்களும் ஒரு பெரு வெள்ளமாயிருக்கும் என்கிறது. 'பல வாய்க் கால்கள் கூடினாலும், ஆற்று வெள்ளம் தனித்தனி நீர்களைப் பிரித் தறிய வொண்ணாதபடியிருக்கும். கரைகளை அழித்துக்கொண்டு போகி றாலும் ஓரிடத்தில் வந்த நீர் அவ்விடத்தில் நிலை நில்லாமல் ஓடிவிடும். மலையில் நீர்ப் பெருக்கு நின்று விட்டால், வெள்ளம் வற்றியும் போகும். அப்படி இவனிடம் உள்ள குணங்களும் நிலை நில்லாதபடி ஸ்தி$_2$ரமற்ற வையாய் ஒரு காலத்தில் முடிந்துவிடக்கூடியவையாய் இருக்குமோ?' எனில் — (**அர்ணவம்**) கடல் போல் நிலையானதாய் நித்யமாய் இருக்கும் என்கிறது.

**158. ஸர்வதா$_3$ऽபி$_4$க$_3$தஸ் ஸத்$_3$பி$_4$ஸ் ஸமுத்$_3$ர இவ ஸிந்து$_4$பி$_4$:**

**[ரா. பா. 1-16]**

[நதி$_3$கள் கடலை அடைவதுபோல் நல்லோர்களால் எப்போதும் அடை-யப்படுபவன் ராமன்.] என்று ஸ்ரீராமாயணத்தில் சொல்லியபடியே, எல்லா நதி நீரும் கூடிக் கடலில் விழுந்தால் அந்நீர்கள் அவ்விடத்தை விட்டுப் போகாமலும், வற்றாமலும் இருப்பது போலே இங்கும் எல்லா குணங்களும் ஒன்றாய்ச் சேர்ந்து நித்யமாகவும் இருக்கும். (**அர்ணவம்**) ஜலக்கடல்; அதாவது சுத்த நீர்க்கடல். புராணங்களில் ஜம்பூ$_3$, ப்லக்ஷ, ஶாக, ஶால்மலி, குஶ, க்ரௌஞ்ச, புஷ்கர என்னும் ஏழு தீவுகள் இருப்பதாகவும், அவற்றைச் சூழ்ந்து முறையே உப்பு நீர்க்கடல், கரும்பு நீர்க்கடல், சுரா (கள்) நீர்க்கடல், ஸர்ப்பி (நெய்) நீர்க்கடல், த$_3$தி$_4$ (தயிர்) நீர்க்கடல், க்ஷீர (பால்) கடல், சுத்த ஜலக்கடல் ஆகியவை இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இவற்றில் முந்தியவை யான ஆறு கடல்களையும் போல் அளவுபட்டவையாய் இராமல், கடைசியில் இருக்கும் சுத்த நீர்க்கடல் போலே இவனுடைய குணங் களும் பெருத்திருக்கும் என்று பொருள். இப்படியானாலும் அந்த சுத்த நீர்க்கடல் '**லோகாலோகாசலம்**' என்னும் மலையாலும், ஶ்வே தத்$_3$வீபம் என்னும் தீவாலும் சூழப்பட்டதாய் அளவுபட்டதாயன்றே இருப்பது; இவனது குணங்களும் அப்படியோ? எனில்—

பரமபுருஷம்,

(மஹார்ணவம்)

158ஆ. தா₄துநாமிவ ஶைலேந்த்₃ரோ கு₃ணாநாமாகரோ மஹாந்।
[ரா. கி. 15-21]

[ஒரு சிறந்த மலை தா₄துக்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பதுபோல், ஸ்ரீராமபிரானும் குணத்திற்கெல்லாம் பெரியதோர் இருப்பிடமாவார்.] என்று ஸ்ரீராமாயணத்திலும்,

159. வஶீ வதா₃ந்யோ கு₃ணவாந் ருஜு:ஶுசிர்
ம்ருது₃ர்த₃யாளுர் மது₄ரஸ்ஸ்தி₂ரஸ் ஸம: ।
க்ருதீ க்ருதஜ்ஞஸ்த்வமஸி ஸ்வபா₄வதஸ்
ஸமஸ்த கல்யாண கு₃ணாம்ருதோத₃தி₄:॥ [ஸ்தோ. ர. 18]

[(ஆஶ்ரிதர்களுக்கு) வஶப்பட்டிருப்பவனாய், (தன்னையே தமர்க்கு நல்கும்) வள்ளலாய், ஸௌஶீல்ய கு₃ணத்தை உடையவனாய், (மனோ வாக்காயங்களால்) ஒருபடிப்பட்டிருப்பவனாய், (நிர்ஹேதுகமாக உபகரிக்கும்) பா₄வஶுத்₃தி₄யை உடையவனாய், அடியார்களின் பிரிவைப் பொறுக்கமாட்டாதவனாய், (ஆஶ்ரிதருடைய து:க்க₂த்தை ஸஹிக்க மாட்டாத) த₃யையை உடையவனாய், (அனைவர்க்கும்) இனியவனாய், (ஆஶ்ரிதரை ரக்ஷிக்கும் விஷயத்தில்) அசைக்க முடியாதவனாய், (ஆஶ்ரயிக்குமிடத்தில் எல்லார்க்கும்) ஸமனாய், (ஆஶ்ரிதர்களுடைய காரியங்களைத் தன்னுடையவையாக நினைத்துக்) காரியம் செய்பவனாய், ஆஶ்ரிதர் செய்த சிறிய ஆநுகூல்யத்தையும் பெரிதாக நினைத்திருப்பவனாய் நீயும் நீ இயற்கையாகவே எல்லாக் கல்யாண குணங்களுக்கும் அமுதக்கடலாயிருக்கிறாய்.] என்று ஸ்தோத்ர ரத்னத்திலும் சொல்லுகிறபடியே, இவனுடைய குணங்கள் அமுதமயமாயிருப்பதொரு "பெருப்புறக்கடல்" [பெரிய திரு. 7-10 1] என்கிறது.

இப்படிப்பட்ட ஸ்வரூப ரூப குணங்களை உடையதான அப்பொருள் எது? என்றால்—"பரம புருஷனாய் ப₄க₃வானான நாராயணனே" என்று மேலே மூன்று பதங்களால் காட்டுகிறார். அவன் எத்தகையவன் எனில்,—(பரமபுருஷம்) தனக்குமேல் ஒருவர் இல்லாத

**ப₄க₃வந்தம், நாராயணம்,**

புருஷனை. **'புருஷ'** ஶப்₃த₃ம் ஜீவனுக்கும் ஈஶ்வரனுக்கும் பொதுவான தாகையாலே **'பரம'** ஶப்₃த₃த்தை விஶேஷணமாக இட்டு ஜீவனைக் காட்டிலும் வேறுபடுத்திக் காட்டுகிறது. **''பரோ மா அஸ்மாதி₃தி பரம:''** [தனக்குமேல் ஒருவன் இல்லாதவனுகையாலே பரமன் எனப் படுகிருன்.] என்பது இந்த ஶப்₃த₃த்தின் வ்யுத்பத்தி. இத்தகைய அனைவரிலும் மேம்பட்ட பரமனுக்குப் பெயர் என்ன? எனில்—(ப₄க₃வந்தம்) ப₄க₃வான் என்னும் பெயரை உடையவனை. இந்தச் சூர்ணை யில் **''ஸ்வாதீ₄ந த்ரிவித₄''** என்று தொடங்கி உலகைப் படைத்து அளித்து அழிக்கையாகிற ஜக₃த்காரணத்வம் சொல்லுகையாலும், அதற்கு வேண்டிய ஞானம் ப₃லம் முதலான ஆறு கு₃ணங்களையும், **''ஜ்ஞாந ப₃ல ஐஶ்வர்ய''** என்று தொடங்கிச் சொல்லுகையாலும், பக்கம் 17, 18-ல் எடுக்கப்பட்ட ஸ்ரீவிஷ்ணுபுராண ஶ்லோகங்களின் படி இவனுக்கு **''ப₄க₃வான்''** என்றே திருநாமம் என்று உணர்த்தப் படுகிறது. இதனால் ஜ்ஞானம் ப₃லம் முதலான ஆறு குணங்களை நிறைவாகப் பெற்றவன் என்றும், உலகிற்குக் காரணபூ₄தன் என்றும் சொல்லப்பட்டது. இதற்கு மேலே, பிரமன் முதலான தேவர்களுக் கும் ஜ்ஞானம் முதலான குணங்களில் ஒரு சிறிது இருப்பதையிட்டு **''ப₄க₃வான்''** என்பது உபசார வழக்காக ஏற்பட்டிருக்கிறதே? எனும் ஐயமற, வேறு எவரையும் குறிக்கமாட்டாத ஶப்₃த₃த்தைக் காட்டு கிருர்—**(நாராயணம்)** வேறு எவரையும் குறிக்கமாட்டாத நாராயணனு வாகத்திலிருந்து தேறுகின்றவனாய்,

**160. நாராயணாத் ப்₃ரஹ்மா ஜாயதே । நாராயணாத் ருத்₃ரோ ஜாயதே**
**[நாராயணோபநிஷத்]**

[நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிருன்; நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிருன்.] என்கிறபடியே, பிரமன், உருத்திரன் முதலானவர்களையும் படைப்பவனாய், அவர்களுக்கும் அடையத்தக்கவ னான நாராயணனை என்கிறது. **(நாராயணம்)** **''ப₄க₃வான்''** என் னும் ஶப்₃த₃த்தாலும், ஜ்ஞானம், ப₃லம் முதலான ஆறு குணங்களை மட்டுமே சொல்லிற்று. **(ப்ரப்₄ருத்யஸங்க்₂யேய கல்யாண கு₃ணக₃ணௌக₄ மஹார்ணவம்)** என்று, இந்தச் சூர்ணையில் 'எல்லாக்

கல்யாண குணங்களுக்கும் இருப்பிடம்' என்று சொல்லுகையாலே அவ்வர்த்தத்தைக் காட்டும் "நாராயண" நாமத்தைச் சொல்லுகிறது. "பரமபுருஷம்" என்கையாலே ஸ்ரீபுருஷஸூக்த ப்ரமாணத்தால் சொல்லப்படுபவன் என்று காட்டிற்று. "ப₄க₃வந்தம்" என்கையாலே,

161 to 164. ப₄க₃வாந் பவித்ரம் வாஸுதே₃வ: । பவித்ரம்
வாஸுதே₃வோ ப₄க₃வாந் । ஸங்கர்ஷணோ
ப₄க₃வாந் । ப்ரத்₃யும்நோ ப₄க₃வாந் ।

[ரஹஸ்யாம்நாயம்]

[பரிஶுத்₃த₄னான ப₄க₃வான் வாஸுதே₃வன், பரிஶுத்₃த₄னும் வாஸுதே₃வனெனப்படும் ப₄க₃வான்; ஸங்கர்ஷணனை ப₄க₃வான்; ப்ரத்₃யும்நனை ப₄க₃வான்] என்று பாஞ்சராத்ரத்திற்கு மூலவேதமான ரஹஸ்யாம்நாய ப்₃ராஹ்மணத்தால் சொல்லப்படுபவன் என்று காட்டிற்று. "நாராயணம்" என்கையாலே, நாராயணநுவாகத்தால் சொல்லப்படுபவன் என்று காட்டுகிறது. ஆக இத்தால்,

165. வேதே₃ ராமாயணே சைவ புராணே பா₄ரதே ததா₂ ।
ஆதௌ₃ மத்₄யே ததா₂ந்தே ச விஷ்ணுஸ் ஸர்வத்ர கீ₃யதே ॥

[வேத₃ங்களிலும், ராமாயண பா₄ரதங்களாகிற இதிஹாஸங்களிலும், புராணங்களிலும் முதலிலும், நடுவிலும், முடிவிலும் மற்றெல்லாவிடத்திலும் விஷ்ணுவே பாடப்படுகிறான்.]

166. ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்டோ
மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ்ச ।
வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃யோ
வேதா₃ந்தக்ருத் வேத₃விதே₃வ சாஹம் ॥ [கீ₃தை 15-15]

[எல்லாருடைய ஹ்ருத₃யத்திலும் நான் அமர்ந்திருக்கிறேன். என்னிடமிருந்தே நினைவும், ஜ்ஞானமும், மறதியும் உண்டாகின்றன. எல்லா வேத₃ங்களாலும் அறியப்படுபவன் நானே. வேத₃த்தில் சொல்லப்பட்ட ப₂லன்களைக் கொடுப்பவனும், வேத₃த்தை அறிவிப்பவனும் நானே.] என்கிற ப்ரமாணங்களின்படி வேதங்கள் அனைத்தாலும் சொல்லப்படுபவன் நாராயணனே என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது.

## ஸ்வாமித்வேந கு₃ருத்வேந ஸௌஹ்ருத்வேந ச பரிக்₃ருஹ்ய

இதுவரையில், அடையத் தக்கவனான எம்பெருமானுடைய சிறப்பு சொல்லப்பட்டது. இனி அவனிடம் செய்யப்படும் கைங்கர்ய ப்ரார்த்தனையைச் சொல்லுகிறது "ஸ்வாமித்வேந" என்று தொடங்கி "தத்ப்ராப்தயே" என்னும் வரையில். **(ஸ்வாமித்வேந கு₃ருத்வேந ஸௌஹ்ருத்வேந ச பரிக்₃ருஹ்ய)** நாராயண ஶப்₃த₃த்தால் சொல்லப்படும் குணங்களை அனுஸந்திக்கிறார். (1) ஸ்வாமித்வம். (2) ஸௌலப்₄யம். (3) ஸௌஶீல்யம். (4) வாத்ஸல்யம் ஆகிய குணங்களன்றோ த்₃வயத்தில் பூர்வ க₂ண்ட₃த்தில் நாராயண ஶப்₃த₃த்தின் பொருளாகச் சொல்லப்படுகிறது. இவற்றில் பின் மூன்று குணங்கள் **"கு₃ருத்வேந"**, **"ஸௌஹ்ருத்வேந"** என்னும் பதங்களால் உணர்த்தப்படுகிறது, **"ஸ்வாமித்வேந"** என்கையாலே,தனக்குத்தானே தலைவனாயிருக்கையாகிற ஸ்வாமித்வ குணம் சொல்லப்படுகிறது. "கு₃ருத்வேந" என்கையாலே, "பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து" [பெரியாழ் திரு. 5-2-8] என்கிற ஸௌலப்₄யமாகிற எளிமை சொல்லப்படுகிறது. **"ஸௌஹ்ருத்வேந"** என்கையாலே நண்பனைப்போலே ஒரு நீராகக் கலந்து பரிமாறுகையாகிற **"ஸௌஶீல்யம்"** சொல்லப்படுகிறது. சகாரம் எஞ்சியிருக்கும் வாத்ஸல்யத்தை அநுக்த ஸமுச்சய முறையில் காட்டுகிறது. அப்படியல்லாமல் சகாரம் உக்த ஸமுச்சயமாகக் கொண்டால், **"வாத்ஸல்யம்"** இவ்விரண்டு குணங்களாலே உபலக்ஷண முறையில் உணரத்தப்படுகிறது. வேறு வகையாகவும் இவற்றுக்குப் பொருள் கொள்ளலாம். **"பரமபுருஷம்"** என்னும் பத₃த்தாலே உணர்த்தப்படும புருஷ ஸூக்தத்தில் சொல்லப்படும் ஸ்வாமித்வத்தை **"ஸ்வாமித்வேந"** என்னும் பதம் சொல்லுகிறது. **"ப₄க₃வந்தம்"** என்னும் **பதத்தாலே** சற்றுமுன் எடுத்த 163. **"ஸங்கர்ஷணோ ப₄க₃வாந்"** என்னும் ரஹஸ்யாம்நாய வாக்கியப் பகுதிகளால், ஸங்கர்ஷணனுக்குரிய அறிவையளிக்கும் தன்மை **"கு₃ருத்வேந"** என்று சொல்லப்படுகிறது. **"நாராயணம்"** என்னும் பத₃த்தாலே உணர்த்தப்படும் நாராயணானுவாகத்தில் உள்ள,

167\. **யச்ச கிஞ்சித் ஜக₃த்யஸ்மிந் த்₃ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா ।
அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த: ॥**
**[தை. நா. 11]**

[இவ்வுலகில் காண்பனவும் கேட்பனவுமாயிருக்கும் பொருள்களெல்லா வற்றிலும் உள்ளும் புறமும் நாராயணன் வியாபித்து நிற்கிறான்.] என்னும் மந்திரத்தாலும்,

168. தஸ்ய மத்₄யே வஹ்நிஶிகா₂ அணீயோர்த்₄வா வ்யவஸ்தி₂த:
நீலதோயத₃மத்₄யஸ்தா₂ வித்₃யுல்லேகே₂வ பா₄ஸ்வரா ।
நீவாரஶூகவத் தந்வீ பீதாபா₄ ஸ்யாத் தநூபமா ।
தஸ்யாஶ் ஶிகா₂யா மத்₄யே பரமாத்மா வ்யவஸ்தி₂த: ।
ஸ ப்₃ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்₃ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட் ॥ [தை. நா. 11]

[அந்த இருதய கமலத்தின் நடுவில், மெலலியதும் மேல்நோக்கினது மான அக்₃நிஶிகை₂ (பரமாத்மாவின் தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹம்) இருக் கிறது. (அது) நீலமேக₄த்தை உட்கொண்ட மின்னல்போல் பிரகாஶ முள்ளதாகவும், நெல் நுனிபோல் சிறிதாகவும், மஞ்சள் நிறமுள்ள தாகவும், ஒப்பற்றதாகவும் இருக்கிறது. அந்த ஶிகை₂யின் நடுவில் பர மாத்மா விளங்குகிறான். அவனே பிரமனுக்கும் அந்தர்யாமி; அவனே ஶிவ னுக்கும் அந்தர்யாமி; அவனே இந்திரனுக்கும் அந்தர்யாமி; (பிரமன் முத லியவர்களைக் காட்டிலும்) மேலானவனும், கர்மத்திற்கு வஶப்படாதவனும், அழிவற்றவனுமான முக்தாத்மாவுக்கும் அவனே அந்தர்யாமி.] என்னும் மந்திரத்தாலும், இவன் தன் உடைமைகளை விடமாட்டாமல் அவர் களுக்குள்ளே புகுந்து கலந்திருக்கும் நட்பு நிலையைச் சொல்லுவதன் மூலம் "ஸுஹ்ருத்வேந" என்னும் பத₃த்தின் அர்த்த₂ம் சொல்லப் படுகிறது. வேறு வகையாகவும் பொருள் சொல்லலாம். "ஸ்வாமித் வேந" என்கையாலே, எம்பெருமானைச் சரணமடைவதற்கு வேண்டிய ஸ்வ ஸ்வாமி ஸம்பந்தத்தை (நாம் உடைமையாகவும் அவன் உடையவ னாகவும் இருக்கும் உறவை)ச் சொல்லுகிறது. "கு₃ருத்வேந" என் கையால் நாம் சிஷ்யனாகவும் அவன் ஆசார்யனாகவும் இருக்கும் உறவைச் சொல்லுகிறது. "ஸுஹ்ருத்வேந" என்கையாலே, 190-ம் பக்கத்தில் உள்ள ஸுபாலோபநிஷத் வாக்யத்தால் சொல்லப்படும், நட்பினால் ஏற்படும் உறவைச் சொல்லுகிறது. நாராயணனுக்குரிய ஸௌஶீல்ய (நீர்மை) குணத்தைச் சொல்லுகிறது என்றும் கொள்ள லாம். இதனால் நமக்கு அவனோடு எல்லாவிதமான உறவும் உள்ளது என்று காட்டப்படுகிறது. (பரிக்₃ருஹ்ய) கு_லைக் பாதல் போலே

ஐகாந்திக (ஆத்யந்திக) தத்பாத₃ாம்பு₃ஜத்₃வய பரிசர்யைக மனோரத₂:,

---

தான் மட்டும் நினைப்பதாய் இராமல், உலகிலுள்ள உயர்ந்தவர்கள் அனைவரும் இவனையே எல்லா உறவுமாக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்று உணர்த்தப்படுகிறது. (பரிக்₃ருஹ்ய) "பரிதோ க்₃ருஹீத்வா" 'பரி' எனனும் உபஸர்க்கம் பல வகையாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதைக் காட்டுகிறது. அதாவது சாஸ்த்ரத்தை ஆராய்வதாலும், ஆசார்யன் உபதேசிக்கையாலும், எம்பெருமான் அவதாரங்களில் ஸ்வாமியாகவும், குருவாகவும், நண்பனாகவும் நடந்து கொள்ளுகையாலும் அந்த எம்பெருமானை எல்லா வகையாலும் ஸ்வாமியாகவும், குருவாகவும், நண்பனாகவும் நெஞ்சிலே நினைத்து என்று பொருள்.

இப்படி எம்பெருமானிடமுள்ள ஸ்வாமித்வத்தை அனுஸந்தானம் செய்தவுடன்,

169. ஸ்வோஜ்ஜீவனேச்ச₂ா யதி₃ தே ஸ்வஸத்தாயாம்

ஸ்ப்ருஹா யதி₃ ।

ஆத்மதா₃ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வப₄ாவஞ்ச

ஸதா₃ ஸ்மர ॥ [விஷ்ணுதத்வம்]

[உன்னுடைய உஜ்ஜீவனத்தில் உனக்கு விருப்பமிருக்குமாகில், உன் இருப்பில் ஆசையிருக்குமாகில், ஆத்மாவினுடைய தா₃ஸனாயிருக்கும் தன்மையையும், ஹரியினுடைய ஸ்வாமியாயிருக்கும் தன்மையையும் (இவைகளின்) இயல்வையும் எப்போதும் நினைப்பாயாக.] என்கிற படியே, அந்த ஸ்வாமித்வத்திற்கு எதிர்த்தட்டாகத் தன்னிடமிருக்கும் தா₃ஸ்யமென்கிற அடிமைத் தன்மைக்கு வேண்டியதான கைங்கர்யத்தை ஆசைப்படும்படியைச் சொல்லுகிறது— (ஐகாந்திக தத்பாத₃ாம்பு₃ஜ த்₃வய பரிசர்யைக மனோரத₂:) என்னும் தொடராலே. (ஐகாந்திக) ஏகாந்தமான உறவுடையதாயிருக்கை. அதாவது — அந்தரங்கமான (நெருங்கிய) உறவுடையது என்றபடி. இப்பத₃த்தை 'தத்' என்னும் பதத்தோடும் கூட்டலாம். "பாத₃ாம்பு₃ஜத்₃வய" என்னும் பதத்தோடும் கூட்டலாம். இறுதியிலுள்ள "பரிசர்யா" என்னும் பதத்தோடும்

கூட்டலாம். "தத்" பதத்தோடு கூட்டியபோது எம்பெருமான் இயல்வான உறவுடையவன் என்று காட்டுகிறது. "பாத3ாம்பு3ஜ த்3வய" பத3த்தோடு கூட்டியபோது,

**170. த்வத்பாத3 பங்கஜ பரிக்3ரஹ த4ந்ய ஜந்மா**
**பூ4யாஸமித்யபி4நிவேஸகத3ர்த்2யமாந: ।**
**ப்4ராம்யந் ந்ருமாம்ஸபணநாய பரேதபூ4மா-**
**வாகர்ண்ய பீ4ரு ருதி3தாநி தவாக3தோऽஸ்மி ॥**
**[மாலதீமாத4வம்]**

[பயந்த ஸ்வபாவமுள்ளவளே! தாமரை போன்ற உன்பாதங்களைப் பிடிப்பதன் மூலம் பிறவிப்பயன் பெறலாம் என்னும் ஆசையினாலே மனம் வருந்தி, மனிதமாமிசத்தைப் பெறுவதன் பொருட்டு மயானத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் நான், உன்னுடைய அழுகைக் குரலைக் கேட்டு வந்திருக்கிறேன்.] என்றும்,

**171. கிம் ஶீதலை: க்லமவிநோதி3பி4ரார்த்3ரவாதாந்**
**ஸஞ்சாரயாமி நளிநீத3ள தாலவ்ருந்தை: ।**
**அங்கே நிதா4ய கரபோ4ரு யதா2ஸுக2ம் தே**
**ஸம்வாஹயாமி சரணாவுத பத்3மதாம்ரௌ ॥**
**[ஶாகுந்தலம் 3-18]**

[கரபம் போன்ற துடையை உடைய ஶகுந்தலே! ஶ்ரமத்தைப்போக்கும் குளிர்ந்த தாமரையிதழாலான விசிறியாலே குளிர்ந்த காற்றை உன்மேல் வீசச்செய்யலாமா? அல்லது தாமரைபோல் சிவந்த உன் பாதங்களை என் மடியில் வைத்துக்கொண்டு மெதுவாக வருடலாமா?] என்றும் ப்ராக்ருதரான ஸ்த்ரீ புருஷர்களுக்கிடையே உள்ள காமம் போலே, ஆத்ம ஸ்வரூபத்துக்குத் தகாததாய் இராமல், ஸ்வாமியினுடைய திருவடிகளிலே தா3ஸனுக்குப் பிறக்கும் காமம் ஆத்ம ஸ்வரூபத்துக்கு இயல்வாகவே பொருந்தியது என்று உணர்த்தப்படுகிறது. 'ஐகாந்திக' பதம் பரிசர்யைக்கு விஶேஷணமானபோது அந்தரங்க கைங்கர்யத்தைக் காட்டுகிறது. (தத் பாத3ாம்பு3ஜத்3வய) இங்கு "தத்" என்னும் ஶப்3த3ம் அருகிலிருப்பதைக் கூறுகையாலே, அருகிலிருக்கும் "நாராயணம்" என்னும் பதத்தாலே சொல்லப்படுபவனைக் காட்டுகிறது. இதனால், "நாராயண சரணௌ" என்னும் த்3வயத்தின் பூர்வ க2ண்டத்தில் உள்ளதை நினைக்கிறது. "தத்" என்று

எம்பெருமானைப் பற்றிச் சொல்லியிருந்த போதிலும், "பாத₃" என்று திருவடிகளைச் சொல்லுவது – கைக்குழந்தைக்குத் தாய்முலை போலே அடிமையான சேதனனுக்கு எம்பெருமானுடைய திருவடிகள் ஸ்வரூபந்திற்குத் தக்கவை என்று காட்டுகிறது. தாய்முலையில் பால் ஊறுவது போலே,

172. தத₃ஸ்ய ப்ரியமபி₄ பாதே₂ா அஶ்யாம்
நரோ யத்ர தே₃வயவோ மத₃ந்தி ।
உருக்ரமஸ்ய ஸ ஹி பந்து₄ரித்த₂ா
விஷ்ணோ: பதே₃ பரமே மத்₄வ உத்ஸ: ॥
[ருக், அஷ்டக 2-2-24-5]

[எந்த க₃ங்கா₃ தீர்த்த₂ விஷயத்தில், தே₃வத்வத்தை விரும்பும் மனிதர்கள் ஸந்தோஷிக்கிறார்களோ, இனியதாகவிருக்கும் இந்த ப₄க₃வானுடைய அந்த ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை ஆத₃ரவுடன் பானம் செய்வேனாக. அப்படிக் குடிப்பவன் திரிவிக்ரமனுக்கு ப₃ந்து₄வாவான். இம்மாதிரியாக விஷ்ணுவினுடைய மேலான திருவடியில் அம்ருதத்தினுடைய ப்ரவாஹம் உண்டாகிறது.] என்றும்,

173. தவாம்ருதஸ்யந்தி₃னி பாத₃பங்கஜே
நிவேஶிதாத்மா கத₂மந்யதி₃ச்ச₂தி? ।
ஸ்தி₂தே ஽ரவிந்தே₃ மகரந்த₃நிர்ப₄ரே
மது₄வ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே ॥
[ஸ்தோ. ர. 27]

[அம்ருதத்தைப் பெருக்குகின்ற உன் திருவடித் தாமரையில் (உன் அருளாலே) வைக்கப்பட்ட மனமானது மற்றொன்றை எப்படி விரும்பும்? தேன் நிறைந்த செந்தாமரையானது இருக்கும்போழுது வண்டு முள்ளிப்பூவைக் காணவும் மாட்டாதன்றோ] என்றும் சொல்லுகிறபடியே, இவனுகரும் திருவடிகளிலே இனிமையாகிற தேன் பெருக்கு இடைவிடாமலிருக்குமே. (அம்பு₃ஜ) தாமரை. திருவடிகளைப் பற்றுவது சாஸ்த்ரத்தின் கட்டளையால் உண்டாவதாயிருந்தால் கஷாயம் குடிப்பதுபோலே கசப்பாயிருக்கும். அப்படியில்லாமல், இவனே விரும்பிப் பற்றலாம்படி தாமரைபோலே போகரூபமாயிருக்கும் என்று காட்டுகிறது.

(அம்புஜ) "அமரர் சென்னிப்பூ" [திருக்குறு. 6] என்கிறபடியே, நித்ய ஸூரிகள் தலையில் சூடும் திருவடித் தாமரையாகையாலே, இதைச் சூடுவது பேராகரூபமாயிருக்கும். குளித்து, தலைமயிரிலே பூ வைக்கும்போது, "தலையிலே பூ வைக்கவேண்டும்" என்று ஒரு சாஸ்திர விதி தேவையில்லையன்றோ. (த்வய) உபாயம் (இரண்டாய்) 'த்வயமாய்' [1. த்வயமந்த்ரமாய். 2. இரு திருவடிகளாய்] இருக்கையாலே, அடையத்தக்க உபேயமும் த்வயமாய் (இரண்டாய்) இருக்கிறது.

174. தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம் ।
ஸர்வதா சரணத்வந்த்வம் வ்ரஜாமி ஶரணம் தவ ॥

[ஜி. ஸ்தோ. 2]

[விஷ்ணு பக்தியுடையவர்களும் பகவத் பக்தியற்றவர்களும் எப்போதும் ஸமானமாகப் பற்றலாம்படியிருக்கும் உன்னுடைய திருவடியிணையை உபாயமாக நிஸ்சயிக்கிறேன்.] என்று ஜிதந்தேயிலும் திருவடியிணையே உபாயமாகவும், உபேயமாகவும் சொல்லப்பட்டதன்றோ. இதனால் த்வயத்திலுள்ள "சரணௌ" என்கிற த்விவசனத்தை (இருமையை) நினைக்கிறது. (பரிசர்யா) "சர்யா" என்றது 'சரித்ரம்' என்றதாய் அநுஷ்டானத்தைக் காட்டுகிறது. இங்கு கைங்கர்யத்தைக் குறிக்கிறது. "பரிசர்யை"யாவது—எல்லாவிதமான கைங்கர்யத்தையும் காட்டுகிறது. இப்படிப் பதங்களைக் கொண்டு பொருள் கொள்ளுவதோடல்லாமல், 'பரிசர்யை' என்னும் பதம் ருடி என்னும் இடுகுறிப் பெயராய் கௌரவிக்கத் தக்கவர்கள் விஷயத்தில் கைங்கர்யத்தைச் சொல்லி, அந்த முறையில் கைங்கர்யம் பொருளாவதாகவும் கொள்ளலாம். அப்படிக் கொள்ளாமல்,—"பரித: சர்யா பரிசர்யா" என்னும் வ்யுத்பத்தியைக் கொண்டு,

175. விஸ்வத: பர்யேதி

[பரமாத்மாவைச் சுற்றிலும் ப்ரதக்ஷிணம் செய்கிறான்.] என்று வேதத்திலும், "கொண்ட கோயிலை வலம் செய்து" [திருவாய் 10-1-5] என்றும், "வலம் செய்து நாளும் மருவுதல் வழக்கு" [திருவாய்

தத்ப்ராப்தயே ச

2-10-8] என்றும் தமிழ் வேதத்திலும் சொல்லுகிறபடியே, வலம் செய்தல் முதலான அநுகூலச் செயல்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (ஏகமனோரத2:) மற்ற ப2லன்கள் அனைத்தையும் விட்டுக் கைங்கர்யம் ஒன்றையே பலனாகப் பெற வேணும் என்னும்படியான பாரிப்பையுடையவனாய். (தத்ப்ராப்தயே) சற்றுமுன் சொல்லப்பட்ட பாரிப்புக்கு விஷயமான பரிசர்யையாகிற கைங்கர்யத்தைப் பெறுவதற்சாக. (ச) இதற்குமுன் வேறொன்றைப் பெறுவதைப் பற்றப் பேசாமையாலே, இது உக்த ஸமுச்சயமாக முடியாது. ஆகையால், இந்த சகாரம் அநுக்தமான (இங்கு சொல்லப்படாத) ஒன்றை ஸமுச்சயப்பதாகவே (கூட்டுவதாகவே) கொள்ளவேண்டும். அதாவது—

176. ஸக்ருத் த்வதா3காரவிலோகநாஶயா
த்ருணீக்ருதாநுத்தமபு4க்திமுக்திபி4: ।
மஹாத்மபி4ர் மாமவலோக்யதாம் நய
க்ஷணேऽபி தே யத்3விரஹோऽதிது3ஸ்ஸஹ: ॥
[ஸ்தோ. ர. 56]

[எந்தப் பெரியோர்களின் பிரிவானது உனக்கு ஒரு க்ஷணப்பொழுதும் மிகவும் பொறுக்க முடியாததாயிருக்கிறதோ, ஒரு தடவை உன்னுடைய திருமேனியைக் காணவேணும் என்னும் ஆசையினால் த்ருணம் (புல்) போல் நினைக்கப்பட்ட மேலான போ4கங்களையும், மோக்ஷத்தையும் உடையவர்களான அந்தப் பெரியோர்களால் கடாக்ஷிக்கத்தக்கவனாயிருக்கும் தன்மையை (அடையும்படி) என்னைச் செய்தருளவேண்டும்.] என்றும், "அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன்" [அமலனாதி-1] என்றும் சொல்லுகிறபடியே, எம்பெருமானை அடைவதன் பலமாயிருக்கும் அடியார்க்கு ஆட்பட்டு இருக்கைக்குமாக என்று பா4க3வத் பரிசர்யையை அநுக்த ஸமுச்சய முறையிலே கூட்டுவதாகக் கொள்ள வேண்டும். அப்படியல்லாமல், "பரிசர்யைக மனோரத2:" என்று முன் சொல்லப்பட்ட மனோரத2மாகிற பாரிப்பை உக்த ஸமுச்சய முறையிலே கூட்டுவதாகவும் கொள்ளலாம். அதாவது—"நின் புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீ அவர்க்கு வைகுந்தமென்றருளும் வான்" [பெரிய திருவ. 59] என்றும்,

**தத்பாதாம்புஜத்வய ப்ரபத்தே:**

**177. துர்க்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத: ।**
**யதி நாஶம் ந விந்தேத தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா ॥**
**[ஜி. ஸ்தோ. 12]**

[தேவரீரிடத்தில் ஈடுபட்டிருக்கிற என்னுடைய மநோரதமானது, மிகவும் கீழான நிலை ஏற்பட்ட போதிலும் அழியாதிருக்குமேயாகில், அவ்வளவாலே எப்பொழுதும் க்ருத க்ருத்யனுயிருக்கிறேன்.] என்றும் சொல்லுகிறபடியே, கைங்கர்யம் செய்ய வேண்டும் என்னும் பாரிப்பே போதுமாயிருக்க அதற்கு மேலே கைங்கர்யத்தையும் பெறவேணும் என்றிருந்தானுகில்—என்று கைங்கர்ய ப்ராப்தியைக் கைங்கர்ய மநோரதத்தோடு கூட்டுகிறது என்றபடி.

இதுவரையில் அடையத்தக்க உபேயமான கைங்கர்யத்தைச சொல்லிற்று. இனி, இந்தச் சூர்ணையின் எஞ்சிய பகுதியாலே இந்த உபேயத்தை அடைவதற்குத் தக்க உபாயத்தை நிர்ணயம் செய்து அதற்கு உறுப்பான அனுஷ்டானத்தையும் சொல்லுகிறது. **(தத் பாதாம்புஜத்வய ப்ரபத்தே:)** என்று தொடங்கி **(மந்வாந:)** என்பது ஈருக, உபாயம் நிர்ணயிக்கப் படுகிறது. **(தஸ்யைவ)** என்று தொடங்கி **(சரணாரவிந்த யுகளம்)** என்பது ஈருக உபேயம் இன்னது என்று காட்டுகிறது. **(அநந்யாத்ம)** என்று தொடங்கி **(அநுவ்ரஜேத்)** என்பது ஈருக உபாயத்தைப் பற்றுவதாகிற ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது. **(தத்பாதாம்புஜத்வய)** ப்ராப்யமான திருவடித் தாமரையிணையே ப்ராபகமாகவும் அமைகிறது என்கிறது.

இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. ப்ராப்யமும் ப்ராபகமும் ஆகிய இரண்டும் ஒன்ருனுல், காரணமும் அதன் விளைவான கார்யமும் ஒன்ருக வேண்டி வருமே! அப்படி ஒப்புக்கொண்டால், காரணம் கார்யத்தை ஸாதிக்கிறது என்று சொல்லமுடியாது. இக்குற்றத்தை ஒப்புக்கொண்டால் காரணமாகிற உபாயத்தில் எவரும் இழியமாட்டார்கள். இப்படி அனுஷ்டிப்பவர்கள் எவரும் இல்லாமையாலே சரணமடைய வேண்டும் என்னும் ஶாஸ்த்ரம் வீணுனதாகவும் ப்ரமாணம் அல்லாததாகவும் ஆகிவிடும். இத்தனை அனர்த்தங்கள் வராதபடி

எப்படிப் பரிஹாரம் செய்யமுடியும்?—என்பது அவ்வாக்ஷேபம். திருவடித் தாமரைகளே உபாயமாகவும் உபேயமாகவும் ஆனாலும், திருவடித் தாமரைகளில் கைங்கர்யம் ப்ராப்யம்; அந்தத்திருவடித் தாமரையிணையில் ப்ரபத்தி உபாயம் என்று பே₄த₃மும் (வேறுபாடும்) உண்டாகையாலே ஒரு விரோதமும் இல்லை என்பது இதற்குப் பரிஹாரம். இதன்மேல் மற்றொரு ஆக்ஷேபம் எழுகிறது. அதாவது— கைங்கர்யம் உபேயமாய், ப்ரபத்தி உபாயமானால்,

**178. ப்₃ரஹ்ம வேத₃ ப்₃ரஹ்மைவ ப₄வதி** [முண்ட₂ 3-2-9]

[ப்₃ரஹ்மத்தை உபாஸிப்பவன் ப்₃ரஹ்மத்தைப்போலாகிறான்.]

**179. ப்₃ரஹ்மவித₃ாப்நோதி பரம்** [தை. ஆ. 1]

[ப்₃ரஹ்மத்தையறிந்தவன் மேலான ப₂லனை அடைகிறான்.] என்னும் வேத வாச்கியங்களிலும், கீதா சரமஶ்லோகத்திலும் 254-ம் பக்கத்திலுள்ள 129-வது ப்ரமாணமான அஹிர் புத்₃ந்ய ஸம்ஹிதா வாச்கியத்திலும் ப்ராப்யமும் ப்ராபகமும் ஒன்று என்றும், எம்பெருமானே உபாயமாகவும் உபேயமாகவும் ஆகிறான் என்றும் சொல்லுகிற ப்ரமாண வழக்குகளுக்குஎப்ப ப் பொருள் கொள்ளுவது எனில்—பரிசர்யையாகிற (கைங்கர்யமாகிற) உபேயத்திற்கு விஷயமாயிருப்பவன் எம்பெருமானே. ப்ரபத்தியாகிற உபாய ஸ்வீகாரத்திற்கு விஷயமாயிருப்பவனும் எம்பெருமானே. இப்படி இரண்டு விஷயங்களும் ஒன்றாக இருக்கையால் உபாய உபேயங்கள் ஒன்று என்று சொல்லத் தடையில்லை. இப்படி இரண்டும் ஒன்றென்றால் இரண்டுக்கும் பே₄த₃ம் ஸித்திக்குமோ? எனில்—விசேஷணமாகிற கைங்கர்யமும் ஸ்வீகாரமும் பே₄த₃த்தைக் காட்டுகிறது. இதன்றால் வேறுபடுத்தப்படும் பகவத் ஸ்வரூபம் விசேஷ்யம் என்று கொள்வதாலே, கைங்கர்யத்தினால் உண்டான உகப்புடன் கூடிய எம்பெருமானே உபாயஸ்வீகாரமாகிற ப்ரபத்தியினால் உண்டான அருளோடு கூடிய எம்பெருமானாகிறான். ஆகையால் எம்பெருமானாகிற வஸ்து ஒருவனாயிருந்தபோதிலும், விசேஷணத்தில் வேறுபாட்டையிட்டு வேறாகையாலே வேறுபாட்டுக்குக் குறையில்லை. அப்படியானால், "க₂ண்டோ₃ முண்ட₃:பூர்ணஶ்ருங்கோ₃ கௌ₃:" [அரைக்கொம்புடையதாய், கொம்பற்றதாய், முழுக்கொம்புடையதான மாடு] என்னும் வாக்கியத்தில் அரைக்கொம்பு, முழுக்கொம்பு முதலான விசேஷணங்களின் வேறுபாட்டினால், விசேஷ்யமான மாடு வெவ்வேறு என்று தேறுகிறதே? எனில் — ஒன்றோடொன்று முரண்பட்ட விசேஷணமாகையாலே

**அங்யத்**

---

விஶேஷ்யம் இவ்விடத்தில் வேறுபடுமானாலும், **"தே₃வத₃த்த: ஶ்யாமோ யுவா ஸமபரிமாண:"** [தேவதத்தன் கருநிறமுடையவன், யௌவனமுடையவன், அளவான அங்கங்களையுடையவன்.] என்னும் வாக்கியத்திற் போலே, முரண்படாத விஶேஷணங்கள் உள்ளவிடத்தில் விஶேஷணங்களின் வேறுபாட்டால் விஶேஷணங்களோடு கூடிய பொருளின் ஆகாரத்தில் வேறுபாடு இருந்த போதிலும், விஶேஷ்ய ஸ்வரூபத்தில் வேறுபாடு உண்டாகாது.

**180. ஸ ஏவ ஸ்ருஜ்யஸ் ஸ ச ஸர்க்க₃கர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச ।**

**ப்₃ரஹ்மாத்₃யவஸ்வதா₂பி₄ரஶேஷமூர்த்திர் விஷ்ணுர் வரிஷ்டோ₂ வரதோ₃ வரேண்ய: ॥**

**[வி. பு. 1-2-70]**

[ஸ்ருஷ்டி செய்யப்படுபவனும் அவனே; பிரமன் முதலிய நிலைகளால் ஸ்ருஷ்டி செய்பவனும் அவனே; அவனே (உலகை) ரக்ஷிக்கிறான்; (உலகை) விழுங்குகிறான்; அவனே காப்பாற்றப்படுகிறான். எல்லாவற்றையும் ஶரீரமாகக்கொண்ட விஷ்ணுவே சிறந்தவன்; வரங்களைத் தருபவன்; வரிக்கத்தகுந்தவன்.] என்று **ஸ்ரீ**விஷ்ணுபுராணத்தில் சொன்னபடியே, ப்ரஹ்மம் ஒன்றே கார்யமான உலகமாகவும், காரணமாகவும் ஆகுமிடத்தில், ஸூக்ஷ்மமான (நுண்ணிய) சேதநாசேதநங்களோடு கூடிய ப்ரஹ்மம் காரணம், ஸ்தூலமான (பருத்த) சேதநாசேதனங்களோடு கூடிய ப்ரஹ்மம் கார்யம் என்று விஶேஷணத்தில் வேறுபாடு இருந்தபோதிலும் விஶேஷ்யமான **ப்₃ரஹ்மம்** ஒன்றே என்று முரண்பாடு இல்லாமல் நிர்வஹிப்பது போலே இதையும் கொள்ள வேண்டும்.

**(ப்ரபத்தே:)** 135-ம் பக்கத்திலுள்ள 73-வது ப்ரமாணத்தின்படி, "அனுஷ்டிப்பதற்கு அரிய உபாயங்களில் எனக்குத் தகுதியில்லை. ரக்ஷகனுன எம்பெருமானே உபாயமாக வேண்டும்" என்று உண்டாகிற உறுதியான வேண்டுகோளே ப்ரபத்தியாகும். **(அர்யத்)** இப்பிரபத்தியைத் தவிர கர்மஜ்ஞான பக்திகள் முதலான மற்ற உபாயங்கள் இல்லையோ? எனில் — **"அங்யத்"** என்னும் பத₃ம் தொடங்கி "மங்

Released by Maaran's Dog ,Toronto , Canada

**ந மே கல்ப கோடி ஸஹஸ்ரேணாபி ஸாத₄நமஸ்தீதி மந்வாந:,**

---

**வாந:"** என்னும் பதம் வருக, "அவையெல்லாம் நிலையான நெஞ்சு டையவர்களுக்கு நல்ல தீர்த்தம்போலே புனிதமான உபாயமாகும். நம்மைப்போல் சஞ்சலமான மனம் படைத்தவர்களுக்கு அவற்றில் இழியத் தகுதியில்லை என்றிருக்கவேண்டும்" என்கிறார். **(அந்யத்)** ப₄க்தி, அதன் பல வகைகளான ஸத்வித்யை உபகோஸலவித்யை முதலானவை, இந்த ப₄க்திக்கு அங்கமான ஜ்ஞானயோக கர்மயோகங் கள் முதலான, ப்ரபத்தியிலும் வேறுபட்ட உபாயங்களைச் சொல்லு கிறது. இப்படி ஶாஸ்த்ரங்களிலே அழுத்தமாக விதிக்கப்பட்ட இவை உபாயங்களன்றோ? எனில்—**(நமே)** **"அஸ்தி"** என்னும் பதத்தை இங்கே கூட்டி **"நமேऽஸ்தி"** [எனக்கு இல்லை] என்று பொருள் கொள்ள வேண்டும். இவையெல்லாம் ஶக்தியுடையவர்களே அனுஷ் டிக்கத் தக்கவை; அறிவற்றவனாய், சக்தியற்றவனாய், காம வெள்ளத் திலே மூழ்கி அது காரணமாக "மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து" [திருவாய் 2-6-8] என்கிறபடியே, பல பிறவிகளை எடுத்து, "மாதரார்வனமுலைப்பயனே பேணினேன்" [பெரிய திரு. 1-6 1] என்கிறபடியே தாழ்ந்த விஷயங்களில் ஈடுபட்டு, இப்படி ஶாஸ்த்ர விருத்₃த₄மான பல செயல்களைச் செய்து 12-ம் பக்கத்திலுள்ள 9-வது ப்ரமாணத்தின்படியும், 13-வது பக்கத்திலுள்ள 10-வது ப்ரமாணத்தின் படியும், எம்பெருமானுடைய சீற்றத்திற்கு இலக்காயிருக்கிற எனக்கு இவை உபாயமல்ல என்று கருத்து. "இப்படி மாறி மாறிப் பல பிறப் பும் பிறக்கிற பிறவிகளில், இதற்கு முன்பு வேறு உபாயங்களில் தகுதியில்லாமல் போனாலும், இனி வரப்போகும் பிறவிகளிலாவது இந்த ஸாத₄நங்களை அனுஷ்டிக்கலாகாதோ!" என்று எம்பெருமான் திருவுள்ளமாக, கூறுகிறார்—**(கல்பகோடி ஸஹஸ்ரேணாபி)** ஆயிரம் கோடி கல்ப காலங்கள் ஆனாலும், ஒட்டடையை ஆயிரம் நாட்கள் நீரிலிட்டு வைத்தாலும் அது முளைவிடாதாப்போலே காலதத்வமுள்ள வரையிலும் பிறந்து திரிந்தாலும் எனக்கு இவற்றை அனுஷ்டிக்கத் தகுதி உண்டாக மாட்டாது. **(ஸாத₄நமஸ்தி)** என்றதை **(நமே)** என்பதோடு கூட்டி முன் பொருள் கொள்ளப்பட்டது. அதுபோலே, 'ந' என்பதை இத்தோடு கூட்டி **"ஸாத₄நம் நாஸ்தி"** என்று கொண்

## தஸ்யைவ ப₄க₃வதோ நாராயணஸ்ய
## அகி₂ல ஸத்த்வத₃யைக ஸாக₃ரஸ்ய

டும் பொருள் கொள்ளலாம். எவ்வளவு உபாயங்கள் அநுஷ்டித்தா லும், நான் செய்த பாபங்களுக்கு ப்ராயச்சித்தமாகலாமேயொழிய; விரும்பும் ப₂லமான மோக்ஷத்தை அவை ஸாதித்துத் தரமாட்டா. **"ஸாத₄நம் நாஸ்தி"** என்றால் "ஸாதநம் இல்லை" என்றே பொது வாகப் பொருள்படும். அப்படிக்கொள்ளாமல், **"ஸாத₄நம் நப₄வதி"** என்று பொருள்கொண்டு, "எனக்கு ஸாதநமாகமாட்டாது" என்கை. **(இதிமங்வாந:)** இப்படி அறுதியிட்டு, **"மங்வாந:"** என்னும் நிகழ்காலத் தாலே, இந்த நினைவு இங்கு இவன் உள்ளவரையில் நடக்கவேண்டு மென்று காட்டுகிறது.

**(தஸ்யைவ ப₄க₃வதோ நாராயணஸ்ய)** இந்தச் சூர்ணையிலேயே முன்னால், **"ப₄க₃வந்தம் நாராயணம்"** என்று சொல்லப்பட்ட அந்த எம்பெருமானுடைய என்று பொருள். முதலில் சொல்லப்பட்ட **"ப₄க₃வந்தம் நாராயணம்"** என்னும் பதங்களால், **233-ம் பக்கத்தில்** எடுக்கப்பட்ட 112-வது ப்ரமாணமான தைத்திரீய ஆநந்தவல்லீ வாக் கியத்தில் சொல்லப்பட்ட, அவனுடைய ப்ராப்யத்தத்துக்கு உறுப் பான குணங்களையும், அந்த குணங்களுக்கு இருப்பிடமான ஸ்வரூபத் தையும் சொல்லிற்று. இங்கு **"ப₄க₃வதோ நாராயணஸ்ய"** என்று அவ னுடைய ப்ராபகத்வத்துக்கு உறுப்பான குணங்களையும் ஸ்வரூபத்தை யும் சொல்லுகிறது. இனிமேல் உள்ள பதங்களாலே இந்த **"ப₄க₃வந் நாராயண"** பதங்களால் உணர்த்தப்படும் குணங்களையும் அந்த குணங்களையுடைய ஸ்வரூபத்தையும் விவரிக்கிறது. **(அகி₂ல ஸத்வ த₃யைக ஸாக₃ரஸ்ய)** 'எல்லா உயிர்கள் விஷயத்திலும் கருணைக்கு ஒரு கடலாயிருப்பவனுடைய' என்று பொருள். **(அகி₂ல ஸத்வ)** இன்னான் இன்னான் — என்று அவனுடைய பிறப்பு ஒழுக்கம் குணம் முதலானவற்றில் ஏற்றத்தாழ்வு பாராமல் எல்லா உயிர்கள் விஷயத்தி லும் என்று கருத்து. **(த₃யா)** சுயநலம் கருதாமல் பிறர் துன்பம் கண்டு பொறுக்காமை "**த₃யை**" ஆகிறது. தான் ஒரு பயன் கருதாமல் பிறர் நோவு கண்டால் 'ஐயோ' என்று இருக்கை என்றபடி. **"ஏகஸாக₃ரஸ்ய"** **தயையாகிற நீருக்கு வேறோர் இருப்பிடமின்றிக்கே இவனே இருப்பிட** மாயிருக்கை. இந்தப் பெருமை பிறருடைய துன்பத்தில் ஏற்றத்தாழ்வு

**அநாலோசித கு₃ணகு₃ண அக₂ண்ட₃ஜநாநுகூல அமர்யாத₃ ஸீலவத:,**

---

கள் கண்டு அதையோட்டிச் செயல்படுகிறதோ? என்னில் – (**அநாலோசித கு₃ணகு₃ண அக₂ண்ட₃ ஜநாநுகூல அமர்யாத₃ ஸீலவத:**) இப்படிப் பிறரிடம் உள்ள குணங்களையும் குற்றங்களையும் ஆராய வொண்ணாதபடியான சீர்மைக் குணம் உடையவன் என்கிறது. "திருவுள்ளத்தால் ஆராயப்படாதபடியான நன்மை தீமைகளை உடையவராயிருக்கிற அனைத்து மனிதர்களும் உய்வதற்கு உறுப்பான எல்லையற்ற நீர்மைக் குணத்தை உடையவனுடைய" என்பது இப்பதத்தின் பொருள். குற்றம் திருவுள்ளத்தில் படவில்லை என்றால் அது சிறப்பாகும். உள்ள குணங்களை ஏற்றுக்கொள்ளவேண்டியிருக்க, அதுவும் நெஞ்சில் படவில்லை என்றால் அது எப்படிச் சிறப்பாகும்? என்னில்? இவனைத் தள்ளுதற்குக் காரணமான குற்றங்களை ஆராயாதிருப்பது போலே, இவனைக் காப்பதற்கு உறுப்பான குணங்களையும் எதிர்பார்க்க மாட்டான். தான் இவனைக் காக்கும்போது இவனிடமிருக்கும் குணங்களை எதிர்பார்த்துக் காக்கமாட்டான் என்று கருத்து. (**அநாலோசித**) "**ஆலோசித**" என்றால் இச்சேதனனிடத்தில் நன்மையுண்டோ? தீமையுண்டோ? என்று பிரித்து ஆராய்தல்; "**அநாலோசித**" **ஸப்₃த₃**ம் அப்படிச் செய்யாதிருப்பதைக் காட்டுகிறது. அவையாவன: (**கு₃ணகு₃ண**) நன்மைதீமைகள். அறிவிலியோ அறிவாளியோ, **ஸா**ஸ்த்ர நம்பிக்கையில்லாத நாஸ்திகனோ, அது உள்ள ஆஸ்திகனோ அறவழி நடப்பவனோ, மறவழி நடப்பவனோ, அடக்கமானவனோ, அடக்கமற்றவனோ என்று ஆராயமாட்டான் என்று கருத்து. (**அக₂ண்ட₃ஜந**) தேவர், மனிதர், பிராமணர், க்ஷத்திரியர் முதலான நாலு வர்ணங்கள், அவற்றில் கலப்பு மணத்தால் ஏற்படும் அநுலோம ப்ரதிலோம ஜாதிகள் என்னும் வேற்றுமைகளில்லாமல் அனைவரின் விஷயமாக. (**அநுகூல**) இவை தவறான வழிகளைத் தவிர்ந்து நல்ல வழியில் சென்று ஸம்ஸாரத்திலிருந்து அக்கரை சேருவதற்கு உறுப்பாம்படியிருக்கை. (அமர்யாத₃) மர்யாதை₃யாகிறது வரம்பு அல்லது எல்லை. "**அமர்யாத₃**" என்றது எல்லையற்ற என்றபடி. எல்லையற்றது எது? எனில் (**ஸீல**) பெரியவன் தாழ்ந்தவனோடு கலக்கும்போது, தன் மேன்மை பார்த்து கர்வம் கொண்டு விலகுதல், அவனுடைய தாழ்வைப் பார்த்துக் கூசி விலகுதல் செய்யாதபடி ஒருநீராகப் பரிமாறுகிற நீர்மை. (**ஸீலவத:**) இந்த **ஸீல** கு₃ணத்தை என்றும் உடையவனுடைய என்று பொருள்.

## ஸ்வாப₄ாவிகாநவதி₄காதிஶய கு₃ணவத்தயா [து]

181. பூ₄ம நிந்தா₃ ப்ரஶம்ஸாஸு நித்யயோகே₃ऽதிஶாயநே ।
ஸம்ப₃ந்தே₄ऽஸ்திவிவக்ஷாயாம் ப₄வந்தி மதுபா₃த₃ய: ॥
[வார்த்திகம் 5-2-14]

[மதுப் (மத்) முதலான விதிகள் மேலே சொல்லப்போகும் அர்த்தங்களில் வருகின்றன; — (1) அதி₄கம் (**கோ₃மாந்- அதி₄கமான பசுக்களை உடையவன்**) (2) நிந்தை₃ (**ரோக₃வாந்-வியாதி₄யை உடையவன்**) (3) ஸ்தோத்ரம் (**ரூபவதீ-அழகிய உருவை உடையவள்**) (4) எப்போதும் சேர்ந்திருப்பது (**க்ஷீரிணோ வ்ருக்ஷா:-** எப்போதும் பாலையுடைய மரங்கள்) (5) அதி₄க கு₃ணமுள்ளதாயிருப்பது (**ஶக்திமாந்-அதி₄க ஶக்தியுள்ளவன்**) (6) சேர்க்கை (**த₃ண்டீ₃-தடியை உடையவன்**) (7) இருப்பதைச் சொல்லுவது (**பர்வதோ வஹ்நிமாந்-மலையில் நெருப்பிருக்கிறது.**)] என்னும் பொருள்களில் இங்கு "மதுப்" ப்ரத்யயம் நித்யயோக₃மாகிற என்றும் சேர்ந்திருக்கையைக் கூறுகிறது.

இப்படி அவன் தன்னுடைய நீர்மையாலே அனைவரோடும் ஒரு நீராகக் கலந்தாலும், அவர்கள் தன்னைக் கண்டால் பயந்து விலகும்படி இருப்பானோ? எனில்—(**தே₃வதிர்யங் மநுஷ்யாதி₃ அகி₂ல ஜந ஹ்ருத₃ய ஆநந்த₃நஸ்ய**) பகுத்தறிவுடைய தேவர், மநுஷ்யர் ஆகியவர்கள், பகுத்தறிவற்ற விலங்கு பறவைகள் ஆகிய திர்யக்குகள், தாவரங்கள் என்னும் வேற்றுமை இல்லாமல், அனைவருடைய நெஞ்சும உருகும்படியான இன்பத்தை விளைப்பவனாய் இருப்பவன். இப்படியிருப்பதற்குக் காரணமென்ன? எனில்—இப்பதத்திற்கு முன்புள்ள "து" ஶப்₃த₃ம் ஒரு காரணம் உண்டென்று காட்டுகிறது. அது ஏதென்பதை அதற்கு முன் உள்ள "**ஸ்வாப₄ாவிக அநவதி₄காதிஶய கு₃ணவத்தயா**" என்னும் பதம் காட்டுகிறது. இயல்வாகவே உண்டான எல்லையில்லாத மிகுதியை உடைய குணத்தை உடையவனாயிருக்கையாலே. முன் பதங்களிலே த₃யை, ஶீலம் என்று ஒவ்வொரு குணத்தைச் சொல்லியிருக்கும்போது இப்பதத்தில் பொதுவாக "**கு₃ணம்**" என்று சொல்லுவதற்குக் கருத்து என்ன? எனில்—முன்பதங்கள் அனைத்திலும் ஆத்ம குணங்களைச் சொல்லுகிறது. இங்கு

**தே₃வதிர்யங்மநுஷ்யாதி₃ அகி₂லஜந ஹ்ருத₃யாநந்த₃நஸ்ய**

---

**182. ராம ராம நயநாபி₄ராமதாமாஶயஸ்ய ஸத்₃ருஶீம்**
**ஸமுத்₃வஹந், ஸர்வதே₃வஹ்ருத₃யங்க₃மோ ஽ஸி**

[ராமனே! (அவரவர்) விருப்பத்திற்குத் தகுந்தவாறு கண்ணுக்கு இனிமையாயிருக்கையை உடையவனாய், எல்லா தே₃வர்களுக்கும் நெஞ்சுக்கினியனாயிருக்கிறாய்.] என்னும் கண்ணுக்கு இனிய காந்தி, மென்மை முதலான திருமேனியின் குணங்களையும் சேர்த்துச் சொல்லுகிறது. **(தே₃வ திர்யங் மநுஷ்யாதி₃ அகி₂லஜந ஹ்ருத₃ய ஆநந்த₃நஸ்ய) (தே₃வ)**

**183. ராமமிந்தீ₃வரஶ்யாமம் கந்த₃ர்ப்பஸத்₃ருஶப்ரப₄ம் ।**
**ப₃பூ₄வேந்த்₃ரோபமம் த்₃ருஷ்ட்வா ராக்ஷஸீ காமமோஹிதா॥**
*[ரா. ஆ. 17-9]*

[கருநெய்தல் புஷ்பத்தைப்போல் கருநிறமுடையவனாய், மன்மதனைப் போன்ற அழகையுடையவனாய், இந்திரனுக்கு ஒப்பானவனான ராமனைக் கண்டவுடன் ராக்ஷஸியானவள் காமத்தினால் மோஹமுற்றாள்.]

**184. தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாப₃லௌ**
**புண்ட₃ரீகவிஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்ப₃ரௌ ॥**
*[ரா. ஆ. 19-14]*

[(ராம லக்ஷ்மணர்கள்) வாலியமானவர்கள்; அழகு நிறைந்தவர்கள்; ஸௌகுமார்யத்தை உடையவர்கள்; அதி₄கமான ப₃லமுள்ளவர்கள். தாமரைபோன்ற அகன்ற கண்களை உடையவர்கள்; மரவுரியையும் மான் தோலையும் உடுத்தவர்கள்.] என்று தேவர்களில் சேர்ந்தவர்களான கஶ்யபருக்கும் த₃நு என்பவளுக்கும் பிறந்த தா₃நவ (ராக்ஷஸ) வம்ஶத்தில் பிறந்த ஶூர்ப்பணகையும் இவனிடம் ஈடுபட்டாளன்றோ. அப்படியல்லாமல்,

**185 அதி₄ஜ்யத₄ந்வாநமவேக்ஷ்ய ராமம்**
**சரந்தமேகாந்த விலாஸிநீபி₄: ।**
**நூநம் ப₃பூ₄வுர் வநதே₃வதாஶ்ச**
**மர்த்யாங்க₃நாஜந்மகுதூஹலிந்ய: ॥**

[அழகிய பெண்களுடன் நாணேற்றின வில்லை ஏந்தியவனுய்ச் செல்லும் ராமனைக் கண்டதும் வநதேவதைகளும் மனிதப்பெண்ணுருக் கொள்ள ஆசைகொண்டனர்] என்கிறபடியே வனதேவதைகள் ஈடுபட்டதைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். **(திர்யக்)**

**186. ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர: ।**

**ரூபதாக்ஷிண்ய ஸம்பந்ந: ப்ரஸூதோ ஜநகாத்மஜே ॥**

**[ரா. ஸு. 35-8]**

[ஜனகராஜன் திருமகளாரே! தாமரையிதழ் போன்ற கண்ணையுடையவனுய், (விலங்காகிற என்னையுள்ளிட்ட) எல்லாப் பிராணிகளின் நெஞ்சையும் கவர்பவனுய், வடிவழகையும், குணங்களையும் உடையவனுய்ப் பிறந்திருக்கிறுன் ராமபிரான்.] என்று விலங்காகிற அனுமனும் இவனிடம் ஈடுபட்டானன்றோ. "வாதமாமகன் மர்க்கடம் விலங்கு" [பெரிய திரு. 5-8-1] என்கிறபடியே தேவனுன வாயுவுக்குப் பிறந்தவனுகையாலும், மனிதர்களைப் போல் இருப்பவனுகையாலும், விலங்காகப் பிறந்தவனுகையாலும் தேவர், திர்யக், மநுஷ்யர் என்னும் மூன்றுக்கும் அனுமனையே உதாரணமாகக் கொள்ளலாம். **(மநுஷ்ய)**

**187. ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம் ।**

**தத்ருஶுர் விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந: ॥**

**[ரா. ஆ. 1-13]**

[ராமனுடைய உருவ அமைப்பையும், அழகையும், மென்மையையும், அழகிய வேஷமுடைத்தாயிருக்கையையும் வநவாஸிகள் ஆஶ்சர்யம் மிக்க வடிவுடையவர்களாய்க் கண்டனர்.] என்று மனிதஜாதியைச் சேர்ந்த ரிஷிகளும் இவனிடம் ஈடுபட்டார்கள் என்கிறபடி. **(ஆதி) ஶப்தத்**தாலே ஸதாவரங்களையும் குறிக்கிறது. அதாவது—

**188. பாஷாணகௌதமவதூவபுராப்திஹேது:**

[கல்லாய்க் கிடந்த கௌதம பத்னியையும் பெண்ணுக்கக் காரணமாயிருந்த (வடிவழகு.)] என்கிறபடியே கல்லும் உருகி அஹல்யையாகிற பெண்ணுகும்படியிருக்கை. ராமன் காடு சென்றபோது வாடியும், திரும்பியபோது தளிர்த்தும் மரங்களும் அவனிடம் ஈடுபட்டதை வால்மீகியும் குறிப்பிடுகிறுர். **(அகிலஜந)** இவனுக்கு வேண்டியவர்களோடு

**ஆஶ்ரித வாத்ஸல்யைக ஜலதே₄:;**

இவனை எதிர்த்தவர்களோடு வேறுபாடு இல்லாமல் அனைவரும் இவனிடம் ஈடுபட்டார்கள். **(ஹ்ருத₃ய ஆநந்த₃நஸ்ய)** கண்ணுக்கு மாத்திரம் அழகியவனாய், நெஞ்சால் நினைத்தால் வெறுக்கத்தக்கவனாயிராமல். **145**-வது பக்கத்திலுள்ள **82**-வது ப்ரமாணமான ஸ்ரீராமாயண ஶ்லோகத்தின்படியும், "கண்டவர் தம் மனம் வழங்கும்" [பெருமாள் திரு. 8-2] என்னும் அருளிச் செயலின்படியும், அனைவரது நெஞ்சையும் உருக்கும்படியாகவும், நெஞ்சுடையார் நெஞ்சையிழந்து, "என் நெஞ்சினாரைக் கண்டால்" [திருவிரு 30] என்று தம் நெஞ்சுக்குத் தூதுவிட வேண்டும்படியுமன்றோ வடிவழகு இருப்பது.

இப்படி அனைவர்க்கும் பொதுவாயிருப்பது மாத்திரமாய் அடியார்களிடத்தில் பக்ஷபாதம் இல்லையோ? எனில்—**(ஆஶ்ரித வாத்ஸல்யைக ஜலதே₄:)** அவர்களிடத்தில் குற்றத்தையே கு₃ணமாக நினைத்திருக்கும் (பசுவின் கு₃ணமான) வாத்ஸல்ய கு₃ணத்தை உடையவன் என்று கருத்து. **(ஆஶ்ரித)** அடியார்கள்;

**189. தே வயம் ப₄வதா ரக்ஷ்யா ப₄வத்₃விஷயவாஸிந: ।**
**நக₃ரஸ்தோ₂ வநஸ்தோ₂ வா த்வம் நோ ராஜா ஜநேஶ்வர: ॥**
***[ரா. ஆ. 1-20]***

[உம் தேசத்தில் வஸிக்கும நாங்கள் உம்மால் ரக்ஷிக்கப்பட வேண்டியவர்கள்; நரபதியான நீரே நக₃ரத்திலிருந்தாலும், வநத்திலிருந்தாலும் எங்களுக்கு அரசனாவீர்.] என்று தன் தேசத்தில் இருப்பவர்கள், **9**-வது பக்கத்திலுள்ள **5**-வது ப்ரமாணமான ராம சரம ஶ்லோகத்தின்படி, ஒருமுறை சரணமடைந்தவர்கள்,

**190. பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம் யோ மே ப₄க்த்யா ப்ரயச்ச₂தி।**
**தத₃ஹம் ப₄க்த்யுபஹ்ருதம் அஶ்நாமி ப்ரயதாத்மந: ॥**
***[கீதை 9-26]***

[ஓரிலையாவது, மலராவது, பழமாவது, ஜலமாவது எவனொருவன் எனக்கு ப₄க்தியுடன் கொடுக்கிறானோ, மநஸ்ஸை அடக்கிய அந்த ப₄க்தனாலே ப₄க்தியுடன் அளிக்கப்பட்ட அவற்றை (கிடைத்தற்கரியது கிடைத்தாற்போலே) உண்கிறேன்.] என்று ஒரு பச்சிலை, ஒரு மலர்,

**ப₄க்தஜந ஸம்ஶ்லேஷைக போ₄க₃ஸ்ய,**

---

ஒரு பழம், ஒன்றுமில்லாவிட்டால் நீர் ஆகிய எதையாவது 'ஏற்றுக் கொள்ள வேணும்' என்னும் சொல்லோடு திருவடிகளில் இட்டவர்கள் ஆகிய அனைவரும் அடியவராவர். **(வாத்ஸல்ய)** கன்றினுடம்பில் அழுக்கை, தாய்ப்பசு இனிதாகக் கொண்டு நக்கி உண்பதுபோலே, "குன்றனைய குற்றம் செயினும் குணம் கொள்ளும்" [முதல் திருவ. 41] என்னும்படி அன்பைப் பொழிகை. அதாவது— 91-ம் பக்கத்தி லுள்ள 57-வது ப்ரமாணத்தின்படி குற்றமிருந்தாலும் அதையே குண மாகக் கொண்டு அதுவே காரணமாக அவனை விடாமலிருக்கை. **(ஏகஜலதே₄:)** இந்த குணமும் இவன் ஒருவனிடமே உள்ளது என்னும் படி இருக்கை. இப்படி சேதனன் தன்னையடைந்தால் அவனுக்குப் ப₂லம் கொடுப்பதொழிய இதைத் தன் பயனாக நினைத்திருப்ப தில்லையோ? எனில் — **(ப₄க்தஜநஸம்ஶ்லேஷைக போ₄க₃ஸ்ய)** தன்னிடம் ஈடுபாடு உடையவர்களோடு சேருவதையே தனக்குப்பெரும் பயனாகக் கொண்டவனாயிருக்கை. **(ப₄க்தஜந)**

**191. ஸ்நேஹபூர்வமநுத்₄யாநம் ப₄க்திரித்யபி₄தீ₄யதே ।**
**ப₄ஜ இத்யேஷ தா₄துர்வை ஸேவாயாம் பரிகீர்த்தித: ॥**
**தஸ்மாத் ஸேவா பு₃தை₄: ப்ரோக்தா ப₄க்திஶப்₃தே₃ந பூ₄யஸீ ॥**

**[லிங்க₃புராணம் உத்தரபா₄க₃ம்]**

[ஸ்நேஹத்தை முன்னிட்ட தியானம் ப₄க்தியெனப்படுகிறது. 'ப₄ஜ' என்கிற தா₄து 'ஸேவை' என்னும் அர்த்த₂த்தில் சொல்லப்பட்டிருக் கிறது. ஆகையால் மேலான ஸேவையே பெரியோர்களால் ப₄க்தி ஶப்தத்தினல் சொல்லப்படுகிறது.] என்கிறபடியே இங்கு "ப₄க்தி" என்பது அன்பைக் குறிப்பதாய், **'ப₄க்தஜநங்கள்'** என்று ப₄க்தி நிஷ் டர்களையும் ப்ரபந்நர்கள் முதலான அன்புடையவர்களையும் பொது வாகக் குறிக்கிறது. **(ஸம்ஶ்லேஷைக போ₄க₃ஸ்ய)** 290-ம் பக்கத்தி லுள்ள 176-வது ப்ரமாணமான ஸ்தோத்ர ரத்ன ஶ்லோகத்தின் படி யும், "ஒருமா நொடியும் பிரியான" [திருவாய் 10-7 8] என்கிற அரு ளிச் செயலின்படியும், தன்னையொழிய வேறு பயனை விரும்பாதவர்

**நித்யஜ்ஞாநக்ரியைஶ்வர்யாதி₃ போ₄க₃ ஸாமக்₃ரீஸம்ருத்₃த₄ஸ்ய, மஹாவிபூ₄தே:, ஸ்ரீமத:**

களோடு ஒரு கணம் பிரிந்திருக்கையையும் பொறுக்க முடியாதபடி கூடி யிருக்கையையே தனக்கு த₄ாரகம், போஷகம், போ₄க்₃யம் முதலான அனைத்துமாக நினைத்திருப்பான் என்று கருத்து.

இப்படி, கணக்கற்ற ஆத்மாக்களோடு அனுபவிக்கும்போது, அனுபவிப்பதற்கு வேண்டும் ஜ்ஞானம் முதலான அவசியத் தேவைகள் இவனிடம் குறைந்திருக்குமோ? எனில் — (**நித்ய ஜ்ஞாந க்ரியைஶ்வர்யாதி₃ போ₄க₃ ஸாமக்₃ரீ ஸம்ருத்₃த₄ஸ்ய**) என்றுமிருப்பதாய், சில சமயங்களில் செயல்படாமல் இராததாய், இனியவையான எல்லாப் பொருள்களைப் பற்றிய ஸ்வரூபம், ரூபம், குணம், செயல், பயன், காலம் முதலானவற்றைப் பற்றிய அறிவு, செயல், அந்த இனியவை தான் நினைத்தபோது தன் கைப்பட்டிருக்கையான ப்ரபு₄த்வம் அல்லது செல்வம் ஆகிற ஐஶ்வர்யம் முதலான போ₄க₃ஸாமக்₃ரிகள் [அனுபவிப்பதற்கு அவசியமான தேவைகள்] மிகுதியாகப் பெற்றிருப்பவனுடைய. இப்படி அநுப₄வமும், (அனுபவிப்பதற்குத் தேவையான ஸாமக்₃ரிகளும் இருந்தாலும், இருந்து அனுபவிப்பதற்குத் தேவையான போ₄க₃ ஸ்த₂ானம் இல்லாவிடில் அனுபவிக்க முடியாதே? எனில் — (**மஹாவிபூ₄தே:**) **"பாதோ₃ஸ்ய விஶ்வா பூ₄தாநி த்ரிபாத₃ஸ்யாம்ருதம் தி₃வி"** [புருஷஸூக்தம் 3] என்று புருஷ ஸூக்தத்தில் சொன்னபடியே லீலாவிபூதியைப்போலே, கால்பங்கு என்று சொல்லும்படி அளவுபட்டிராமல், அதில் மும்மடங்கு என்று சொல்லும்படி இவனுடைய அனுபவத்திற்காகவே ஏற்பட்ட நித்ய விபூ₄தியை உடையவனுடைய. இப்படிப்பட்ட ஸ்தானத்திலே யிருந்து எல்லையற்ற ஆனந்தத்தை அனுபவிக்கும்போது துணையில்லாமல் ப்₃ரஹ்மசாரி நாராயணனாகவே இருப்பானோ? எனில்—(**ஸ்ரீமத:**) அனுபவ வெள்ளத்தில் கரை காண்பதற்குத் துணையாயிருக்கும் ஸாக்ஷாத் லக்ஷ்மியைத் தனக்குப் பட்டத்து ராணியாய் உடையவனுடைய.

**சரணாரவிந்த₃யுக₃ளம் அநந்யாத்ம ஸஞ்ஜீவநேந தத்₃க₃த ஸர்வப₄ாவேந ஶரணம் அநுவ்ரஜேத் ||**

இதற்குமேல் ஓர் ஆக்ஷேபம் எழுகிறது: இவனுடைய அனுபவம் ஸம்ஸாரிகளுடையதைப் போன்றதாய் இருந்தால் துணை தேவையா யிருக்கும். எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெற்றவனாய், ஆனந் தமே வடிவெடுத்தவனாயுள்ள இவனுக்கு நாய்ச்சிமாரோடு சேர்ந்திருப்ப தால் உண்டாகும் ஆனந்தம் என்பது என்ன? அதில் துணை என்பது எது? எனில்—இவனுக்கு அனுபவமாவது—அடியார்களை உய்வித்து அவர்களோடு சேரப் பெறுகை. அதற்கு இந்த நாய்ச்சிமார் புருஷ கார பூ₄தர்களாய் இருந்து அடியார்களை இவனோடு சேரவிடுகையாலே துணையாய் இருக்கிறார்கள். இப்படி இருக்கிற இவன் ஸ்வரூபத்தை யோ பற்றுவது? எனில் — **(சரணாரவிந்த₃யுக₃ளம்)** சேதனனுடைய பாரதந்த்ரிய ஸ்வரூபத்திற்குத் தகுந்தவையாய், எல்லையற்ற இனிமை யை உடையவையாய், தாம் அழகாகச் சேர்ந்திருப்பதுபோலே, அனை வரையும் சேர்த்துக் கொள்ளக் கூடியவையாய் இருக்கிற அவனுடைய திருவடித் தாமரைகள் இரண்டையும். அந்தத் திருவடித் தாமரைகளைப் பற்றுவது எப்படி? எனில்—**(அநந்யாத்ம ஸஞ்ஜீவநேந)** ஆத்மாவை உய்விப்பதற்கு இவை தவிர வேறு ஒன்றில்லை என்கிற நினைவோடு. **(தத்₃க₃த ஸர்வ ப₄ாவேந)** உய்விப்பது வேறொன்றில்லாமையாலே இதுவே ரக்ஷிப்பது என்னும் நினைவோடும். இந்நினைவுகளோடு கூடச் செய்யப் போகிற காரியம் என்ன? எனில்—**(ஶரணம் அநுவ்ரஜேத்)** பரம புருஷார்த்த₂த்திற்கு ஸாத₄னம் பரம புருஷனான இவனே என்று உறுதி கொள்வான். **"வ்ரஜ"** தா₄து க₃தியைச் சொல்லுவ தாய், இங்கு மனத்தின் கதியாகிற உறுதியைச் சொல்லுகிறது. அப் படியானால் **"வ்ரஜேத்"** என்பதே போதுமே? **"அநுவ்ரஜேத்"** என்று சொல்லுவானேன்? எனில்—**"வ்ரஜ-க₃தௌ"** என்ற தா₄து ஜ்ஞா னத்தை மட்டும் சொல்லுவதாய், **"அநுவ்ரஜேத்"** என்றதால் அந்த ஜ்ஞானத்தில் உறுதியைக் காட்டுவதாகவும் கொள்ளலாம்; அல்லது **"அநுஸ்யூதம் வ்ரஜேத்"** [தொடர்ந்து நினைக்கக் கடவன்] என்று இவரே **ஸ்ரீ**ரங்க கத்யத்தில, "த்₃வயத்தை அர்த்தா₂நுஸந்தா₄னத் தோடு எப்போதும் சொல்லிக்கொண்டிரு" என்று அருளியபடியே எல்லாக் காலத்திலும் சொல்லுவதைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். அப்படியல்லாமல், **"ஶரணம்"** என்று உபாயத்தைச் சொல்லுவதாய், **"ஶரணமநு வ்ரஜேத்"** என்று பிரித்து "உபாயம் என்னும் நினைவுடன் அடைவான்" என்றும் கொள்ளலாம்.

## 2. ததஶ்ச ப்ரத்யஹம் ஆத்மோஜ்ஜீவநாய

**இரண்டாவது சூர்ணை அவதாரிகை :** இப்படி ஒருமுறை சரணமடைந்து அத்துடன் விட்டுவிடுவதோ? எனில் — "**ததஶ்ச ப்ரத்யஹம் ஆத்மோஜ்ஜீவநாய ஏவம் அநுஸ்மரேத்**" என்று பலனைப் பெறுவதற்கு ஒரு கால் ஶரணமடைந்தாலே போதுமானாலும், தான் ஸத்தை பெறுவதற்கும் தரித்து நிற்பதற்கும் தினந்தோறும் இப்படி அனுஸந்திக்கவேண்டும் என்கிறார் இந்தச் சூர்ணையில்.

**வ்யா : (ததஶ்ச)**

**192. தத் த்வயம் ஸக்ருதுச்சாரோ பவதி**

**[த்வயோபநிஷத்]**

[அந்த த்வயத்தை ஒரு தடவை உச்சரித்தால் போதுமானது.] என்று த்வயோபநிஷத்திலும், ஶரணாகதி கத்ய பிரவேசத்தில் பக்கம் 9-ல் எடுக்கப்பட்ட ஐந்தாவது ப்ரமாணமான ராமசரம ஶ்லோகத்திலும் சொன்னபடியே எம்பெருமான் உபாயமாவதற்கு ஒருகால் ஶரணம் புகுந்தாலே போதுமாயிருக்க மேலும் தொடரவேண்டும் என்கிறது. அது எதுவரையில் என்னும் கேள்வியெழ (**ப்ரத்யஹம்**) ஒருமுறை ஶரணம் புகுந்து விட்டோம் என்று கைவிட்டுவிடாமல் தினந்தோறும் இதை அனுஸந்திக்க வேண்டும். இப்படி தினந்தோறும் அனுஸந்திப்பது ஒருகால் ஶரணம் புகுந்தால் ஶரணாகதி நிறைவடையாமையாலோ? எனில்—(**ஆத்மோஜ்ஜீவநாய**)

**193. யந்முஹூர்த்தம் க்ஷணம் வாऽபி வாஸுதேவோ ந சிந்த்யதே ।**

**ஸா ஹாநிஸ்தந் மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா ॥**

**[காருட பூர்வ 222-22]**

[யாதொரு முஹூர்த்தத்திலாவது கணத்திலாவது வாஸுதேவன் நினைக்கப்படுவதில்லையோ, அதுவே ஹானி; அதுவே பெருந்துன்பம்; அதுவே மயக்கம்; அதுவே விகாரம்.] என்கிறபடியே ஒரு கண நேரமும் எம்பெருமானை அனுஸந்திக்காமல் இருப்பது ஆத்மாவுக்கு அழிவை விளைக்குமாகையாலே தினந்தோறும் அனுஸந்திப்பதாலே, ஆத்மாவை உய்வடையச் செய்வதற்காக.

**3. சதுர்தச புவநாத்மகம் அண்டம் தசகுணிதோத்தரஞ்ச ஆவரணஸப்தகம் ஸமஸ்தம் கார்ய காரண ஜாதமதீத்ய**

---

அப்படி ஆத்மா உய்வடைவதற்காக அநுஸந்திக்கும்போது, ஏதோ தானே என்று அநுஸந்தித்தால் போதுமோ? எனில் — **(ஏவம்)** முதல் முறை அநுஸந்திக்கும்போது எத்தனை ஆர்வத்தோடும் எந்த முறையிலும் அநுஸந்தித்தானோ அவற்றில் ஒன்றும் குறையாதபடி. **(அநுஸ்மரேத்)** **''ப்ரத்யஹம்''** என்றால் ''தினந்தோறும்'' என்று பொருள். அதில் ஒரு நாளைக்கு ஒருமுறை அநுஸந்தித்தால் போதுமென்று நினைத்திராமல் ஒவ்வொரு நாளும் எப்போதும் அநுஸந்திக்க வேண்டும் என்பதை **''அநுஸ்மரேத்''** என்னும் பதம் காட்டுகிறது. **(த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தா)** என்று சரணாகதி கத்யத்தில் [19-வது சூர்ணை] சொன்னபடியே விழித்திருக்கும்போது இடைவிடாமல் அநுஸந்திக்கவேண்டும் என்று கருத்து.

**மூன்றும் சூர்ணை அவதாரிகை :** சரணாகதி நிஷ்டை கைவரப் பெற்றவன் அர்ச்சிராதி மார்க்கத்தாலே போய் அடையும் நித்ய விபூதியையும் அங்குள்ள சிறப்புக்களையும் சொல்லுகிறது இச்சூர்ணை.

**வ்யா : (சதுர்த்தசபுவநாத்மகம்)** **பூ:, புவ:, ஸுவ:, மஹ:,** ஜந:, **தப:, ஸத்யம்** என்னும் மேலுலகங்கள் ஏழும், **அதல, விதல, ஸுதல, ரஸாதல, தலாதல, மஹாதல, பாதால** என்னும் கீழுலகங்கள் ஏழும் ஆக பதினாலு உலகங்களாயிருக்கை. இப்படி இருப்பதுதான் ஏதென்னில்? **(அண்டம்)** அப்படிப்பட்ட உலகங்களுக்கெல்லாம் இருப்பிடமாய் ஐம்பதுகோடி விஸ்தீர்ணம் உள்ள அண்டம். **(தசகுணிதோத்தரம் ச ஆவரண ஸப்தகம்)** **''தசகுணிதோத்தரம்''** என்பதை **''உத்தரோத்தர தசகுணிதம்''** என்று கொள்ளவேண்டும். ஓர் ஆவரணத்திற்கு அடுத்த ஆவரணம் பதின் மடங்காய், இப்படிப் பதின்மடங்கான அந்த ஆவரணத்திற்கு அதற்கு அடுத்த ஆவரணம் அதன் பதின்மடங்காய், இதே முறையில் மேன்மேலே பதின் மடங்கான ஏழு ஆவரணங்களையுடையதாய்; இது **''கார்ய காரண ஜாதம் அதீத்ய''** என்பதோடு அந்வயிக்கிறது. ஏழு ஆவ

பரமவ்யோமஶப்₃த₃பி₄தே₄யே

ரணங்களாவன :— நீர் நெருப்பு, காற்று, ஆகாசம், அஹங்காரம், மஹான், அவ்யக்தமாகிற ப்ரக்ருதி ஆகிய இவை. **(ஸமஸ்தம்)** இது வரையில் சொன்னது ஆவரணங்களோடு கூடிய ஓர் அண்டத்தைப் பற்றியது.

**194. அண்ட₃ாநாந்து ஸஹஸ்ராணும் ஸஹஸ்ராண்யயுதாநி ச ।**
**ஈத்₃ருஶாநாம் ததா₂ தத்ர கோடிகோடிஶதாநி ச ॥**
**[வி. பு. 2-7-27]**

['அந்த ப்ரக்ருதியில் இம்மாதிரியான பல கோடி நூறுயிரம் அண்ட₃ங்கள் இருக்கின்றன' என்பது ஸாரார்த்த₂ம்.] என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்திலும், "எண்மீதியன்ற புறவண்டம்" [திருவாய் 6-9-5] என்று திருவாய்மொழியிலும் சொல்லப்பட்டபடி, பலகோடி நூருயிரம் அண்டங்கள் அடங்கிய எல்லாவுலகங்களையும். **(கார்ய காரண ஜாதம்)** இவற்றில் ஒவ்வொரு தத்துவம் மற்ருென்றிலுல் உண்டாகும் கார்யப் பொருளாயும், அதேபோல் ஒவ்வொரு தத்துவம் மற்ருென்றை உண்டாக்கக் கூடிய காரணப் பொருளாயும் இருக்கும் கணக்கற்ற பொருள்களின் கூட்டத்தை. **(அதீத்ய)**

**195. ஆப்₃ரஹ்ம பு₄வநால்லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந ।**
**மாமுபேத்ய து கௌந்தேய புநர் ஜந்ம ந வித்₃யதே ॥**
**[கீ₃தை 8-16]**

[குந்திபுத்ரனுன அர்ஜுநு! **ப்₃ரஹ்ம**லோகமீருக எல்லா உலகங்களும் அழியக்கூடியவை. என்னை **அடைந்த**பிறகோவெனில் மறுபடியும் பிறப்பில்லே.] என்று கீதையில் சொன்னபடியே புண்யபாப கர்மங்கள் கழியப பெருதவர்கள் பிறந்து இறந்து திரியும்படியான ப்ரக்ருதி கார்யமான இந்த லீலா விபூ₄திக்கு மறுபடியும் திரும்பி வராதபடி கடந்து.

இதைக் கடந்து போய் அடைகிற தேசம் எப்படியிருக்கும்? எனில்—**(பரம)** இதற்குமேல் ஒன்று இல்லே என்று சொல்லும்படி உள்ளது இந்த தேசம். **(வ்யோம ஶப்₃த₃பி₄தே₄யே)**

ப்₃ரஹ்மாதீ₃நாம் வாங்மநஸ — அகோ₃சரே ஸ்ரீமதி வைகுண்டே₂ தி₃வ்யலோகே, ஸநக விதி₄ ஶிவாதி₃பி₄ரபி அசிந்த்யஸ்வபா₄வைஶ்வர்யை:

---

104. ஸைஷா பா₄ர்க்க₄வீ வாருணீ வித்₃யா ।
பரமே வ்யோமந் ப்ரதிஷ்டி₂தா ।

[தை. ப்₄ருகு₃ 6]

[வருணனால் ப்₄ருகு₃வுக்குச் சொல்லப்பட்ட இந்த வித்₄யை பரமபத₃த்தில் நிலை நிற்கிறது.] என்று கர்ம வசப்பட்ட இந்த லீலா விபூ₄தியைப் போலே "இருள் தருமா ஞாலம்" [திருவாய் 10-6-1] என்று அஜ்ஞான இருளை விளைப்பதாய் இராமல், "தெளிவிசும்பு" [திருவாய் 9-7-5] என்று எப்போதும் ஜ்ஞானமாகிற ஒளியை வளர்ப்பதாய் இருக்கை. இப்படியிருக்கும் இந்த தேசம் அளவுபட்டதாய் இருக்குமோ? எனில் — (ப்₃ரஹ்மாதீ₃நாம் வாங்மநஸாகோ₃சரே) சிற்றறிவுடையவராய் எல்லையற்றவர்களான நம்மைப் போலல்லாமல், அறிவிலும், சக்தியிலும் மிக மேம்பட்டவர்களான பிரமன் உருத்திரன் முதலான தேவர்களுக்கும் கூட வாக்குக்கும் நெஞ்சுக்கும் புலப்படாததாய் இருக்கும். இப்படியிருக்கும் தேசத்தின் பெயர் என்ன? எனில்— (ஸ்ரீமதி வைகுண்டே₂ தி₃வ்யலோகே) ஸ்ரீவைகுண்டம் என்று பெயர். கர்ம வசப்பட்ட லீலா விபூ₄தியிற் போலே, (விப₄வ அர்ச்சாவதாரங்களில்) கைங்கர்யச் செல்வம் உண்டானாலும் அதற்கு இடையூறுகள் ஏற்படுவதாயிராமல், கைங்கர்யச் செல்வத்தை எப்போதும் பெற்றிருக்கும் தேசம். "குண்ட₂" ஶப்₃த₃ம் இடையூறுகளைக் குறிக்கிறது. "வைகுண்ட₂" ஶப்₃த₃ம் இடையூறில்லாத தேசம் என்று பொருள்படும். இந்த லீலா விபூ₄தியைப்போலே ஜீவன் கர்மத்தால் மறைக்கப்படாமையாலே, அவனுடைய ஜ்ஞானம் ஶக்தி முதலான கு₃ணங்களுக்கு இடையூறு இல்லாமல் இருக்கும் தேசம் என்று கருத்து. (தி₃வ்யலோகே) லீலா விபூ₄தியோலே கர்மவசப்பட்ட மனிதர்கள் நிறைந்த உலகமாயிராமல், கர்மவசப்படாதவர்கள் நிறைந்த உலகமாயிருக்கை. இதுவரை தேசத்தின் பெருமையைச் சொன்னார். இனி, "வானவர் நாடு" [திருவாய் 3-9-9] என்று ஆழ்வார் அருளியபடியே இந்த தேசத்தின் அதிபதிகளாயிருக்கும் நித்ய ஸூரிகளைச் சொல்லுகிறது — "ஆபூரிதே" என்பது ஈறாக உள்ள அடுத்த தொடராலே, (ஸநக விதி₄ ஶிவாதி₃பி₄ரபி அசிந்த்ய ஸ்வபா₄வைஶ்வர்யை:) ப்₃ரஹ்ம த்₄யானம் ஒன்றிலேயே ஈடுபடுபவர்

**நித்யஸித்₃தை₄: அநந்தை: ப₄க₃வத₃நுகூல்யைக பே₄ாகை₃: தி₃வ்ய புருஷை: மஹாத்மபி₄: ஆபூரிதே, தேஷாமபி**

---

களாய் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களான கர்மத்தில் ஈடுபாடு இல்லா தவர்களாகையாலே, **"ப்₃ரஹ்ம ப₄ாவநா நிஷ்ட₂ர்கள்"** என்று சொல்லப்படும் ஸநகர், ஸநந்தனர், ஸநாதனர், ஸனத்குமாரர் என் னும் முனிவர்களும், ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹாரங்களாகிற கர்மங்களில் ஈடுபடுபவர்களாகையாலே கர்ம ப₄ாவநா நிஷ்ட₂ர்களான பிரமன் ஶிவன் முதலான தெய்வங்களும் கூட நினைக்க இயலாத பெருமைகளை உடை யவர்கள் இந்த நித்ய ஸூரிகள். **(நித்யஸித்₃தை₄:)** இவ்வுலகில் கர் மத்துக்குக் கட்டுப்பட்டவர்களாய் இருந்து ஒரு காலத்தில் முக்திய டைந்த முக்தர்களைப்போலே ஏதோ ஒரு சமயத்தில் எம்பெருமானை அடைந்தவர்களாயிராமல் எப்போதும் எம்பெருமானுடைய அனுபவத் தைப் பெற்றவர்களாயிருக்கையாலே நித்ய ஸூரிகள் என்று பெயர் பெற்றவர்கள். **(அநந்தை:)** இப்படியிருக்கும் நித்ய ஸூரிகளுக்கு ஓர் எண்ணிக்கையில்லை. **"அந்தம்"** என்பது அழிவையும் குறிக்கு மாகையாலே இவர்களுக்கு அழிவில்லை என்று சொல்லுவதாகவும் கொள்ளலாம். **(ப₄க₃வத₃நுகூல்யைக பே₄ாகை₃:)** எப்போதும் ப₄க₃வத₃நுப₄வத்தையே தங்களுக்கு எல்லாமாகக் கொண்டவர்கள் இந்த நித்ய ஸூரிகள். **(தி₃வ்யபுருஷை:)** கர்ம பூமியான இவ்வுலகில் என்றுமே கர்மவசப்பட்டுப் பிறக்காதவர்கள் இவர்கள் என்று கருத்து. **(மஹாத்மபி₄:)** முதல் சூர்ணையில் **"தத்ப்ராப்தயே"** என்னும் பதத்தை விவரிக்கும்போது எடுக்கப்பட்ட 176-வது ப்ரமாணமான ஸ்தோத்ர ரத்ந ஶ்லோகத்தின் படியும் "ஒரு மாநொடியும் பிரியான்" [10-7 8] என்னும் திருவாய்மொழியின்படியும், எம்பெருமானும் இவர் களோடு ஒருகணநேரமும் பிரிவைப்பொறுக்கமாட்டாதவனும்படியான பெருமையை உடையவர்கள் இவர்கள். **(ஆபூரிதே)** ஒரு பகுதியிட மும் ஶூந்யமாயிராமல் இவர்களாலே நிரம்பி இருப்பது இந்த தேசம். இந்த ஸ்ரீவைகுண்டம் பிரமன் முதலானவர்களால் அளவிடமுடியாத தாய் இருந்தபோதிலும் இந்த நித்ய ஸூரிகளால் அளவிடக் கூடிய தாய் இருக்குமோ? எனில்—அவர்களாலும் அளவிட இயலாது என்கி றார் மேலே—**(தேஷாமபி)** தங்களைப் பிறர் அளவிட முடியாதபடி

**இயத்பரிமாணம் இயதைஶ்வர்யம் ஈத்₃ருஶஸ்வபா₄வமிதி பரிச்சே₂த்தும் அயோக்₃யே, தி₃வ்ய ஆவரணஶத ஸஹஸ்ர—ஆவ்ருதே,**

---

இருக்கிற அவர்களுக்கும். **(தேஷாமபி)** எண்ணிக்கையற்றிருக்கிற அவர்களில் யாராவது ஒருவரால்தான் அளவிடலாயிருக்குமோ? எனில்—அவர்களில் எவராலும் அளவிட இயலாததாய் இருக்கும். இப்பதம் **"பரிச்சே₂த்தும் அயோக்₃யே"** (அளவிட இயலாத உலகில்) என்பதோடு அந்வயிக்கிறது. இப்படி அளவிட இயலாதிருக்கும் அம்சங்கள் எவை? எனில்—**(இயத் பரிமாணம்)** நீளம் அகலம் விஸ்தீர்ணம் முதலான அளவுகள் இவ்வளவு என்று சொல்லமுடியாது என்று கருத்து. **(இயதைஶ்வர்யம்)** இதிலுள்ள செல்வம் இவ்வளவு என்று சொல்ல முடியாது என்று கருத்து. **(ஈத்₃ருஶஸ்வபா₄வம்)** இதன் பெருமைகள் இவ்வளவு என்று சொல்லமுடியாது என்று கருத்து. **(இதி பரிச்சே₂த்தும் அயோக்₃யே)** அளவு, செல்வம், பெருமை ஆகியவற்றில் இத்தகையது என்று எவ்விதத்திலும் அளவிட இயலாதது என்று கருத்து. **(தி₃வ்யாவரண ஶத ஸஹஸ்ராவ்ருதே)** இவ்வுலகில் காணப்படும் மதில்களைக் காட்டிலும் மிகச் சிறப்புற்றவையாய் அப்ராக்ருதமான நூறாயிரம் திருமதிள்களை உடையதாய் இருக்கும் அந்த தேசம். எந்த விதமான துன்பமோ, படையெடுப்போ இல்லாத இந்த தேசத்தில் திருமதிள்கள் எதற்கு? எனில்—

**196. புரம் ஹிரண்மயீம் ப்₃ரஹ்மா விவேஶாபராஜிதா(ம்)**
**[தைத். ஆர. 1-28]**

[அபராஜிதையென்று பெயர் பெற்ற பொன் மயமான நகரத்தினுள் ப்₃ரஹ்மம் ப்ரவேஶித்தது.] என்று வேதத்தில் சொல்லப்பட்டபடி, ஸர்வலோக சக்ரவர்த்தியான பரமாத்மா எழுந்தருளியிருக்கும் தலை நகரமாகையாலே, ஒரு நகரத்திற்குரிய லக்ஷணங்களெல்லாம் இதற்கும் வேண்டும். மேலும்,

**197. ததஸ் த்வஹம் சோத்தமசாபபா₃ணத்₄ருக்**
**ஸ்தி₂தோऽப₄வம் தத்ர ஸ யத்ர லக்ஷ்மண: ।**
**அதந்த்₃ரிபி₄ர் ஜ்ஞாதிபி₄ராத்தகார்முகைர்**
**மஹேந்த்₃ரகல்பம் பரிபாலயம்ஸ் தத₃ா ॥**
**[ரா. ஆ. 87-28]**

திவ்யகல்பகதரு — உபஶோபிதே, திவ்யோத்யாந ஶத ஸஹஸ்ரகோடிபி: ஆவ்ருதே, அதிப்ரமாணே, திவ்ய— ஆயதநே, கஸ்மிம்ஶ்சித் விசித்ர (திவ்ய) ரத்நமயே திவ்ய ஆஸ்தாந மண்டபே, திவ்ய ரத்நஸ்தம்ப ஶத ஸஹஸ்ரகோடிபி: உபஶோபிதே,

---

[அதன் பிறகு (லக்ஷ்மணன் மேலே அதிசங்கை கொண்ட குஹனுகிற) நான் மேலான வில்லேயும் அம்பையும் ஏந்திக்கொண்டு, (என்னிடமும் அதிசங்கை கொண்டு) சோம்பலில்லாதவர்களாய், வில்லேந்தியவர்களாயிருக்கும் என் உறவினர்களுடன் கூட மஹேந்த்ரனைப் போன்ற ராமனை லக்ஷ்மணனுக்கருகில் நின்று ரக்ஷித்து நின்றேன்.] என்று ஸ்ரீராமாயணத்திலும், "மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருக்காப்பு" [1] "பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" [12] என்று திருப்பல்லாண்டிலும் சொன்னபடியே படையெடுப்பு முதலானவை இல்லாதபோதும், பொங்கும் பரிவாலே பயப்படுகிறவர்களாய், ரக்ஷிப்பவனை எம்பெருமானையே காப்பிடக் கூடியவர்களன்றே அங்குள்ள நித்ய ஸூரிகள். ஆகையால் அங்கு பல பல திருமதில்கள் இருப்பதில் குறையில்லை. இப்படி ரக்ஷிப்பதற்குத் திருமதில்கள் இருந்த போதிலும் இனிமை இல்லாதிருக்குமோ? எனில்— (திவ்ய கல்பகதருபஶோபிதே) இந்த லீலாவிபூதியிலுள்ள ஸ்வர்க்கம் முதலான இடங்களில் உள்ள கல்பகவ்ருக்ஷம் போலல்லாமல் அப்ராக்ருதமான கற்பகச் சோலைகளாலே மிகவும் இனியதாய் இருக்கும். (திவ்யோத்யாந ஶத ஸஹஸ்ர கோடிபிராவ்ருதே) நாய்ச்சிமாருக்கும் ஸ்ரீவைகுண்ட நாதனுக்கும் விளையாடுவதற்குத் தக்க அனேகம் நந்தவனங்களாலே சூழப்பட்டிருக்கும். (அதிப்ரமாணே) இத்தனை அகலம் நீளம் உயரம் என்று சொல்லவொண்ணாதபடி இருக்கும். (திவ்யாயதநே) இப்படியிருக்கும் ஸ்ரீவைகுண்டமாகிற கோயிலிலே.

(கஸ்மிம்ஶ்சித்) அந்த நகரத்தில் ஓரிடத்திலே, (விசித்ர ரத்நமயே) பலவகைப்பட்ட ஆச்சர்யமான ரத்னங்கள் பதிக்கப்பெற்றதான. (திவ்யாஸ்தாநமண்டபே) அனைவருக்கும் காட்சி கொடுக்கும் திருமாமணி மண்டபத்திலே. (திவ்யரத்ந ஸ்தம்ப ஶதஸஹஸ்ர கோடிபிருபஶோபிதே) அநேகமாயிரம் மாணிக்கத் தூண்களாலே அலங்

தி₃வ்ய நாநாரத்ந க்ருத ஸ்த₂ல விசித்ரிதே, தி₃வ்ய— அலங்கார அலங்க்ருதே, பரித: பதிதை: பதமானை: பாத₃பஸ்தை₂ஶ்ச நாநா க₃ந்த₄வர்ணை: தி₃வ்ய புஷ்பை: ஶோப₄மானை: தி₃வ்ய புஷ்ப உபவனை: உபஶோபி₄தே, ஸங்கீர்ண பாரிஜாதாதி₃ கல்ப த்₃ரும உபஶோபி₄தை:, அஸங்கீர்ணைஶ்ச கைஶ்சித், அந்தஸ்ஸ்த₂ புஷ்பரத்நாதி₃ நிர்மித தி₃வ்ய லீலா மண்ட₃ப ஶத ஸஹஸ்ரகோடி ஶோபி₄தை: ஸர்வதா₃ அநுபூ₄யமானைரபி அபூர்வவத் ஆஶ்சர்யம் ஆவஹத்₃பி₄:,

---

கரிக்கப் பெற்றதாய். (தி₃வ்ய நாநா ரத்ந க்ருதஸ்த₂ல விசித்ரிதே) பலவிதமான அப்ராக்ருத மாணிக்கங்களாலே நிறைந்த ஆச்சர்யமான இடங்களையுடையதாய். (திவ்யாலங்காராலங்க்ருதே) திருமேற்கட்டி திருத்திரை, அதைத் தூக்கும் ஸாத₄நம், தூண்களாலே தாங்கப்படும் தூங்கு பள்ளிக் கட்டில் முதலான அலங்காரங்களாலே அலங்கரிக்கப் பெற்றதாய். (பரித:பதிதை:) நாலு திசைகளிலும் உதிர்ந்து நிற்பன வாய். (பதமானை:) ஆகாயத்தில் விழுந்து கொண்டு நிற்பனவாய். (பாத₃பஸ்தை₂ஶ்ச) மரங்களிலே நிற்பனவாய். (நாநாக₃ந்த₄வர்ணை:) பலவிதமாய் இருக்கும் நறுமணங்களென்ன நிறமென்ன இவற்றை உடையனவாய். (தி₃வ்ய புஷ்பை: ஶோப₄மானை:) இப்படிப்பட்ட அப்ராக்ருதமான புஷ்பங்களாலே விளங்கா நிற்பனவாய். (தி₃வ்ய புஷ்போபவனை: உபஶோபி₄தே) நக₃ரத்தில் சுற்றிலும் சூழ்ந்து நிற்கிற திருத்தோப்புக்களாலே விளங்காநிற்பதாய். (ஸங்கீர்ண பாரிஜாதாதி₃ கல்பத்₃ருமோபஶோபி₄தை:) பாரிஜாதம், ஸந்தானம், ஹரிசந்தநம் முதலான சிறந்த மரங்களோடு கூடின ஸாமாந்யமான கல்பக மரங்களாலே விளங்கா நிற்கிற (அஸங்கீர்ணைஶ்ச கைஶ்சித்) ஒன்றோடொன்று சேர்ந்திருக்கப்பெறாமலிருக்கும் சில மரங்களாலே. (அந்தஸ்ஸ்த₂ புஷ்ப ரத்நாதி₃ நிர்மித தி₃வ்யலீலாமண்ட₃ப ஶதஸஹஸ்ர கோடிஶோபி₄தை:) தோப்புகளுக்குள் அமைந்திருக்கும் புஷ்ப மண்டபம், மாணிக்க மண்டபம் முதலான பல விளையாட்டு மண்டபங்களாலே அலங்கரிக்கப் பெற்றவையாய். (ஸர்வதா₃ அநுபூ₄யமானைரபி அபூர்வவதா₃ஶ்சர்யம் ஆவஹத்₃பி₄:) எப்போதும் அனுபவித்துக் கொண்டிருந்தாலும் அப்போதைக்கப்போது அனுபவிப்பது

**க்ரீடா₃சைலசதஸஹஸ்ரைரலங்க்ருதை:, கைஶ்சித் நாராயண தி₃வ்யலீலா அஸாதா₄ரணை:, கைஶ்சித் பத்₃மவநாலயா தி₃வ்யலீலா அஸாதா₄ரணை:, ஸாதா₄ரணைஶ்ச கைஶ்சித் ஶுகஶாரிகாமயூரகோகிலாதி₃பி₄: கோமல கூஜிதை: ஆகுலை: தி₃வ்யோத்₃யாந சதஸஹஸ்ர கோடிபி₄: ஆவ்ருதே, மணிமுக்தாப்ரவாலக்ருத ஸோபானை: தி₃வ்ய அமல அம்ருத ரஸோத₃கை:**

---

போலே ஆச்சர்யமாய் இருப்பதாய். **(க்ரீடா₃சைல சத ஸஹஸ்ரா லங்க்ருதை:)** அநேகமாயிரம் விளையாட்டு மலைகளாலே அலங்கரிக்கப் பெற்றவைகளாய். **(கைஶ்சிந் நாராயண தி₃வ்ய லீலா அஸாதா₄ரணை:)** சில நந்தவனங்கள் எம்பெருமானுடைய அழகிய விளையாட்டு களுக்கே உரியதாய் இருக்கும். **(கைஶ்சித் பத்₃ம வநாலயா தி₃வ்ய லீலா—அஸாதா₄ரணை:)** சில நந்தவனங்கள் பெரிய பிராட்டியார் முதலான பிராட்டிமார்களின் அழகிய விளையாட்டுக்களுக்கே உரியதாய் இருக்கும். **"பத்₃மவநாலயா"** (தாமரைத் தடாகத்தை இருப்பிடமாக உடையவள்) என்று பெரிய பிராட்டியாரை இங்கு சொன்னது மற்ற பிராட்டிமார்களுக்கும் உபலக்ஷணம். **(ஸாதா₄ரணைஶ்ச கைஶ்சித்)** மற்றும் சில நந்தவனங்கள் பெருமான் பிராட்டிமார் ஆகிய இருவருக்கும் பொதுவானவையாகவும் இருக்கும். **(ஶுக ஶாரிகா மயூர கோகிலாதி₃பி₄:)** கிளிகள், அவற்றில் ஒரு வகையான ஶாரிகைகள், மயில்கள், குயில்கள் முதலான பறவைகளாலே. இவற்றில் **"ஶுகம்"** என்பது பைங்கிளி. **"ஶாரிகை"** என்பது பூவை. ஆதி₃ ஶப்₃த₃த்தாலே அன்னம் குருகு முதலானவை குறிக்கப்படுகின்றன. **(கோமள கூஜிதை: ஆகுலை:)** இனிமையான பேச்சையுடைய பறவைகளாலே நிறைந்துள்ள. **(தி₃வ்யோத்₃யாந சத ஸஹஸ்ர கோடிபி₄: ஆவ்ருதே)** இப்படிப்பட்ட நூறாயிரம் கோடி சோலைகளாலே சூழப்பட்டிருப்பதாய். **(மணி முக்தா ப்ரவாள க்ருத ஸோபானை:)** ரத்தினம், முத்து, பவளம் முதலானவைகளாலே அமைக்கப்பெற்ற அழகான படிகளையுடையவையாய். **(திவ்யாமல அம்ருத ரஸ-உத₃கை:)** அப்ராக்ருதமாய், குறையற்றதாய், அமிர்தம்போலே சூழப்பெற்ற நீர்ப் பரப்பையுடையதாய். இந்த லீலா விபூதியில் நாம் காணும் பொருள்கள் குறையுடையனவாய் அழியக் கூடியனவாய் இருக்கும். அங்குள்ள இவையனைத்தும் அப்ராக்ருதமாகையாலே, குறையற்றதாய் அழியாததாய் இருக்கும் என்பதை திவ்ய சப்தத்தை அடிக்கடி இடுவதன் மூலம் காட்டுகிறார்.

தி3வ்ய — ஏண்ட3ஜவரை: அதிரமணீய த3ர்ஶனை: அதிமனோஹர மது4ர ஸ்வரை: (ஆகுலே:) அந்தஸ்ஸ்த2 முக்தாமய தி3வ்ய க்ரீட3ாஸ்த2ான—உபஶோபி4தை:, தி3வ்ய ஸௌக3ந்தி4க வாபீ ஶத ஸஹஸ்ரை:, தி3வ்யராஜ ஹம்ஸாவளீ விராஜிதை: ஆவ்ருதே, நிரஸ்தாதிஶய—ஆநந்தை3கரஸதயா ச ஆநந்த்யாச்ச ப்ரவிஷ்டாந் உந்மாத3யத்3பி4: க்ரீடோ3த்3தே3ஶை: விராஜிதே, தத்ர தத்ர க்ருத தி3வ்ய புஷ்ப பர்யங்க உபஶோபி4தே, நாநாபுஷ்ப ஆஸவ ஆஸ்வாத3 மத்த ப்4ருங்க3 ஆவலீபி4: உத்3கீ3யமாந—

---

(தி3வ்யாண்ட3ஜவரை:) அப்ராக்ருதமான சிறந்த பறவைகளாலே. **(அதிரமணீயத3ர்ஶனை:)** கண்ணுக்கு அழகாக இருப்பவையாய். **(அதிமனோஹர மது4ரஸ்வரை:)** மிகவும் நெஞ்சை ஈர்க்கும் குரலினிமையை உடையவையாய். இவையிரண்டும் பறவைகளுக்கு விசேஷணம். மேலே நீர் நிலைகளை வர்ணிக்கிறார்—**(அந்தஸ்ஸ்த2 முக்தாமய தி3வ்ய க்ரீட3ாஸ்த2ாந உபஶோபி4தை:)** உள்ளேயுள்ள முத்துக்களாலே அமைந்த விளையாட்டு இடங்களாலே விளங்காநிற்பவையாய். **(தி3வ்ய ஸௌக3ந்தி4க வாபீஶத ஸஹஸ்ரை:)** அப்ராக்ருதமான செங்கழுநீர்ப் பூக்களையுடைய, நீர் நிறைந்த நூறாயிரம் குளங்களாலே. **(தி3வ்ய ராஜஹம்ஸாவலீ விராஜிதை: ஆவ்ருதே)** சுத்த ஸத்வத்தாலான ராஜஹம்ஸங்களின் வரிசையாலே விளங்காநிற்கும் முன் சொன்ன குளங்களாலே சூழப்பட்டிருக்கும். **(நிரஸ்தாதிஶய ஆநந்தை3கரஸதயா ச)** தனக்கு மேல் ஒன்று இல்லாததாய், ஆனந்தமாய், எல்லையற்ற இன்பமாய் இருக்கையாலும். **(ஆநந்த்யாச்ச)** முடிவில்லாமையாலும். **(ப்ரவிஷ்டாநுந்மாத3யத்3பி4:)** சுவையுடைமையாலே உள் புகுந்தவர்களை மிகவும் ஈடுபடுத்தும். **(க்ரீடோ3த்3தே3ஶை: விராஜிதே)** இப்படிப்பட்ட விளையாடுமிடங்களால் விளங்காநிற்பதாய். **(தத்ர தத்ர க்ருத தி3வ்ய புஷ்ப பர்யங்கோபஶோபி4தே)** அந்தந்த இடங்களிலே செய்யப்பட்ட பூப்படுக்கைகளாலே அலங்கரிக்கப் பெற்றதாய். **(நாநா புஷ்பாஸவாஸ்வாத3 மத்த ப்4ருங்கா3வளீபி4 ருத்3கீ3யமாந**

**தி₃வ்ய க₃ாந்த₄ர்வேண ஆபூரிதே, சந்த₃ந அக₃ரு கர்ப்பூர தி₃வ்ய புஷ்ப அவகா₃ஹி மந்த₃ாநில ஆஸேவ்ய மாநே, மத்₄யே (தி₃வ்ய) புஷ்பஸஞ்சய விசித்ரிதே, மஹதி தி₃வ்ய யோக₃பர்யங்கே அநந்தபே₄ாகி₃நி, ஸ்ரீமத்₃ வைகுண்டை₂ஶ்வர்யாதி₃ தி₃வ்யலோகம் ஆத்ம காந்த்யா விஶ்வம் ஆப்யாயயந்த்யா, ஶேஷ ஶேஷாஶநாதி₃ ஸர்வபரி ஜநம் ப₄க₃வத: தத்தத₃வஸ்தோ₂சிதபரிசர்யாயாம் ஆஜ்ஞாபயந்த்யா,**

---

**(தி₃வ்ய க₃ாந்த₄ர்வேண ஆபூரிதே)** பலவிதமான பூக்களில் உண்டான தேனைப் பருகி அதனாலே களித்துநிற்கும் வண்டுகளின் கூட்டங்களாலே பாடப்படும் அழகிய பாட்டொலிகளாலே நிறைந்திருப்பதாய். **(சந்த₃நாக₃ரு கர்ப்பூர தி₃வ்ய புஷ்பாவகா₃ஹி மந்த₃ாநிலாஸேவ்யமாநே)** சந்தனம், அகில், கர்ப்பூரம், அழகிய பூக்கள் இவற்றின் உள்ளே புகுந்து அங்குள்ள நறுமணங்களை எடுத்துக்கொண்டு வருகிற தென்றலாலே சிறப்புற்றதாய். **(மத்₄யே புஷ்ப ஸஞ்சய விசித்ரிதே)** நடுவில் உதிரிப்பூக்களாலே ஆச்சர்யமாய் இருப்பதாய். கீழே உள்ள மூன்று தொடர்களும் அடுத்த அடுத்த தொடரோடு அந்வயிக்கின்றன. **(மஹதி தி₃வ்ய யோ(பே₄ா)க₃ பர்யங்கே)** பெரிய திருப்பள்ளிக்கட்டிலாயிருக்கிறதிலே. **(அநந்த பே₄ாகி₃நி)** திருவநந்தாழ்வான் மேலே. **"பே₄ாக₃"** ஶப்₃த₃ம் பாம்பின் உடலைக் குறிக்கும். **"பே₄ாகீ₃"** என்பது பாம்பைக் குறிக்கும். திருவநந்தாழ்வானாகிற பாம்பின் மேலே என்று பொருள்.

இப்படியிருக்கிற படுக்கையிலே பெரிய பிராட்டியாருடன் கூட எழுந்தருளியிருக்கிறபடியைச் சொல்லுகிறது அடுத்தப;—**(ஸ்ரீமத்₃ வைகுண்டை₂ஶ் வர்யாதி₃ தி₃வ்ய லோகம்)** இப்படியிருக்கிற செல்வத்தையுடைய வைகுண்ட₂மாகிற தி₃வ்ய லோகத்தை. **(ஆத்ம காந்த்யா)** தன்னுடைய ஒளியினாலே. **(விஶ்வம் ஆப்யாயயந்த்யா)** முழுவதையும் அழகுபடுத்திக்கொண்டு. **(ஶேஷ ஶேஷாஶநாதி₃ ஸர்வ பரிஜநம்)** திருவனந்தாழ்வானுகிற ஆதிசேஷன், எம்பெருமானுடைய ஶேஷ ப்ரஸாத₃த்தை உண்பவராகையாலே ஶேஷாஶனர் என்று பெயர் பெற்ற ஸேனை முதலியார் ஆகிய அடியார்கள் அனைவரையும். **(ப₄க₃வதஸ் தத்தத₃வஸ்தோ₂சித பரிசர்யாயாம் ஆஜ்ஞாபயந்த்யா)**

**ஶீல ரூப கு₃ண விலாஸாதி₃பி₄: ஆத்மாநுரூபயா ஶ்ரியா ஸஹ ஆஸீநம், ப்ரத்யக்₃ர—உந்மீலித ஸரஸிஜ ஸத்₃ருஶ நயந யுக₃ளம், ஸ்வச்ச₂ நீல ஜீமூத ஸங்காஶம், அத்யுஜ்ஜ்வலபீத வாஸஸம், ஸ்வயா ப்ரப₄யா அதிநிர்ம லயா அதிஶீதலயா ஸ்வச்ச₂யா மாணிக்யாப₄யா க்ருத்ஸ்நம் ஜக₃த் பா₄ஸயந்தம், அசிந்த்ய தி₃வ்ய அத்₃பு₄த—**

---

ஸர்வேஶ்வரனுக்கு அந்தந்த நிலைகளுக்குப் பொருத்தமான கைங்கர்யங் களிலே நியமிக்கின்றவளாய். "தேவிமாராவார் திருமகள் பூமி வெ மற்றமரர் ஆட்செய்வார்" [திருவாய் 8·1-1] என்று ஆழ்வாரும் அரு ளிச் செய்தாரன்றே. **(ஶீல ரூபகு₃ண விலாஸாதி₃பி₄: ஆத்மாநு ரூபயா)** சீல குணத்தால் உபலக்ஷண முறையில் சொல்லப்பட்ட திவ்யாத்ம குணங்கள், **"ரூபகுண"** என்று சொல்லப்பட்ட ஸௌந் தர்யம் முதலான ரூப குணங்கள், விலாஸம் எனப்படும் நளினம் முத லானவற்றாலே ஸர்வேஶ்வரனுக்கு மிகப் பொருத்தமானவளாய். **(ஶ்ரியா ஸஹாஸீநம்)** இப்படிப்பட்ட பெரியபிராட்டியாரோடே கூடி யிருப்பவனாய்.

**(ப்ரத்யக்₃ரோந் மீலித ஸரஸிஜ ஸத்₃ருஶ நயந யுக₃ளம்)** அப்போதே அலர்ந்த தாமரைப் பூப்போலே இருக்கிற இரு திருக் கண்களை உடையவனை. **(ஸ்வச்ச₂ நீல ஜீமூத ஸங்காஶம்)** தெளிந்த கார்மேகம் போலே இருக்கிறவனை. **(அத்யுஜ்ஜ்வல பீத வாஸஸம்)** மிகவும் ஒளிவீசும் திருப்பீதாம்பரத்தை உடையவனை. **(ஸ்வயா ப்ரப₄யா)** தன்னுடைய ஒளியாலே. அந்த ஒளியின் சிறப் பைக் கூறுகின்றன மேல் உள்ள நாலு பதங்கள். **(அதிநிர்மலயா)** மிகவும் அழுக்கற்றிருப்பது அவ்வொளி. **(அதிஶீதளயா)** மிகவும் குளிர்ந்திருப்பது அவ்வொளி. **(ஸ்வச்ச₂யா)** மிகவும் தெளிந்திருப்பது அவ்வொளி. **(மாணிக்யாப₄யா)** மாணிக்கம் போன்ற காந்தியை யுடையது அந்த ஒளி. **(க்ருத்ஸ்நம் ஜக₃த் பா₄ஸயந்தம்)** அத்தகைய ஒளியாலே எல்லாவுலகையும் விளங்கச் செய்பவனை. மேல் பதம் எம்பெருமானுடைய லாவண்யமாகிற திருமேனியழகை வர்ணிக்கிறது. **(அசிந்த்ய)** அந்த லாவண்யம் ஒருவரால் நினைத்தற்கு அரியது. **(தி₃வ்ய)** அப்ராக்ருதமானது. **(அத்₃பு₄த)** மிகவும் ஆச்சர்யமானது.

**நித்ய யௌவந ஸ்வபா₄வ லாவண்ய மய அம்ருத ஸாக₃ரம், அதிஸௌகுமார்யாத் ஈஷத்ப்ரஸ்விந்நவத் ஆலக்ஷ்ய மாண லலாடப₂லக தி₃வ்யாலக—ஆவலீ விராஜிதம், ப்ரபு₃த்₃த₄ முக்₃த₄ாம்பு₃ஜ சாருலோசநம்**

---

(**நித்ய யௌவந ஸ்வபா₄வ லாவண்யமய அம்ருத ஸாக₃ரம்**) ப்ராக்ருத சரீரங்களுக்கு உள்ள கிழத்தனம் போன்ற நிலைகள் இல்லாததாய், எப்போதும் யௌவநப் பிராயத்திலேயே இருப்பதை இயல்வாக உடையதான திருமேனி அழகாகிற அமுதத்திற்குக் கடலாய் இருப்பவனை. அடுத்த தொடர் திருக்குழற்கற்றையின் அழகை வர்ணிக்கிறது. (**அதி ஸௌகுமார்யாத் ஈஷத் ப்ரஸ்விந்நவத₃ாலக்ஷ்ய மாண லலாடப₂லக தி₃வ்யாலகாவளீ விராஜிதம்**) மிக்வும் மென்மை மிக்கதாகையாலே, தளிர்போலே வழவழப்பாக இருக்கும் திருநெற்றியிலே அலையெறிகிற திருக்குழற் கற்றையாலே (கேசபாசங்களாலே) விளங்கா நிற்பவனை. மேல் உள்ள ஏழு பதங்களும் எட்டாவது தொடரும் ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்ன [33, 34, 35] ஶ்லோகங்களில் உள்ளவை. 'அவற்றின் பொருளை ஸ்தோத்ர பா₄ஷ்யத்தில் கண்டு கொள்வது' என்று பெரியவாச்சான்பிள்ளை குறிப்பிட்டுள்ளார். அவருடைய ஸ்தோத்ர பா₄ஷ்யத்தையொட்டி அவற்றின் பொருள் இங்கு விளக்கப்படுகிறது. (**ப்ரபு₃த்₃த₄ முக்₃த₄ாம்பு₃ஜ சாருலோசநம்**) என்று தொடங்கி (**உந்நஸம்**) என்னும் ப₃தம் வரையில் "கோளிழைத் தாமரை" [திருவாய் 9-10-9] என்னும் பாட்டில் நம்மாழ்வார் வர்ணிக்கிறபடியே, திருமுகத்திலுள்ள அவயவங்களின் அழகின் சேர்த்தியை **அநுப₄**விக்கிறார். (**ப்ரபு₃த்₃த₄**) அடியார்களோடு சேர்த்தியாலே மலர்ந்**திருப்ப**வை திருக்கண்கள். (**முக்₃த₄**) கண்களுடைய புதுமையைச் சொல்லுகிறது. "கிண்கிணிவாய்ச் செய்த தாமரைப் பூப்போலே அங்கணிரண்டும் கொண்டு" [திருப்பாவை 22] என்கிறபடியே, அப்போதே அலரத் தொடங்கின தாமரையைப் போலிருக்கும் புதுமையைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். "பேதுறு முகஞ் செய்து" [திருவாய் 9-9-9] என்கிறபடியே, அடியார்களோடு கலப்பதால் வந்த ஆனந்த மிகுதியால் ஏற்பட்ட புதுமையான அழகைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (**அம்பு₃ஜ சாருலோசநம்**) தாமரை போன்ற அழகியதிருக்கண்களையுடையவனை. இத்தகைய தாமரை

**ஸவிப்₄ரம ப்₄ரூலதம், உஜ்ஜ்வல—அத₄ரம், ஶுசிஸ்மிதம், கோமல க₃ண்ட₃ம்,**

---

உபமானமாக அமையப்போராமையாலே, அந்தத் தாமரையைக் காட்டிலும் அழகாயிருக்கும் உபமேயமான கண்களையே சொல்லுகிருர்.

> **பாபம் ஹரதி யத் பும்ஸாம் ஸ்ம்ருதம் ஸங்கல்பநாமயம் ।**
> **தத் புண்ட₃ரீகநயநம் விஷ்ணோர் த்₃ரக்ஷ்யாம்யஹம் முக₂ம் ॥**
> **[வி. பு. 5-17-4]**

[எந்தத் திருமுக மண்டலமானது நினைக்கப்பட்டவுடன், மனிதர்களின் பாபத்தைப் போக்கடிக்கிறதோ, ஆஶ்ரிதர்களுடைய ஸங்கல்பத்தின் படியே அமைந்திருப்பதும், தாமரை போன்ற திருக்கண்களை உடையதுமான விஷ்ணுவினுடைய அத்திருமுக மண்டலத்தை நான் பார்க்கப் போகிறேன்.] என்று அடியார்கள் ஆசைப்படும் திருக்கண்களன்றே. **(ஸவிப்₄ரமப்₄ரூலதம்)** அடர்த்தியாயிருக்கும் கொடி போன்ற புருவத்தையுடையவனை. "மன்னிய சீர் மதனன் கருப்புச் சிலை கொல்!" [திருவாய் 7-7-4] என்கிறபடியே அடியார்கள் பக்கல் அன்பெல்லாம் தோற்றும்படி அடர்ந்திருக்கும் புருவத்தையுடையவனை. "தன் கைச்சார்ங்க மதுவே போல் புருவ வட்டமழகிய" [நாச். திரு. 14-6] என்று ஆண்டாளும் எம்பெருமானுடைய சார்ங்கவில்லை எம்பெருமானுடைய புருவத்திற்கு உபமானமாகச் சொன்னாளன்றே. **(உஜ்ஜ்வல அத₄ரம்)** மிக்க அழகையுடைய திரு அத₄ரத்தை (உதடுகளை) உடையவனை. "வாலியதோர் கனிகொல்? வினையாட்டியேன் வல்வினை கொல்? கோலந்திரள்பவளக் கொழுந்துண்டங்கொலோ! அறியேன், நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான் தொண்டைவாய் ஏலும் திசையுளெல்லாம் வந்து தோன்றும் என் இன்னுயிர்க்கே" [திருவாய் 7-7-3] என்று இதற்கு உபமானமாக ஒன்று நிற்கமாட்டாமையாலே பலவற்றைச் சொன்னாரன்றே ஆழ்வார். **(ஶுசிஸ்மிதம்)** பரிசுத்தமான (வெளுத்த) புன்முறுவலையுடையவனை. "கோலநறும் பவளச் செந்துவர் வாயினிடைக் கோமளவெள்ளி முளைப்போல் சில பல்லிலக" [பெரியாழ் திரு. 1-5-9] என்று பெரியாழ்வாரும், "வெண் மின்னுக் கொல் அன்றி என் ஆவியடும் அணிமுத்தங்கொலோ!" [திருவாய் 7-7-5] என்று நம்மாழ்வாரும் இந்தத் திருமுறுவலிலே ஈடுபட்டனரன்றே. **(கோமளக₃ண்ட₃ம்)** அழகிய கபோலங்களை (கன்னங்களை)

**உந்நஸம், உத3க்3ர பீந அம்ஸ விலம்பி3 குண்ட3ல— அலகாவலீ ப3ந்து4ர கம்பு3கந்த4ரம், ப்ரியா அவதம்ஸ— உத்பல கர்ண பூ4ஷண ஶ்லத2 அலகாப3ந்த4 விமர்த3— ஶம்ஸிபி4: சதுர்ப்பி4: ஆஜாநு விலம்பி3பி4ர் பு4ஜை: வ்ராஜிதம், அதி கோமல தி3வ்யரேகா2 அலங்க்ருத ஆதாம்ர கரதலம், தி3வ்ய அங்கு3லீயக விராஜிதம், அதிகோமல (தி3வ்ய) நகா2வலீ வ்ராஜிதம், அதி(நு)ரக்தாங்கு3லீபி4: அலங்க்ருதம்,**

---

உடையவனை, அநுபவிப்பவர்களின் நெஞ்சை ஈர்ப்பதாய் மென்மை மிக்கதாய் இருப்பவையன்றோ கபோலங்கள். **(உந்நஸம்)** உயர்ந்த திரு மூக்கை உடையவனை. "மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ? கொழுந்தோ?" [திருவாய் 7-7-2] என்று நம்மாழ்வாரால் அநுபவிக்கப் பெற்றதன்றோ இவனுடைய கொடி மூக்கு. **(உத3க்3ர-பீந-அம்ஸ விலம்பி3-குண்ட3ல-அலகாவலீ ப3ந்து4ர கம்பு3 கந்த4ரம்)** ஓங்கித் தசைப்பற்றுடையதான தோள்வரை தாழ்ந்திருக்கும் திருக்குண்டலங்களாலும், திருக்குழல்களாலும் அழகு பெற்றதாகவும், மூன்று கோடுகளையுடையதாகவும் உள்ள திருக்கழுத்தை உடையவனை, **(ஆஜாநு விலம்பி3பி4:)** முழங்கால்கள் வரை தொங்குகின்றவையும். இது புருஷோத்தம லக்ஷணமன்றோ. **(ப்ரியா-அவதம்ஸ-உத்பல-கர்ண பூ4ஷண ஶ்லத2-அலகாப3ந்த4 விமர்த3 ஶம்ஸிபி4:)** பெரியபிராட்டியாரின் திருச்செவி மலரான நீலோத்பல புஷ்பம், கர்ண பூஷணம் (காதணி) எம்பெருமானுடைய சிறிது அலைந்த திருக்குழற்கற்றை ஆகியவை அழுந்தியிருப்பதைத் தெரிவிப்பவையான. **(சதுர்ப்பி4: பு4ஜை: விராஜிதம்)** நாலு திருத்தோள்களாலே விளங்கா நிற்பவனை.

**(அதிகோமள தி3வ்யரேகா2லங்க்ருத ஆதாம்ர கரதலம்)** மிகவும் நளினமானதாய், மிக அழகியதாய் இருக்கும் அப்ராக்ருதமான ரேகைகளாகிற தாமரை, ஶங்கம், சக்ரம், கற்பக வ்ருக்ஷம், கொடி, அங்குஶம், வஜ்ராயுதம் ஆகியவற்றைத் திருக்கைத்தலத்திலே உடையவனை. **(தி3வ்யாங்கு3ளீயக விராஜிதம்)** திருவிரல்களில் சாத்தின அறுகாழி மோதிரத்தாலே விளங்கா நிற்பவனை. **(அதி கோமள நகா2வலீ விராஜிதம்)** மிகவும் மென்மை மிக்கதான நகவரிசைகளாலே விளங்கா நிற்பவனை. **(அநுரக்தாங்கு3ளீபி4: அலங்க்ருதம்)**

**தத்க்ஷண—உந்மீலித புண்ட₃ரீக ஸத்₃ருஶ சரணயுக₃ளம், அதிமநோஹர கிரீட மகுட சூட₃ா—அவதம்ஸ மகரகுண்ட₃ல க்₃ரைவேயக ஹார கேயூர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப₄ முக்தாதா₃ம உத₃ரப₃ந்த₄ந பீதாம்ப₃ர காஞ்சீகு₃ண நூபுராதி₃பி₄: அத்யந்தஸுக₂ஸ்பர்ஶை: தி₃வ்ய க₃ந்தை₄: பூ₄ஷணை: பூ₄ஷிதம்,**

---

சிவந்த திரு விரல்களாலே விளங்காநிற்பவனை. (**தத்க்ஷணோந்மீலித புண்ட₃ரீக ஸத்₃ருஶ சரண யுக₃ளம்**) அப்போதலர்ந்த தாமரைப் பூப்போலே இருக்கிற இரண்டு திருவடிகளையுடையவனை. (**அதிமநோஹர......பூ₄ஷணை: பூ₄ஷிதம்**) கண்டவர் நெஞ்சைக் கவரும் கிரீடம் முதலான திருவாப₄ரணங்களால் அலங்கரிக்கப்பட்டவனை. (**கிரீட மகுட**) கிரீடம் மகுடம் என்னும் இவ்விரண்டும் நல்ல அணியின் இரண்டு பகுதிகளாகும்; அல்லது கிரீடமாகிற மகுடம் என்று ஒன்றாகவே கொள்ளலாம். (**சூட₃ா**) அந்தத்தலை அணியின்மேல் சாத்திய சூட₃ா என்னும் திருச்சுட்டு. (**அவதம்ஸ**) திருச்செவிமலர். (**மகர குண்ட₃ல**) செவியிலே தொங்கும் திருமகரக்குழை. (**க்₃ரைவேயக**) திருக்கழுத்துக்கு ஆப₄ரணம். (**ஹார**) திருமார்பு வரை தழைந்து வருமாறு சாத்தும் திருவாரம். (**கேயூர**) தோள்வளை, (**கடக**) முன் கையில் சாத்தும் வளை. (**ஸ்ரீவத்ஸ**) வேறு எவர்க்கும் இல்லாததாய் இவனுக்கே உரியதான திருமார்பில் உள்ள மச்சமாகிற திருமறு. (**கௌஸ்துப₄**) திருமார்பிலுள்ள நீல மணியாகிற கௌஸ்துப₄ம். (**முக்தாத₄ாம**) முத்துமாலை. (**உத₃ரப₃ந்த₄ந**) இடையில் சாத்தும் திருஉத₃ரப₃ந்த₄னம். (**பீதாம்ப₃ர**) பொன்னிறமான பீதகவாடை. (**காஞ்சீகு₃ண**) இடையில் சாத்தும் அரைநாண் கயிறு. (**நூபுர**) திருச்சிலம்பு. (**ஆதி₃பி₄:**) இவை தொடக்கமான. "பலபலவே ஆப₄ரணம்" [திருவாய் 2-5-6] என்று ஆழ்வாரும் அருளினர். (**அத்யந்த ஸுக₂ஸ்பர்ஶை:**) இந்த ஆபரணங்கள் திருமேனியை உறுத்துபவையாயிராமல் திருமேனிக்குப் பூச்சாத்தினதுபோலே இன்பம் பயப்பவையாய் இருக்கும். (**தி₃வ்யக₃ந்தை₄:**) அப்ராக்ருதமான நறுமணத்தை உடையவையாய் இருக்கும். (**பூ₄ஷணை: பூ₄ஷிதம்**) இப்படிப்பட்ட திவ்யாபரணங்களாலே அலங்கரிக்கப்பட்டவனை. நித்ய ஸூரிகளே இப்படிப்பட்ட ஆப₄ரணங்களாக உருவெடுத்திருக்கிறார்களாகையாலே, இவர்களை திவ்யாபரண ஆழ்வார்கள் என்று கூறுவது வழக்கு.

**ஸ்ரீமத்யா வைஜயந்த்யா வநமாலயா விராஜிதம், ஸங்க₂ சக்ர க₃தா₃ அஸி ஸார்ங்க₃ாதி₃ தி₃வ்யாயுதை₄: ஸேவ்யமாநம், ஸ்வஸங்கல்ப மாத்ர — அவக்லுப்த ஜக₃ஜ் ஜங்ம ஸ்தி₂தி த்₄வம்ஸாதி₃கே ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே**

---

**(ஸ்ரீமத்யா வைஜயந்த்யா வநமாலயா விராஜிதம்)** அழகையுடையதாய் வைஜயந்தி என்று பெயர் பெற்றிருக்கும் வனமாலையால் விளங்கா நிற்பவனை. **(ஸங்க₂ சக்ர க₃தா₃ஸி ஸார்ங்கா₃தி₃ தி₃வ்யாயுதை₄: ஸேவ்யமாநம்)** பொங்கும் பரிவாலே, தீங்கே நேரமுடியாத பரமபதத்திலும் 'என்ன தீங்கு நேருமோ?' என்று ஐயமுற்று, என்றும் போருக்கு ஸித்₃த₄மாய் இருக்கும் ஸங்க₂ம், சக்ரம், நாந்த₃கவாள், ஸார்ங்க₃ம், க₃தை₃ என்னும் பஞ்சாயுதங்கள் தொடக்கமான தி₃வ்யாயுத₄ங்களாய் இருக்கும் நித்ய ஸூரிகளாலே சூழ்ந்திருந்து பல்லாண்டு பாடப்படுபவனை.

அடுத்த தொடரிலே நித்ய ஸூரிகளுக்குத் தலைவரான விஷ்வக்ஸேநர் எனப்படும் ஸேனை முதலியாரின் பெருமைகளைக் கூறுகிறார். **(ஸ்வ ஸங்கல்ப மாத்ர அவக்லுப்த ஜக₃ஜ்ஜங்ம ஸ்தி₂தி த்₄வம்ஸாதி₃கே)** நினைத்த மாத்திரத்தில் ஸ்த₂ாவர ஜங்கம ரூபமான எல்லாப் பொருள்களையும் ஆக்கல், காத்தல், அழித்தல் முதலான எல்லாச் செயல்களையும் செய்யக் கூடியவரை. "**ஜக₃த்**" என்று ஸ்த₂ாவர (அசையாத) "ஜங்க₃ம" (அசையும்) பொருள்களடங்கிய அண்டத்தின் உள்ளிருக்கும் பொருள்கள் இங்கு கூறப்படுகின்றன. அண்டம், அதற்கு முற்பட்ட ப்ரக்ருதி, மஹாந் முதலானவற்றைப் படைக்கும் ஸமஷ்டி ஸ்ருஷ்டி எம்பெருமான் ஒருவனுக்கே உரியதாகையாலே 'நித்ய முக்தர்களுக்கு ஜக₃த்₃ வ்யாபாரம் கிடையாது' என்று கூறும் ப்₃ராஹ்ம ஸூத்ரத்தோடு முரண்பாடு இல்லை. வ்யஷ்டி ஸ்ருஷ்டிகளை ப்₃ரஹ்மாதி₃களைக் கொண்டு இவர் செய்து வைப்பார் என்று கருத்து. இவருடைய மந்திரத்திலும் "**விஸ்வஸ்ருஜே**" [உலகைப்படைப்பவருக்கு] என்னும் பதம் உண்டு. **(ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே)** கைங்கர்யச் செல்வத்திற்கு இட்டுப் பிறந்த ஸேனை முதலியாரிடத்தில்.

**ந்யஸ்தஸமஸ்த — ஆத்மைச்வர்யம், வைநதேயாதி₃பி₄: ஸ்வப₄ாவதோ நிரஸ்த ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வப₄ாவை: ப₄க₃வத் பரிசர்யாகரண யோக்₃யை: ப₄க₃வத் பரிசர்யைக போ₄கை₃: நித்யஸித்₃தை₄: அநந்தை: யதா₂யோக₃ம் ஸேவ்யமாநம்,**

---

**(ந்யஸ்த ஸமஸ்த ஆத்மைச்வர்யம்)** தம்முடைய எல்லா நியமனச் செல்வத்தையும் வைத்திருப்பவனை. ஸ்தோத்ர ரத்னம் 42-வது ச்லோகத்தில் ஆளவந்தாரும் இவர் பெருமையை இப்படியே அருளிச்செய்தார்.

பெரிய திருவடியாகிற கருடன் முதலான நித்யஸூரி ஸமூஹத்தாலே ஸேவிக்கப்படும்படியை அடுத்த தொடராலே காட்டுகிறுர். **(வைநதேயாதி₃பி₄:)** பெரிய திருவடி நாயனுர் (கருடாழ்வார்) தொடக்கமான நித்ய ஸூரிகளின் ஸமூஹங்களாலே; ஆதி₃ சப்₃த₃த்தாலே யானை முகத்தையுடைய கஜமுகர் (க₃ஜானனர்), சிம்ம முகத்தையுடைய ஸிம்ஹாநநர் முதலான பாரிஷத₃ாத்₃யர், குமுத₃ர், சண்ட₃ர் முதலான க₃ணநாயகர்கள் ஆகியவர்களைக் குறிக்கிறது. மேலே உள்ள பதங்கள் இவர்களுடைய பெருமைகளை வர்ணிக்கின்றன. **(ஸ்வப₄ாவதோ நிரஸ்த ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வப₄ாவை:)** முக்தர்களைப்போலே ஒருநாள் தொடங்கியல்லாமல்,நித்யரான தாங்கள் உள்ள காலமெல்லாம் ஸம்ஸாரிகளுக்குள்ள எல்லாத் தாழ்வுகளும் அற்றவர்களாய். **(ப₄க₃வத் பரிசர்யாகரண யோக்₃யை:)** எம்பெருமானுடைய திருவடிகளிலே கைங்கர்யம் பண்ணுவதற்கு இட்டுப் பிறந்தவர்களாய். **(ப₄க₃வத் பரிசர்யைக போ₄கை₃:)** ப₄க₃வத் கைங்கர்யம் தவிர, தங்களை தரிக்க வைப்பது வேறொன்று இல்லாதவர்களாய். **(நித்ய ஸித்₃தை₄:)** என்றும் இருக்கும் நித்ய ஸூரிகளாலே. **(அநந்தை:)** இவர்கள் 'இவ்வளவு' என்று எண்ணி முடிக்க முடியாதவர்கள் என்று கருத்து. **(யதா₂ யோக₃ம் ஸேவ்யமாநம்)** எம்பெருமான் நின்ற நிலைகளுக்குத் தக்கபடி இந்த நித்ய ஸூரிகளாலே ஸேவிக்கப்படுபவனை.

**ஆத்ம—பே₄ாகே₃ந—அநுஸம்ஹித பராதி₃கால தி₃வ்ய—அமல கோமல அவலோகநேந விஶ்வம் ஆஹ்லாத₃யந்தம், ஈஷத் உந்மீலித முக₂ாம்பு₃ஜ—உத₃ர விநிர்க்க₃தேந தி₃வ்யாநநாரவிந்த₃ ஶோப₄ா ஜநகேந தி₃வ்யக₃ாம்பீ₄ர்ய ஔத₃ார்ய (ஸௌந்த₃ர்ய) மாது₄ர்யாதி₃ அநவதி₄க கு₃ண க₃ண விபூ₄ஷிதேந அதிமநோஹர தி₃வ்ய ப₄ாவக₃ர்ப்பே₄ண**

---

(**ஆத்ம பே₄ாகே₃ந அநுஸம்ஹித பராதி₃கால தி₃வ்யாமல கோமளாவலோகநேந விஶ்வம் ஆஹ்லாத₃யந்தம்**) தன் கடாக்ஷத்தாலே, எல்லாச் சேதனர்களையும் உகப்பிக்கின்றவனை என்று பொருள். (**ஆத்ம பே₄ாகே₃ந அநுஸம்ஹித**) என்று எல்லாப் பொருள்களையும் உகப்பிப்பதை ஸ்வாமியான தன் பேறாக அநுஸந்திக்கிறான் என்பதைக் காட்டுகிறது. (**பராதி₃கால**) என்று இந்த அனுஸந்த₄ானம் காலதத்வம் உள்ளவரையில் நடக்கிறது எனக் காட்டுகிறது. இனிமேலே கடாக்ஷத்தின் பெருமையைக் கூறுகிறது. (**தி₃வ்ய**) சிறப்பான கடாக்ஷம். (**அமல**) சேதனர் செய்யும் குற்றங்களை நினைத்துக் கலங்காத கடாக்ஷம். (**கோமள**) மிகத் தெளிவாகவும், அழகாகவும் இருக்கும் கடாக்ஷம். (**அவலோகந**)ஶப்₃த₃ம் கடாக்ஷத்தைச் சொல்லும். (**விஶ்வம் ஆஹ்லாத₃யந்தம்**) எல்லாப் பொருள்களையும் முற்கூறிய கடாக்ஷத்தாலே உகப்பிக்கின்றவனை. அடுத்தபடி "**ஆபூரயந்தம்**" என்பது ஈறாக எம்பெருமானுடைய சொல்லமுதத்தை வர்ணிக்கிறார். (**ஈஷது₃ந்மீலித முக₂ாம்பு₃ஜோத₃ர விநிர்க்க₃தேந**) முதலில் சொல்லமுதம் புறப்படும் இடத்தை வர்ணிக்கிறார். சிறிது அலர்ந்த திருமுகத் தாமரையிடையிலிருந்து புறப்பட்டிருப்பதாய். (**தி₃வ்யாநநாரவிந்த₃ ஶோப₄ாஜநகேந**) அழகிய திருமுகத் தாமரைக்கு, குறிப்பாகத் திருப்பவளத்துக்கு ஆபரணம் சாத்தினாப்போலே அழகை உண்டாக்கக் கூடியதாய் இருப்பது இச்சொல்லமுதம். (**தி₃வ்ய க₃ாம்பீ₄ர்ய ஔத₃ார்ய மாது₄ர்யாதி₃ அநவதி₄க கு₃ண க₃ண விபூ₄ஷிதேந**) அழகிய சம்பீரமான பெரிய முழக்கம், பொருளை வாரி வழங்கும் தன்மை, இனிமை ஒளி அருள் முதலிய எண்ணிறந்த கு₃ண ஸமூஹங்களாலே அலங்கரிக்கப் பட்டிருப்பதாய் உள்ளது இந்தச் சொல்லமுதம். (**அதி மநோஹர தி₃வ்ய ப₄ாவக₃ர்ப்பே₄ண**) நெஞ்சை மிகவும் ஈர்க்கக் கூடியதாய் அழகிய கருத்தை உள்ளடக்கியதாய் உள்ளது இந்தச் சொல்லமுதம்.

**தி₃வ்யலீலாலாப—அம்ருதேந அகி₂ல ஜநஹ்ருத₃யாந்த ராணி ஆபூரயந்தம், ப₄க₃வந்தம் நாராயணம் த்₄யாந யோகே₃ந த்₃ருஷ்ட்வா, (தத:) ப₄க₃வத: நித்ய ஸ்வாம்யம், ஆத்மந: நித்யதா₃ஸ்யம் ச யதா₂வஸ்தி₂தம் அநுஸந்த₄ாய,**

---

**(தி₃வ்ய லீலாலாபாம்ருதேந)** இப்படிப்பட்ட பெருமகிழ்ச்சி ததும்பும் சொல்லாகிற அமுதத்தாலே. **(அகி₂ல ஜந ஹ்ருத₃யாந்தராணி ஆபூரயந்தம்)** அனைவருடைய உள்ளங்கள் முழுவதையும் நிறைப்பவ னாய் உள்ளவன். **(ப₄க₃வந்தம் நாராயணம்)** இப்படித் தாழ்வுகளுக்கு எதிர்த்தட்டாகவும் கல்யாண கு₃ணங்களுக்கு இருப்பிடமாகவும் உள்ள வனுகையாலே "**ப₄க₃வான்**" எனப்படும் **நாராயணனே. (த்₄யாந யோகே₃ந த்₃ருஷ்ட்வா)** மனத்தாலே நேரே கண்டு. "**த்₄யாந யோகே₃ந த்ருஷ்ட்வா**" என்று யோக₃ ஶப்தத்தைச் சொல்லுகை யாலே **ப₄க்தி யோக₃த்தை அனுஷ்டித்து,** அதன் பலனுக மனத் தில் உண்டாகும் காட்சியைச் சொன்னுற்போலே இருக்கிறது. 'முதல் சூர்ணையில் "**ஶரணம் அநுவ்ரஜேத்**" என்று ப்ரபத்தி பண்ணின தாகச் சொன்னதற்குப் பலனில்லையோ?' எனில்—அப்படியல்ல. ப்ரபத்தி பண்ணினவர்களுக்கும் எம்பெருமான் அப்படி மனத்தில் காட்சியளிப்பான். அதையே சொல்லுகிறது என்று கொள்ளலாம். **(த்₄யாந யோகே₃ந)** என்றது **ப₄க்தி** யோக₃த்தாலே மனதில் நேரே காண்பது போலே என்று பொருள்படுகிறது. அப்படியல்லாமல் இரண்டாவது சூர்ணையில், தன் ஆத்மா உய்வதற்காக தினந்தோறும் இவ்வண்ணமே அநுஸந்திக்கவேண்டும் என்று சொன்ன அநுஸந்தா னம் முற்றி உருவெளித் தோற்றமாக விளையும் காட்சியை "**த்₄யாந யோகே₃ந த்₃ருஷ்ட்வா**" என்று கூறுவதாகவும் கொள்ளலாம்.

இனி, "**ஆஶாம் வர்த்த₄யித்வா**" என்பது வரையில் இவன் எம் பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யவேண்டும் என்னும் ஆசையை வளர்க்கும் முறையைச் சொல்லுகிறது. **(ப₄க₃வதோ நித்ய ஸ்வாம்யம் ஆத்மநோ நித்ய தா₃ஸ்யஞ்ச யதா₂வஸ்தி₂தம் அநுஸந்த₄ாய)** **286**-ம் பக்கத்தில் எடுக்கப்பட்டுள்ள **169**-வது ப்ரமாணமான விஷ்ணு **தத்வ ஶ்லோகத்தின்படி,** எம்பெருமான் எப்போதும் ஸ்வாமியாகவும் ஜீவாத்மா எப்போதும் அவனுக்கு தாஸனுகவும் இயல்பாகவே அமைந் திருக்கும் உறவை உணர்ந்து. இனி, இந்த ஸம்ப₃ந்த₃ ஜ்ஞானத்தின

**கதா₃ அஹம் ப₄க₃வந்தம் நாராயணம் மம நாத₂ம் மம குலதை₃வதம் மம குலத₄நம் மம போ₄க்₃யம் மம மாதரம் மம பிதரம் மம ஸர்வம் ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா,**

---

லும், முற்கூறிய ஸாக்ஷாத்காரத்தாலும் கைங்கர்யம் பண்ணுவதற்கு விளையும் மநோரதத்தை வர்ணிக்கிறது. **(கதா₃)** "அந்தநாள் என்று வருமோ?" என்று பதறுகிறார். **(அஹம்)** தப்பிப் போகாத உபாய மான எம்பெருமான் வசப்பட்டிருக்கையாலே பேறுகிற கைங்கர்யத்தில் பதற்றத்தை உடையவனான நான். **(ப₄க₃வந்தம் நாராயணம்)** நான் அறிபிருக்க முடியாதபடியான குணங்களையுடைய ப₄க₃வானாகவும், என்னோடு எல்லாவுறவும் உடைய நாராயணனாகவும் இருப்பவனன்றே அவன். **(மம நாத₂ம்)** எனக்கு வகுத்த ஸ்வாமியாய் இருப்பவனன்றே. **(மம குலதை₃வதம்)** பொதுவான தலைவனாய் இருக்காமல், "எந்தை தந்தை தந்தை" [திருப்பல். 6] என்கிற ரீதியிலே எங்கள் குலத்துக்கு வழிவழி வந்த தேய்வமாயிருப்பவனன்றே அவன். **(மம குலத₄நம்)** என் குலத்திற்கு ஆபத்திற்கு உதவும் கைம்முதலாகவும் இருப்பவனன்றே அவன். **(மம போ₄க்₃யம்)** எனக்கு இனியவனாய் இருப்பவனன்றே அவன். **(மம மாதரம்)** வயிற்றில் தாங்கும் தாயைப் போலே என்னை த₄ரித்து நின்று எனக்குப் பிரியத்தையே செய்பவனன்றே அவன். **(மம பிதரம்)** உண்டாக்கிய தந்தையைப்போலே என்னைப் படைத்தவனாய் ஹிதத்தையே செய்பவனன்றே அவன். **(மம ஸர்வம்)** 190-ம் பக்கத்தில் எடுக்கப்பட்ட 99-வது ப்ரமாணமான ஸுபாலோபநிஷத்₃ வாக்கியத்தின்படியும், ஶரணாக₃தி க₃த்₃யத்தின் ஏழாவது சூர்ணையின்படியும், "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன் மக்களும்—மேலாத் தாய் தந்தையும் அவரே இனியாவாரே" [திருவாய் 5-1-8] என்ற அருளிச் செயலின்படியும், இங்கு சொல்லப் படாத எல்லாப் பொருள்களுமாய் எனக்கு இருப்பவனன்றே அவன். **(ஸாக்ஷாத் கரவாணி சக்ஷுஷா)** சற்றுமுன் சொல்லப்பட்ட மனக் காட்சி போலல்லாமல்,

**கதா₃ அஹம் ப₄க₃வத் பாத₃ாம்பு₃ஜத்₃வயம் ஶிரஸா தா₄ரயிஷ்யாமி [ஸங்க்₃ரஹீஷ்யாமி] [கதா₃ அஹம் ப₄க₃வத் பாதா₃ம்பு₃ஜத்₃வய பரிசர்யா சரண யோக்₃ய: (தத₃ேக போ₄க₃:) தத்பாதௌ₃ பரிசரிஷ்யாமி]**

---

**198. தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய: ।**
**தி₃வீவ சக்ஷுராததம் ॥**
**தத்₃ விப்ராஸோ விபந்யவோ ஜாக்₃ருவாம்ஸஸ் ஸமிந்த₄தே**
**விஷ்ணோர்யத் பரமம் பத₃ம் ॥**
**[ருக்₃-அஷ்டக 1-2-7; ஸாமவேத₃ம் 8-18-2-4]**

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத₃த்தை நித்ய ஸூரிகள் எப்போதும் பார்க்கிறார்கள்; அப்பரமபத₃ம், எல்லாவற்றையும் பிரகாசிப்பவனும், ஆகாயத்திலிருப்பவனும், உலகிற்கெல்லாம் கண்ணுயிருப்பவனுமான ஸூர்யன் போல் ப்ரகாஶமுள்ளது. விஷ்ணுவினுடைய யாதொரு பரமபத₃மிருக்கிறதோ, அதில் மேதா₄விகளும், துதிப்பதையே ஸ்வபா₄வமாக உடையவர்களும், ஜாக₃ரூகர்களாயிருப்பவர்களுமான நித்ய ஸூரிகள் பிரகாசிக்கின்றனர்.] என்கிற வேத வாக்யத்தின்படியும், "கண்டு கொண்டு என் கண்ணிணைகள் என்று கொலோ களிக்கும் நாள்" [பெருமாள் திரு. 1-1] என்ற அருளிச் செயலின்படியும், நான் பரமபதத்திற்குச் சென்று அவனை நேரே காணப்போவதுஎன்றோ? **(கதா₃ஹம் ப₄க₃வத் பாத₃ாம்பு₃ஜத்₃வயம் ஶிரஸா தா₄ரயிஷ்யாமி)**

**199. கதா₃ புநஶ் ஶங்க₂ரதா₂ங்க₃கல்பக-**
**த்₄வஜாரவிந்தா₃ங்குஶ வஜ்ரலாஞ்ச₂நம் ।**
**த்ரிவிக்ரம! த்வச்சரணம்பு₃ஜத்₃வயம்**
**மதீ₃யமூர்த்₄தா₄நமலங்கரிஷ்யதி ॥**
**[ஸ்தோ. ர. 31]**

[திரிவிக்ரமாவதாரம் செய்த எம்பிரானே! சங்கு, சக்கரம், கல்பகவ்ருக்ஷம், கொடி, தாமரை, அங்குஶம், வஜ்ராயுத₄ம் இவைகளை அடையாளமாக உடைய உன் திருவடித் தாமரையிணை என் தலையை எப்போதுதான் அலங்கரிக்கப் போகிறது?] என்றும், "தளிர்புரையும் திருவடி என் தலைமேலவே" [திரு. நெ. 1] என்றும் சொல்லுகிறபடியே

**கதா3 அஹம் ப4க3வத் பாதா3ம்பு3ஜ த்3வய பரிசர்யாஸயா நிரஸ்த ஸமஸ்தேதர போ4கா3ஸ: அபக3த ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வபா4வ: தத்பாதா3ம்பு3ஜத்3வயம் ப்ரவேக்ஷ்யாமி, கதா3மாம் ப4க3வாந் ஸ்வகீயயா அதிஸீதலயா த்3ருஸா அவலோக்ய ஸ்நிக்3த4 க3ம்பீ4ர மது4ரயா கி3ரா பரிசர்யாயாம் ஆஜ்ஞாபயிஷ்யதி— இதி ப4க3வத் பரிசர்யாயாம் ஆஸாம் வர்த்த4யித்வா, தயைவ ஆஸயா தத்ப்ரஸாத3— உபப்3ரும்ஹிதயா ப4க3வந்தம் உபேத்ய, தூ3ராத் ஏவ—**

---

என் ஸ்வரூபத்துக்குத் தகுந்த ஸ்வாமியின் எல்லையற்ற இனிமையையுடைய திருவடித் தாமரைகளை நான் தலையால் தாங்குவது என்றோ? **(கதா3ஹம் ப4க3வத் பாதா3ம்பு3ஜத்3வய பரிசர்யாஸயா நிரஸ்த ஸமஸ்தேதர போ4கா3ஸ: அபக3த ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வபா4வ: தத்பாதா3ம்பு3ஜத்3வயம் ப்ரவேக்ஷ்யாமி)** ஸர்வேஸ்வரன் திருவடிகளில் கைங்கர்ய ருசியாலே மற்ற விஷயங்களை அனுபவிக்கவேண்டும் என்னும் ஊற்றம் நீங்கப் பெற்றவனாய், ராகம் (தாழ்ந்த விஷயங்களில் ஆசை), த்3வேஷம் (நல்ல விஷயங்களில் வெறுப்பு) முதலானவையாகிற எல்லா உலக வாழ்க்கை இயல்வுகளும் தானாகவே அழியப் பெற்றவனாய், நான் எப்போது அந்தத் திருவடித் தாமரையிணையை அடைவேன். **(கதா3 மாம் ப4க3வாந் ஸ்வகீயயாऽதிஸீதளயா த்3ருஸாऽவலோக்ய, ஸ்நிக்3த4 க3ம்பீ4ர மது4ரயா கி3ரா பரிசர்யாயாம் ஆஜ்ஞாபயிஷ்யதி)** பரமபுருஷன் தன்னுடைய மிகக் குளிர்ந்த திருக்கண்களாலே கடாக்ஷித்து, அன்புடையதும் க3ம்பீ4ரமானதும் இனியதுமான வார்த்தையாலே, "முகப்பே கூவிப் பணிகொள்ளாய்" [திருவாய் 8-5-7] என்கிறபடியே, கைங்கர்யத்தில் என்னை நியமிக்கப்போவது எப்போது? **(இதி ப4க3வத் பரிசர்யாயாம் ஆஸாம் வர்த்த4யித்வா)** என்று இவ்வண்ணமாக **ப4க3வத்** கைங்கர்யத்தில் ஆசையை வளரச் செய்து.

**(தயைவாஸயா தத் ப்ரஸாதோ3பப்3ரும்ஹிதயா ப4க3வந்தம் உபேத்ய)** எம்பெருமானுடைய அருளாலே மேன்மேலே கரைபுரண்டு பெருகி வருகிற அந்த ஆசையோடு கூட அவனை அணுகி. **(தூ3ராதே3வ**

**ப₄க₃வந்தம் ஶேஷ போ₄கே₃ ஶ்ரியா ஸஹ ஆஸீநம் வைநதேயாதி₃பி₄: ஸேவ்யமாநம் 'ஸமஸ்தபரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:' இதி ப்ரணம்ய, உத்தா₂ய உத்தா₂ய புந: புந: ப்ரணம்ய, அத்யந்த ஸாத்₄வஸ விநயாவநத: பூ₄த்வா, ப₄க₃வத் பாரிஷத₃க₃ணநாயகை: த்₃வாரபாலை: க்ருபயா ஸ்நேஹ க₃ர்ப்ப₄யா த்₃ருஶா அவலோகித: பூ₄த்வா, ஸம்யக் அபி₄வந்தி₃தை: தைரேவ அநுமத: பூ₄த்வா ப₄க₃வந்தம் உபேத்ய, ஸ்ரீமதா மூலமந்த்ரேண 'ப₄க₃வந்!**

---

**ப₄க₃வந்தம் ஶேஷ போ₄கே₃ ஶ்ரியா ஸஹாஸீநம் ப்ரணம்ய)** "தூ₃ராதே₃வ" என்னும் பதம் இத்தொடரின் கடைசியிலுள்ள "ப்ரணம்ய" என்பதோடு அந்வயிக்கிறது. "தூரத்திலிருந்தே வணங்கி" என்று பொருள். யாரை எப்படி வணங்குவது? என்பதை மற்ற பதங்கள் விளக்குகின்றன. யாரை வணங்குவது? எனில்— **(ப₄க₃வந்தம் ஶேஷ போ₄கே₃ ஶ்ரியா ஸஹாஸீநம்)** திருவனந்தாழ்வான் மடியிலே பெரிய பிராட்டியாரோடே கூட இருப்பவனாய், பெரிய திருவடியாகிற கருடன் முதலிய நித்ய ஸூரிகளாலே எப்போதும் ஸேவிக்கப்பட்டவனாய் இருக்கும் ப₄க₃வானை. எப்படி வணங்குவது? எனில் —**(ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம: இதி ப்ரணம்ய, உத்தா₂ய உத்தா₂ய புந:புந: ப்ரணம்ய)** 'எல்லாப் பரிவாரங்களோடு கூடிய ஸ்ரீமந் நாராயணனுக்கு நமஸ்காரம்' என்று தூரத்திலே தண்டனிட்டு. அதற்குப் பிறகும் எம்பெருமானை நெருங்கும் வரையில் ஆர்வ மிகுதியாலே பலகால் தண்டனிட்டுச் சென்று. **(அத்யந்த ஸாத்₄வஸ விநயாவநதோ பூ₄த்வா ப₄க₃வத் பாரிஷத₃க₃ணநாயகை: த்₃வார பாலை: க்ருபயா ஸ்நேஹ க₃ர்ப்ப₄யா த்₃ருஶாऽவலோகித: பூ₄த்வா)** மிகுதியாக உண்டான மனத்திலுள்ள அச்சத்தாலே வஸ்த்ரங்களை ஒதுக்கிக் கொள்வது, வாயைப் பொத்திக் கொள்வது முதலானவற்றைச் செய்து தலை வணங்கி, எம்பெருமானுடைய பாரிஷத₃ ஸமூஹத்தைச் சேர்ந்தவர்கள், க₃ணநாயகர்களாகிற படைத் தலைவர்கள், துவார பாலகர்களாகிய திருவாசல் காப்பார்கள் ஆகியவர்களாலே அன்போடு கூடிய கருணைக்கண்களாலே கடாக்ஷிக்கப்பெற்று. **(ஸம்யக் அபி₄வந்தி₃தை: தைரேவாநுமதோ பூ₄த்வா ப₄க₃வந்தம் உபேத்ய, ஸ்ரீமதா மூலமந்த்ரேண "ப₄க₃வந்!**

மாம் ஐகாந்திக ஆத்யாந்திக பரிசர்யைக கரணீய பரிக்₃ருஹ்ணீஷ்வ' இதி யாசமாந: ப்ரணம்ய ஆத்மாநம் ப₄க₃வதே நிவேத₃யேத் ॥

4. ததோ ப₄க₃வதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநேந [அமர்யாத₃ஶீலவதா அதிப்ரேமாந்விதேந] அவலோகநேந அவலோக்ய, ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோ₂சித-தாத்யந்த ஶேஷப₄ாவாய

---

மாம் ஐகாந்திக ஆத்யந்திக பரிசர்யாகரணீய பரிக்₃ருஹ்ணீஷ்வ" இதியாசமாந: ப்ரணம்ய ஆத்மாநம் ப₄க₃வதே நிவேத₃யேத்) மனப்பூர்வமாக த₃ண்டனிடப்பட்ட அவர்களாலே அநுமதிக்கப்பட்டு, ஸ்ரீவைகுண்டநாதன் அருகிலே சென்று பெரிய திருமந்த்ரமாகிற திருவஷ்டாக்ஷரத்தை அநுஸந்தித்து, "எம்பெருமானே! அடியேனை வேறு எதிலும் ஈடுபடாதவனாக்கி, காலமெல்லாம் எல்லையற்ற கைங்கர்யத்தைச செய்வதற்குக் கைக்கொண்டருளவேணும்" என்று பிரார்த்திக்கிறவனாய் வணங்கி, தன்னை எம்பெருமானிடம் ஸமர்ப்பிக்கவேண்டும்.

**நாலாம் சூர்ணை அவதாரிகை :** முற்கூறிய வண்ணம் பிரார்த்தித்தபடி எம்பெருமானாலே ஏற்றுக்கொள்ளப்பட்டவனாய் கைங்கர்யம் செய்து கொண்டிருப்பான் என்கிறது இந்தச் சூர்ணையில்.

**வ்யா :** **(தத:)** முந்தின சூர்ணையில் சொன்ன பிரகாரம் தன்னை ஸமர்ப்பித்த பிறகு. **(ப₄க₃வதா)** பரம புருஷனாலே. **(ஸ்வயமேவ)** இவன் வேண்டியபடியே. **(ஆத்ம ஸஞ்ஜீவநேந அவலோகநேந)** ஆத்மாவை உய்விக்கும் பார்வையாலே. இவ்விரு பதங்களுக்கும் இடையில் **"அமர்யாத₃ ஶீலவதா அதிப்ரேமாந்விதேந"** [எல்லையற்ற நீர்மையை உடையதாய் மிகவும் அன்போடு கூடியதான] என்னும் இரண்டு பதங்கள் பாடாந்தரமாகக் காணப்படுகின்றன. அவை வ்யாக்யானத்தில் விளக்கப்படவில்லை. **(அவலோக்ய)** கடாக்ஷித்து. **(ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோ₂சித அத்யந்த ஶேஷப₄ாவாய)** எல்லா தேசத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லா நிலைகளிலும் பொருத்தமான முடிவற்ற அடிமையின் பொருட்டு.

ஸ்வீக்ருத: அநுஜ்ஞாதஶ்ச அத்யந்த ஸாத்₄வஸ விநயா-வநத:, கிங்குர்வாண: க்ருதாஞ்ஜலிபுட: ப₄க₃வந்தம் உபாஸீத ||

5. ததஶ்ச அநுபூ₄யமாந ப₄ாவவிஶேஷ:

---

**(ஸ்வீக்ருத: அநுஜ்ஞாதஶ்ச)** ஏற்கப்பட்டவனையும், அநுமதிக்கப்பட்டவனையும் ஆகி, **(அத்யந்த ஸாத்₄வஸ விநயாவநத:)** மிகவும் உண்டான மன அச்சத்தாலே அடக்கவொடுக்கமாக வாயைப் பொத்திக்கொண்டு. முன்னமே வந்துள்ள இவ்விரு பதங்களும் இங்கு வ்யாக்யாநம் செய்யப்படவில்லை. **(கிங்குர்வாண: க்ருதாஞ்ஜலிபுட:)** ஸ்வரூபத்துக்குத் தக்கதான அஞ்ஜலியைப் பண்ணிக்கொண்டு. **(ப₄க₃வந்தம் உபாஸீத)**

112. **ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதா**
**[தை.ஆ. 1-2]**

[முக்தன் எல்லாக் கல்யாண குணங்களையும், ஸர்வஜ்ஞனான ப்₃ரஹ்மத்துடன் கூட அனுப₄விக்கிறான்.] என்கிறபடியே ஸ்ரீவைகுண்ட₂நாத₂னுடைய ஜ்ஞாநம் ஶக்தி முதலான கல்யாண கு₃ணங்களை அநுஸந்தித்து. 126-ம் பக்கத்தில் எடுக்கப்பெற்ற 70-வது ப்ரமாணத்தின்படி ஸாமகா₃னம் செய்து கொண்டு, "அந்தமில் பேரின்பத்து அடியரோடு இருந்தமை" [திருவாய் 10-9-11] என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடியே எம்பெருமானை ஸேவித்திருப்பான் என்கிறார்.

**ஐந்தாம் சூர்ணை அவதாரிகை :—** முந்திய சூர்ணையில் சொன்ன அநுபவத்தால் உண்டான ஆனந்த மிகுதியாலே, வேறு எதிலும் ஈடுபடாமல் எம்பெருமானை எப்போதும் கண்டு கொண்டிருப்பான் என்கிறது இந்த ஐந்தாம் சூர்ணை.

வ்யா :— **(ததஶ்ச)** அதற்கு மேலே. **(அநுபூ₄யமாந ப₄ாவவிஶேஷ:)** ஸர்வேஶ்வரனுடைய ரக்ஷகத்வம் (காக்கும் இயல்பு) முதலான தன்மைகளை அனுபவிக்கிறவனாய் இருந்துகொண்டு.

200. **த₃த்₃ப₄ாவப₄ாவமாபந்நஸ் ததோऽஸௌ பரமாத்மநா ।**
**ப₄வத்யபே₄தீ₃ பே₄த₃ஶ்ச தஸ்யாஜ்ஞாநக்ருதோ ப₄வேத் ॥**
**[வி. பு. 6-7-95]**

[பரமாத்மாவினுடைய தன்மைகளைப் போன்ற தன்மைகளை அடைந்த இந்த முக்தன் பரமாத்மாவுடன் (கு₃ணங்கள் விஷயத்தில்) பே₄த₃மற்ற

**நிரதிஶய ப்ரீத்யா அந்யத் கிஞ்சித் கர்த்தும் த்₃ரஷ்டும் ஸ்மர்த்தும் அஶக்த: புநரபி ஶேஷப₄ாவமேவ யாசமாந:**

வனுகிருன். (இப்போது காணப்படும்) பே₄த₃ம் ஜ்ஞாநத்தைக் காட்டிலும் வேறுபட்ட கர்மத்தினல் ஏற்படுவது.] என்கிறபடியே எம்பெருமானுடைய தன்மைகளான **அபஹதபாப்மத்வம்** (பாபமற்றவனுய் இருக்கை), **விஜரத்வம்** (கிழத்தனம் அற்றவனுய் இருக்கை), **விம்ருத்யுத்வம்''** (மரணமற்றவனுய் இருக்கை), **''விஶோகத்வம்''** (வருத்தமற்றவனுய் இருக்கை), **''விஜிக₄த்ஸத்வம்''** (பசியற்றவனுய் இருக்கை), **''அபிபாஸத்வம்''** (தாகமற்றவனுய் இருக்கை), **''ஸத்ய காமத்வம்''** (நிலையான கல்யாண குணங்களை உடையவனுயிருக்கை), **''ஸத்ய ஸங்கல்பத்வம்''** (தடையற்ற ஸங்கல்பத்தை உடையவனுய் இருக்கை) என்னும் எட்டு குணங்களை அனுபவித்துக் கொண்டிருப்பவனுய் என்றும் பொருள் கொள்ளலாம். **(நிரதிஶய ப்ரீத்யா)** ஒப்பும் உயர்வும் அற்ற உகப்பாலே. **(அந்யத் கிஞ்சித் கர்த்தும் த்₃ரஷ்டும் ஸ்மர்த்தும் அஶக்த:)**

**201.** ஏவமுக்தா ஸமுத்பத்₃ய ஸீதா ஶஶிநிப₄ாநநா ।
ப்ரஹர்ஷேணுவருத்₃த₄ா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந ॥
[ரா யு. 116-14]

[சந்திரனையொத்த முகத்தையுடைய ஸீதை ஹனுமானுல் இப்படிச் சொல்லப்பட்டவளாய், பேரானந்த₃த்தாலே நெருக்குண்டு ஒரு வார்த்தையும் சொல்லவில்லை.] என்கிறபடியே, பிராட்டி பெருமாளுடைய வெற்றிச் செய்தியைக் கேட்டவுடன் ஆனந்த வெள்ளம் தலைமண்டையிட, பேசமாட்டாமல் இருந்ததுபோலே, இவனும் ஆனந்த மிகுதியாலே வேறொன்றைச் செய்தல் பார்த்தல் நினைத்தல் ஆகியவற்றைச் செய்ய மாட்டாதவனுய்; அப்படியல்லாமல்,

**202.** நோபஜநம் ஸ்மரந்நித₃ம் ஶரீரம்
[சா₂ந். 8-12-8]

[ஜனங்களுக்கு அருகிலிருக்கும் இந்த ஶரீரத்தை அவன் காண்பதில்லை.] என்கிறபடியே 'இவ்வுலக வாழ்க்கையில் எப்போதும் செய்யும் செயல், பார்வை, நினைவு ஆகியவற்றை விட்டவனுய்' என்றும் பொருள் கொள்ளலாம். **(புநரபி ஶேஷப₄ாவமேவ யாசமாந:)** அடிமையை ஏற்கனவே பெற்றிருந்த போதிலும், அதனுடைய இனிமையாலே அது நிலைக்கவேண்டுமே என்னும் ஐயத்தாலே 'மறுபடியும் இந்த அடிமை

**ப₄க₃வந்தமேவ அவிச்சி₂ந்ந ஸ்ரோதோரூபேண அவலோக-நேந அவலோகயந் ஆஸீத ||**

**6. ததோ ப₄க₃வதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநேந அவலோகநேந அவலோக்ய, ஸஸ்மிதமாஹூய,**

---

குலையாமல் நிறகவேண்டும்' என்று வேண்டி. (**ப₄க₃வந்தமேவ**) ஸ்ரீ வைகுண்ட₂நாத₂னையே. (**அவிச்சி₂ந்ந ஸ்ரோதோரூபேண அவலோகநேந**) இடைவிடாத தா₄ரைபோலே இருக்கும் பார்வையாலே. (**அவலோகயந் ஆஸீத**) பார்த்துக் கொண்டிருக்கவேண்டும். (**அந்யத் கிஞ்சித் கர்த்தும் த்₃ரஷ்டும் ஸ்மர்த்தும் அஶக்த:**) என்னும் தொடருக்கு,

**203. நாஶ்நந்தி ந பிப₃ந்தி ஏததே₃வாம்ருதம் த்₃ருஷ்ட்வா த்ருப்யந்தி**

**[சா₂ந். 3-10]**

[அவர்கள் உண்பதுமில்லை; குடிப்பதுமில்லை; அம்ருதமான இப்பரம னைக் கண்டு களிக்கிறார்கள்.] என்கிறபடியே இவ்வுலகிலுள்ள அன்னம் பானம் முதலானவற்றைக் கணிசியாமல் எப்போதும் பார்த்துக் கொண்டிருப்பான் என்றும் பொருள் கொள்ளலாம்.

**ஆறும் சூர்ணை அவதாரிகை :—** கடைசி சூர்ணையான இந்த ஆறும் சூர்ணையில் 'கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தில் முடிசூடும் அரசனாய் இனிது வாழ்வான்' என்று கூறி நிறைவுபடுத்துகிறார்.

**வ்யா :—** (**ததோ ப₄க₃வதா ஸ்வயமேவ ஆத்ம ஸஞ்ஜீவநேந அவலோகநேந அவலோக்ய ஸஸ்மிதம் ஆஹூய**) "அம்மான் ஆழிப் பிரான் அவன் எவ்விடத்தான் யானார்" [திருவாய் 5-1-7] என்கிறபடியே இந்தச் சேதனன் தனக்கு அநாதி காலமாய் இருந்து வருகிற தாழ்வை நினைத்து அகலத் தொடங்க, எம்பெருமான் செய்ததைச் சொல்லுகிறது இத்தொடர். அதாவது — அழகிய கடைக்கண் நோக்காலே இவன் குளிரும்படியாகப் பார்த்து, "நானே எனக்கு ஈஶ்வரன் என்று அநாதிகாலமாக நினைத்திருந்தவன், நான் தேவரீருக்கு அடியேன் என்று சொல்லிக்கொண்டு நம் நிழலில் ஒதுங்குவதே" என்று உகப்பின் மிகுதியாலே முறுவல் செய்து,

**204. கு₃ஹேந ஸார்த்த₄ம் தத்ரைவ ஸ்தி₂தோऽஸ்மி தி₃வஸாந் ப₃ஹூந் |**

**ஆஶயா யதி₂வா ராம: புந: ஶப்₃த₃ாபயேதி₃தி ||**

***[ரா. ஆ. 59-8]***

**ஸமஸ்த க்லேஶாபஹம் நிரதிஶய ஸுக₂ாவஹம் ஆத்மீயம் ஸ்ரீமத் பாத₃ாரவிந்த₃யுக₃லம் ஶிரஸி க்ருதம் த்₄யாத்வா, அம்ருத ஸாக₃ராந்தர் நிமக்₃ந ஸர்வாவயவ: ஸுக₂மாஸீத||**

**இதி ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யம் ஸமாப்தம்;**

**ப₄க₃வத் ராமாநுஜ முநிபி₄ரநுக்₃ருஹீதம்**

**க₃த்₃யத்ரயம் ஸமாப்தம்.**

---

['ராமபிரான் மறுபடியும் கூப்பிடுவாரோ' என்னும் ஆசையாலே குஹனுடன் கூட அங்கேயே பல தினங்கள் தங்கினேன்.] என்று ஸுமந்த்ரன் கேட்க ஆசைப்பட்ட அழகிய முழக்கத்தாலே இவனை அழைத்து. இனிவரும் தொடர்கள் எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளின் பெருமைகளைக் கூறுகின்றன. **(ஸமஸ்தக்லேஶாபஹம்)** உலக வாழ்க்கையில் இவன் அனுபவித்த எல்லாத் துன்பங்களையும் போக்கக் கூடியது இத்திருவடியிணை. **(நிரதிஶய ஸுக₂ாவஹம்)** எல்லையற்ற இன்பத்தைக் கொடுக்கக் கூடியது இத்திருவடிகள். **(ஆத்மீயம்)** பரம புருஷனுடைய தன்னுடையது. **(ஸ்ரீமத்)** எல்லையற்ற இனிமையை உடையது. **(பாத₃ாரவிந்த₃ யுக₃ளம்)** திருவடித் தாமரையிணையை. **(ஶிரஸிக்ருதம் த்₄யாத்வா)** தன் தலையிலே எம்பெருமான் வைத்ததாக தியானம் பண்ணி. **(அம்ருத ஸாக₃ராந்தர் நிமக்₃ந ஸர்வாவயவ: ஸுக₂ம் ஆஸீத)** ஆனந்தமாகிற அம்ருதக் கடலுக்குள்ளே மூழ்கின எல்லா அவயவங்களையும் உடையவனாய்க் கொண்டு இனிது வாழ்வான். இந்த க₃த்₃யம் முழுவதாலும் சொல்லப் பட்ட திரண்ட பொருளாவது :— எம்பெருமானையே உபாயமாக உறுதி கொள்ளும் நினைவாகிற ப்ரபத்தியைத் தஞ்சமாகக் கொண்டு முக்குண மயமான ப்ரக்ருதி மண்டலத்தை விட்டு, அப்ராக்ருதமாய் ஶுத்₃த₄ ஸத்வ மயமான பரமபதத்திற்குச் சென்று, நித்யஸூரி ஸமூஹத்தாலே ஸேவிக்கப்படும் ஸ்ரீவைகுண்ட₂நாதனை அடைந்து, அவனைப் பிரார்த்தித்துக் கைங்கர்யத்தைப் பெற்று ஆத்மாவுள்ளவரை, அதாவது— நித்யமாக பிரம்மானந்தத்தை உடையனாய் வாழ்வான் முக்தியடைந்த சேதனன் என்கிறது.

**ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃ய விவரணம் நிறைவுற்றது.**

**பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்₂யானத்தை அனுஸரித்து, ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய க₃த்₃யத்ரய விவரணம் நிறைவுற்றது.**

ஸ்ரீ:

# ப்ரமாணங்களின் அட்டவணை

